சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவோத்தூர்ப் புராணம்.

இஃது

கருணாகரக்கவிராயரால்,

இயற்றியது.

இதற்கு

மேற்படியூர்ச் செங்குந்தத்தலைவர்கள் முயற்சியால்,

வித்வான் - பல்லவபுரம்,

தணிகாசலமுதலியாரவர்கள் சகோதரராகிய

புராணிகர்.

சோணாசலமுதலியாரவர்களியற்றிய,

பொழிப்புரையுடன்,

திருவோத்தூர்,

வா. பஞ்சாட்சரமுதலியார்,

கோ. கந்தசாமிமுதலியார்,

இவர்கள் கேட்டுக்கொண்டபடி,

சென்னை:

தி. பி. செங்கல்வராயசெட்டியாரவர்களது,

ஸ்ரீநிலய அச்சுக்கூடத்தில்,

பதிப்பிக்கப்பட்டது.

சர்வதாரி௵ வைகாசி௴

சிவமயம்.

# அட்டவணை.

குருவணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தரைசெய்தபுண்ணியமாம்வேதபுரிமான்மியந்தனைத்தமிழிற்பே
ர்த்து, நிரைசெய்தனன்கருணாகரக்கவிஞனதற்கொருவுரைநிகழ்த்து
தென்ன, வரைசெய்தமதிலநகராவிளம்பப்பிரணவத்தின்மாவார்
சீரை,யுரைசெய்தவாறுமுகக்குருமணியினருளொளிகொண்டுரை
நதேசன்பன்னே.

இஃது

இந்நூலுரைசெய்தவாசிரியரியற்றியது.

உ

சிவமயம்.

# சாற்றுகவிகள்.

---

சென்னைச் சர்வகலாசாலைத் தமிழ்த்தலைமைப்புலமை நடாத்திய
## கோமளபுரம்-இராசகோபாலபிள்ளையவர்களியற்றிய,
அறுசீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்

திருவேதநூற்புராணநனிதெரித்தான்பாரிற்சிறந்தசகுணகரப்
போதத்தெளிவுமிகுகோன, மருவோதநூர்மலர்ப் பொய்கைமல்கு
பல்லவபுரத்திலருணகிரியண்ணறந்த,பருகோத்தநறுங்குவளைமா
லைவேய்ந்துவயங்குமெழில்வாய்ந்துபலநூல்களாய்ந்து, தெருளாத்
தபலமொழிதேர்புலவரேத்தத்தெரிந்துரைத்தான்சோணாசலப்பே
ரோனே.

---

சென்னைக்கவர்ன்மெண்டுநொர்மல்பாடசாலைத்தமிழ்ப்புலவராயிருந்த
சோடசாவதானம் - தி. க. சுப்பராயசெட்டியாரவர்களியற்றிய,
நேரிசையாசிரியப்பா.

சீர்மலிகற்பகத்தேந்துணர்த்தருவி,னோதருநீழலில்விண்ணோர்பக்கு
லாவும், வான்புகழ்ச்சுரபியின்மடித்தலத்திருந்து, தேன்பெறவிழி
ந்ததீம்பாற்பெருக்காயக், கண்ணகன்ஞாலத்தெண்ணில்புல்லுயிரு,
மிடம்பெறத்தழைப்பப்பரந்தடம்பல பொய்கையும், வாவியுங்குளனு
மோவினெறகழனியும், வறங்கூர்வகற்றி யறங்கூர்ந்தமர, விடை
யறுவொழுக்கமைந்தடைதருபாலி,நன்னதிவளத்தாலெங்கிலந்தாங்
குநதொண்டைநன்னாடார்ந் தொண்டைவாய்மடமகட், கழகமர்
முகமாய்விழைதரப்பொலியு, நறைமலர்ப்பொழில்சூழ்மறைசைமா
நகரிற், கருமுகிலூரும்பெருமைசால்வளரியு, மமிர்துகுநிலவையு
மிழ்தருமதியமு, நூற்றிதழ்க்கமலத்தாம்றலசாலயனுந், தநதவழிக
நதுநந்திமுந்துய்யவுந், துழாய்நறும்படலையளாவியமருமத்,திருமா
ல்திகிரிபெற்றுருவாதுய்யவு, மமரருமுனிவருமையமொழிவான்,

சந்தைகூட்டிமுந்து நான்மறையை, யரிறபதெரித்தும்மண்கழு
வேற, மருமலர்ப்பொழில்சூழ்தருகழுமலத்தின், மறைகுலக்கௌ
ழுந்தாற் சிறப்பவருளியு, மாண்பனை பெண்பனையாகவருளியு, மின்
னனபலவுமனனுயிருய்யத், தனனிகரருளாற்றுன்னியபுரிந்து, பே
ரருள்வடிவாயார்தருமிறைவன், கருவினைவொழிக்குந்திருவிளையா
டலைக், கருணாகரனெனுமொருதனிக்கவிஞன், வடமொழியிருந்து
தென்மொழிபெயர்த்த, சீசால்புராணத்தோ சால்சொன்னயம,
பொருணயமெவர்க்கு மிருடபவுணர்த்தென, வந்நகர்வாழுமளனி
யசெல்வக், தங்கியபுகழ்சாலசெங்குந்தமரபோர், பரிந்துக்கேட்
பப்புரிந்த வெனறவமெணு, விழுப்புகழோங்கப பொழிப்புரைபெ
ழுதினன், பல்லவர்புகழும்பல்லவபுரத்தோன், புகழ்சானதிக்குலந
திகழ்தரவந்தோ, னருணையம்பழுத்தவருணையமபதிவாழ், சிவபிரா
னடிக்கீழ்த்தவலிலபோன்பினன், பலகலையென்னுஞ்செல்வமிகவு
டையோன், கற்றோர்புகழும்வற்றாச்சீர்த்தியன, றணிபாசலைனு
மணியார்புலவற், கிளையோனாகிக்களையாவில்லறத், தினிதமர்ந்தின்
பநனிதருந்துறவற, முயிர்க்குறுதிபயக்குமபத்தகுகொள்கையெ
ன், றுளத்தினிதமைத்துத்துளக்கறவொழுகும், தெருணனிமிக்கவ
ருணகிரிநாதப், புனிதன்பயந்தகனிதருகலவித், துறைபயில்புலமை
நிறைதருங்குணத்தோன், ஏணார்கவிஞன்கியற்றுஞ், சோணாசலனெ
னுந்துலங்குபாவலனே,

---

திருமயிலை-வித்வான். சண்முகம்பிள்ளையவர்களியற்றிய,
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இறைவன் வாய்த்தோன்றியமாமறையொடாகமமென்பரியநூல்
வல்லோர், அறையுமாகமங்கொடுமாமறைபலநற்றளியிடத்தும்ப
லன்பூசை, நிறையன்பிறபுரிந்தவவற்றொன்றெனலாந்திருவோத்தூ
ர்திகழ்புராணம், பொறைமலிநெஞ்சகக்கருணாகரப்புலவன்செந்
தமிழிறபுகன்றிட்டானல.

அன்னதலந்தனினங்கள்புறவங்காபபிள்ளையாரமலன்றாட்சீ
பன்னுமருந்தமிழ்ப்பதிகமபாடியாண்பனைபெண்ணைபபரிசினுக்கு
நன்னயம்போலொருரை பேராசிரியனிவனெனனநயநதளித்தான்
உன்னருஞ்செந்தமிழ்வல்லானசோணாசலப்புலவனுவந்துயாதோ

மகாவித்வான் புரசை-அஷ்டாவதானம்,
சபாபதிமுதலியாரவர்கள்மாணாக்கருமகவரன்மெண்டு,
திரானஸ்லேடருமாகிய
தண்டலம். பாலசுந்தரமுதலியாரவர்களியற்றிய,
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சந்தமறையருந்தமிழினருள்காழிச்சம்பந்தாதரணிமீது, நந்தமிறை யருளினுண்பனையினைப்பெண்பனையெனச்செய்நலம், கொளோத தூர, நந்தலில்புராணமதைக்கருணாகரபுலவனவிலமறறவ், வந் தமிழ்சேர்பபுராணகோருரை சோணாசலப்புலவனளித்தான்மன் னே.

—o—

அஷ்டாவதானம-பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்களியற்றிய
பதினான்குசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பஞ்சீலச்சலதரமாரபொழிலசெய்திருவோத்தூரிற்பரன்சரிதச் சேடுநோக்கிப், பைந்தமிழிறபத்தியமாய்க்கருணாகரக்கவிஞன்யன் னியபுராணந்தனனை, மிஞ்ஞாலத்தெளிதினி லெல்லேபுணரக்கரி லெரீஇயியலுரைசெய்நச்சிலேற்றி, மிவிரெனவத்தலத்தினுபசுப் ரமண்யகுலமியையநதசெங்குந்தர்வேண்ட, வஞ்சேயரெணமுடித் தனன்மணிகள்கொழித்திருணித்தலைமோதுபாலியாற்றி, னமுதநி றைமருதமிடைபல்லவபுரத்தில்வருமழகியகங்காகுலத்தன்,மெஞ் ஞானக்கலைக்கடலையயின்றுபிரசங்கமழைமிகபொழியுமேகமன்னா ன்,மேனைமருகனைப்பணியுஞ்சோணாசலப்புலவன் மேதையர்கொ ண்டாடுவோனே.

—o—

குன்றத்தூர் - மாணிக்கமுதலியாரவர்களியற்றிய
நேரிசையாசிரியப்பா.

திருவளர்பொலங்கேழ்செஞ்சடாடவியில், மருவளர்கடுக்கைம ணிமுடியரவம், கங்கைவிண்மதியங்கவினுறத்தரித்த, மங்கைபங்கா ளன்மகேச்சுரன்முன்னாள், சத்தநான்மறையைச்சந்தைகூட்டி, உ த்தமபனவர்க்கோது சீர்த்தியதும், சுற்றமோடமரிற்சூர்முதறடிந் த, கொற்றவேற்கரத்துக்குக்குடக்கொடியோன், ஈனவமண்மூக விருடேறும்பரிதியாய், ஞானசம்பந்தநற்றிருப்பெயர்கொளீஇ, க னைகடற்புவிமேற்கருணையால்வந்தான், பனையினைப்பெண்ணுப்ப

ஆயுள்வேதியா-ஆலந்தூர்-முத்துசாமிமுதலியாரவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அப்பரிபராவணியெம்மண்ணலுறைதிருவோத்தூரரும்புராண
மெப்பரியகாவியமுமுணர்கருணாகரனியற்றவினிதவண்வ [கூற
சிப்பரியலாபொருள்செய்கெனவேண்டவதற்கியைந்துதெளிந்து
வொப்பரியபலவபுரசசோணாசலக்கவிஞனுரைசெய்தானே.

---

சொர்க்கபுரம்-இராமலிங்கத்தம்பிரானவர்கள் மாணாக்கரும்
திருமழிசை-கந்தசாமிமுதலியாரவர்கள குமாரருமாகிய
வடிவேலுமுதலியாரவர்களியற்றிய

வெண்பா.

கற்றியறோந்தோறுங்கருணாகரனமுனா
விற்றியவோத்தூர்மான்மியசசெய்யுட்-கிற்றிதெனத்
தக்கவகைசோணாசலக்கவிஞன் செய்தவுரைக்
கிக்கடனிலததொப்பிலே.

---

அஷ்டாவதானம்-பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்கள்
மாணாக்கர்-வல்லை-சண்முகசுந்தரமுதலியாரவாகளியற்றிய
அறுசீாககழிநெடிலாசிரியவிருத்தம்.

அம்புலிச்செஞ்சடையரன்பொன்னடியிணையைத்தொழுதமராரா
ணததின், செமபொருளேக்கேட்கவுரைசெய்ததிருவோத்தூரிற்சிகா
ழிக்கோ, னெம்பெருமான்காயாதபனையின்முதுகனியேறியிலங்கச்
செய்ய, வெம்புமனச்சமணர்கழுவேறியிறுமாப்பொழிந்துவிமலர்
பாதம்.

நண்ணியநற்காதையினைக்கருணாகரக்கவிஞனவின்றசெய்யுட் [ப்
கண்ணியமாவுரையியற்றுகென்வல்லூர்சசெங்குந்தரன்பிற்கேட்ப
புண்ணியராகியபரிமேலழகர்நச்சினாக்கினியாபுகலவொண்ணு
வண்ணவிளம்பூரணர் சேனுவரையரிவர்நால்வரண்மிபொன்றுப்.

துங்கமிகுமருணகிரிநாதருக்குமகவாகத்தோன்றிவந்த, வங்கமு
ழங்கடலுலகம்புகழ்சோணாசலனெனுநாவலவன்வாணர், சிங்கமு
வந்தியற்றுபொழிப்புரைக் கீடாயோருரையைத் தெரிந்துதேடி,
னெங்கணுமேயரிதாகுஞ்சரதமிதுமுத்தமிழ்தேரியல்வலலோரே.

———o———

மயிலை-இராஜூமுதலியாரவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

சீராருந்திருவோத்தூர்ப்புராணத்தைப்பலகலைதேர்செந்நாவாண
னேராருங்கருணாகரக்கவிஞனியற்றினனங்கினிதுவாழும்
பேராருஞ்செகத்தோர்கேட்கவுரைசெய்தளித்தான்பெருநீர்வைப்பி
ணாராரும்புகழுவளர்சோணாசலப்பெயர்கொளறிஞனம்பா.

———o———

மணலூர் - முனிசாமிமுதலியார்பாடிய;
கலிவிருத்தம்

மதிபூக்கசெஞ்சடையானவயங்குதிருத்தகுவோத்தூர்த்
துதிபூத்தபுராணக்குத்தோன்றவிரிவுரையுரைத்தான்
நதிபூத்தகுலம்பூத்தநாவலோன்பல்லவநற்
பதிபூத்தவெழிறசோணாசலப்பேரோனையரிந்தன்றே.

———o———

இராயவேலூர் மண்டி - தோட்டப்பாளையம்,
சுப்பராயமுதலியாரவர்கள் குமாரரும் இந்நூலுரையாசிரியர்மா
ணாக்கருமாகிய. அருணாசலமுதலியாரவர்களியற்றிய,
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இம்மாநிலந்தனிலேநான்மறையைவானவர்கட்கிசைத்தவோத்
தூர்ப், பெம்மான்றனருள்விளையாடலைக்கருணாகரப்புலவர்பிறங்
குசெய்யு, டம்மான்முனியறியுளவதற் கொருரைசெய்கெனவத்
தலத்தோர்வேண்ட, வெம்மாசிரியன்சோணாசலனசெயுரையமைத்தி
னையென்னிசைப்பேன்மாதோ.

———o———



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தசுவாமிகள் அருளிச்செய்த

## திருவோத்தூர்த்

# தேவாரப்பதிகம்.

பண் - பழந்தக்கராகம்,

திருச்சிற்றம்பலம்.

பூத்தேர்ந் தாயனகொண்டு நின்பொன்னடி
யேத்தா தாரில்லையெண்ணுங்கா
லோத்தூர்மேய வொளிமழுவாளங்கைக்
கூத்தீரும்ம குணங்களே. (க)

இடையீர்போகா விளமுலையாளையோர்
புடையீரே புள்ளிமானுரி
யுடையீரேயும்மை யேத்துதுமோத்தூர்ச்
சடையீரே யுமதாளே. (உ)

உள்வேர்போல நொடிமையினார்திறங்
கொள்வீரல்குலோர் கோவண
மொள்வாழைக்கனிதேன் சொரியோத்தூர்க்
கள்வீரேயும காதலே (ங)

தோட்டீரே துத்தியைந்தலைநாகத்தை
யாட்டீரே யடியார்வினை
யோட்டீரேயும்மை யேத்துதுமோத்தூர
நாட்டீரே யருணல்குமே. (ச)

குழையார் காதீர்கொடு மழுவாட்படை
யுழையாள்வீர் திருவோத்தூர
பிழையாவண்ணங்கள் பாடிநின்றாடுவா
ரழையாமே யருணல்குமே. (ரு)

மிக்கார்வந்து விரும்பிப்பலியிடந்
தக்கார் தம்மடியீர்களென்
றட்காதாருளரோ திருவோத்தூர்
நக்கீரேயரு ளாலருமே. (௬)

நாதாகொன்றை தயங்குமுடியுடை
நாதாவென்று நலம்புகழ்ந்
தோதாதாருளரோ திருவோத்தூ
ராதீரேயரு ளாகுமே. (௭)

என்றுமிம்மலை யென்றவரக்கனை
வென்றாபோலும் விரலினா
லொன்றார்மும்மதி லெய்தவனேத்து
ரென்றாமேல்வினை யேகுமே. (௮)

நன்றுநான்மறை யானொடுமாலுமாய்ச்
சென்றாபோலுந் திசையெலா
மொன்றியொள்ளெரியாய் மிகவோத்தூர்
நின்றீரேயுமை நேடியே. (௯)

காரமண்கலிங்கத் துவராடையர்
தேரர்சொல்லவை தேறன்மி
னோரம்பாலெயி லெய்தவனோத்தூர்ச்
சீரவன்கழல் சேர்மினே. (௰)

குரும்பையாண்பனையின் குலையோத்தூ
ரரும்புகொன்றை யடிகளைப்
பெரும்புகலியுள் ஞானசம்பந்தன் சொல்
விரும்புவார் வினைவீடே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தசுவாமிகள் திருவடிகளேசரணம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவோத்தூர்ப் புராணம்.

## மூலமும் உரையும்.

---

## பாயிரம்.

### விநாயகர் காப்பு.

தருக்குலவும்பொன்னுலகத்தவர்க்குமறையருள்கருணைப்
பெருக்குலவுந்திருநயனப்பிஞ்ஞகனுறினிதமர்ந்த
விருக்குலவும்புரிமகிமையியம்பவிமவரையில்வரு
மருக்குலவுங்குழலளித்தமதக்களிற்றைவணங்குவாம்.

(இதன்பொழிப்பு.) கற்பகவிருட்சந்தழைத்தோங்கும் விண்ணுலகத்துத்தேவர்களுக்குவேதமோதுவித்தஅருள்வெள்ளமமைந்த அழகியநேத்திரங்களுள்ளசிவபிரான் வீற்றிருந்தருளும் வேதபுரிமகிமையைக்கூறுதற்கு இமயவரைஅரையனிடத்துதித்த மணங்கமழுங் கூந்தலுடையஉமாதேவியாரீன்றருளிய மதம்பொழியும்யானைமுகமுள்ளவிநாயககடவுளைப்பணிவாம் எ-று.

### வேதபுரீசர் துதி.

மதிகொண்டபொலன்சடிலத்திருமுடியுஞ்சேவடியுமலரினனுந் துதிகொண்டபசுந்துளபத்தோன்றலும் பண்டிகலினராய்த்துருவிக்காணுக், கதிகொண்டபேரொளியைவேதமமரருக்குரைத்த கருணையானைப், பதிகொண்டவேதபுரத்திலமர்ந்த பராபரனைப் பணிந்துவாழ்வாம்.

(இ - பு.) இளம்பிறையணிந்த அழகிய சடாமகுடமும் சிவந்ததிரு வடியும்தாமரைமலர்வாசனுன பிரமனும் கீர்த்திவிளங்கும்பசிய துளபமாலை யணிந்ததிருமாலும் முன்னாளில் ஒருவருக்கொருவர் வாதித்துமேற்பறந்தும் கீழிடந்தும் காணாத ஒளியமைந்த 'பெரியசோதியுருவானவரை நான்குவே தங்களையுந் தேவருக்கோதுவித்த கிருபையுடையவரை எப்பதிகளினும் மேம்பட்ட வேதபுரியில் வீற்றிருந்தருளும் சிவபிரானை வணங்கியாம்வாழ் வோம். எ-று. (உ)

உரத்தானை யுரித்தானை யுடைத்தானையெனப்புலித்தோலுடுத்த வைந்து, சிரத்தானைநடத்தானையுடைத்தானைப் பகட்டேறுஞ் சிற ந்ததண்டக்,கரத்தானையுதைத்தானைக்களிற்றானை யளித்தானைக்கழு றும்வேத, புரத்தானையிளமுலைதோய்புயத்தானைத் தொழுதெமது புன்மைதீர்ப்பாம்.

(இ - பு.) வலியயானையை யுரித்தவரை உடுக்கத்தக்க ஆடையாகப் புலித்தோலைத்தரித்த ஐம்முகக்கடவுளை வீரநடனம்புரியும் பாதங்களுடைய வரை மகிடமிவரும் சிறப்பமைந்த காலதண்டந்தாங்கிய கைகளையுடைய இயமனை யுதைத்தருளியவரை யானைமுக விநாயகக்கடவுளை ஈன்றவரை யாவரும் துதிக்கும் வேதபுரியில் வீற்றிருப்பவரை இளமுலைநாயகியாரைப் புணரும் திருத்தோள்களுடையவரை வணங்கி எமதுபிறவித்துன்பந் தீர வோம். எ - று. (ங)

## இளமுலைநாயகி துதி.

அன்புநிறைந்தவருளத்தில்வெளியாகவிருந்தருளுமதுவேயன்றி வன்புநிறைந்தவருளத்துந்தோன்றுமலிருந்தருளிமயலைத்தேய்த்துத் துன்பநிறைநதிடும்பிறவிப்பெருங்கடற்குதவுதோணியுமாய்த்தோலா முத்தி, யின்பமெனுங்கரையேற்றுமிளமுலைநாயகி மலர்த்தாளிறை ஞ்சி வாழ்வாம்.

(இ - பு.) பேரன்பு நிறைந்துள்ள மெய்யடியாருள்ளத்திற் காட்சி யாகவீற்றிருப்பதுடன் வன்மையேநிறைந்துள்ள வஞ்சருள்ளத்துங் கரந் துறைந்தருளி அவர்கள் ஆணவமல இருளைப்போக்கியும்சஞ்சலமேபெருகும் பிறவியாகிய பெருங்கடலைக்கடத்துவிக்கும் மரக்கலமாயிருந்து என்றுங்கெ டாத முத்திக்கரைசேர்க்கும் இளமுலைநாயகியார் தாமரைமலர்போன்ற பாதங்களை வணங்கியாம்வாழ்வோம். எ - று. (ச)

கலையைக்கலைமுழுதுணர்ந்தோர்கருதுமுயர்தனிநிலையைக்கழறும் வேதத், தலையைத்தலைநாண் மூவர் தமைப்பூத்தமலர்க்குலையைச் சார்ந்துமேருச், சிலையைச்சிலையெனப்பறித்த தேவரிடத்துறும் புருவச்சிலைவாடஞான, மலையைம்மலையரையனருள்மறைசைநகரின முலையைவணக்கஞ்செய்வாம்.

(இ - பு.) கலாரூபியாயுள்ளவனை வேதமுதலிய கலைகள் ஒருங்குணர்ந்த மேலோர்தமதிதயத்தின்கண் இடைவிடாமல் தியானிக்கும் உயர்வாகிய ஒப்பற்ற நிலையுடையவனை யாவருந்துதிக்கும் மறைச்சிகரமாயுள்ளவனை ஆதிகாலத்தில் மும்மூர்த்திகளையும் ஈன்றருளிய மலர்க்குலை போன்றவனை மேம்பாடமைந்தமேருவரையை வில்லாகத்தாங்கிய சிவபிரான் இடப்பாகத் தமர்ந்தருளும் வில்போலும் புருவமுடையவளை ஞானமலை போன்றவளை இமயவரையரையன் ஈன்றருளிய மறைசைநகரின்கண் வீற்றிருந்தருளும் இளமுலைநாயகியையாம் வணங்குவாம, (எ - று) மகரம் எதுகை நோக்கி இரட்டித்தது. (ரு)

## நடேசர்துதி. வேறு.

கடல்சூழ்வையங்கதித்தமணிக்கவிஞர்வையமெனக்கொடுபோந்
தடல்சூழ்கினறதிரிபுரமவென்றருளுமூறுவனிலவெறிபய
மடல்சூழ்கோதைமுகநோக்கிமன்றுணடமாடியவிறைவன்
மிடல்சூழ்மணிநூபுரபாதவிரைமென்கமலந்துதிசெய்வாம்,

(இ - பு.) கடல்சூழ்ந்த பூமியே பெரிய இரத்தினங்களழுத்திய அழகமைந்த தேராகக்கொண்டு சென்று வன்மைமிக்க முப்புரங்களைவென்றருளிய புன்சிரிப்பு ஒளிவீச இதழ்களோடுகூடிய மலர்களணிந்த அளகபாரத்தையுடைய உமாதேவியாரது சிறந்ததிருமுகத்தைப் பார்த்துக்கொண்டுபொன்னம்பலத்தில் ஆனந்தநிருத்தம்புரியும் நடேசப்பிரானது பிரகாசமுள்ள இரத்தினகசிதமான பாதச்சிலம்பணிந்த திருவடிகளாகியவாசனைகமழும் மிருதுவான தாமரைமலர்களையாம் துதிப்பாம். எ - று. (சா)

## சிவகாமசுந்தரி துதி—வேறு.

கருணைபொழிவிழிமலருமதிமுகமுமகுறுமூரல்கதித்தவாயு
மருணவெயில்பொழியுமணிமங்கலநாணொளிர்மிடறுமாரமபூண்ட
தருணமுகிண்முலையுமிடிகிடையுமிளந்தளிரடியுந்தயங்கக்காட்டித்
தெருண்மலியவெமதுளமவாழ்சிவகாமசுந்தரியைச்சிந்தித்துய்வா
[ம்.

(இ - பு) அருள் சுரக்கும் நேத்திரங்களும் சந்திரனைப்போன்ற திருமுகமும் புன்முறுவல் பூத்ததிருவாயும் செம்மையான ஒளிவீசும் அழகிய திருமங்கிலிய சூத்திரம விளங்கும் திருக்கழுத்தும் நவரத்தினமாலையணிந்த இளமையான தாமரை யரும்புபோன்ற திருத்தனபாரங்களும் நுடங்கிய இடையும் முற்றாததளிர்போலும் நிறமமைந்த திருவடிகளும் தரிசிக்கும்படி விளங்கக்காட்டித்தெளிவடைய எமதுள்ளத்தில் வீற்றிருந்தருளும் சிவகாமசுந்தரியைச் சதா துதித்துயாம் உய்வையடைவாம், எ-று, (எ)

## தட்சணாமூர்த்தி துதி.

முக்கணாவேதத்தின்முடிவானவானந்தமுதல்வா நீல
மைக்கணொருபாகாவென்றுதுதிநால்வருக்கும்வடநீழற்கண்
கைக்கனுமலகமெனக்கூறுமொழிக்கிணங்கக்கைகாட்டியாண்ட
தக்கணாமூர்த்தியிருதாமரைத்தாண்மறவாதுசார்ந்துவாழ்வாம்.

(இ - பு) திரிநேத்திரமுள்ளவரே வேதத்தின் அந்தமாய்விளங்கும் இன்பமுடையமுதல்வரே நீலமலர்போன்றமையெழுதிய கண்களையுடைய உமைபாகரேயென்று திருக்கயிலையில் தோத்திரஞ்செய்த சனகாமுதலிய நான்குமுனிவர்கட்கும் கல்லாலவிருட்சத்தடியில் உள்ளங்கையில் நெல்லிக்கனியென்று உலகத்திற் கூறுமொழிக்கிணங்கக்கைகாட்டி உபதேசஞ் செய்து ஆட்கொண்டருளிய தட்சணாமூர்த்திசுவாமிகள் இரண்டுதாமரை மலர் போன்றபாதங்களை அடுத்து யாம்வாழ்வோம். எ-று. நால்வரென்றது சனகர்சனந்தனர் சனற்குமாரர் சனாதனர். (௮)

## வயிரவமூர்த்தி துதி.

வேரிமலர்ப்பண்ணவன்றன்சிரமொன்று நகநுதியால்கிள்ளியுற்ற, சோரிமலர்தலைநிலத்திற் பாயாதசிரத்தேற்றுத் தொடர்ந்து போந்து, வாரிமலர்க்கண்வளர்மானெற்றியெற்றிக் குருதிகொடுமதைநீக்குங், காரிமலர்க்கழலிரண்டுங்கரமிரண்டுங்கூப்பிநிதங்கருதிவாழ்வாம்.

(இ - பு.) மணமுள்ள தாமரைமலரில்வாழும் பிரமன் ஆணவங்கெடும்படி அவனுடைய ஐந்து சிரத்திலொரு சிரத்தை நகத்தின் நுனியாற்கிள்ளி அதனாற்பெருகும் உதிரம் பூமியிற்சிந்தாமல் அவனது கபாலத்திலேற்றும் அக்கபாலம் நிறையாமையால் வைகுந்தத்தைத் தொடர்ந்துசென்று பாற்கடலிற்பள்ளி கொள்ளும் திருமால்நெற்றியில் அவரது சங்கின்றோற்றுக்கப் பெருகும் செந்நீரை ஏற்றுக்கொண்டு அவராணவத்தையு மொழித்த வயிரவமூர்த்திகளுடைய தாமரைமலர்களையொத்த இரண்டு திருவடிகளையும் எம்முடைய இரண்டு கைகளையும் கூப்பி மனதிற்றியானித்து வாழ்வோம். எ - று. (௯)

## ஒப்பிலாமணி விநாயகர் துதி.

கடமசைப்புங்கவுட்டுளையிற்கலவுமணிவண்டினங்கள் கலவாதோடத், தடவுமணிச்செவியெறியும்வளிமாந்தியார்கலன்கடலைப்பவேணி, யிடனிருந்தநறுங்கங்கைபருகியயர்வுயிர்க்குமணியெழிற்பொற்குன்றை, மடமகற்றும்வேதபுரியொப்பிலாமணிக்களிற்றைவணக்கஞ்செய்வாம்.

(இ-பு) மதம்பொழியும் கபோலங்களில் வந்து மொய்க்கும் வண்டினங்கள் தங்காதோடும்படி விசாலமாகிய அழகியதிருச்செவிகளை வீசுதலினுண்டாகும் காற்றினலசைக்கப்பட்டு நிறைந்த ஆபரணங்கள் ஒளிவீசச்சிவபிரான்சடாமகுடத்தில் இருந்தகங்கையைத்துதிக்கையினால் மொண்டுண்டு இளைப்பாறும் நீலமணியின் ஒளியமைந்த அழகியமலை போன்றவரை அடியார்களது அஞ்ஞானத்தை நீக்கியாட்கொள்ளும் வேதபுரியில வீற்றிராநின்ற ஒப்பிலாமணி விநாயகரையாமவணங்குவோமென-று.

## காடுவெட்டிவிநாயகர் நிருத்தவிநாயகர் துதி.

பெருத்தவனஞ்சேர்திரதுபவெடபுறமாமுரனுடலமபிளந்து வீசி, வருந்தருமுடிநடிபொருருரனைவெனறவனையுமவாகனமாய்க் கொண்டு, கருத்துமகிழ்ந்துபரவுநற்குவீதியில்வாழ்காடுவெட்டிக் களிறறைப்போற்றி, நிருத்தவிநாயகன்பதமுமெனஞ்சினிலை நடுதெமது மடநீக்குவோமால.

(இ-பு.) பெருந்தவனங்களையழித்து வன்மையுள்ள குதிரைமுகமுடைய கோடாசூரன் உடலத்தைப்பிளந்தெறிந்து தேவர்களுக்கிடுக்கண்புரியும் ஆகுசூரனைச்சயித்தது அச்சூரனையே வாகனமாகவும் ஊர்ந்துமனக்களிப்படைந்து பெருமைமிக்கசுருதிபுரிதெற்குவீதியில் வீற்றிருந்தருளும் காடுவெட்டி விநாயகரைத்துதித்து நிருத்தவிநாயகர திருவடிகளையும் மனதிற்றியானித்தெமமுடைய மடமையைநீக்கிக்கொள்வோம.எ-று.ஆல்-அசை

## சுப்பிரமணியர் துதி.

தந்தையைப்போன்றிடதியுமரவுமணிநதன்னையைப் போற்றடக்கைப்பாசநு, கொந்தொளியங்குசம் பரித்தான் முன்னவனென்றன்னைபோற்கோதுதீர்ந்த, சுந்தரப்பொன்மணியணிந்துதூயதந்தைபோற்கரதிற்சுடர்வேற்சூல, மைந்துபெறதரித்தருளும்பன்னிருகைச்சேவகன்பொன்மலாத்தாள்போற்றி.

(இ-பு) தனதுபிதாவாகிய சிவபிரானைடபோல் கங்கையும் இளம்பிறையும் சாப்பமும் தரித்துமாதாவாகிய உமாதேவியாரைப்போல் விசாலமாகிய திருக்கரங்களில் பாசமும் மிக்கொளிரும் அங்குசமும் தாங்கியிருக்கின்றார் மூத்தபிள்ளையாரென்றெண்ணி உமாதேவியைப்போல் குற்றமற்ற அழகியபொன்மயமானமணியைத்தரித்துப்பரிசுத்தராகியசிவபிரானைப்போல்திருக்கரத்தில் ஒளிவீசும் வேலாயுதமாகிய சூலத்தை வலிமையுண்டாகத்தாங்கியிருக்கும் பன்னிரண்டு திருக்கரங்களையுடைய சுப்பிரமணியரது பொற்றாமரை மலர்போன்ற திருவடிகளையாம் துதிப்போம். எ-று. (கஉ)

பொன்வீதித்தருநகர்வாழ்புலவர்குலமிகவாழப்புணரிநாப்பண்
மன்வீதிப்புரத்தசுரர்குலமாளப்புவியினன்னீர்வறுமைதீர
மின்வீதிச்சடைமவுலிவேதபுரத்தெந்தைதரும்விறல்வேலேந்துந்
தென்வீதிதனிலுறையுஞ்செவ்வேளையனுதினமுஞ்சிந்தித்துய்வாம்

(இ - பு.) பொன்மயமான வீதிகளமைந்த கற்பகவிருட்சந்தங்கிய விண்ணுலகவாசிகளாகிய தேவாகூட்டம்மேன்மேலும் வாழ்வடையவும் கடலின்மத்தியில் நிலைபெற்றுள்ள வீதிகளுடைய அசுரபுரவாசிகளாகிய அவுணர்கூட்டம்மடியவும் நிலவுலகத்தின்கண் நறும்புனல்வறுமைநீங்கவும் ஒளியுடன் வரிசையாயோங்கும் சடைமுடியையுடைய சுருதிபுரியில் வீற்றிருந்தருளும் எமதுதந்தையாராகிய சிவபிரானால் கொடுக்கப்பட்டவன்மைதங்கும் வேற்படையேந்தும் அச்சுருதிபுரியின் தெற்குவீதியின்கண் எழுந்தருளியிருக்கும் சுப்பிரமணியரை தினந்தோறுந்தியானித்துயாம்உய்வோம்எ-று.

## வீரபத்திரர் துதி—வேறு.

துய்யமகநாளயமுனைதுதைந்தாடிமாதுமையைச்
செய்யமகளாய்வளர்த்துத்திவணாக்கிந்தவலரப்பி
னையமகலாதவனென்றகந்தையுடன்சிறுவிதிசெய்
வெய்யமகமழிக்கவந்தவீரனிருதாள்பணிவாம.

(இ - பு) புனிதமுடைய மகநட்சத்திரத்தில் யமுனாநதியில் பத்தினியான வேதவல்லியுடன்போய் நீராடி அந்நதியின் கணுள்ள ஒரு தாமரை மலரின் மீது பிரணவவடிவமைந்த சங்கம் ஒன்றிருக்ககண்டு எடுத்தவுடன் குழந்தையாகியிருந்த உமையம்மையைச் சிவபிரான் நாம் முன்கேட்டவரத்தின்படி அளித்தனரென்று வளர்த்து அச்சிவபிரானுககே திருமணநடத்திப்பின்பு அவர்செய்தருளும் திருவிளையாடலை யறியாதவனுகித் தலையோட்டிற் பிச்சையேற்றுணபவனென்று அவரை நிந்தித்து ஆணவத்துடன் தக்கன்செய்த கொடிதான வேள்வியை அழிக்கும்பொருட்டுச்சிவபெருமான் நெற்றியிலுண்டான குறுவேர்வையில் வடவாக்கினியைப்போல் ஆயிரமுகத்துடன் அவதரித்த வீரபத்திரக்கடவுளுடைய உபயபாதங்களை யாம் வணங்குவோம். எ-று. (கசு)

## காங்கிமாகாளி துதி—வேறு.

எத்திரப்பொருள்களுமேதநின்றுறச்
சித்திரமறைசையம்பதியிற்செம்மைசேர்
வத்திரமலர்ந்துவாழ்மன்னுங்காங்கிமா
பத்திரகாளிபூம்பதமிறைஞ்சுவாம்.

(இ - பு.) எவ்வண்ணமான பாக்கியங்களும் தம்மையடுத்துத்துதித்த வர்களடையும்படி அழகிய சுசிதிபுரத்தின்கண் செம்மையாகிய திருமுகம லர்ந்துவாழும் காங்கிமாதேவியான பத்திரகாளியம்மை திருவடிகளையாம் வணங்குவோம். எ-று. (கரு)

## நந்திதேவர் துதி—வேறு.

நேத்திரங்களோர்மூன்றுடைசிந்தனைத்
தோத்திரஞ்செய்சுரர்சந்நிதானததை
மாத்திரம்மறைக்காதிரென்றோச்சுங்கை
வேத்திரப்படைமெய்யனைப்போற்றுவாம்.

(இ - பு.) ஒப்பற்ற மூன்றுகண்களையுடைய சிவபிரானைத்தொழுது தோத்திரம் புரியும் திருமால்முதலான தேவர்களே நீங்கள்சந்நிதானத்தை மாத்திரம் மறையாதுவரிசையாய்நின்றுதரிசியுங்களென்று அவர்களைவிலக்கு கின்ற கைத்தலத்திற பொற்பிரம்புப் படையையுடைய திருநந்திதேவரை யாம் போற்றுவோம். எ-று. (கசு)

## வாணி துதி—வேறு.

சாற்றுநற்றமிழ்ப
பேற்றுக்கென்குறை
நோற்றுவாணிதாள்
போற்றுநெஞ்சமே.

(இ - பு.) ஓதுகின்றவளப்பமுள்ள மதுரமுடைய செந்தமிழினது பாக்கியத்துக்கு சிறிதுங்குறைவில்லை நீநாள்தோறும் விரதம் அநுட்டித்துச் சரச்சுவதிதேவியின் திருவடிகளைத் துதிசெய்வாய் என்னுள்ளமே. எ-று.

## சண்டேசர் துதி—வேறு.

பிள்ளைமதிதவழ்சடிலப்பிஞ்ஞகனுர்க்கினிதாட்டு
மொள்ளியபாற்கலங்கவிழவுதைத்தபெரும்பாதகமுந்
தெள்ளுமறைதருந்தாதைசேவடியுந்தன்பிறப்புந்
துள்ளிவிழவொருங்கெறிந்ததொண்டன்மலர்ப்பதம்போற்றி,

(இ - பு.) இளம்பிறைதவழுஞ் சடையையுடைய சிவபிரானுக்கு அன்புடன் அபிடேகிக்கும் ஒண்மையான பால்நிறைந்தகுடங்கள்கவிழும் படியுதைத்த பெரியசிவபாதகமும் தெளிவானவேதமுதலிய கலைகளைஓது வித்ததமது பிதாவின்தாள்களையும் தமது பிறவியையும் துள்ளிவிழும்படி ஒருசேரவெட்டிய திருத்தொண்டராகிய சண்டேசருடைய தாமரைமலர் போன்ற பாதங்களையாம் துதிப்பாம். எ-று. (கஎ)

## திருஞானசம்பந்த சுவாமிகள் துதி.

ஊழிமுதற்பெருமானையுளத்திருவியமணமதம
பூழியுறவாண்பனைகாய்ப்புறக்காட்டத்தமிழிசைத்த
காழிநகரருட்கடலைக்கவுணியர்தங்குலமணியை
யேழிசையின்றவப்பயனையினமலர்தூய்ப்பழிச்சுவாம்.

(இ - ள்.) ஊழிக்காலத்தும் அழியாத சிவபெருமானை இதயத்தில் இருத்திச் சமணமதம் அழிந்துபோக ஆண்பனையானது காய்க்கொத்துடன் விளங்கத் தேவாரத் திருப்பதிகம் ஓதியருளிய சீகாழியின்கண் அவதரித்த திருவருட்கடலை கவுணியர்குலத்தை விளக்கவந்த ஒரு மணிபோன்றவரை சத்தசுரங்களின் தவப்பயனானவரை புட்பவிதங்களையுற்ற மலர்களைத் தூவி யாம் வணங்குவோம். எ - று. ஏழிசையாவன-குரல் - துத்தம்-கைக்கிளை உழை-இளி-விளரி-தாரம். இவையே சத்தசுரமுதலியன. (௧௯)

## அப்பர்சுவாமிகள் துதி.

உருகலுறுமுழுவலெனுமுவர்க்கடலுளழுந்தரும்பிப்
பெருநரகக்கடல்புகும்பிறவியெனும்பெருங்கடலுந்
திருந்தமணத்தரணரிடுந்திரைக்கடலும்விடநீந்தி
வருமொருநாவுக்கரசின்மலர்ப்பதங்களிறைஞ்சுவாம்.

(இ - ள்) மனமலைந்ததாம் சூலைநோயாகிய உவர்க்கடலில் நெஞ்சங் கலங்கி அதனைப்பதிகம்பாடி ஓங்கிவளரும் திருவருட்கடலில் அழுந்திச் சனனமென்னும் பெரியகடலும் வஞ்சமனத்தையுடைய சமணர்கள்கல்லுடன்கட்டிவிடுத்த அலைவீசும் கடலும் விட்டுநீந்தியருள்பெற்றவரென்று யாவராலுந்துதிக்கும் ஒப்பற்ற திருநாவுக்கரசுநாயனாருடைய தாமரைமலர் போன்ற திருவடிகளை யாம் வணங்குவோம். எ - று. (௨௦)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

ஆடகப்பொற்பிரளீட்டியணங்கனையார்முலைதோய்ந்து
நீடகத்தினமுகக்கிரியிநெடுநகையயிராவதமூர்ந்
தேடகத்துமலர்க்குழலிக்கிடமளித்தார்கயிலைபுகும்
பீடகந்தநாவலூரப்பெருமானைவணங்குவாம்.

(இ - ள்) உயர்ந்தபொற்குவை திருவருளாற்பெற்று தெய்வப்பெண்களாகிய பரவைநாச்சியார் சங்கிலிநாச்சியார் என்னும் இருவரையும் புணர்ந்து மனத்தின்கணுண்டாகிய பெரியபந்தங்கள்கெட நீண்டதுதிக்கையையுடைய அயிராவதத்தின்மீதூர்ந்து இதழ்களோடுகூடிய மலர்மாலையணிந்த அளகத்தையுடைய உமாதேவியாருக்கு இடப்பாகமளித்தசிவபிரான் திருக்கயிலைசேர்ந்த பெருமைக்கிடமாயுள்ள திருநாவலூர்ப்பிரானாகியசுந்தரமூர்த்திசுவாமிகளையாம் வணங்குவோம். எ - று. (௨௧)

## மாணிக்கவாசகசுவாமிகள் துதி.

நிலனேறுமபுகழ்வைகைநீரேறநீரோடு
மலரேறுஞ்சடைமுடியின்மண்ணேறமணிமேனி
யலரேறுமாறேறவாண்டருளும்பெருமானைக்
கலனேறும்பரியேறக்கண்டவர்தாள்பரவுவாம்.

(இ - பு.) நிலவுலகத்தின்கண் பரம்பியபுகழையுடைய வைகையாற்றின்னீர்கரைக்குள் ஏறவும்கஙகைநீருடன் கொன்றைமலருஞ்சூடியசிவபிரான் சடைமுடியில் மண்ணேறவும் அழகியதிருமேனியில் தழும்புண்டாகும்படி பாண்டியன்கைப்பிரம்படியேறவும் தம்மையாட்கொள்ளும் அச்சிவபிரானை ஆபரணங்கள்பூட்டிய குதிரைமீதூர்ந்துவரத்தரிசித்த மாணிக்கவாசகசுவாமிகள் பாதங்களைத் துதிப்பாம். எ - று. (௨௨)

## திருத்தொண்டர்கள் துதி—வேறு.

ஆதிநாயகனைநதெழுத்தோதுநரணிவெண்
பூதிசாதனம்பொருளெனப்போற்றுநர்வினைக
ளாதியான்பணியன்புறவியற்றுநரன்பிற்
பேதியாதவரிவர்பதமபெரிதுமேத்தெடுப்பாம்.

(இ - பு.) சிவபிரானது திருவைந்தெழுத்தைத் தியானிப்பவர்கள் அணியத்தக்க திருவெண்ணீறும் உருத்திராக்கம்முதலிய சிவசாதனங்களும் பெருஞ்செல்வமாகக் காப்பவர்கள் தாமசெய்யும் தொழில்களெல்லாம் சிவபிரான் திருத்தொண்டாகவேயிருக்கப் பேரன்போடுபுரிபவர்கள்-எக்காலத்தும் மாறாத நிரந்தரமெய்யன்புடையவர்கள் ஆகிய இவர்களது திருவடிகளை மிகவும் துதிப்பாம். எ-று. (௨௩)

## அவையடக்கம்.

வேதநாடருந்தலைவனார்விழுப்புகழென்னா
லோதலாகுமோவொள்ளியபாவையாட்டுநர்போற்
காதலாலெனைக்கலந்துபல்கருவியுமியக்கி
நாதனாரவர்வழிப்படநடத்தல்செய்யாரேல்.

(இ - பு.) சித்திரமமைந்த பதுமையை ஆட்டுகின்றவர்கள் போல் சிவபிரான் பெருவிருப்புடன் என்னுட்கலந்து எனது அந்தக்கரணமுதலிய பலகருவிகளையுமியக்குவித்து அவரேமுறைப்படி நடத்தாவிடில் வேதங்களுங்காணுதற்கரிய முதல்வராகிய அவ்வேதபுரீசரது மேம்பாடுடைய திருப்புகழை என்னாற்கூற வொண்ணுமோ. எ-று. (௨௪)

பொன்னின் வெள்ளியிற்பொழிகதிர்மணிகளிற்குயின்ற
மின்னுமொண்கலத்தமுதமுண்பார்கள் விண்ணமுத
மன்னுமட்கலத்திருப்பினும்வரைவரேயறிந்தோ
ரென்னுநன்மையிலென்மொழிப்பொருள்களுமிகழார்.

(இ - பு.) பொன்னாலும் வெள்ளியாலும் ஒளிவிளங்கும் இரத்தினங்களினாலும் அமைத்த பிரகாசிக்கும் ஒள்ளிய பாத்திரங்களில் அமுதம் புசிப்பவர் தேவாமிர்தம் நிலைபெற்ற மட்பாத்திரத்திலிருப்பினும் அவ்வமிர்தத்தின் தகைமையுணர்ந்தவர்கள் பாத்திரத்தின் இழிவைககருதிவிலக்கார்கள் என்னும் தேற்றத்தால் என் புன்சொல்லிலுள்ள பொருளையுமிகழார்கள்.

வேறு.

சேலிருக்குதெனவிகழார்நீம் புனலைச்செய்யபஞ்சாற்பிரித்தநுட்ப
நூலிருக்குதெனவிகழார்கோக்குறுமின் மணிவடத்தை நுணங்கு
கேள்வி, மேலிருக்கும்பெரியோர்களதுபோல வெனதுபுன்சொல்
விரும்பாரேனு, நாலிருக்குமுரைநதவன்றன்விழுப் புகழென்றன்
பிறைநெலங்கொள்வாரே.

(இ - பு) நன்ணியகல்வி கேள்விகளா னிறைந்த பெரியோர்கள் மச்சங்கள் வசிக்கிறதென்று நல்ல தீர்த்தத்தை இகழார்கள். செப்பமாகிய பஞ்சினால் முறுக்கப்பட்ட அற்பமாகிய நூலிற்கோத்திருக்கின்ற தென்று அழகமைந்த ஒளிவிளங்கும் இரத்தினமாலையை இகழாகள் அதுபோல என்புன்சொல்லை விரும்பாவிடினும் நான்குவேதங்களையுந்தேவருக்கோதுவித்த வேதபுரீசரதுபெருமை யமைந்த திருப்புகழ் அச்சொல்லில் அமைந்திருக்கின்றதென்று சிவபிரானிடத்துள்ள அன்புடன் நன்மையாகமதிப்பார்கள். எ-று. ஏ-அசை. (௨௬)

நூல்வரலாறு வேறு.

தெருண்மலிந்தோரடியிணை யென் சென்னிசூடித்திருமறைசைப்
புரிவளமுந்தேவரேத்து, மருண்மலிந்தவயிரவனுங்குற்றவாறும
றுமுகன்வேல்பெற்றதுமாரணங்களுள்ள்,மருளறத்தாண்டவமெ
தைபுரிந்தவாறு மாலாழிபெற்றதும்வானவர்கணெஞ்சி,னிருளறநா
யகன்வேதமுரைத்தவாறுமிளமுலையாடவநிலையிலிருந்தவாறும்.

(இ - பு.) தெளிவுமிகுந்த பெரியோர்கள் சேவடிகளிரண்டும் என்னுடைய சிரசினுக்கு ஒருமுடியாய்த் தரித்துக்கொண்டு அழகியவேதபுரியினது சிறப்பும் தேவர்கள்துதிக்கும் கருணைமலிந்த வயிரவமூர்த்தி அத்தலத்திலுற்பவித்த சரிதமும் சுப்பிரமணியர் வேலாயுதம் பெற்றசரிதமும்

வேதங்கள்மனத்திலுள்ள மயக்கம்நீங்கச் சிவபிரான் வீராடனம்புரிந்தசரிதமும் திருமாலசக்கரம்பெற்ற சரிதமும் தேவர்களுள்ளத்திலிருக்கும் மயலொழியச்சிவபிரான்வேதமோதுவித்த சரிதமும் இளமுலையம்மை தவம்புரிந்தசரிதமும். எ - று. (உஎ)

என்னைதன்மணமுமிளம்பானுபேறுற்றெய்தியதுங்கயமுக
னங்குசபாசந்தன், மனனுகரத்தினிற்பெற்றவாறுமாயோன்வருஞ்
சாபந்தவிர்த்ததுமாமலரின்மேலோன், றுன்னுபவந்தீர்ந்ததுந்தண்
மதிபெற்றதூய்துமதனிரதிக்காத்தோன்றுமாறு, மின்னறும்பவ
மருணன்றீர்ந்தவாறுமிந்திரனுக்குறுமபாவமிகந்தவாறும்.

(இ - பு) எனது அன்னையாகிய இளமுலைநாயகியார் திருமணச்சரிதமும் பாலசூரியன பேறுபெற்றசரிதமும் யானைமுகமுடைய விநாயகர்தமது நிலைபெற்றகைத்தலத்தில் அங்குசபாசம் பெற்றசரிதமும் திருமாலுக்கு வந்தசாபத்தைத தீர்த்தருளியசரிதமும் தாமரைமலர்மேல்வாழ்கின்ற பிரமன்அடைந்த பாவத்தைதபோக்கிய சரிதமும் குளிர்ந்தசந்திரன்பேறடைந்த புனிதமுள்ளசரிதமும் மன்மதன் இரதிதேவிக்குகாய உருவத்துடன்விளங்கிய சரிதமும துன்பங்கொடுக்கும்பாவத்தை யருணன்தீர்ந்தசரிதமும இந்திரனுக்கு வந்தபாவம தொலைந்த சரிதமும். எ - று. (உஅ)

சானகிநாயகன்பவங்கடீர்ந்தவாறுஞ்சார்ந்துபராசரன்வேள்வி
முடித்தவாறும, வானவனஞ்சயின்றதுங்கந்தருவனறன்முன்வரு
ஞ்சாபந்தடுத்ததும்வில்வலியாறபார்த்தன, மானெனுங்கட்சுபத்தி
ரையைமணந்தவாறுமாதவத்துப் பிறாக்கடன்கதிபெற்றவாறுங், கா
னலாதாருகவனத்தையழித்தவாறுங்காதலனைவல்லபன பெற்றுகந்
[தவாறும.

(இ - பு.) சீதைக்கு நாயகராகிய இராமருக்கு வந்த பாவங்கள் நிவாரணமான சரிதமும் பராசரமுனிவர் அடைந்து யாகஞ்செய்து நிறைவேற்றிய சரிதமும சிவபெருமான தேவர்பொருட்டாய ஆலமுண்டசரிதமும் கந்தருவனுக்கு முன்னம் வந்த சாபத்தை வரவொட்டாமற்றடை செய்த சரிதமும் காண்டீபத்தினது வன்மையால் அருச்சுனன் மானென்றுகூறும் விழியையுடைய சுபத்திரையை மணஞ்செய்த சரிதமும பெரியதவத்தையுடைய பிறர்க்கடமுனிவர் கதியெய்திய சரிதமும் மணமிருந்த தாருகவனத்திலுள்ள முனிவர்கள் ஆணவத்தை அழித்தசரிதமும் வல்லபனென்னும் பிராமணன் புத்திரனைப் பெற்றுக்களிப்படைந்த சரிதமும். எ-று. (உகூ)

பாரரசர்தொழுந்தொண்டமானுக்கெந்தைபடைத்துணைபோய
தும்பனையின்மகிமைதானும்,பீரமறுமுளத்தமணர்கழுவேறுந்தோடி
கவிக்கொலைக்கழுவின்மிசையேறுமாறுஞ், சீருலவுமவடமொழியி
லுரைத்தவண்ணந்தேவருக்காரணமுரைத்ததேவன்வாழும்,பேரு
றுசற்றிருமறைசைப் புராணந்தன்னைப்பேசுகின்றேன்செந்தமிழா
ற்பேணியன்றே.

(இ - பு.) நிலவுலகத்துள்ள மன்னர்கள் வணங்கும் தொண்டமா
னுக்குஎமதுசிவபிரான்பட்டத்துணைசென்ற சரிதமும் பனையினது மான்
மியமானசரிதமும் தயையற்றமனமுடைய சமணர் சீகாழியிற்றிருவவதா
ரஞ்செய்த திருஞானசம்பந்த சுவாமிகளுடன் பகைத்துக் கொலைக்கழுவி
ன்மீதுதாங்களே ஏறியசரிதமும் சிறப்புமிகுந்தவடமொழியிற்சொன்னபடி
தேவர்களுக்கு வேதமோதுவித்த சிவபிரான் எழுந்தருளியிருக்கும் பேர்
பெற்றநல்ல திருவோத்தூர்ப்புராணத்தைச்செவ்விதாகியதென்மொழியால்
விருப்பத்துடன் கூறுகின்றனன். எ - று. மன, ஓ - அசை. இந்நான்
குங்குளகம். (௩௦)

நிகரின்வடமொழியுரைத்தபுராணந்தனைநீயுரைத்ததென்னை
யெனினிகரிலவ்வெள்ளிச்,சிகரியினுமுயர்மகிமையுடையதிந்தசிவ
தலமாமிதின்பெருமைதெரிந்துசொன்னோர், புகரிலுயர்கைவலவி
யமுறுவரென்றுபுராரியுமைக்கோதுவித்தபொருளைத்தேர்ந்து, ப
கருமுயர்சித்திபெறவேண்டியானும் பாவாணரருளவலியாற்பகர்ந்
தேனமன்னே.

(இ - பு.) ஒப்பில்லாதவடமொழியிற் கூறிய இப்புராணத்தை நீ தெ
ன்மொழியிற் கூறியதென்னவென்றால் தனக்குவேறு இணையில்லாதவெள்
ளிமலையைக்காட்டிலும் மிகுந்தமகத்துவமுள்ளது இச்சிவதலமாகும் ஆத
லால் இதன்மகிமையறிந்து சொன்னவர்கள் குற்றமற்றமேலான முத்திய
டைவரென்று சிவபிரான் உமாதேவிக்குச்சொல்லியருளிய பொருளைத்தெ
ரிந்து துதிக்கப்படும் மேலான சித்தியடைய வேண்டிநானும் பாவலரு
டைய அருள்வன்மையால் உரைத்தனன். எ - று. மன், ஓ-அசை. (௩௧)

மனையிலொளிர்விளக்கிலொருதீபமாறிவாசலில்வைத்ததுமான
வடநூற்சொன்ன, நினையின்முத்திதருஞ்சுருதித்தலத்துக்கேய்ந்த
நீண்மகிமைதனைத்தமிழானிகழ்த்தினேன,னையதலத்தினிற்கணித
த்தொழின்மேற்சார்ந்தோனரியபழமறைக்குலத்தோனடைந்தோ
ர்பாவ, வினையகலவருள்செயுந்தேப்பெருமாளீன்றவிடலைகருணாக
ரப்பேர்மேவினோனே.

(இ - பு.) வீட்டினுள் ஏற்றியுள்ளதீபத்தினின்றும் வேறுமொருதீபம்
ஏற்றி வெளிப்புறமெங்கும் விளங்கும்படிவைத்ததுபோல் வடமொழியிற்
கூறிய நினைக்கமுத்தி கொடுக்கும் இந்த வேதபுரிக்கு இசைந்தமேலான
மகத்துவந்தன்னைத் தென்மொழியிற் கூறினன் அவன்யாரெனில் அத்
தன்மையான தலத்தினிற்கணிதத் தொழிலையடைந்தவனும் பழமறைக்குல
த்தினனும் ஆகிய தன்னையடுத்தவர்பாவவினைநீங்கவருள்செய்யும் தேப்பெ
ருமாளென்னும்பெயருள்ளவன்பெற்ற புதல்வனாய்க்கருணாகரனென்னும்
பெயர் புனைந்தவன். எ - று. ஆல், ஏ - அசை. (௩௨)

பாயிர முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநகரச் சருக்கம்.

மருககமழுங்கூவிளமாதளை மாதேசகுவளரகில் சந்தனந்தெங்கு
வருக்கைவாழை, முருக்கலா சோகங்காதியரவடாந்தஞானமுனிவ
ரர்க்கோர்துறக்கமெனமூசுமபொறமே, னருக்கனருள்வெயின்ம
றைபடாததவத்துக்கெலலாமன்னைமனை போற்புனிதமாகிவீறுற், றி
ருக்கவிவேட்டுணவிமையோரென்று நீங்காதிருக்கவளர்நைமிசார
ணியமன்றே.

(இ - பு.) எவ்விடத்துமமணம்வீசுகின்ற வில்வம் மாதளை மாதேக்கு வளருமஅகிலசந்தனம தென்னை பலா வாழை முருக்கு அலாந்தசோங்கு இவைமுதலாகிய விருட்சங்கள நெருங்கி மெயஞ்ஞானமுள்ள முனிவர்களுக்கு ஒரு மேலானபதவியென்று சொல்லும்படி மொயக்கின்றபொன் வனணமுடையவணடுகள சூரியன்காயும்வெயிலை நிலத்திறபடாதுமறைக்க எல்லாத்தவங்களுக்கும் தாய்வீடுபோற றுல்லியமாகிமிகவும் பெருமையடைந்து வேதமுறைப்படிநடத்தும் யாகங்களிறறரும் அவிப்பாகத்தை இச்சித்து உணணுமாறு தேவர்கள எப்பொழுதும் அகலாமல்வாசம்புரிய வளர்கின்ற நைமிசாரணியம். எ - று. அன்று, ஏ - அசை. (க)

எத்தலமும்புகழ்பிருங்கியுக்கிரவீரனினியமகாவீரியனல்விமை
யோரேத்து, மத்திரிவான்மீகிகலைக்கோட்டன்ஞானவகத்தியனற்க
வுதமன்மாவசிட்டனென்று, நித்தனையேதொழுநூலகண்டன்வே
தநிறைந்திடுங்கைவல்லியனும்பராசரப்பே, ருசுதமனுஞ்சூதமாமு
னிவன்றானுமொருங்குகுழீஇயவ்வனத்திலுற்றார்மாதோ.

(இ - பு) எவ்வுலகமும் புகழ்கின்ற பிருங்கி உக்கிரவீரா இனியராகிய மகாவீரியர் நலலதேவாகள்துதிக்குமஅத்திரிவான்மீகா கலைக்கோட்டர் மெய்ஞ்ஞானமுடைய அகத்தியர் நன்மையுள்ளகவுதமாபெருமைவாய்ந்தவசிட்டர் எந்நாளும் சிவபிரானையே தொழும் நூலகண்டர் வேதத்தின் மெய்ப்பொருள் பூரணமாய்த்தங்கும் கைவல்லியரும் பராசரரென்றுபேர்கொண்டவுத்தமரும் சூதரும் ஆகிய முனிவரெல்லாம் ஒன்றுபடக்கூடி அந்தநைமிசாரணியத்தில் வந்தனர். எ - று. மாது, ஓ - அசை (உ)

அந்த வனத்தினிலிருக்குமரனையன்பாலபிடேகமுறையாற்றியரி
யவாசச், சந்தலர்கூவிளமிருமென்கடுக்கையாதிசாத்திமிகத்தூப
தீபாதிதந்து, கந்தமிகுமினியசுவைக்கனிகண்மிகக்காண்டருளவித்
தகங்குழைந்துகைகள்கூப்பிப், பந்தமறுமுனிவரெலாம் விடை
கொண்டிப்பாற்படர்ந்தொருசார்குழுமினாவிண்பரவுந்தூயோர்.

(இ-பு) அந்நைமிசாரணியத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபிரா
னை அன்பினால் திருவபிடேகம் கிரமமாக இயற்றி அரியவாசனையுள்ள சந்
தனம் அலர்ந்த வில்வம் பெரியமிருதுவான கொன்றை முதலாயுள்ள புட்ப
மாலையணிந்து மிகவுந் தூபதீபமுதலிய ஆராதனைசெய்து மணம்பெருகு மதுர
மாகிய சுவையுள்ள கனிகளை மேன்மேலும் நிவேதித்து மனமிளகிக் கரங்கள்
குவித்து எதிர்நின்று தோத்திரஞ்செய்து பாசத்தொடக்கற்ற முனிவர்களெ
ல்லாம் சிவபிரானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு இப்பால்வந்து ஒருஇட
த்திற்கூடினார்கள் அவர்கள் எப்படிப்பட்டவரென்றால் விண்ணவர்கள் துதி
க்கும் புனிதர்கள். எ-று. (௯)

அங்கொருபொன்னாச்சிரமத்திருந்தவெல்லையவ்வனத்தின்முனி
வரெலாமவணுற்றன்பாற், பங்கயவாதனத்திருக்குமுனிவன்பொற்
றாள்பணிந்துயர்காந்தத்தின்மறைப்பொருண்மேலோர்க்கோதுஞ், சங்கரனார்
மகிமைமுனஞ்சொற்றயந்தச்சரிதைதனைவிரித்தினுஞ்சாற்றுகெ
ன்னத், துங்கமுறுமூவாறு புராணஞ்சொன்ன தூயவனுமனமகிழ
ந்து சொல்லுகின்றான்.

(இ-பு) அவ்விடத்தில் ஒரு அழகிய ஆச்சிரமத்தின்கண் இருந்த
பொழுது அவ்வனத்தின் முனிவரெல்லாம் ஒருங்குகூடி அன்புடன் பதுமா
சனத்திலெழுந்தருளியிருக்கும் சூதமுனிவருடைய திருவடிகளைப்பணிந்து
மேம்பாடுள்ள காந்தத்தில் வேதத்தைத்தேவர்களுக்கு ஓதுவித்த வேதபுரீசர்
மகத்துவத்தை முன்னஞ்சுருக்கிச்சொன்னீர் அந்தச்சரித்திரத்தை விரிவாய்
இன்னம் ஒருக்கால் எடுத்து அருள்செய்யவேணுமென்று தோத்திரஞ்செ
ய்யமேன்மையுடைய பதினெண்புராணமு முரைத்தருளிய தூயரான சூத
புராணிகர்களிகூர்ந்து சொல்லுகின்றனர் எ-று. பதினெண்புராணங்க
ளாவன, சைவம் காந்தம் பௌடியம் இலிங்கம் மார்க்கண்டேயம் வராகம்
வாமனம் யற்சம் கூர்மம் பிரமாண்டம் காருடம் நாரதீயம் வைணவம் பாக
வதம் பிரமம் பதுமம் பிரமகைவர்த்தனம் ஆக்கேயம். (௰)

அப்பரிசேபுகலுவனீர்கேண்மினென்றேயகமுருகிமெய்சிலிர்ப்
பவமரர்க்கன்பா,பொப்பறுநான்மறைபுகன்றவொருவன்பாதவொ
ண்மலரையுளத் திருத்தியுய்ந்தஞானச, செப்பரிய வியாதமுனித்தி
ருத்தாளுன்னிச்சிறந்த நைமிசாரணியத்தொருண்டசிந்தை, மெய்ப்
பெரியர்களினமுகநோக்கியன்பாலவேதபுரிப்பெருமையெல்லாம்வி
ளம்புகின்றான்.

(இ - பு.) அவ்வண்ணமே சொல்லுகின்றனன் கேளுங்களென்று மனமிளகி உடலம் சிலிர்சகத்தக்கதாகத் தேவர்களுக்கு அன்புடன் ஒப்பற்ற நான்குவேதங்களையும் ஓதுவித்த வேதபுரீசர் திருவடியாகிய ஒள்ளிய மலரை மனத்திலிருத்திக்கொண்டு நற்கதியடைந்துய்ந்த மெய்ஞ்ஞானமுடைய சொல்லுதற்கரிய வியாசமுனிவர் அழகியபாதங்களைத் தியானித்து மேம்பாடுள்ள நைமிசாரணியத்துள் வசிக்கின்றதெளிந்த மனத்தவராய உண்மைமுனிவர்கள் தாமரைமலர்போன்ற முகங்களைப்பார்த்து அன்பினால வேதபுரியினதுமகிமை முழுதும் சொல்லுகின்றனர். எ று. (௫)

வேறு.

வினையகல்வியாதமுனிவனன் றுரைதத வியன்பதினெண்புராண
த்து, ளினமலாசசடிலநதிரையவறபுகழுமீரைநதிலிலங்குகாந்தததி
ற்புனிதசஙகரனறசங்கிதைதனிற்புகல சிவவாககியகண்டத், தி
ன்மறைபுண்ணோக் கியம்பியவெங்கை யிசையுளதகையெடுத து
ரைப்பாம்.

(இ - பு.) தீவினையொழிந்த வியாசமுனிவர் அந்நாளிற்கூறிய விசாலமான பதினெண் புராணங்களுள் கொத்துகளாயுள்ள மலர்களணிந்த சடைமுடியையுடைய சிவபிரானைப் புகழ்ந்துரைக்கும் புராணம்பத்து அதனுள் முதன்மையாய் விளங்கும் காந்தபுராணத்துள் மேன்மையுள்ள சங்கர சங்கிதையிற் கூறுஞ்சிவவாக்கிய கண்டததில் நான்கு வேதத்தையும் தேவர்களுக்கு ஓதுவித்த வேதபுரீசர் சரிதமுள்ளது அதைஎடுத்துச்சொல்லுவேன், எ - று. (௬)

வேறு.

ஆதியில்வெண்கயிலை தனிலாதிமூர்த்திஅம்பிகையாடனக்குரைத்
தாரதனைக்கேட்டுக், கோதிலறுமுகன்வியந்துபொதியவெற்பாகு
றுமுனிக்கோதினனந்தகுணத்தினனும், வேதவியாதனுக்குரைத்
தானவனுமன்பால்விளம்பினனெனக்கதனைவிரும்பியானு, மோது
வனீர்கேண்மினென்றுலகமுய்யவுளங்களிக்கச் சூதனிவையுரைக்
கின்றனல்

(இ - பு.) பூர்வத்தில்வெள்ளியதிருக்கயிலையின்கண்சிவபிரான் அந்த வேதபுரிமான்மியத்தை உமாதேவியாருக்குக்கூறினர் அதைக்கேட்டுக்குற்றமற்ற சுப்பிரமணியக்கடவுள் வியப்படைந்து பொதியமலையில் வசிக்கும் அகத்தியருக்குக்கூறினர் அந்தநற்குணமுள்ள அகத்தியரும வேதவியாசருக்குச்சொல்லினர் அவரும் அன்புடன் எனக்குரைத்தனர் விரும்பியானும் அதை உங்களுக்குவிளம்புகின்றேன்நீங்களுங்கேளுங்களென்றுஉலகமுய்த்திடவும் உள்ளம்பூரிக்கவும் சூதமுனிவர் ஓதுகின்றனர். எ-று. ஆல்-அசை;

வேறு.

திங்கள்செஞ்சடையார் புவியினின்மருவுஞ் சிவதலமறுபதோ
டெட்டா, மங்கநிலன்பாலிருப்பது பதினொருமதினைக மிகமகிழ்வு
பொங்குறவுறைவதைந்துசேத்திரமாமபுகலுமிவ்வைந்துமேதென்
னிற், றுங்கமாமறைசைகாஞ்சிகாளத்தித்துகளறுதில்லைகாசியுமே

(இ-பு) சந்திரனையணிந்த சிவந்தசடைமுடியையுடையசிவபிரான் இ
ப்பூதலத்தின்கணமர்ந்தருளும் சிவதலம் அறுபத்தெட்டாகும் அத்தலங்க
ளில்அன்புடன் இருக்கின்றதலம் பதினொருகும்அதனுள்மனத்திலுவகைமே
ன்மேலுமுண்டாக வதிந்தருளுந்தலம ஐந்து துதிக்கப்பட்ட அவ்வைந்து
தலமும் யாதெனின் புனிதமுள்ள பெரியதிருமறைசை திருக்காஞ்சி திருக்
காளத்தி ஸ்ரீசிதம்பரம் ஸ்ரீகாசியும். எ-று. ஏ-அசை. (அ)

இத்தலமைந்தின்மேலதாவிமையோரெய்துதற்கரியதாவென்று
நித்தியமாயநின்மலமூர்த்திமேயமோடிருப்பதியாதென்னின், மெய்
த்துபல்புவனந்தொழுமபிரானமராவேண்டிடமறை விரித்தோது
ஞ், சுத்தநற்சுருதிபுரியினுக்கிணையாச சொல்விடமில்லையிப்புவி
[மேல.

(இ-பு.) இந்தத்தலங்களைந்தினுள் மேம்பாடுள்ளதாய் தேவர்களெ
ளிதிலடையக்கூடாததாய எந்நாளுமழிவில்லாத மலரகிதரான சிவபி
ரான் பேரன்புடன் எழுந்தருளியதலம் எது என்றால் உண்மையைவிள
க்கிப்பலவிதமாகிய உலகினரும்வணங்கும் அச்சிவபிரான் உம்பர்கள்மே
ன்மேலும் வேண்டுதல் செய்யவேதத்தை விரிவாய் முறைமைப்படி ஓது
வித்தபுனிதமுள்ளநன்மையுடைய இச்சுருதிபுரியினுக்கு ஒப்பாகவுண்டெ
ன்று சொல்லுந்தலமில்லை இந்தவுலகத்தின்கண். எ-று. (௯)

அத்தலமதனிற்குகனதிசெய்ஞமோராறுளதன்னதன்பெருமை
சித்தனேயுரைக்கவேண்டுமற்றிதுயானிகழ்ந்துதற்கரிதுநீணிலத்தி
னுத்தமமுருகன்கொணர்ந்ததெய்வபெருமானொளிர்மணிச்சடையினி
லொளிருஞ், சுத்தகங்கையினுந்தூயதென்றுரைத்தாலன்னதன்ம
கிமையார்தொகுப்பார்.

(இ-பு) அந்தவேதபுரியிடத்துச் சேய்நதியென்று ஒரு ஆறுண்டு
அதன்மகிமையைச் சிவபிரானே யுரைக்கமுடியுமன்றி நான்கூறுதற்கு
எளிதன்று நெடியவிவ்வுலகத்தின்கண் முன்னம் நன்மையுள்ள முருகக்கட
வுள் வேல்விட்டுக்கொண்டு வந்த அந்நதி எமது சிவபிரானுடைய ஒளிர்கின்
ற அழகிய சடாமகுடத்தில்விளங்கும்பரிசுத்தமுள்ள தெய்வகங்கையைவிட
த்தூய்மையமென்று சொன்னால் அப்படிப்பட்டநதியினது மகத்துவத்தையா
வர் இவ்வளவென்று கணிப்பார்கள். எ-று. (௰)

வேறு.

முந்தியநான்மறைதெளிந்துமுக்கனல்வேள்விகள் பலவாமுடி
த்திட்டாலு, மைந்தழலினுப்பணிருந்தருந்தவஞ் செய்யினும்பெரி
யோராவரில்லை, சிந்தையுடன்சேயாற்றினசெழும்புனறோயினும
ருவல்செயினுமாங்கு, வந்துமறைபுகன்றானைவணங்கினுநற்சித்தி
பெற்றுவாழ்வாமாதோ.

(இ - பு.) எல்லாக்கலைகளுக்கும் முதன்மையுள்ள நான்குவேதங்
களையுமுணர்ந்து காருகபத்தியமுதலிய மூன்றுகனலையுடையயாகங்கள் பல
வாகநிறைவேற்றினும் பஞ்சாக்கினியின் மத்தியிலிருந்து அரியதவம் புரியி
னும் அடியர்களாகின்றனரில்லை ஒருமையாகியமனதுடன் அந்தச்சேய்நதியி
லுள்ள வளப்பமுள்ள நீரில்முழுகினுமஅந்நீரைக்கையினாற் பரிசிக்கினும் அ
த்தலத்தில் அததியாபகராய் எழுந்தருளிவந்து தேவர்களுக்கும்முனிவர்களு
க்கும் வேதமோதுவித்தசிவபிரானைத தொழினும்அவரவர்கள்மனதிலெண்
ணுகின்றபடிநல்ல சித்திகளடைவார்கள். எ-று. மாது, ஓ-அசை (கக)

காதினுக்கணியமுகத்தினுக்கழகுகாணுமாங்கதற்கிடாதுடல
மீதிலாபரணமிகவணிநதிடினும்விளங்குமோவெழிலதுபோலப்
பூதலமதனிலனேகமாந்தலங்கள் பூசனைபுரியினுஞ்சுரர்க்கு
வேதமுனுரைத்தவிமலனைததுதியாவிடினுறுதுயர்தவப்பேறே.

(இ - பு.) காதுக்குக்கலனணியின் முகத்துககு அழகுண்டாகும் அம்
முகத்திற்கு அணியாமல்உடம்பு முழுதுமிகவணிந்தாலும் அழகு உண்டாகு
மோஅதுபோல இப்பூதலத்தில்பலவாகியதலங்கள் அடைந்து பூசித்தாலும்
வேதத்தைத் தேவர்களுக்கு கோதுவித்த சிவபிரானைப் பூசியாவிட்டால்
சீவர்களுக்கு மெய்மையாகிய தவத்தால் வருகின்றமுத்தி கிடைக்காது.
எ-று. ஏ-அசை. (கஉ)

வழுவில்பொன்னுலகில்வானவராகிவாழிலென் மாநிலத்தரசக்
குழுவெலாமவணங்கமாமுடிபுனைந்தகொற்றவராகிலென் கொடிய
பழுதெலாந்தொலைத்துமெய்த்தவநெடுநாள்பயிலிலென்மறைசைய
மபதியிற், புழுவதாயெனினும்பிறந்திடாதவர்க்குப்பொருந்துமோ
சித்தியின்பொம்மல்.

(இ-பு.) யாதொருகுறைபாடுமற்றவிண்ணுலகின்கண்தேவர்களாகவா
ழ்ந்தாலுமென்ன இந்நிலவுலகத்தின்கண் மன்னர்கூட்டங்களெல்லாம் முடி
சாய்க்க மகுடந்தரித்தசக்கரவர்த்திகளானாலுமென்ன வெவ்விதாகியதீச்செ
யல்களெல்லாமொழித்துஉண்மைத்தவத்தை அநேகநாள்புரிந்தாலுமென்ன
சுருதிபுரியில்வசிக்கும் கிருமியாகவாவது பிறவாதவர்களுக்கு முத்தியின்பம்
கிட்டுமோ எ - று. (கங)

வேறு.

அத்தலத்தேவேலவனுமயில்பெற்றானரனடித்தா
னுத்தமமால்கைநேமியுடைத்தானும்பருக்கு
நித்தன்மறையோதுவித்தானீனிறப்பூங்குழலுமையாள்
சித்தமொருமைத்திறனாற்சிலநாளங்கரம்ஞெழுதாள்.

(இ - பு.) அச்சுருதிபுரியில் முருகக்கடவுள் வேற்படைபெற்றுக்கொண்டார் சிவபிரான்வீர நடனஞ்செய்தார் உத்தமராகிய திருமால் தமதுகரத்தில் சக்கரப்படையுடையரானார் தேவர்களுக்குச் சிவபிரான்வேதமோதுவித்தார் கருநிறமுள்ள அழகிய அளகபாரத்தையுடைய உமாதேவியார்மனமொருமித்ததன்மையால்சிறிதுகாலம்அங்குவசித்துச்சிவபிரானைப்பூசித்தார்

இளமுலையையரன்மணந்தானிரவிபெரும்பேறுபெற்றான்
றுளபமுடித்திருமாலுந்தொடர்சாபமவண்டொலைத்தான்
வளமுறுபங்கயனுங்குவருபவந்தீர்ந்தினிதுற்றான்
களபமுலைத்தாரைதனைக்கலநதபவமதிதீர்ந்தான்.

(இ - பு.) இளமுலைநாயகியைச் சிவபிரான் திருமணம்புரிந்தார் சூரியன் அருமையாகிய பேறுபெற்றான் துளபமாலையைச்சூடிய திருமாலும் தன்னைத்தொடர்ந்த சாபத்தை அத்தலத்தில் நீக்கிக்கொண்டார் வளமமைந்ததாமரைமலராசனாகிய பிரமன் அத்தலத்தில்தனக்குவந்த பாவத்தைத் தீர்த்துக்கொண்டு இன்பமடைந்தான் கலவைப்பூச்சணிந்த தனபாரங்களையுடைய தாரையைச்சேர்ந்த பாவத்தைச்சந்திரன் தீர்த்துக்கொண்டான்.

மாதிரதிபூசித்துமகிணனைச்சேர்ந்தனளருணன்
பாதகமுமவண்டொலைத்தான்பண்ணவர்கட்கிறைவனுய
கோதமனால்வருஞ்சாபங்குறைத்தனனவ்விராகவனு
மேதமுறும்பவநீக்கியெழினகருக்கெய்தினனால்.

(இ - பு.) இரதிதேவி பூசித்துத்தனது கொழுனனான மன்மதனைச்சேர்ந்தாள் அருணன் தனக்குவந்தபாவத்தையும் அத்தலத்தில் தீர்த்துக்கொண்டான் தேவர்க்கதிபனாகிய இந்திரன் உயர்ந்ததவத்தினராகியகௌதமமுனிவரால் தனக்குநேர்ந்தசாபத்தைத்தீர்த்துக்கொண்டனன் பெருமிதத்தையுடைய இராகவமூர்த்தியும் குற்றமற்ற தனதுபாவத்தை நீக்கிக்கொண்டு அழகமைந்த அயோத்திக்குச்சென்றார். எ-று. ஆல்-அசை. (௩௬)

அரியதவப்பராசரனுமாங்குதவம்புரிந்துயர்ந்தான்
வெருவிவருந்தேவருக்காவிடந்தனையுமரனுண்டான்
றெரியுமனத்துந்துமியுந்திசைமுகன்சாபந்தடுத்தான்
கரியகுழற்சுபத்திரையைக்காண்டீபன்சேர்ந்தனனால்.

(இ - பு.) அருமையாகிய தவத்தையுடைய பராசரமுனிவரும்அவ்விடத்தில தவஞ்செய்து மோனமையடைந்தார் அச்சமுற்றுவந்ததேவர்களுககாக ஆலகாலவிடத்தைச் சிவபிரான் உண்டருளினுர் மனத்தெளிவையுடைய துந்துபிஎன்பவனும் பிரமனுல் தனக்குநேரிட்ட சாபத்தைத்தவிர்த்துககொண்டான் கருங்கூந்தலுள்ள சுபத்திரைஎன்பவளை அருச்சுனன் மணம் புரிந்தான். எ-று. ஆல்-அசை. (கஎ)

பிறர்க்கடமாமுனிமுத்திபெற்றதுந்தாருகவனத்தோர்
சிறக்கணுதற்கடிமையும்றுங்கரில்பலன்பெற்றதுமாங்
கறற்கலசமுனியையடைந்தருமறைவல்லபனொருவ
னிறுக்கியவார்முலைமனையோடிறைஞ்சிமகவினையீன்றுன்.

(இ - பு.) பிறாக்கடமகாமுனிவா முத்திபெற்றதும் தாருகவனத்திருடிகள்செம்மையான நெற்றிககண்ணையுடைய சிவபிரானுககடிமைபூண்டு ஒப்பற்ற தவப்பயன் அடைந்ததும் அததலத்தில்கங்கையையடககியகலசத்தைககரததிற்றுங்கிய அசத்தியமுனிவரைககண்டு அரியவேதப்பொருளுணாந்தவல்லபனென்னும் மறையவனொருவன் கச்சினுல இறுக்கியதனபாரங்களையுடைய தனதுபத்தினியுடன் வணஙகிப் புத்திரபபேறெய்தினுன் அத்தலத்தில். எ-று. (கஅ)

வளங்கொள்புகழ்மிகுதொண்டமானுக்குமறைபுகன்ற
விளங்கதிர்மாமதிவேணியெந்தைபடைத்துணையானுன்
களங்கமறச்சாரூபக்காட்சிபெற்றுநின்றபனை
விளங்குமவணதின்பெருமைவிளம்புவதற்கரிதாமால்.

(இ - பு.) வளமைதங்கிய புகழ்மிக்க தொண்டமானுக்கு அரியவேதங்களால் எடுத்துக்கூறும் முற்றுதகிரணங்களையுடையமூன்றும்பிறையைத்தரித்த சடையையுடைய எமதுதநதையாகியசிவபிரான் படைத்துணைவராஞர் யாதொருகுற்றமுமின்றிச் சிவபிரானுடையதிருவுருவததைப்பெறறுநின்றபனையானதுவிளக்கமடைந்திருக்கும்அத்தலத்தில ஆதலினுல் அத்தலத்தின்பெருமை சொல்லுதற்கரிதாம. எ-று. ஆல்-அசை. (கக)

இன்னவகைமகிமைபெறுமெழிற்றலமெஙகெனிற்புவிமேன்
மன்னுமெழிற்றேயமுமமமாநகரின்றனிவளமும்
பன்னுதுங்கேட்டருளுமெனப்பண்புறுமாதவர்மகிழ்வு
துன்னிடநற்சூதமுனியிவைவிரித்துசசொல்லுவனுல்.

• (இ - பு.) இவ்வண்ணம்மகிமைபெற்ற அழகியதலம் எவ்விடத்துள்ளதென்னில் இந்நிலவுலகின்கண நிலைபெற்றுள்ள அழகியதேயத்தையும அத்தலத்தின் ஒப்பற்றவளத்தையும்சொல்லுகின்றோம் கேட்டருள்வீரென்றுதவப்பண்பமைந்த நைமிசாரணிய முனிவர்கள் மகிழ்ச்சிகொள்ளாநற்றவராகிய சூதமகாமுனிவர் அடியில்வருமாறு விரித்துக்கூறுகின்றார். எ-று. (உ०) ஆல்-அசை.

வேறு.

திருத்தகுவளஞ்சால்பாலிச்செழுநதியோடுமெண்ணின்
மருத்தகுநதிகளென்னும்வாரபுனலொழுக்கங்காட்டி
யுருத்தகுமகவைப்போற்றுமுரியநற்றாய்போலின்பங்
கருத்துறப்பயிர்களோம்புங்கவினதுதொண்டைநாடு.

(இ-பு) திருத்தமிக்கவளமமைந்த செழுவியபாலாறுடன் எண்ணத்தக்கவாசனைகமழும் நதிகளென்னும் நீண்டகாலகளாகியஒழுங்கைககாணபித்து உருவத்திற்சிறந்த பிள்ளையைவளர்க்குந் தாய்போல இன்பககருத்துடன் எல்லாபபயிாகளையுமவளாக்கும அழகையுடையதுதொண்டைநாடு.

மருக்கமழ்வனசமபூததவாவியுமட்டுமவாசத்
தருக்கணீள்பொழிலுமூட்டுஞசத்திரககுவையுநதெயவத்
திருககிளர்பசுமபொறகோயிறசிறப்புமாடஙகள்வானி
னெருககியபுரமுமாகநிறைந்தது தொண்டைநாடு.

(இ-பு.) மணஙகமழும்தாமரைமலாகள்விகசித்ததடாகஙகளும்மடஙகளும்பரிமளம்வீசுமவிருட்சங்கள் ஓஙகியசோலைகளுமஆதுலர்க்கருததும் அன்னசததிரத்தொகுதிகளும் தெயவத்தனமைவிளஙகியபசியபொன மயமானதிருககோயில்களின்சிறபபுமஅண்டமளாவுமஎழுநிலைமாளிகைகள்நெருங்கியுள்ள பட்டணங்களுமாகநிறைந்துள்ளதுதொணடைநாடு. எ-று.

வரைவளர்செலவமன்றிவரைகளும்வனத்திற்றுன்னு
மூரைவளாசெல்வமனறியோங்கியவனமுமபண்ணைத்
துரைவளர்செல்வமன்றித்தண்வயறகுலமுமுந்நீர்ப்
புரைவளர்செல்வமன்றிபபுணரியுமுடைததநநாடு.

(இ - பு.) மலைபடுதிரவியங்களலலாமல் மலைகளும் காட்டின்கண் உண்டாகும் நெருஙகியபுகழமைந்த திரவியங்களல்லாமல் செழிததிருக்குமகாடுகளும் வயல்படுதிரவியஙகளலலாமல் குளிர்ந்தவயற்றொகுதிகளும் கடலினிடதது ஒப்புடன் உண்டாகும திரவியஙகளல்லாமல்கடலும்உடைத்தாயிருக்கின்றது அநதத்தொண்டைநாடு. எ-று. மலைபடுதிரவியம்:—மிளகுகோட்டம் அகில்தககோலமகுங்குமம், காடுபடுதிரவியம்:—இருல்தேன்அரக்கு மயிற்பீலி நாவி, நாடுபடுதிரவியம்:—செந்நெல்சிறுபயறுகரும்புவாழை செவ்விளநீர், கடல்படுதிரவ்யம:—உப்பு முத்துபவளம்சங்கு ஒககோலை. (உ௩)

கண்பயில்பணையின்முததஙகதிர்பபனவிலஙகற்சூழற
றிலபயில்வேழமுததந்திகழ்வனபுறவச்சூழன்
மண்பயில்கமுகின்முத்தமல்குவபழனச்சூழற்
றண்பயில்பணிலமுததந்ததைவனகானச்சூழல்.

(இ - பு.) மலையிடந்தோறுங்கணுக்களமைந்த மூங்கிலின் முத்தங்கள்பிரகாசிக்கின்றன வனத்திடந்தோறும்வன்மையையுள்ளயானைத்தந்தங்களின் முத்தங்கள் பிரகாசிக்கின்றன கழனியிடந்தோறும் நிலத்திலோங்கும் கமுகமரத்தின்முத்தங்கள் விளங்குகின்றன கடற்கரையிடந்தோறும் குளிர்ச்சிதங்கிய சங்குகளின் முத்தங்கள் பிரகாசிக்கின்றன. எ-று. (௨௪)

குண்டுநீர்ச்சுனைகள்பூத்தகுவளைகண்காட்டுஞ்செந்தேன்
மண்டுபூந்தளவின்மொட்டுமணிநகைகாட்டும்பன்னை
விண்டிடாக்கமலப்போதுமென்முலைகாட்டுங்காரொ
ணண்டுசொமுழந்தாள்காட்டுநாடெனுமடந்தைக்கம்மா.

(இ - பு.) தொண்டைநாடென்னுமோர்பெண்ணுக்கு ஆழமாயுள்ள நீர்ச்சுனைகளிற்பூத்த குவளைமலர்கள்கணபோலவிளங்கும்சிவந்ததேன்நிறைந்தஅழகியமுல்லையரும்புகள்வெண்ணிறமுள்ள தந்தங்கள்போல்விளங்கும்வயலினிடத்து நீங்காத தாமரைமொக்குகள் மிருதுவானதனங்கள்போல்விளங்கும் கரியநிறங்கொண்ட நண்டுகள் சிறப்பமைந்த முழந்தாள்கள்போல்விளங்கும், எ-று. அம்மா வியப்புச்சொல். (௨௫)

தேன்மணம்வீசாநிற்குஞ்சிலம்பெலாஞ்சிறந்தவாவின்
பான்மணம்வீசாநிற்கும்பாடிகள்கரும்பஞ்சாற்றின
வான்மணம்வீசாநிற்கும்வயன்றொறுமலிந்தகுப்பை
மீன்மணம்வீசாநிற்கும்விரிகடற்றுறைகண்முற்றும்.

(இ - பு.) மலைகள்தோறும் தேன்வாசனைகமழும் ஆயர்பாடிகள்தோறும் சிறப்பமைந்த பசுவின்பால் வாசனைகமழும் வயல்களதோறும் கரும்பினதுசாற்றின் சிறந்தவாசனைகமழும் விரிந்தகடற்றுறைகள்தோறும் பெரியகுவியல்களாகக்குவிக்கும் மச்சங்களின்வாசனைகமழும். எ-று. (௨௬)

ஆயநன்னாட்டிற்பூமாதணிமுகம்போலுமன்னாட்
டேயமென்னுதலிற்றீட்டுந்துலங்குபொற்றிலதம்போலுஞ்
சேயரிக்கண்ணேபோலுஞ்சிறந்தவெவ்வுலகுங்கொண்ட
மாயவனுதரம்போலுமறைசைமாநகரமம்மா.

(இ - பு.) இவ்வாறுசிறப்பமைந்தநல்லஅத்தொண்டைநாட்டிற்பூதேவியின் அழகியமுகம்போலவும்அப்பூதேவியின்தூய்மையுள்ளமிருதுவானநெற்றியிற்றரிக்கும் விளங்கிய பொன்னுலாகிய திலதம்போலவும் செவ்வரிபடர்ந்த விழிகளைப்போலவும் எல்லாவுலகையும் உட்கொண்டருளிய திருமாலின்வயிற்றைப்போலவும் மறைசைமாநகரம் விளங்கியிருக்கும் எ-று. அம்மா. வியப்புச்சொல். (௨௭)

## வேறு.

திருமகிணன்பதியுரகர்கெடும்பதிதிசைமுகவன்வதிபூந்
தருவளரும்பதிதனதனுறும்பதிதனிலுமவளம்பதியா
கிலைதருவின்பதிமருமலரின்பதிகினைவினிதமபதியும்
வரைசுதையின்பதிமகிழ்வுறுநன்பதிமறைசையெனும்பதியே

(இ - பு) வரிசையமைந்த ஐந்தருக்களுக்கிறைவனாகிய இந்திரனும் வாசனைகமழுங்கமலவாசனான பிரமனும் தமமனதில் தினந்தியானிக்கும் இமயவரையரையன்புத்திரியாம் உமாதேவிக்கு நாயகராகிய சிவபிரான் மகிழ்கூர்ந்து வீற்றிருந்தருளும் நல்லநகரமாகியமறைசையென்னும் நகரமானது இலக்குமியின் மணவாளராயுள்ளதிருமால் பதியாகிய வைகுந்தத்தினும் நாகர்கள்பெரியபதியாகிய நாகலோகத்தினும் பிரமன்பதியாகிய சத்தியலோகத்தினும் அழகிய ஐந்தருக்கள் வளர்ந்தோங்கும் தேவலோகத்தினும் குபேரன்வசிக்கும் அளகாபுரியினும் மிக்கவளமையுடைய நகரமாம். எ-று. ஏ-அசை. (உஅ)

ஆனமகற்கொருவேன்முனளித்தவனாரணமுற்றதுடி
தானணிகைத்தலனாகிநடித்தருடாண்மலர்பெற்றவன்மென்
பூநயனத்தினனாழிபெறத்தருபூரணனுத்தமராம்
வானவருக்கு நல்வேதமுரைத்தவன்வாழ்மறைசைபதியே

(இ - பு.) தமது அன்புள்ளகுமாரனானசுப்பிரமணியருக்கு முன்வேற்படையளித்தவரும் வேதமந்திரங்களே சதங்கைகும் உடுக்குத்தரித்த திருக்கரத்தையுடையராகி வீரநடனஞ்செய்தருளும் திருவடிகளாகிய தாமரைமலர்களையுடையவரும் மிருதுவுள்ள மலர்நேத்திரனானதிருமால்சக்கரப்படைபெறும்படிதந்தபரிபூரணரும் உத்தமர்களாகிய தேவர்களுக்கு நல்லவேதமோதுவித்தவரும் ஆகியசிவபிரான் வாழ்வது மறைசைமாநகரம். எ-று. தான்-ஏ-அசை. (உகூ)

தேனலர்கற்பகமாநகரிற்பயிறேவர்கணித்தமுமே
பானலசொற்சொனலாரொடுமுற்றெழில்பாடிவணங்கிடுமூர்
கானவர்மெய்த்தவமாதுமகிட்சிகொளகாவலனேபணியால
வானவர்தச்சன்முனளிசியற்றியமாமறைசைப்பதியே.

(இ - பு.) தேன்துளிக்கும் கற்பகவிருட்சிங்கள்தழைத்த தேவலோகத்தில் வசிக்கும் தேவர்கள் தினந்தோறும் பால்போலும் இனிப்பானநல்லமொழிகளைப்பேசும் தங்கள் மாதர்களோடு அடைந்துசிவபிரான்புகழைப்பாடிவணங்கும் ஊர்யாதெனில் குறவா மெய்த்தவத்தாலுதித்தவள்ளியம்மையை மகிழ்கூர்ந்து அணைந்த சுப்பிரமணியர் கட்டளையால் தேவதச்சன் முற்காலத்தில் நிருமித்தமகிமையையுடைய மறைசைமாநகரம். எ - று. ஏ. இரண்டும், அசை, (௩0)

செங்கதிர்வெண்மதியெண்டிசைகாவலர்சித்தர்கள்விஞ்சையரும்
புங்கவர்நாகர்பொலன்றுகின்மாலயனோடுபுரந்தரனு
மிங்கிதமானவசுக்களுருத்திரரென்றுமகன்றிலரா
வங்குநெருங்கியிருந்துதுதித்திடுமாரணமாநகரே.

(இ - பு.) சிவந்தசூரியனும் வெள்ளியசாதிரனும்அட்டதிக்குப்பால கரும் சித்தர்களும வித்தியாதரர்களும் தேவர்களும நாகர்களும பீதாம்பர ந்தரித்ததிருமால் பிரமன் இவர்களுடன் இந்திரனும் அழகமைந்தஅட்ட வசுக்களும் ஏகாதசஉருத்திரர்களும் எக்காலத்தும் நீங்காதவராய் அவ்விட த்தில் நெருக்கமாயிருந்துதுதிசெய்யும் மறைசைமாநகரம் எ-று. ஏ-அசை. சந்தநோக்கிககரம் இயல்பாய்நின்றது. (௩க)

வேறு.

வேதன்மாலறியாவிமலனருளம் விரும்பியபதியிதுவியப்பாற்
கோதில்வெண் கயிலைக்குன்றினைவிரும்பிக்குறித்துமெய்த்தவஞ்செ
யுங்குணத்தீர், தீதில்இந்நகரஞ்சேருமினிதினுஞ் சிறந்ததொன்றிலை
யெனவுவரிப், பூதலமாதுகரங்களாலழைப்பபோன்றனபுனைமணி
க்கொடிகள்.

(இ - பு.) பிரமன் திருமால் அறிதற்கரிதாகிய சிவபிரான் திருவுள்ள த்து விரும்பிவீற்றிருந்தருளும்பதிஇதுவாகும் களிப்பினூற்குற்றமற்ற வெள் ளியகயிலைப்பதவியைவிரும்பி அதைக்குறித்து உண்மையான தவம்புரியுங் குணமுடையதவசிகளே கெடுதலில்லாத இம்மறைசைமாநகரத்தைச்சே ருங்கள்இதனினும் மேம்பட்டஓர்நகரமில்லையென்று கடலாடையுடைய பூதேவிதனதுகைகளாலழைக்கின்றது போன்றிருக்கின்றன- அலங்கரித் திருக்கும் அழகியகொடிகள், எ-று. (௩உ)

கோலமென்றளிராரைந்தருநீழற்குழூஉநற்கொடியனமருங்குல்
வேலனவிழிரும்விழியரமகளிர்விரைமலாப்பந்தெறிவேலை, யேல
மென்குழலின்சிகழிகையவிழாவிறைந்தபைங்கற்பகத்தெழிற் பொ
ன், மாலைகளுலவிளங்கியகூலமறுகெலாமகரதோரணங்கள்.

(இ - பு.) அழகியஇளந்தளிர்நிறைந்த பஞ்சதருக்களின் நிழலின்க ண்கூடிநல்லகொடிபோன்ற இடையும் வேலாயுதத்தைப்போலவிளங்கும் கண்களுமுடைய தெய்வப்பெண் கள்வாசனையுள்ள மலரராலாகியபந்தெறி ந்துவிளையாடும் பொழுது சாந்தணிந்தமென்மையாகிய கூந்தலினது முடி யவிழ்ந்து அதினின்றும் சிந்தியபசியகற்பகத்தினது அழகமைந்த பொன் னரிமாலைகள் தொங்கவிட்டது போலப்பிரகாசிக்கின்றன அச்சருதிபுரத் தின்கண்பலபண்டங்களுமல்கும் வீதிகள் தோறுங்கட்டியமகரதோரணங் கள். எ-று. (௩௩)

தேனிசைமுரலுங்குழலியர்முகவெண்டிங்களானிலாமணிமேடை மேனிலைநெடுநீர்வீழ்தனல்லணங்கால்விரும் பிலென்மறைசையில் விளங்கும், பானிகர்மொழியார்குடைந்திடலன்றேபயின்றநந்தவப்பலனென்று, வானதிகருதிமனமுவந்தந்தமாநகரிழிவனமானும்.

(இ - பு) வண்டுகள் இசைபாடும் கூந்தலுள்ள மாதர்கள்முகமாகிய சந்திரனுடையகிரணங்களால் சந்திரகாந்தக்கற்களிழைத்த மேடையுடன் கூடிய மேலுப்பரிகைகள் உருகிஅதிலுண்டாகிய மிக்கநீரானது மேலிருந்து பூமியில் வீழ்கின்றது எப்படியிருக்கின்றதெனின் நல்லதெய்வமாதர்கள்இச்சித்து நீராடுவதால் என்னபிரயோசனம்அந்தச்சுருதிபுரியின் கண்வாழ்கின்றபாலொத்த சொல்லையுடைய பெணகள் நம்மிடத்தில்வந்து நீராடின் நாம்செய்ததவத்தினது பெரும்பாக்கியம்பலிக்குமென்று ஆகாயகங்கையானது நினைத்துஉள்ளமகிழ்ந்து அச்சுருதிபுரியின் வழியாய் இறங்கிவருகின்றனபோலும். எ-று. (௩௪)

பொன்னணிமேடைபபூவையர்நிழலுட் பொருந்துதனோக்கியே வானத், தன்னமென்னடையாராடலுககிசைநதவரிவையரெனமதித்தயலார், மன்னுவெண்பளிக்குமாடமேலெய்திநோக்கவுமனமது தெருண்டு, புன்னகைபொருந்திநாணமீக்கூரபபொலன்மணிமாளிகைபுகுவார்.

(இ - பு.) அத்திருமறைசையின் கண் பொன்னாலழகு பெறச்செய்துள்ள மேடையின்மீது உலவுகின்றமாதர்களது சாயைகள்பக்கங்களிலுள்ளநிலைபெற்றபளிங்குககற்களால் இழைத்த உப்பரிகையி னிடததிற்பொருந்துதலைப்பார்த்து விண்ணுலகத்து அன்ன மொத்தமிருதுவான நடையுடையதெய்வப்பெண்கள் நம்மோடுவிளையாடுதற்கு இம்மாதர்கள் தகுந்தவரென்று அங்குவந்துபார்க்கவும் நிழலாயிருக்கஉளந்தெளிந்துபுன்சிரிப்பெய்திநாணம் அதிகரிக்கத்திரும்பி அம்மாதாகளிருக்கும் அழகியமாளிகைக்குச்குச்செல்லுவர். எ-று. (௩௫)

வேறு,

பன்னுமந்நகர்ப் பெருமையுரைக்கவென்னிற்பற்பலகாலங்கள் செலும்பகர்வதென்னே, அந்நகரிற்பிறப்புவாவானவரும்வெள்ளியணிவரையிலிருப்பவருமாகுமன்றிப், பின்னையொருவருமெய்திப், பிறக்கலாற்றார்பேணியருந்தவம்புரிந்தபேருமாங்கு, மன்னிசிலகாலமிருந்ததன்பினவ்வூரவந்திடுவரெனின்மகிமைவகுக்கலாமோ.

(இ - பு.) எப்பொழுது மழிவில்லாத அந்தச்சுருதிநகரத்தின் மகத்துவத்தைச்சொல்லவேண்டுமெனில் அளவிறந்தகாலஞ் செல்லும் அதைஇன்னம்விட்டுச்சொல்வதென்னை அந்நகரத்திற் பிறக்கின்றவா யாவரென்று

ல் தேவர்களும் அழகிய கயிலையங்கிரியிலுள்ளவர்களுமே ஆருமின்றி மற்றொருதலத்தார்வந்து பிறக்கமாட்டார்கள் இச்சித்தரிதாகிய தவஞ்செய்தவர்களும தெய்வலோகத்திலும் கயிலையிலுமபோய் நிலையாய் அங்குசிலகாலமிருந்து அதன் பிறகு இத்ததலத்தில் வந்துற்பவிப்ப ரென்றால்அந்தத்தலத்தினதுமகிமையைக்கணிக்கமுடியுமோ. எ-று. எதுகை நயங்குன்றுதிருக்க சகரமிரட்டிககா தியலபாயகின்றது. (௧௬)

அந்தநகர்வளமையைத்தான்சொல்வதெவ்வாறறுமுகன்சொற்
படிமயனலமைப்பதாகி, வநதமராவளநோக்கிமகிழ்நதுநாளுமரு
வுவபொன்னுலகெனவயஙகுகீதச், சநதிரகாந்தத தொடுபன் ம
ணிகளாலுந்தமனியவெள்ளிகளாலுந்தயஙகுமேடைப்,பந்திகள்வா
னுறவோஙகியிருளை யோட்டும பானுமதிதவழுமதின் பண்பதா
யால்.

(இ-ள்) பூர்வத்திற சுப்பிரமணியககடவுள் ஆஞ்ஞையின் படிதேவதச்சனால நிருமிக்கப்படடதேவாகள் வந்துவிநோதஙகளைப்பாாததுஉள்ளங்களிததுவிடடுபபிரியமனதில்லாமலவ்விடததேதினம் வாசம்பண்ணுவதொன்றாலச்சுருதிபுரியின்வளஙகளை நானறிந்துகூறுவதெப்படிமுடியும் அந்நகரத்தில்விளங்குங குளிர்ச்சியுள்ள சந்திரகாநதககல்லுகளுடன் பலரத்தினங்களாலும் பொன வெள்ளிகளாலும பிரகாசிக்கும் மாளிகைகளின் ஒழுங்குகள் ஆகாயததைவழியாககொண்டுசென்று இருளைப்போக்குகின்றசூரியசந்திராகளதவழுங குணத்தையுடையது. எ-று. ஆல்-அசை. (௧௭)

அப்பதிக்காககுமவயிரவனுங்குண்டாலவன்பெருமைசொல்
லவெளிதல்லவந்த, வொப்பருமாநகரிடைப்பல் தீர்த்தமல்குமு
ரைத்திடின் முறபவங்களையுமொழியாநிற்கு, மிப்புவியிலந்தலத்
துக்கிணைவேறுண்டென்றியம்பியவா நரகில்வீழ்ந தேறமாட்டார்
செப்பினுமந்தலததினுக்கீடதுவே யன்றிததோநதிடில் வேறில்லை
யெனததெளிதிரெனறான்.

(இ-ள்) அச்சுருதிபுரத்தை எந்நாளுங்காக்கின்றவயிரவமூர்த்தி அவ்விடத்திலிருககின்றனா அவருடைய மகிமையைக் கூறுதற்கெளிமையல்லபின்னுமந்தஇணையிலாதபெரியநகரின்கண்பலதீாத்தங்கள் நிறைந்திருக்கும் அதின்பேரைச்சொன்னவுடன் கொடிய ஊழ்வினைகளையும் போக்கிவிடும் இப்பூதலத்திலந்தத்தலத்துக்கிணையாய் வேறொருதலமிருக்கின்றதென்றுசொன்னவர்கள் நரகக்குழியில் வீழ்ந்து அதினின்றுமீளமாட்டார்கள சொல்லுமிடத்து அததலத்துககிணைபநதல மேயாகுமல்லாமலஉணரின்மற்றொருதலமில்லையென்று தெளிந்துக்கொள்ளுஙகளென்றார் சூதமுனிவர். எ-று. ஆல்-அசை. (௧௮)

## வேறு.

சொற்றவைகேட்டுநைமிசாரணியத்தூயவரற்புதமடைந்து
மற்றுமீதுரைப்பரையவத்தலத்துன்மருவியபுண்ணியதீர்த்த
முற்றுமெங்களுக்குமொழிந்திடுகென்றுமுகமகமலர்வுடன்கேட்க
நற்றவத்துயர்ந்தசூதமாமுனிவனுவினனைவிற்றுகின்றனனால்.

(இ - பு) இவ்வாறுசூதமுனிவர்சொன்னவைகளைக்கேட்டு நைமிசவனவாசிகளாகிய முனிவர்கள்வியப்படைந்துப்பின்னும் இதுஓதுகின்றனர் அய்யாஅந்தச்சுருதிபுரியினிற்றங்கிய புண்ணியதீர்த்தங்கண்முழுது மெங்களுக்குஅருள்செய்யவேணுமென்று முககமலமும் இதயகமலமு மலரும்படி கேட்க நல்லதவத்தினாலுயர்ந்த சூதபுராணிகாதமது திருவாயினாலுரைக்கின்றனர். எ-று. ஆல்-அசை. (௩௯)

## வேறு.

பொன்றிகழாலயமதனிற்கலியாணகோடியெனும்புனிதப்பொய்கை, யொன்றுளதாங்கதின்வெள்ளியொண்மதிவாரங்கடொறுமுகந்துதோய்ந்தே, யன்றுமறைபுகன்றனையருட்கடலாமிளமுலையையன்பாயேத்தின், மன்றல்கமழ்வியனுலகாண்டருஞ்சிறுவறபயர்ந்தரன்றாண்மன்னிவாழ்வார்.

(இ - பு) பொன்மயமாய் விளங்குகின்ற திருவாலயத்தினுள் கல்யாணகோடியெனும் பெயரையுடையதல்லியமாகியதீர்த்தம் ஒன்றுண்டு அதில்வெள்ளிக்கிழமை ஒள்ளியதிங்கட்கிழமைஆகிய இந்தக்கிழமைதோறு மூழ்கிமுன்னாந்தேவர்கட்கு வேதமோதுவித்த வேதபுரீசரையும்கருணைகடலாகிய இளமுலையம்மையையும் அன்புடன்தோத்திரஞ்செய்யின் புகழையே வீசுகின்ற இந்த விசாலமான உலகையாண்டும நல்ல புத்திரபாக்கியத்தையடைந்தும் இம்மையின்பமனுபவித்து பிறகு சிவபிரான் திருவடிகளையடைந்து வாழ்வார்கள். எ-று. ஏ-அசை. (௪0)

ஆங்கதற்குவடதிசையோரம்பேகுமெல்லையினிலமரர் தோய்ந்த தீங்கறுமோர்தடமதனிற்சிறந்தசனிவாரத்திற்செழுநீராடிப் பூங்கழைவேடனையெரித்தபுனிதனைப்போற்றினாதீமைபோக்கினாரு, மோங்குபுகழொடு புவிமேலுயர்வாழ்வுற்றரன்கயிலையுறைந்துவாழ்வார்.

(இ - பு.) அவ்வாலயத்திற்கு வடதிசையில் ஓர் அம்புசெல்லுந்தூரத்தில் தேவர்களாலுண்டாக்கி நீராடிய குற்றமற்ற வாவியிற்சிறப்புற்ற சனிவாரத்தினன்று செழுமையான நீரில்முழுகி அழகிய கருப்புவில்லேந்திய மன்மதனை நுதற்கண்ணாலெரித்தருளிய சிவபிரானைத் துதித்தவர்கள் தங்கள்

துன்பத்தினின்றும் நீங்கி எந்நாளும் விளங்கும் கீர்த்தியுடன் இந்நிலவுலகத்தில் மேலானவாழ்வையடைந்து தேகாந்தியத்தில் சிவபிரான் திருக்கயிலையில் வசித்துவாழ்வார்கள். எ-று. (சக)

அப்புனிதநீர்த்தத்துக்கடுத்த வடபாலினிலோரழகார்பொய்கை
யொப்பறுமாங்கதிச்செவ்வாயுகந்தினைத் தேடாடிந்தோருலகினூ
மெப்பகையுநீங்கு பிணியிலராகியுடன் பிறந்தோர்க்கினியராகி
மெய்ப்புகழ்சேர்கயிலையினில் விளங்குவர்களரன்போலும்வேடம்
வாய்ந்தே.

(இ - பு.) அவ்வாறுனபரிசுத்த தீர்த்தத்துக்குச்சமீபித்த வடதிசையில் ஓர் அழகமைந்ததடாகமுண்டு ஒப்பற்ற அத்தடாகத்தில் மங்களவாரத்தினன்று நீராடினவர்கள் இந்நிலவுலகின்கண் எந்நாளும் எவ்வகையான விரோதங்களுந்தீர்ந்து நோயற்று சகோதரருக் கன்புடையவராகியிருந்து முடிவில் உண்மைப் புகழ்வாய்ந்த திருக்கயிலையில் சாரூபபதவியென்னும் சிவபிரானைப்போன்ற திருவுருவமைந்து விளங்குவார். எ-று. ஏ-அசை.

அதின்வடகீழ்த்திசையினி லோரம்பெகு மெல்லையுண்டாலாங்
கோர்பொய்கை, கதிரவனுளதினமூழ்கிககருடனருச்சித்தறுதங்க
ண்ணோன்றன்னை,யெதிருறச்சென்றெதொழுதோரிருநிலத்தின்வே
ந்தாகியினிதுவாழ்ந்து , விதியெழுதினின்னலுந் தீர்ந்தினிதிருப்
பார்கயிலையினின்மேவிமாதோ.

(இ - பு.) அத்தீர்த்தத்தின் வடகீழ்த்திசையில்ஓர்அம்புசெல்லுந்தூரமுளது அவ்விடத்தில ஓர் தடாகமுண்டு அத்தடாகத்தில் ஆதிவாரத தினன்று நீராடி அத்தீர்த்தககரையிலுள்ள கருடனாற்பூசிதத பட்சீசரென்னும்சிவபிரானை எதிராகச்சென்று தொழுதவர்கள் பூவுலகமன்னராய் செல்வத்துடன்வாழ்ந்தும்பிரமலிபியின் துன்பமுந்தவிர்ந்து திருக்கயிலையினிற்சென்று வாழ்ந்திருப்பார். எ-று. வ, மாது, ஓ, அசைகள். (சரு)

கூறுமதற்கேகுணக்கிற் கோல்வேகமிரண்டெல்லையிற்குளிர்மென்
றெண்ணீர், வீறுமொருபொய்கையுளவிளம்புமதற்கடுத்ததென்பா
ல்விரைமென்பாணி, யூறுபுதன்றடமுள,தாலுரைத்ததற்குதென்
கிழக்கினும்பராசான், பேறுறுநீருளதிவர்க்குப்பேசியநாடோயின்
மூத்திபெறுவர்மாதோ.

(இ - பு.) மேற்சொன்னதீர்த்தத்திற்குக்கிழக்கே இரண்டு அம்புசெல்லுந்தூரத்தில் குளிர்ந்ததெளிவான நீர்தங்கிய சந்திரதீர்த்தமென் றொன்றுண்டு அத்தடாகத்திற்குச் சமீபித்த தென்றிசையில் வாசனைகமழும் நீர் ஊறும் புததீர்த்தமுளது அத்தீர்த்தத்துக்கு தென்கிழக்கில் தேவகுருவாகிய பிரகற்பதி தீர்த்தமுளது அத்தீர்த்தங்களில் அவ்வவர்களுக் குரியவார

மாகியசோமவாரம், புதவாரம், குருவாரம், என்னுமிந்தினங்களில் நீராடி னால் அவர்கள் முத்திபெறுவார்கள். எ-று. ஏ-ஆல்-மாது-ஓ-அசை. (சச)

வேறு

இறைவனூர்திருக்கோயிலுக்கெதிர்குணதிசையி
லுறையுமோரரைக்கடிகையினெறியிலாரணன்ற
னிறையுதீர்த்தமொன்றுளதினைக்கினும்பவங்கள்
குறையுநேரய்ந்திடிற்கயிலையைக்காணியாயக்கொள்வார்.

(இ - பு.) சிவபிரான்திருக்கோயிலுக்கெதிரில்கிழக்குதிசையில்அரை நாழிகைவழிதூரத்தில் பிரமதீர்த்தமொன்றுண்டு அதநீர்த்தத்தை நினைத் தாலும் பாவங்கள்நீங்கும் எவர்களேனும் அதநீர்த்தத்தில் அன்புடன் நீரா டினால்திருக்கயிலாயத்தைககாணியாட்சியாககொள்வார்கள் எ-று (சரு)

பொருப்புவில்லியின்பொன்னணிதிருமதிறபுறத்தின்
மருததுவினறிமைசதன்னின்மாதவததவர்கோடி
விருப்பமோடிருந்தருந்தவமபுரிநததுவிளபபுங
கருப்புரச்சிரசுளததுமுததிமையககாட்டும்.

(இ - பு) மேருவில்லேயுடையவேதபுரீசரது திருக்கோயிலின் அழ கிய மதிற்புறத்தில்வாயுமூலையில அனேகம்மகாதவசிகள் விருப்புடன் வீற் றிருநது அரியதவமபுரிநததென்று யாவ்ராலுமபுகழும் கருப்புரச்சிரசு என் னுந்தீர்த்த முளது அதநீரததம நினைத்தாலும் சொனனாலும் தரிசித்தாலும் பரிசித்தாலும் முததியைக்கொடுக்கும், எ-று. (சசு)

வேறு.

இன்னுமபபுனிதசேத்திரமதனிலிருக்குநற்றீர்த்தங்களிசைப்பப்
பன்னுமோர்கறபமுறினுமெய்கடங்காபரமனுககினியவாநகரிற, மு
ன்னுபொற்றடஙகளசேணிகூவஙகடெலஙகியபலவும்வானறாய்மை
மன்னுதீர்த்தங்களாகுமேலவற்றின்மகிமையையாவரேவகுபபார்.

(இ - பு) இப்போது கூறியதன்றிஇன்னும் அந்தப்பரிசுத்தக்ஷேத்தி ரத்தில்இருக்கின்றதீர்த்தங்களெல்லாமசொல்லககாலவரையறையிற் பெரிதா கயாவராலுஞ்சொல்லப்படும் சற்பகாலமட்டும் சொன்னாலும் எனகுஅடங் காது ஏனெனில் சிவபிரானுக்கு இனியதாகியஅம்மறைசைமாநகரில்நெரு ங்கியுள்ள அழகியதடாகங்கள கேணிகள் கிணறுகள் விளங்கப்பட்டபலதீர த்துறைகளும் பரிசுத்தமமைந்துள்ள தீர்த்தங்களாகுமாதலால் அதநீர்ததங்க ளின் மகிமையை இவ்வளவென்று வரையறுத்து யாரேர்தாம கூறுவர் எ-று. (சஎ)

ஆதலாலந்தத்திருநகர்ப்புகழீராயிரநாவுடையவற்கு
மோதலாமென்பதரிதுயர்பதியிலோர்தினமாயினுமருவி
வேதநான்கமரர்க்கோதியமுதலைவிதியினிற்றொழுதவரவரே
தீதெலாமகன்றுவேந்தராய்வாழ்ந்துசித்தியிற்சேர்பவரென்றான்

(இ-பு) ஆகையால் அம்மறைசைத்திருநகரின் பெருமையை இரண்டாயிரநாவுள்ள ஆதிசேடனுக்கும் சொல்லி முடிக்கலாமென்பது அருமையாகும் உயர்வடைந்த அம்மறைசைநகரிலொருநாளாயினும்வீற்றிருந்து நான்குவேதங்களையும் தேவர்களுக்கோதுவித்த வேதபுரீசரை ஆகமவிதிப்படிவணங்கினவர்கள் எவர்களோ அவர்களே குற்றங்கள்எல்லாம்நீங்கி அரசராகவாழ்ந்திருந்து முத்தியிற்சேர்பவர்கள் என்று சொன்னார் சூதபுராணிகர். எ-று, (சஅ)

திருநகரச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் .. அ௦.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வயிரவ ருற்பவச் சருக்கம்,



பொன்னுறுசடிலத்தாபதன்புகன்றபுனிதவான்சரிதைகேட்டகத்திற், றுன்னுமற்புதராய்நைமிசவனத்துத்தூயவர்மீட்டுமேதுதித்து,முன்னைநற்சுருதிபுரத்தினைப்புரக்குமொய்ம்புறுவயிரவனொருவனங்ககருளுமென்றருளினீரந்தவதிசயமறைசெனவறைவான்.

(இ-பு.) பொன்போலும் விளங்கும் சடையையுடைய சூதபுராணிகர் கூறிய தூய்மையான சிறந்தமறைசைமாநகரினதுசிறப்பைக்கேட்டுமனதின்கண்மிக்க ஆனந்தமுடையராய் நைமிசாரணிய முனிவர்கள் மீளவும் சூதபுராணிகரைத்தோத்திரஞ்செய்து முன்புநல்லமறைசை மாநகரைக்காக்கும் வன்மையையுடைய வயிரவமூர்த்தி ஒருவர் அம்மறைசைமாநகரில்

வீற்றிருப்பதாக அருளிச்செய்தீர் அம்மூர்த்தி அத்தலத்தில்வந்த அதிசயத்தைச்சொல்லவேண்டுமென்றுகேட்கச் சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினார். எ-று. ஏ-அசை. (௧)

ஆதியாங்காலைபரசிவமதனிலருட்பராசத்திவந்தனளம்
மாதினாற்பஞ்சசத்தியுற்பவிப்பமாமைசேரம்மடவாரா
லேதிலைவகைச்சாதாக்கியநதோன்றவிலங்கவைசாதாசிவமாகப்
பேதமாமையைந்துரு வொடுவிளங்கிப் பெருமிதங்கொளும
[யேச்சுரமே.

(இ - ள்) ஆதிகாலத்திற்பரசிவத்தில் அருள்வடிவாகிய பராசத்தியுதித்தாள்அப்பராசத்தியாற்பஞ்சசத்திகள்தோன்ற அழகிய அப்பஞ்சசத்திகளாற் குற்றமில்லாத ஐந்துசாதாக்கியங்களுதிப்ப விளங்கும்அச்சாதாக்கியங்களே சதாசிவமாகத்தோன்றியதினின்றுமபேதமுற்று இருபத்தைந்துதிருவுருவோடும்விளங்கிப்பெருமையமைந்தமயேசுரமாகும். எ-று ஏ-அசை. (௨)

அம்மயேச்சுரனனு ருத்திரன்றோன்றவவனிடைமாயன்வந்தருளச், செம்மைசேரவன்றனுந்தியங்கமலச்செவ்வியாறபிதாமகன்சனித்தே, மைம்மலிகடல்சூழுலகமும புவனவருக்கமு மதனிடையடங்கும், விம்மிதமுற்றசராசரமனைத்தும்விமலனுலயன்விதித்ததனால்.

(இ - ள்) அந்தமயேச்சுரரால் உருத்திரமூர்த்தியுதிக்கஅம்மூர்த்தியிடத்துத்திருமால் பிறக்கசெப்பமமைந்த அத்திருமாலுந்திக்கமலச் சிறப்பினால் பிரமனுற்பவித்தான் கருநிறமிக்க கடல்சூழ்ந்த நிலவுலகமும புவனகோடிகளும அவைகளில்வசிக்கும அதிசயமான இயங்கியற பொருள்களும் நிலையியற் பொருள்களுமாகிய எல்லாவற்றையும் சிவபிரான் திருவருளால் சிருட்டித்தான். எ-று. ஏ, ஆல்-அசை. (௩)

இத்தகையுலகமனைத்தையும்விதித்தவிரணியகருப்பனு மகிழ்ச்சிசித்தமேற்கொண்டுசகமெலாம்விதிக்குஞ்செயகையாற்செய்யபாற்கடல்வாழ், நித்தனுங்காக்குந்தொழில்பெறீஇயெவர்க்குநீடியேயவாழ்ந்திருந்தனனென், றுத்தமகுணத்தோனெனக்கிணையுலகிலிலையெனமமதையுற்றனனால்.

(இ - ள்) இவ்வாறாக உலகம் எல்லாவற்றையும் சிருட்டித்த பிரமனும் மனக்களிப்புஅதிகரித்து உலகங்களையெல்லாம்சிருட்டிக்கும்தொழிலைமேற்கொண்டுநாம்படைத்தஉலகத்தைச்செப்பமானபாற்கடலில்வாழும்திருமாலும்காப்புத்தொழிலைமேற்கொண்டு மற்றதேவர்களுக்கெல்லாஞ்சிறந்தபெருமையுடன் வாழ்திருக்கின்றான்அல்லவாஎன்றும்உத்தமகுணத்தில் எனக்கு ஒப்பானவர்ஒருவருமில்லையென்றும்கருவமுற்றனன். எ-று. ஆல்-அசை,

அன்னதையுணர்ந்துமாலவனயனீயகிலமூமீன்றவனெனினு, மெ
ன்னுழிமேயபெருமையாலன்றோ வென்றிகழ்நதொருவருக் கொரு
வர், துன்னியசீற்றத் துருவராயண்டந்துகள் படவேலைகள்சுவறப்
பொன்னிறுடோம்பும்புங்கவன் முதலப்புலவரும்பொருமிடப்பொ
ருதார்.

(இ - பு) இவ்வாறுபிரமன் அகங்கரித்திருத்தலைத்திருமாலறிந்துபிர
மனே நீ உலகமுழுதையுஞ் சிருட்டித்தவனுயினும் என்னிடத்துற்பவித்த
சிறப்பினுலல்லவா அவ்வல்லமை யுனக்குக்கிடைத்ததென் றிசழ்ந்துக்கூறி
உடனேஇருவரும்ஒருவருக்கொருவர் கோபாவேசமுடையராய்அண்டங்க
ள்பொடிபடவும் கடல்கள்வற்றவும் தேவலோகாதிபனுகிய இந்திரன்முதலிய
தேவர்களும் அழும்படிபோர் புரிந்தாகள். எ-று. (ரு)

நீலமாயவனுமயனுமிவ்வகைததாநெடுஞ்சமர் புரிந்துமெய்த்தில
ராய், ஞாலமீதுயர்நதசுருதி நன்னகரினணுறுமெலேயிருவருக்கு
மூலகாரணனேர் சோதியினுருவாய் மூளைத்தெழுந்தண்ட சோள
கைக்கு, மேலதாகிமிர்நதவழற்பிழம்பதனை விணடயனேக்கியேவி
யந்தார்.

(இ - பு) கருநிறமுள்ள திருமாலும்பிரமனும் இவ்வாறுபெரும்போர்
செய்தும் இளைக்காதவராய் நிலவுலகததின்கண்உயாவடைந்த வேதபுரியி
ல்சோந்தசமயத்து அவ்விருவருககும் முதற்காரணராகியசிவபிரானே ஒரு
சோதியுருவாய்த்தோன்றி உயாந்த அண்டகடாகங்களுக்கும்மேலாக ஊடு
ருவிச்செல்லும் அக்கினிப்பிழப்பைத்திருமாலும் பிரமனும்பார்தது அதிசயி
த்தாகள், எ-று. ஏ - அசை. (சு)

வரம்பறவுயர்ந்தசோதியினுருவைமாலயனேக்கிமெய்சலியாச், சி
ரங்கரங்குவியாநடுக்கமுற்றயர்நதசிந்தையராகிவெய்துயிர்த்துப், பு
ரங்கடிந்தவன்றனுருவுகொல்கடைத்தீப்பொய்மலகொல்யாதெனப்
பொருமித், திரம்பெறுபிரமமிதனடிமுடியைத தெரிபவராமெனச்
செப்பி.

(இ - பு) எல்லையற்றோங்கிய அச்சோதியுருவத்தைத் திருமாலும் பி
ரமனும பாரத்துத்தேகம்அயர்ந்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பிநடுநடுங்
கிச் சோர்வடைந்தமனமுடையவராய்ப் பெருமூச்செறிந்து இச்சோதிதிரிபு
ரதகனராகிய சிவபிரான் திருவுருவமோ அல்லது கற்பாந்தத்திற்றேன்றும்வ
டவாமுகாக்கினியோ அல்லது யாதோஅறிந்திலோமென்று துக்கித்து இத
னதுஅடியையாவது முடியையாவதுஅறிபவர் எவரோ அவரேஉண்மையா
ன பரப்பிரமப் பொருளென்றுசொல்லி. எ-று. (எ)

இன்னவைக்கொருமித்திருவரினெடுமாலேனிமதாயிதனடியோர், கன்னலிற்புவிகீண்டறிவனென்றடையக்கமலயோனியுமிருகடப்பி, னன்னமாயிதனின்முடியினையானேயறிவனென்றிருவிசும்பதன்வா, யுன்னுமுன்சிறகாவிரிந்துடுக்குலங்களுதிரப்பறந்தனனுயர்ந்தே.

(இ - பு) இவ்வண்ணம் அதன் அடிமுடியைக்காணஇருவரும்சம்மதித்து அவ்விருவரில் திருமால்வராக வுருவெடுத்து இதன்அடியை ஓர்நாழிகையில் பூமியைகீண்டறிவனென்று செல்லப்பிரமனும அதிவிரைவோடு அன்னப்பறவையாய் இதன்முடியினை நானேஅறிகின்றேனென்று பெரிய ஆகாயத்தின்வழியாய் நினைப்பதற்குமுன் சிறகைவிரித்துக்கொண்டு நட்சத்திரக்கூட்டங்கள் உதிர்ந்துவிழும்படி உயர்வாகப்பறந்தான. எ-று. வ அசை. இவ்விரண்டுங்குளகம். (அ)

இருவருமிவ்வாறனேகநாட்டேடியினைத்துநாயறிவதற்கரிதென், றுருவெடுத்தகங்களொழிந்திலராயிவ்வுலகினினமீட்டுமவந்தெய்தித், திருகுவெஞ்சினத்தோடமர்பினும்புரியசசிந்தனைசெய்யுறுமெல்லை, வருமிறும்பூதைக்கேண்மினீரென்றுவகுத்தனன்சூதமாதவத்தோன்.

(இ - பு) திருமால்பிரமன் ஆகியஇவ்விருவருமஇவ்வாறுஅனேகநாள்தேடிககாணுதவராகியினைத்துநம்மால அறிதற்கருமையான தென்றுதெரிந்துதங்கள்சுயஉருவொழிந்து வேறுருவெடுத்தும்அகங்காரம் ஒழியாதவராய் இந்நிலவுலகத்தில் திருமபவும் வந்தடைந்து வஞ்சனையாகிய கொடியகோபத்துடன்பின்னுஞ்சமாசெயய நினைக்குந்தருணத்தில்விளையும அதிசயத்தைநைமிசாரணியமுனிவர்களே நீங்கள்கேளுங்களென்று சூதபுராணிகர்சொல்லத்தொடங்கினூர். எ-று. (கூ)

அவ்வனற்பிழம்பினடுவணின்றிலகுமம்புலிச் செஞ்சடாடவியுஞ், செவவியவதனஞ்சோந்தமுக்கணுநுஞ்செக்கர்வான்மேனியுந்திகழப்,பவ்வமீதுயர்ந்த கடுவணிமிடறும பாசசூலந்துடிபரிதத, கைவ்வனசமுஙகொண்டிருவா தன்னெஞ்சுங்கலங்கிடவடுகனுங்குதித்தான்.

(இ - பு) மேற்கூறிய அவ்வக்கினிப்பிழம்பின் நடுவிலிருந்து விளங்கும்இளம்பிறையணிந்தசிவந்தசடாமுடியும் செப்பமாகியதிருமுகத்திலமைந்த மூன்றுநேத்திரங்களும் செவ்வானம்போன்றதிருமேனியும்பிரகாசிக்கப்பாற்கடலினுதித்தவிடத்தைத்தரித்திருக்கும் ஸ்ரீகண்டத்தையும் அங்குசபா

சமும்திரிசூலமும் உடுக்கும்தரித்த திருக்கரங்களாகிய தாமரைமலர்களையுங்
கொண்டு திருமால்பிரமன் என்னும்இருவர்மனமும் கலங்கும்படிவயிரவக்
கடவுள் அவ்விடத்திற்றோன்றினார். எ-று. (௧௦)

அண்டகோளகையும்வெடிபடச் சேடனணிமுடிகுலுங்கிடப்பு
வனி, யெண்டிசாமுகமும்வரைகளுமதிரவெண்வகைப்புகர்முகமி
ரிய, விண்டலத்துடுக்களுநகமதிவெய்யோன்வெருக்கொடுசூறையி
ற்சுழல்தர, தெண்டிரைக்கடல்கள்வறண்டிடச்செயிர்த்துத்திகம்பர
வுருக்கொடுநின்றான்.

(இ-பு) அண்டகடாகங்கள்வெடிபடவும் ஆதிசேடன்அழகியமகுட
ங்குலுங்கவும பூவுலகமும் எட்டுதிசைகளும் மலைகளும அதிரவும் அட்ட
கஜங்களும் நிலைவிட்டுநீங்கவும ஆகாயத்தின்கணுள்ளநட்சத்திரங்கள்உதிர
வும் சந்திரன்சூரியன் இருவருமஅச்சங்கொண்டு சூறைக்காற்றில் அகப்ப
ட்டதுரும்புபோலச்சுழலவும தெளிய அலைகளையுடையகடல்கள் சுவறவு
ம்கோபித்துத்திகம்பர உருவோடெதிர்நின்றார். எ-று. (௧௧)

உதித்திடுமூர்த்திவடிவினைநோக்கியுளத்திறுமாப்பொடுமலரோ
ன், மதித்திலனாகிமுன்னமென்னுதலில்வருமுருத்திரவடிவேய்ந்து
கொதித்தெழுசிறுவவருதியென்றுரைபபக்குணிக்கருங்கோபமுற்
றெதிர்ந்து, விதித்தலையைநதினடுவணோசிரத்தைவிரலுகிர்கொடு
தடிந்தனனால.

(இ - பு.) இவ்வாறு அவ்வழற்பிழம்பினின்றும்தோன்றியவயிரவக்
கடவுள் திருவுருவைப்பாராதுதன்றுள்ளத்தின் கணுண்டாகிய அகங்கா
ரத்தோடு பிரமன் மதியாதவனாகி முன்னால் எனதுநெற்றியில் வந்த உ
ருத்திரஉருவம் பொருந்திக் கோபித்துவந்த சிறுவனே வாவென்று கூற
அளவிடக்கூடாதசினமுற்று எதிர்த்து அப்பிரமன் சிரங்களைந்தில் நடுவி
லுள்ள ஓர்சிரசைததன்விரல் நகத்தைக்கொண்டு கிள்ளிவிட்டார். எ-று
ஆல்-அசை. விதித்தலை என்பது எதுகைநோக்கி இரட்டித்தது. (௧௨)

தடிந்திடமலரோன்மூர்ச்சையுற்றவனிதன்னில்வீழ்ந்தகச்செரு
க்கிழப்ப,முடிந்ததென்வாழ்வென்றெண்ணிமென்றுளபமுராரிவெ
ய்துயிர்த்தனனிரியப், படர்ந்துவாசவனும்பண்ணவரியாரும்பதை
ப்பொடுவயிரவன்றனையே, யடைந்தகங்குழைவாலலர்கடேய்ப்பழிச்
சியாதரித்தேத்துகின்றனரால்.

(இ - பு.) இவ்வாறு வயிரவக்கடவுள் கிள்ளியவுடன்பிரமன்மூர்ச்
சையாய் நிலத்தில்விழுந்து தன்மனதின்கணிகழ்ந்த கருவம்கெடமெல்லிய
துளபமாலையணிந்ததிருமால் பெருமூச்செறிந்தவனாய் என்னுடைய வாழ்க்
கைஇன்றுடன் முடிவாயிற்றென்று பெருமூச்சுவிட்டவனாகி வைகுந்தத்தி

க்கு ஓடிவிட இந்திரனும் மற்றைத்தேவர்கள்யாவரும் மனப்பதைப்புடன் வயிரவக்கடவுளை அடைந்து மனவுருக்கத்துடன் மலர்கள்தூவித்தொழுது பேரன்போடுதுதிசெய்கின்றனர். எ-று. ஏ, ஆல் அசை. (௧௩)

செஞ்சடாடவியாயுனதுபொற்கமலச்சேவடியலது மற்றெமக்
கோர்,தஞ்சமதிலைநீகாயிலிவ்வண்டந்தகாந்திடு மெனிலிவணடையங்
குங், கஞ்சாசன்மலரோன்றனை யொருபொருளாக்கருதுதல்கரும
மோகமைகூர்ந், தெஞ்சுறுதெழுப்பியளிப்பையெனவிமையோரிர
ந்தனரிருசரண்டொழுதே.

(இ - பு.) சிவந்தசடைமுடியையுடையவயிரவக்கடவுளேதேவரீரது பொற்றாமரை போன்றதிருவடிகளல்லதுஎங்களுக்குவேறு புகலிடமில்லை தேவரீர்சினந்தால் இவ்வண்டகடாகங்களெல்லாம்பொடியாய்விடுமாதலால் இவ்விடத்துத்தியங்குகின்ற தாமரைமலராசனனை பிரமனைஒருபொருளாகஎதிர்க்கருதல் மேலானகாரியமாகுமா ஆகாதாதலால் இரக்கங்கொண்டு சிருட்டிக்குக்குறைவராமல் இப்பிரமனை எழுப்பிக்காத்தருளவேண்டுமென்று தேவர்கள்மீளவும் அவரது இரண்டுதிருவடிகளையுமவணங்கிக்குறையிரந்துநின்றார்கள். எ-று. ஏ-அசை. (௧௪)

அஞ்சலித்தேத்தும்வானவர்தமைநீரஞ்சலிரென்று கையமைத்
தே,நஞ்சணிகண்டத்திறைமலர்க்கடவுணவையுறுதெழுப்பியன்ன
வன்றன், செஞ்சிரந்தமதுகரங்கொடுபுண்ணீர்செழும்புவியுறிற்பிர
மகத்தி,யெஞ்சுறவுலகைவாட்டுமென்றநன்கணேற்றுமததலைநிறை
ந்திலதால்.

(இ - பு.) இவ்வாறுகைகுவித்துத்துதிக்கும்தேவர்களை நோக்கி நீங்களஞ்சவேண்டாமென்றஅபயாத்தமருளிவிடமணிந்தகண்டத்தையுடைய வயிரவக்கடவுள் பிரமன் இறவாது உயிர்பெறச்செய்துஅப்பிரமனது சிவந்த சிரசைத்தம் கரத்திற்கொண்டு அவ்விரத்தம் செழுமையானபூமியில்வீழ்ந்தால் பிரமகத்திதோஷம் உலகமுழுதையும் குறைவடையும்படி வருத்தும் என்றெண்ணி அககபாலத்தில ஏற்றுக்கொண்டும் அப்பிரமகபாலம் நிறையவில்லை. எ-று. ஏ-ஆல்-அசை. (௧௫)

அந்தமூர்த்தியும்பினவனிகாதலன்றனைகந்தையுந்தடிவனென்றணி
வை, குந்தமப்பொழுதின்வருமுழிவாயிற்குலவுமைம்படைக்கரத்
தவன்மைக், கந்தரப்பரனைத்தடுத்திடவவன்றன்கரஞ்சிரங்குலைந்தி
டமருமத், துந்துமுத்தலைவேல்செறித்துமொய்ம்புடனேயுவகை
மீதெழப்புகுந்தனனால்.

(இ - பு.) அவ்வயிரவக்கடவுள் பின்னர்பூபதியாகிய திருமாலின் கருவத்தையுங்கெடுக்கின்றேனென்று அழகியவைகுந்தத்திற்குஅப்பொழுதேவ

ரும்போது அங்குவாயிற்காவலாளனுகிய பஞ்சாயுததாரி நீலகண்டராகிய அவ்வயிரவக்கடவுளைமறுக்க அவனதுகைகளும்தலையும் கரெங்கும்படிமார் பினிடத்து ஊடுருவிப்பாயும் திரிசூலமாகிய வேலைச்செலுத்திவெற்றிகொண்டுமேன்மேலுமகளிப்பதிகரிக்க உள்ளேபிரவேசித்தார், எ-று. ஆல் அசை. (௧௬)

அன்னது கண்ட வயிணவப்படர்களஞ்சிவெய்துயிர்த் திரிந்தரிதன்,முன்னநின்றிவற்றைமொழிதலும்வெருவிமுதலவனிவ்விடையடைதற, கென்னகாரணமென்றேஙகியிந்திரை வாழில்லகததோடியுட்புகுநதே, மன்னுமிவடுகக்கடவுள பொன்மனைவாய்வந்து செநகீர்பபலியிரந்தான்.

(இ-பு) இவ்வாறு திரிசூலத்தாற் குத்தியதைக்கண்டமற்ற வயிணவப்படாள்யாவருமபயந்துபெருமூசசெறிநது வருந்தித்திருமால் முன்புசென்று நின்று இவ்வாறு நடந்ததைக்கூறஅச்சமுற்று முதலவராகிய வயிரவககடவுள் இங்குவருதற்கு யாது காரணமோஎன்று ஏக்கங்கொண்டு இலக்குமிவசிக்கும இடததிறகோடி உள்ளே சென்றிருக்குந்தருணத்து வயிரவக்கடவுள் அவ்விலக்குமிவசிககுமிடத்தின்வாயிற்படியில் வநது நின்று இரத்த பிச்சை கேட்டார. எ-று. ஏ-அசை. (௧௭)

வேறு.

அத்தன்மைகண்டவலர்மாதகம்வெருவிச்
சித்தங்கலங்கதெருமநதெதிரோடி
முததன்கழலிணைகள பூணடுமுகமபுலாநதே.
வித்தகன்செலவியிளையவிளம்புவளரல.

(இ-பு) அவ்வாறு வயிரவக்கடவுள்வந்து நிற்பதைக்கண்ட இலக்குமி மனதிறபயஙகொணடுசித்தமான துகலககததையடைய மயககமுறறு அவர்கெதிரிறசென்று அவரது பூரணடுதிருவடிகளும் தன்சிரமுற்வணஙகி முகம்வாடிப்பொருட்செல்வத்திற் கதிதேவதையாகியஅவள் இவவாறுசொல்லுகின்றனள். எ-று. ஏ, ஆல்-அசை. (௧௮)

மூலமாய்வேதமுடிவாகிமூமமையுறுங
காலமாயைந்தொழிற்குஙகாரணமாயைம்பூத
சாலமாய்வீறுந்தனிநின்றிருவிளையாட்
டாலமார்கந்தரத்தாயாரேயறிகிற்பார்.

(இ-பு.) ஆதியாகவும்வேதத்தின்அந்தமாகவும் முக்காலங்களாகவும் பஞ்சகிருத்தியங்கட்கும் காரணமாகவும் பஞ்சபூதசொரூபமாகவும் விளங்

கும் ஒப்பற்றதினது திருவிளையாடலை விடமணிந்தகண்டத்தையுடைய வயி ரவக்கடவுளேயாவர் அறிவார்கள். எ-று. முக்காலங்கள்:—இறந்தகா லம், நிகழ்காலம், எதிர்காலம். பஞ்சகிருத்தியம்:—சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம். பஞ்சபூதம்:— பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகாயம் (கக)

உன்மனைக்குமாறுமுதத்துவங்களுக்குஞ்
செமமைமறைக்குமினமெட்டாதினசேவடியென்
புன்மனைக்கண்மீதுபொருந்தியிடவந்தபணி
யென்மனத்திற்குமவாய்க்குமெட்டாவிருஞ்சுடரே.

(இ-பு) உன்மனைக்கும முப்பத்தாறுதத்துவங்களுக்கும் செம் மையமைந்த வேதங்களுக்கும் இன்னும எட்டாதகினது திருவடி எனது சிறிய அறமாகிய வீட்டிற்பொருந்துமபடி வந்தசெய்கை எனதுமனோவா க்குக்குஅதீதமாயிருககின்றதுபெரியசோதிசொருபமுளளவரே. எ-று. முப்பத்தாறு ததுவங்களாவன:—சிவததவமுதல்பிருதிவிதத்துவ மீறாக உள்ளன. (உ0)

என்றமயிலையிறைபாாதமெதழின்மலரோண்
மன்றனமுடியைவகிாந்ததனாலததிகமைத
தனமியதுசெய்யுநதுயாதீாததிடறகுவநது
நினறனமாறபுண்ணீாகிரமபுபலியீகென்றான்.

(இ-பு.) இவ்வாறுகூறிய இலக்குமியை வயிரவககடவுள்நோககிஅ ழகிய தாமரைமலர்வாசனான பிரமன்வாசனைகமழும்சிரசைககிள்ளியதால் பிரமகததி நம்மைநெருங்கி அதுசெய்யுநதுன்பந்தீாத்துக்கொள்ளவநதுநின் றோம என்றுகூறி இபபாத்திரம் நிறையுமபடி இரத்தபிச்சைகொடு என்று கேட்டாா. எ-று. ஈகஎன்றான் என்பது ஈகென்றான்என ஈறுகுறைந்து நின்றது. (உக)

முத தன்கமலைமுகம்பார்த்திவைமொழியச்
சித்தநகலங்கிதெளிநதேதிந்சொத்தியினை
நித்தமபுகல்வோரைநோநதொருகோடிப்பிரம
கததியுமின்னுசெய்யாதென்றிடினின்கண் ணுறுமோ.

(இ-பு.) வயிரவக்கடவுள் இலக்குமியைநோக்கி இவ்வாறுகூறக்கே ட்டு இலக்குமியானவள் மனநகலங்கிப்பிறகுதெளிவடைந்து தேவரீரதுபு கழைததினநதோறும் துதிபபவர்களையும் ஒருகோடிபிரமகத்தியும்நெருங்கி யாதொருதுன்பமுஞ் செய்யாதென்று வேதங்கள்முறையிடுமாகில்உம்மிட த்தில் அப்பிரமகத்தி அணுகுமோ. எ-று. (உஉ)

புங்கவருமென்றன்றுணையும்புரந்தரனுஞ்
சங்கையிலைநின்பொற்சரணிற்புகலென்கை
யெங்கடுயரகலவின்னருள்கூர்ந்தென்கழுத்தின்
மங்கிலியமெஞ்சாதளிப்பைமதிசூடி.

(இ - பு.) தேவர்களும் எனது நாயகனும் இந்திரனும் நினது திருவடியில் அடைக்கலம்புகுந்தவர்கள் என்பதற்கு ஐயமில்லை ஆதலால் எங்கள் துன்பம் நீங்குமவண்ணம் இனியகிருபைசுரந்து எனது கழுத்தில் மங்கிலியம் குறையாதருள்புரியவேணடும் இளம்பிறையணிந்த வயிரவக்கடவுளே.

என்றுநங்கையிரந்திருகணீரிறைப்ப
நின்றாண்முகமபார்த்தெயிறுநெறநெறெனத்
தின்றவிதென்கொலையஞ்செல்பவர்பானீயிரத்த
னன்றவிதென்றிறையுநடுங்கநகைத்திசைக்கும.

(இ - பு.) என்று அவ்விடத்து இவ்வண்ணமாகக்குறையிரந்து இரண்டு விழிகளினும்நீர்சொரியநின்ற இலக்குமியின்முகத்தைப்பார்த்துப்பற்களைநெறநெறெனக்கடித்துவாய்மென்று இதென்ன பிச்சைக்குவந்தவனிடத்து நீ குறையிரத்தல் நன்றாயிருக்கின்றதென்று அவள் நடுக்கமுறுமபடி சிரித்து வயிரவமூர்த்தியும் கூறுகின்றார். எ-று. ஆல்-அசை. (உச)

வேறு.

கொந்தார்குழலார்க்கணைமைந்துபூங்கோல்கொளவேளைத்
தந்தானிடைச்சென்றிசைத்துப்பலிதந்திடென்னப்
பந்தார்முலையாடிகைத்தோடுபுபண்ணவர்க்குன்
முந்தாவொளிர்நேமியன்பாதமுடிக்கணிந்து.

(இ - பு.) கொத்துக்களாயுள்ள மலர்களணிந்தகூந்தலையுடையமாதர்களாகிய கூட்டத்தையும் ஐந்துபூவாளிகளையும் உடையவனான மன்மதனைப் பெற்றவனது நாகயனிடத்துசுருப்போய் நாம்வந்திருக்கிறதைச்சொல்லிப் பலியிடுகவென்று வயிரவமூர்த்திகூறப் பந்தைப்போலுமமர்ந்த தனங்களுள்ள இலக்குமி ஒன்றுந்தோனாமற்றிகைத்து ஓடித்தேவர்களுக்குத் தலைவனைசக்கரப்படையையேந்தும் தன்நாயகன்திருவடிகளைமுடிக்குமுடியாய் தரித்துக்கொண்டு. எ-று. (உரு)

வடுகக்கடவுண்முனிந்தொல்லைநம்வாயிலின்கண்
டிடிபுற்றியகையொடுநின்றனன்றோமிலன்றோ
னடியிற்பணிநதின்னுரைகூறிட்வாங்கணீயே
படியிற்படர்திவிலரந்தென்றனள்பங்கயத்தாள்.

(இ - பு.) வயிரவமூர்த்தி கோபங்கொண்டு நம்முடையதிருமனைவாயிலிடத்து உடுக்கை பிடித்த கைத்தலத்துடன் சீக்கிரமாகவந்து நிற்கின்றனர்குற்றமற்ற அந்த வயிரவமூர்த்தியின் திருவடியில் வணங்கி உன்மொழி

கூறுதற்கு அவ்விடம் நீரே அதிவேகமாய்ப் பாதசாரியாய்நடந்து போமென்றனள் தாமரைமலரின்கண் வீற்றிருக்கும் இலக்குமி. எ-று. (உசு)

அவ்வாய்நெடுமாலவன்சென்றிறையமபுயத்தாள்
கவ்வலவக்கொடுவீழ்ந்தெதிரேககாபமைகபாலியென்னப்
பவ்வத்திரையின்விரைந்தனனவனபற்றுநந்தா
லெவ்வபடமாலவனெற்றியிலெழும்பினுனல்.

(இ - பு.) இவ்வாறு இலக்குமி சொன்னவுடன் அந்த மனையினது வாயிலினிடத்துப்போய்திருமாலானவர் வயிரவமூர்த்தியினுடைய தாமரைமலர் போன்ற திருவடியிறுயரைக்கொண்டு பணிந்துஎனறனை யிரட்சிப்பாய் பிரமகபாலமுடைய வயிரவககடவுளேயென்று தோத்திரஞ் செய்ய கடலினது அலையைப்போலவிரைந்து அந்தத்திருமால் ஏநதுகின்றசஙகினுற்றுன்பமடையும் வண்ணம் திருமாலுடைய நெற்றியிறருக்கினுர். எ-று. ஆல் அசை. (உஎ)

மோதுமபொழுதெஞ்சியமாயவன்முண்டம்விண்டு
போதும்வழிகாலகுருதிபபுனறபொமமறனனே
யோதுந்தரமன்றிபமுன்கைமையொதததுவீழ
நாதன்றடிநதபிரமன்சிரநண்ணவேறறுன்.

(இ - பு.) சங்கினுற்றுக்கியபொழுது இளைதத அத்திருமாலின் நெற்றி பிளந்தற்றவழியாயவரும படியான செநநீரப்பெருககத்தினை அளவிட்டுச் சொல்லமுடியாது இப்படியானைத்துதிக்கைபோல் சொரிந்த அச்செநநீரத்தாரையை வயிரவமூர்த்தி கையிலுளள பிரமகபாலததிலடையும்படி யேறறனா. எ-று. (உஅ)

சீரார்பரவைமடைகீண்டெனச்சென்றசெம்பு
ணீராயிரவறசரமேற்றுநிறைந்ததிலதை
தாரார்துளபன்றன்சரீரஞ்சதைநதசெநநீர்
நேராய்விடுததானவையுமதினிறைந்ததின்றே.

(இ - பு.) சேர்த்திவாய்ந்த கடல் மடையுடைந்ததுபோல் வருகின்ற குருதியை ஆயிரம்வருடம கபாலத்திலேற்றும் நிரம்பினதில்லை துளசிமாலையணிந்த திருமால் உடமபெல்லாம சிதைந்து வருகின்ற குருதியையும் ஏற்றூர் அதினும் அககபாலநிரம்பினதில்லை. எ-று. ஏ-அசை. (உகூ)

அக்காலையில்வெவ்வலிவீடியயர்ந்துவீழ்ந்த
மைககார்நிறவண்ணனைநோக்கியவானுளோர்கண்
மிக்காயடியேயமிறுமாப்பைவிரைந்துவிட்டி
யெக்காலமுநிறறெழுமன்பெமகதியென்றுர்.

(இ - பு.) அவ்வேளை அகந்தை யொழிந்து மயங்கிவீழ்ந்த கார்வண்ணனைப்பார்த்த தேவர்கள் வயிரவமூர்த்தியை நோக்கிச்சொல்லுகின்றனர்

எவரினுமிக்க சுவாமி நாங்கள்மமதையகன்று எப்பொழுதும்உம்மைத்தொ ழுமன்பு எமகளுக்குத்தருவாயென்று கேட்டனர். எ-று. (௩௦)

தன்றாள் பணிந்தேத்தியவானவர்தம்மையன்பா
யன்றானிழற்கீழறவோர்க்கறனோதுமத்த
னன்றாலெனநலலருள்கூர்ந்தவைநல்கிவீழ்ந்த
மென்றாதுகுபைந்துளவோனை விடுத்துமீண்டான்.

(இ - பு.) தமதுதிருவடியிற் பணிந்து தோத்திரஞ்செய்த தேவர்களை யன்புடன் நோக்கி முன்னம் கல்லாலவிருட்சத்தின் கீழிருந்து சனகாதி நால்வர்களுக்கும் தருமத்தை ஓதியருளியபெருமான் நல்லதென்று நல்லக ருணைபுரிந்து அவர்கள் கேட்டபடி வரங்கொடுத்து விழுந்துகிடக்கும் மெ ன்மையாகியமகரந்தப் பொடியையுதிர்க்கும் பசியதுளபமணிந்த திருமாலை விடுத்துமீண்டுபோனார். எ-று. (௩௧)

எவரேனுமகந்தைகொடைசனை யெள்ளினோர்க
ளவரேமெயதலந்தொறுஞ்சென்று றுமாண்மைபோக்கி
நவமாயவுழறபிழம்போரவடிவாயநாதன்
றவராதுறையுஞ்சுருதிபுரத்தலந்தன்னிலவந்தான்.

(இ-பு.) எவர்களாயினும ஆணவங்கொண்டு சிவபிரானை இகழ்ந்தவர் கள் இருக்கின்ற இடந்தோறுஞ்சென்று அவர்களது ஆணவத்தை யொழி த்துப்புதிதாய் அனற்பிழம்புபோல் திருமேனிகொண்டு நீங்காதுசிவபிரா னுறையுஞ சுருதிபுரத்தில வந்தனாவயிரவமூர்த்தி. எ-று. (௩௨)

வந்தெந்தையையாகமநூல்புகலவண்ணமன்பாற்
சந்தமபெறுதண்புனலாட்டிநறுமமாலை
யிந்தொளமியசென்னியின்மீதிவிலங்கவைத்தே
யுந்தும்பரிவாலவர்க்கோதனவாக்கமுற்றும்.

(இ - பு.) வந்து எந்தையாகிய சிவபிரானை ஆகமத்தின்முறை அன்பு டன் மணமபெற்ற குளிர்ந்தகங்கையால்அபிடேகஞ்செய்து நல்லகொன் றைமலர்மாலையைச் சந்திரன்விளங்குமதிருமுடியின்கண் பிரகாசிக்கும்படி அணிந்துமுன்செல்லும் பத்தியினால் அவருக்கு அமுதுவகையும் பின்னும்,

தேவன்றனக்காசினியினகனிசெய்யவாழை
மாவின்கனியேமுதலாயவருக்கமற்றுந்
தூவழ்முதலாவெணிரண்டும்தொகவுஞற்றி
நாவின்மலர்பற்பலமெய்த்துதிநன்குசெய்தான்.

(இ - பு) சிவபிரானுக்கு ஈரபபலாக்கனி செவ்வாழைக்கனிமாங்க னி முதலான கனிவர்க்கங்களும நிவேதித்துப்பின்னும் தூபதீபமுதலாகிய சோடசவுபசாரமும்வரிசையாய்ப்புரிந்துநாவிலெழுகின்ற பலவிதமானஉண் மையுள்ள துதிகள் செய்தார் வயிரவமூர்த்தி. எ-று, ஏ-அசை. (௩௩)

அவ்வேலையிலங்குநின்றும்மெனையாண்டவண்ணற்
செவ்வேயெதிர்ந்தந்தணன்மால்கொள்செருக்ககற்றி
யொவ்வாவிறலுற்றனையென்றுவந்தோதினன்சொல்
வைவேலுறுமெந்தைபைதந்திடும்வள்ளன்மாதோ

(இ-பு.) அந்தசமயத்தில் அவ்விடத்திருந்தும் என்றனையாண்ட அண்ணலாகிய வயிரவமூர்த்திக்கு நேராய் எழுந்தருளிப்பிரமன்திருமால் கொண்டசெருக்கைநீக்கி ஒப்பிலாத வெற்றியடைந்தனை யென்று மகிழ்ந்துகூறினார் துதிக்கப்படும் கூரவேல் தாங்கும் எந்தையான முருகக்கடவுளை யீன்றசிவபிரான். எ - று. மாது, ஓ-அசை. (௩௫)

வேறு.

மாலயன்றேடியும்வடிவநகாணொணா
மேலவன்காரியைவியநதுநோககியே
கோலநம்முழிவடகுணக்கினமேவினை
யேலவிவ்வணிநகரிருநதுகாத்தி நீ.

(இ - பு.) மாலும்பிரமனும்தேடியுங்காணக்கூடாதஅடியும்முடியுமுடைய சிவபிரான் வயிரவமூர்த்தியை வியப்புடன்நோக்கிநல்லஅழகியநமது இடத்தில் வட கிழக்குத திசையிற் சென்று அமர்நது பொருந்தும்படி அலங்காரமுள்ள இச்சுருதிநகரை நீ காக்கக்கடவை என்றார். எ-று. ஏ-அசை

எல்லுறுமிததலத்திருககுமியாவரு
மல்லலுற்றிடாவகையருளிக்காத்தியென
றொல்லையிற்கரநதனனவனுமததிசை
வலலையிற்போயவண்வைகினனரோ.

(இ பு) பின்னும் வயிரவமூர்த்தியைப்பார்த்து விளக்கம்பெற்ற இச்சுருதிபுரியில் வாழ்கின்றவர்கள்அலலலடையாவண்ணம் கருணையுடன்காசககடவா யென்று அருள்செய்து விரைவிற்சிவபிரான் மறைந்தருளினார் அவ்வயிரவமூர்த்தியும் சிவபிரான் ஆஞ்ஞையின் படி வட கிழக்குத் திசையில் சீக்கிரம போய் அமர்ந்தனர். எ-று. அரோ-அசை (௩௭)

இன்னவன்சரிதையையிசைத்துளோரதைப்
பன்னிடக்கேட்டவர்பரவைசூழ்புவி
மன்னவனாயிருந்தோம்பிமாசிலா
முன்னவனகயிலையின்முடுகுவாரென்றான்.

(இ - பு.) இந்த வயிரவமூர்த்தி சரித்திரத்தைவாசித்தவர்கள்கேட்டவர்கள் கடல்சூழ்ந்த உலகுக்கரசனாயிருந்து செங்கோல்நடத்திக்குற்றமற்ற சிவபிரான் வாழுங்கயிலையின்கண் போயிருப்பார்கள்என்றுசூதமுனிவா திருவாய் மலர்ந்தருளினார். எ-று. (௩௮)

வயிரவருற்பவச்சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்...௧௧௮.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அறுமுகன்சத்திபெற்ற சருக்கம்.

சூதன்வழங்கிய காதைச் சுவையமுதைச் செவிவாயாற்றுய்த்து
மேலாம், போதவிறுமப்பூதினராப் புண்ணியநைமிசவனத்துப்புனி
தரியாருங், "கோதறுமாதவமுன்னங்குமரனியற்றின னென்னக்கூறி
னீரத, நீதறுநற்கதையெமக்குத்தெரிந்திடுமினெனவவனுந்தெரிப்
பதானன்.

(இ - பு) சூதபுராணிகர் கூறிவந்தவயிரவருறபவச்சரிதமாகிய மதுர
மான அமுதைச்செவிக ளென்னும் வாயினூற்புசித்து உயர்வாகியமிகக அதி
சயமுடையராய்ப் புண்ணியசொரூபிகளாகிய நைமிசாரணியமுனிவாகளெ
ல்லாம் மேற்கூறிய மறைசைமாநகரத்தில முருகக்கடவுள் முன்னாளில்மா
சில்லாதபெரிய தவம்புரிந்தனரென்று திருவாய்மலர்ந்தீர அக்குற்றமற்ற சரி
தையையெஙகளுக்குத தெரிவிக்கவேணடு மென்றுகூறியிரப்பச்சூதபுராணி
கரும்சொல்லத தொடஙகினா. எ-று. மின்-அசை. (க)

பண்டுவெள்ளி வேதண்டப் பரமன்மகிழ்ந்தறுமுகனைப்பரிவா
னோக்கி, விண்டுவுந்தாமரையவனும் விண்ணிறையுமாற்றாது வெரு
ளும்வெம்போ, ருண்டதுநீவென்றமராக்குறுதுயர்தீர்த்தன்பொ
டுங்காத்தோம்புங்கீர்த்தி, கொண்டிடுதியவையியற்றக்கூறுவனோர்
கருமமதுகுறிசகொளவாயால்.

(இ - பு.) முன்னொரு காலத்தில் திருக்கயிலையில் வீற்றிருந்தருளும்
சிவபிரான் களிப்புடன் முருகக்கடவுளை அன்புடன்பார்த்து திருமாலும் பிர
மனும் இந்திரனும் பொறுக்சக்கூடாது நடுங்கும்படி அசுரர்கள் இயற்றும்
ஒருவெவ்வியயுத்தமுணடு அப்போரை நீசயித்து தேவாகளுக்குற்ற துன்ப
த்தைத்தீர்த்து அன்புடன் காத்திரட்சிக்கும் புகழைக்கொள்வாய் அவ்வாறு
செய்ய ஒருதந்திரஞ் சொல்லுகின்றேன் அதைக்கவனிப்பாய். எ - று.
ஆல்-அசை: (உ)

சலதிபுடைசூழ்புவி யிற்றனியாகிப்பலங்களுக்கோர்தலைதாகி
யலகிறவத்தினரிமை யோராதியர்கருமரிதாகியடுத்தோருள்ளத்தி
லருபொருளொல்லை யருளிடமாகிச்சிவதலமென்றிசையுண்டாகிப்
பொலனுலகிற்சிறப்பாகியெமக்குமிகவன்பாகிப்பொருந்துமன்றே,

(இ - பு.) கடல்சூழ்ந்த நிலவுலகின்கண் ஒப்பற்றதாகியும் பாவங்களை யெல்லாந்தகிக்கும் அக்கினிபோன்றதாகியும் அளவிறந்த தவமுடையவாக ளுக்கும் தேவர்கள்முதலான வாசவுருகரும் அறிதற்கருமை யானதாகியும் த ன்னிடத்துச் சேர்ந்தவர்கள் மனதில் எண்ணியபொருளை அதிசீக்கிரத்தில் கொடுக்கும் இடமாகியும் சிவதலம் என்னும் புகழுடைந்து அழகிய உலகின் கணுள்ள மற்றசிவதலங்களின் மேம்பட்டதாகியும்எமக்கும்அதிகஅன்புள்ள இடமாகியும் இருக்கும், எ - று, அன்று. ஏ-அசை. (௩)

அப்புனிதக்ஷேத்திரத்திலன்புற நீயடைந்தெம்மையருச்சித்தாயே லொப்புறுமெய்யடல்பெருமையுலகமெலாந்தொழுதேத்தவும்பர்க் கெல்லாஞ், செப்பருஞ்சேனாபதியாச்செய்யுமமரினிலவுணாசிதை கவாட்டி, யெப்பகையுந்தீர்த்திடுதற்கியலபெறுவையிவ்வகைநீயிய ற்றுகென்றான்.

(இ - பு) அவ்வாறான பரிசுத்ததலத்தில் அன்புபொருந்த நீசேர்ந்து என்னைப்பூசிப்பையாகில் ஒப்பற்றமெய்ம்மையாகியவன்மையைப்பெறுவாய் இந்தநிலவுலகமெல்லாம்வணங்கித்துதிக்க தேவாகளுக்கெல்லாம்சொல்லுதற் கரிய சேனாதிபதியாகச் செய்யப்படும் யுத்தத்தில தானவாகள் மடியக்கொ ன்று எவ்விதப்பகையும் தீர்ப்பதற்குரிய வல்லமையைப் பெறுவாய் ஆகை யால் அவ்வாறு நீசெய் என்று திருவாய்மலாந்தருளினா. எ-று. (௪)

தந்தையிவையுரைத்திடலுந்தனயனதிசயமெய்தித்தாளிறைஞ்சா வெந்தையெனக்கிசைத்தபணிபெண்ணில்வியப்பாயது நீயிமையோ ராதி,வந்துபணிந்தவர்க்கிவணேமனதினுறுமவரமருளும்வண்மை நீக்கிச், சிந்துபுடைசூழ்புவியிறசெல்லவெனையுரைத்தமொழிசெ யனன்றென்றான்.

(இ - பு.) தந்தையாராகிய சிவபிரான் இவ்வாறு திருவாய் மலர்ந்த வுடன் புத்திரராகிய முருகக்கடவுள் அதிசயம் அடைந்து அவர்திருவடிகளி ல்வணங்கி எனது தந்தையே தேவரீரெனக்குக்கட்டளையிட்டதிருப்பணியை நினைக்கில் வியப்பாயிருக்கின்றது தேவரீர தேவர்கள முதலாக இவணடை ந்து தொழுகின்றவர்க்கு இங்குத்தானே அவரவாகள் மனதில் எண்ணியவ ரங்களையெல்லாம் எண்ணியபடியே கொடுக்கும் வள்ளற்றன்மையை யொ ழித்துக்கடல்சூழ்ந்த நிலவுலகத்தில்என்னைப்போகும்படிகூறியகட்டளையின் செய்கை நன்றாயிருக்கின்றதென்றார், எ-று. (௫)

ஓதிடுங்காலாதியினிலுரைத்தமொழிப்பயனுரையென்றோதுவித்த வேதியன்காற்றளை பூட்டி விடுத்தமகனிவ்வாறுவிளம்பலோடு மாதியரனுள்ளமகிழ்ந்தணிமுறுவலினிதியற்றியன்பாநோக்கிக் [ன் காதலனையருகழைத்துக்கதிர்மணியாதனத்திருத்திக்கழறுகின்று

(இ - பு) தான் விததியாரம்பஞ்செய்த காலத்து முதலிற் கூறிய பிரணவத்துக்குப் பொருளுரையென்று வினவித்தனக்கு ஓதுவிக்குந் தொழில் பூண்ட பிரமன்காலில் விலங்கிட்டுப் பின்பு விடுவித்த புத்திரராகிய முருகக்கடவுள் இவ்வண்ணஞ் சொன்னவுடன் முதல்வராகிய சிவபிரான் மனங்களித்து இனிமையுடன் அழகிய புன்முறுவல் செய்து அன்பாகப் பார்த்து அவரைத்தன் சமீபத்திலழைத்து ஒளிவீசும இரததின கசிதமான சிங்காதனத்தில் இருக்கச்செய்து திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (௬)

ஒருவருக்குமுரையாதவுண்மையதொன்றுளததனையுன் பாலன்
பாற், றுருவமது கேண்மலர்ப்பூந்தடங்கணரியயன்முதலோர்தாமு
நதேரார், மருவிருக்குங்கடம் பணிதோண்மைந்தவந்தத்தலமகிமை
மதிக்கினவெள்ளி, யருவரைக்குமவாராநல்லன்புமெமக்கதன்மீதி
லதிகமாமால்.

(இ - பு.) யாவருக்குங் கூறாத மெய்ம்மையானது ஒன்றிருக்கின்றது அதனை உன்னிடத் தெமக்குள்ள அன்புகாரணமாய்க் கூறுகின்றேன் கேட்பாயாக தாமரை மலர்போலும் அழகிய விசாலமான கண்களையுடைய திருமால் பிரமன் முதலியோரும அறியமாட்டார். வாசனைதங்கும கடப்பமலர்மாலை யணிந்த புயங்களையுடைய மைந்தனே மகிமையிடத்து யான் கூறிய அந்தத்தலத்தின் மகிமை திருசகயிலாயததிற்கும் வராது அத்தலத்தினிடத்து எமக்கும நல்ல அன்பும அதிகமாகும். எ-று. தான்-ஆல்-அசை.

காசிமுதலாக்கடல்சூழ்காசினியிலெமதுதலங்கணக்கிலந்த
வாசமுறநற்றலங்கடமிலன்புறவேபூசித்தேமருள்பெற்றோரும் [பா
பேசுறவோர்சங்கையில்லைபெரிதுமின்புதருந்தலங்கடமினும்பெட்
ராசறுமச்சுருதிபுரத்தினிலெளிதின்முத்தியாந்தமளிப்பமாதோ.

(ஜ - பு) கடல்சூழ்ந்த நிலவுலகின்கண்காசி முதலாக யாம் வாசிக்குந்தலங்கள கணக்கிலலை. அந்த முறற மற்ற நல்லதலங்கள்தோறும் மெய்யன்புடன் பூசித்துத் திருவருளடைந்தோரும கணக்கிலலையென்று சொல்லுதற்கு ஓர் ஐயமிலலை. மிகவும இன்பத்தைக்கொடுக்கும் தலங்களிலும் எனதன்பு நிறைந்த குறைவற்ற அம்மறைசைமாநகரத்தில் வசிப்பவர்களுக்கு தேகாந்தியத்தில் எளிதாக மோட்சமருளுவேம். எ-று. ஏ இரண்டும்-மாது-ஓ-அசை. (அ)

ஐம்புலனைவென்றுதவம்புரிந்தாலும் பாரைவலமாவந்தாலும்
மிம்பரிடைவேள்வியலவியற்றினும் புண்ணியவினைகளெவைசெய்
தாலு, நம்புமுளத்தினராவெந்நாளும்மெய்ம்மைப்பூசித்துநயந்திட்டா
லு, மும்பருக்கியாமோதுவித்த வுயர்தலத்தை நினைத்தபலனுதவ
லாற்றேம்.

(இ-பு.) பஞ்சேந்திரிய நிக்கிரகஞ் செய்து தவஞ்செய்தாலும்பூப்பிர தட்சணம புரிந்தாலும இந்நிலவுலகின்கண் பலயாகங்களைச் செய்தாலும் எவ்வகைத்தாயபுண்ணியகருமங்கள்புரிந்தாலும் உண்மையாக நம்புமமன முடையவராக எக்காலும் எம்மைப்பூசித்து அன்புசெய்தாலும் தேவர்களு க்கு நாம்வேதமோதுவித்த உயர்வாகிய மறைசைமாநகரத்தை நினைத்தவா களுக்கருளும் பலன்களைக் கொடுக்கமாட்டோம் எ - று. (கூ)

தவமறியாருளமதனிற் றயையறியார்கொடையறியார் தலமேனு னும, பவவினையலலது நல்லபண்பறியாரநல்லோர்பாறபயிறல்செய் யார், புவனமிசையெம்மையொருபோதுநினையா ரெனினும்புகலு மந்தச், சிவதலத்தைத்தரிசித்தோா சித்திபெறுவர்களலதுதீதுறு [வோர்.

(இ - பு) யாதொரு தவமுஞ்செய்யாதவாகளாயினும மனதின்கண் தயையில்லாதவர்களாயினும் ஈகையறியாதவர் களாயினுங இப்பூவுலகின் கண ஏந்நாளும் பாவச்செய்கையேயல்லாதுநற்குணமிலலாதவாகளாயினும் நல்லோரிணக்கமறியாதவர்களாயினும உலகின்கண எம்மை ஒருகாலததும் நினையாதவாகளாயினும் யாவராலும்புகழும் அந்த மறைசைமாநகரமென் னும் சிவதலதததைத் தரிசிப்பார்களாயின முத்திஅடைவார்களல்லது தீங்க டையார. எ - று. ஏ அசை. (௧௦)

ஈதெமதுவியப்பினுனக்கிசைத்தமைத்தல மகிமையெனவுட் கொள்வா, யாதலினீயினிடவவரியதலத்தினிலெய்தியன்பாலெம் மைக், கோதறுபூசனைபுரிந்து கொறறமுற்றுகென வெந்தைகூற லோடும், காதலனுமனமிசைந்துகாசினியிலத்தலத்லைதக்கருத்துள் வைத்தான்.

(இ - பு.) எமது விருப்பங்காரணமாய் அத்தலத்தின் மகிமையாகிய இதனை உனக்குககூறினேனென்று கருததிற்கொளளககடவாய் ஆகையால் இனி நீ அத்தலததிறசென்று அன்புடன் எமமைககுறித்து குற்றமற்ற பூசையியற்றிவெற்றி யடைவாயென்று எமது தநதையாராகிய சிவபிரான் திருவாய்மலாந்தருளலும் முருகககடவுளும் அதறகுடன்பட்டுப்பூவுலகத்தில் சென்றுபூசிக்கஅத்தலத்தைக்கருத்தில் நினைத்தாா. எ-று. (௧௧)

காசிபன்கண்ணுவன்வசிட்டன்கலைகோட்டன்பிருகுபுலிக்கால ன்றூரு, வாசன்மயித்திரியனுயாவாமதேவன்பரத்துவாசன்சங்கனி பாசமறுத்திடுஞானப்பதஞ்சலியத்திரியொர்சரபங்கனங்கி,ராசனத் தச்சனகசனற்குமரன்மார்க்கண்டன்முதனல்லோர்சூழ.

(இ - பு.) காசிபர், கண்ணுவர், வசிட்டர், கலைக்கோட்டர், பிருகு, வியாக்கிரபாதர், துருவாசர், மயித்திரியர், உயர்வாகியவாமதேவர், பரத்து

வாசர், சங்கர், பாசங்களீங்கிய ஞானத்தையுடைய பதஞ்சலியார், அத்திரியா, ஒப்பற்ற சரபங்கர், அங்கிராசர், மேன்மையமைந்த சனகர், சனற்குமாரர், மார்க்கண்டர், முதலிய முனிவர்கள் புடைசூழ. எ-று. (௩௨)

வேறு.

உம்பர்பணிசெய்துபுடைசூழவுமைபாகத்
தம்பணிபொலன்சடையரனைவிடைகொண்டே
யிம்பரினடைந்துசிவனேறியவிடத்தே
வம்பவிழ்கடம்பணியும்வள்ளலுமடைந்தான்.

(இ-ள்) தேவர்கள் ஏவல்செய்துகொண்டு புடைசூழ்ந்துவர உமாதேவியார் பாகத்திருக்கும் கங்கையணிந்த அழகியசடையையுடைய சிவபிரானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு இந்நிலவுலகத்தின்கண் அடைந்து அச்சிவபிரான் கூறியமறைசைமாநகரத்தில் மணங்கமழும் கடப்பமலர்மாலையணிந்த முருகக்கடவுள் வந்துசேர்ந்தார். எ-று. ஏ, இரண்டும்-அசை. (௩௩)

பாடலிறுகாந்தறுபதங்கள்சுதிசெய்ய
நீடியவெற்றிற்சிறைநிரைக்கிளிகள்பூவை
கூடியமுதின்னிசைகுயிற்குழுவுமோதுந்
தோடவிழ்மலர்த்துணர்கொள்சூழலடைந்தான்.

(இ - ள்.) வண்டுகள் தேனையுண்டு சுதிபாடிக்கொண்டு நீண்ட அழகிய இறகையுடைய கிளிக்கூட்டங்களும் நாகணவாய்ப்பறவைகளும் குயிற்கூட்டங்களும் ஒன்றுசேர்ந்து அமுதத்தைப்போலும் இனிய இசைகளைக்கூறிக்கொண்டிருக்கும் இதழலர்ந்த மலர்க்கொத்துகளையுடைய சோலையிற்சேர்ந்தார். எ - று. (௩௪)

வேறு.

கோங்கரும்புமுலைகுலுங்கக்கொடிமருங்கு றுவலக்கடையைப்
பூங்கவிகைவெயர்வொழுகப்புகலளிபண்ணிசைகூட்ட
தீங்கரும்பிற்குயில்பாடசெவ்வேளுக்கெதிர்நின்று
மாங்கவின்மென்றளிர்க்கரத்துமலர்ப்பொழின்மாதாடினளால்.

(இ - ள்.) கோங்குமலரின் அரும்பானது முலைபோலக்குலுங்கவும் வஞ்சிக்கொடிகளானது இடைபோலத்துவண்டசையவும் அழகியகிளைகளானது வெயர்வைபோலவொழுகவும் யாவரும்துதிக்கும்வண்டுகள் சுதிகூட்டவும் இனிமையாகிய கரும்புபோலினிக்கும்படி குயில்கள்பாடவும் முருகக்கடவுளுக்கெதிராகநின்றுமாவினது அழகமைந்தமெல்லியதளிர்களாகியகையுடன் மலர்கள்நிறைந்த சோலையாகியபெண் நடித்தனள், எ-று. ஆல்-அசை.

இத்தலமாமதிச்சடையெமபிறைமகன்வாதெய்துதலா
லெத்தலனுமபுகழுவினிதிருடபேறுற்றனனென்னி
னுத்தமமாயினரியாரென்றுணாந்துநிலமகட்னது
கைத்தலஙகொளபொரிசிதறல்போன்றனவாற்காமலர்கள்.

(இ-பு.) இந்தத்தலத்தில் மகத்துவமிக்க இளம்பிறையணிந்த சடாட வியையுடைய எமதுசிவபிரான் புத்திரன் இவ்விடத்து அடைதலால எந்த தலத்திலும்புகழ இனிமையுடன் பெரும்பேறடைந்தனன் ஆகையால என்னைபபாாககிலும் உத்தமா எவாிருககின்றுரென்றுதெரிந்து பூதேவி தனதுகையினிடததுப்பொாியைச்சிதறுதலபோலிருநதன அச்சோலையின் மலாகளுதிாதல். எ-று. ஆல்-அசை. (கசு)

நிலமகடன்மருகனெனநினைந்தமைத்தகாவணம்போ
னலமிருததபலாச்சோலைநண்ணியவனெக்கினனுற்
பலமுடையதவததினர்களபயிலிடமுமகததுறையும்
பொலனுலகததவாநிறைநதபொறபுஙகண்டதிசயித்தான்.

(இ-பு.) பூதேவியின் மருகனென்றெண்ணிச்சமைத்தபந்தரைப்போ லானமைமிகுத்த புட்பசோலையிடத்தில் அடைந்து அவ்விடத்துவிழிசெலுத்தினா மிகுநதபெரியதவத்தினாவசிகரு மிடமும் வேளவிச்சாலைகளும்தேவாகள் நிறைநதிருககும அழகுமபாாத்து அதிசயமடைந்தார். எ-று ஆ-ல் அசை. (கஎ)

வேறு.

ஆஙகுறுமாதவபந்தணர்வானோர்
பாஙகுறவநதுபணிநதுதுதிபப
வோஙகறுவநதிரனுளளமுவநதே
பூஙகொடிபாகனைநேடினனபோனுன்.

(இ-பு.) அசசோலையின்கணுள்ள மகத்தான தவசிகளும் மறையவர்களும். தேவர்களும் அன்புடன் வந்து வணங்கிதோத்திரஞ்செய்ய அருளோஙகும் ஆறுமுககடவுள் மனமகிழ்ந்து மலாக்கொடிபோலும் மருங்குள்ள உமாதேவியாரைப் பாகத்திலுடைய சிவபிரானைத் தேடிப் போனாா. எ-று. ஏ. அசை. (கஅ)

செயிரறுவானவர்தேவும்வணங்க
மயலறுசிந்தையமாதவரோடும்
வயிரவனைததருஞ்வாளுயர்சோதி
பயிலுறுகின்றுழிபண்பொடெதிர்த்தான்.

(இ-பு.) குறறமற்ற இந்திரனும்பணிய மயக்கமற்ற மனமுடையமாதவசிகளுடன் வயிரவகடவுளை ஈன்றருளிய அண்டத்தன வோங்கிய

சோதிசொரூபராகிய சிவபிரான் வீற்றிருக்கும் இடத்தைஅன்போடு எதிரிற்கண்டார், எ-று. (௧௧)

அளிர்ந்திடுதற்கரிதாயயன்மாலுந்
தளர்ந்துசலித்ததனிச்சுடராகி
வளர்ந்துநிமிர்ந்துயர்வானிறைகின்ற
களங்கமில்சோதியையன்பொடுகண்டான்.

(இ-ள்) அளத்தற்கரிதாகிப் பிரமன்திருமால இருவரும் மனந்தளர்ந்து சலித்தஒப்பற்ற ஒளியபிழம்பாகி ஓங்கிஉயாவாகிய ஆகாயத்தில் நிறைந்தகளங்கமற்ற சோதிசொரூபராகிய சிவபிரானை அன்புடன்கணடார், எ-று.

வந்திடும்யோகியர்மாதவாவானத்
திந்திரனுதியரியாரும்வியந்தே
மந்திரவிதனைநணங்கிவழுத்தச்
சுந்தரவேளிறையின்னதுதிப்பான்.

(இ-ள்.) தமமுடன் வந்துள்ள யோகியர்களும் பெரியதவம்புரியும் முனிவாகளும் விண்ணுலகாரும் இந்திரனும் மற்றையோர்களும்அதிசயமுற்றுப் பிரணவமந்திரவித்தான இலிங்கமூாத்தியைப பணிந்து தோத்திரஞ்செய்ய அழகிய முருககடவுளும்இதனைதுதிகின்றாள-று, எ-அசை

வேறு.

கண்ணுக்குங்காண்டற்கரிதாய்க்கவின்சுடரா
யெண்ணுக்குமெட்டாவிறைவநினதுபுகழ்
விண்ணுக்குளண்டவெளிக்குள்விரிகடலசூழ்
மண்ணுக்குளாரேமதிக்கவல்லுனுடையார்

(இ-ள்.) கண்களுக்கும் நோக்கியறிதறகருமையாய் அழகியஅருட்சோதியாய் விளங்கி நினைவுக்குமெட்டாக்கூடாத நாயகனே உம்முடைய கீர்த்தியை அந்தவிண்ணுலகத்துள்ளும் அணடத்தின்மேலுள்ள மற்றையுலகத்துள்ளும் விரிந்தகடல்சூழ்ந்த இந்தமண்ணுலகத்துள்ளும் அறியத்தக்கவல்லபமுடையவா ஒருவருமில்லை. எ-று. (௨௨)

விரிவுளபல்லண்டம்விளங்குமுனதாளின்
பரிபுரத்தின்கீழணிந்தபாதசசதங்கையெனிற்
றெரியுமோநின்முடியுஞ்சேவடியுந்தேடிநின்ற
வரியயனுங்காணாததற்குப்பழியுண்டோ

(இ-ள்) விசாலமாயுள்ள பலவாகிய அண்டங்கள்முழுதும்எங்கும் பிரகாசிக்கும் உமதுதிருவடிகள் ற்றரித்திருக்கும் வீரக்கழலின் கீழ்ப்புறத்திற்சத்திக்கின்ற கிறுசதங்கையென்று கூறினால் அத்திருவடிகளும் திருமுடி

யும் எளிதிலறியக்கூடுமோ அவைகளை அறிவோமென்று தேடிக்காணமுடியாமல் வேசாறுகின்ற பிரமனுக்குமமாலுக்கும் ஒருதாழ்வுளதோ. எ - று.

என்றுதுதித் தெயிணைத்தாமரைமலர்க்கை
மன்றனமுடி மேற்குவித்துமனமுருகி
நின்றுதொழுதுநீரார்விழியனுமா
யொன்றுபுகன்றுனுயர்சோதியை நோக்கி.

(இ - பு.) இவ்வாறுதோத்திரஞ்செய்து தாமரைமலர்போன்ற இரண்டுகைகளையும் வாசனையுள்ள சிரசின்மீதுகுவித்துக்கொண்டு மனமுருகி எதிர்நின்று வணங்கி யானந்தநீர்பெருகுகின்ற கண்களுடையவராய் மேலாயசோதி ரூபமாயெழுந்தருளி யிருக்கும்சிவபிரானைப்பார்த்து மேல்வருகின்றஇஃதொன்றைக் கூறினார். எ-று. (உச)

வேறு.

கண்ணுக்குமுரைக்குமுள்ளக்கருத்துக்குமரியதாக
நண்ணியசுடரேயுனைநானருச்சிப்பதெங்ஙன்
விண்ணவர்பலருமயானும்விரும்பியேபூசைசெய்ய
வண்ணமோருருவாய்நிற்றியெனக்குகன்வணங்கிநின்றான்.

(இ - பு.) விழிக்கும்வசனத்துக்கும மனக்கருத்துக்கும அளவிடுதற்கரியதாய் எழுந்தருளிவந்த அருட்சோதியாய சிவபெருமானே உம்மை நான் அர்ச்சனைசெய் தெவ்வண்ணங்கூடும் ஆதலால பல்வகையான தேவர்களும்யானும் இச்சித்துப்பூசைபுரியும்படி ஒரு இலிங்க வடிவாய் அமர்ந்தருளவாய் என்றுமுருகக்கடவுள் தொழுது எதிர்நின்றார். எ-று. (உரு)

செபிவையுரைப்பஞானச்செழுஞ்சுடர்ப்பிழம் பாய்நின்றோ
னுயவேலையிற்செஞ்சோதியானதோர்லிங்கமானான்
நாயகன்மகிமைநோக்கிநளினநான்முகன்மாலாதி
தூயவர்துதித்தார்தேவதுந்துபிமுழவமோங்க.

(இ - பு.) முருகக்கடவுள்இவை கூறச்செழிப்புள்ள ஞானசோதிவடிவாய் நின்றருளுஞ் சிவபிரான அக்காலத்திற்செவ்வியசுடர்மயமான ஒருஇலிங்காகாரமாய் அமர்ந்தருளினர் அச்சிவபிரானது மகத்துவததைப் பார்த்துத்தாமரையில் வாழுஞ்சதுமுகன் திருமால் முதலானபுனிதர்கள் தேவதுந்துபியும் மத்தளமும் முழங்கத்தோத்திரஞ்செய்தனர் எ-று. (உசு)

இலங்கொளியிலிங்கமாகியிருநதிடும்பொருளை நோக்கிப்
புலன்களோர்வழித்தாய்யோகப்புனிதர்கள வியந்துநின்றார்
நலங்கிளர்கார்த்திகேயனவமணித்துறைகளோங்கித்
துலங்குகல்யாணகோடித்துயநீர்தேர்ந்தான்மன்றே.

(இ - பு.) அப்பொழுது பிரகாசிக்கும் ஒள்ளிய இலிங்கவடிவாயமர்ந்தருளும் சிவபிரானைப்பார்த்துஐம்புலன்களும்ஒருவழியேசேரநிட்டைபுரியும்புனிதராய்முனிவர்கள்தேவர்கள்அனைவரும்அதிசயித்திருந்தனர்நன்மை மலியும் கார்த்திகேயரானமுருகக்கடவுள்நவரத்தினங்களாலிழைத்துள்ள படித்துறைகள்மிக்குவிளங்குமகல்யாணகோடியென்னும் பெயருள்ளபுனிதமான தீர்த்தத்திலாடினர். எ-று. மன். ஓ. அசை. (உஎ)

அக்கரமைந்துநாவாலறைந்துமெய்ப்போதத்தோடுந்
தக்கவெண்ணீற்றின்கோலந்தனிமெய்யின்முழுதுஞ்சாத்திச்
செக்கர்பொன்மேனிச்செவ்வேட்சுராகோனேவலசெய்ய
நக்கனைப்பூசைசெய்தானுகமநவின்றவண்ணம்.

(இ - பு) நாவினாற்றிருவஞ்செழுத்தும் ஓதிஉண்மையான பரஞானத்துடன் தகுதியமைந்த வெள்ளியதிருநீற்றினது அழகு ஒப்பற்றதமதுடன் முற்றுந்தரித்துக் கொண்டு சிவந்தபொன்போன்ற திருமேனியையுடைய முருகக்கடவுள் சுராபதியான இந்திரன்பணிசெய்ய சிவாகமத்திற்கூறியிருக்கின்ற கிரமப்படி சிவபிரானைபபூசைபுரிந்தார். எ-று. (உஅ)

ஆங்கவணிருந்துபூசைவைகலுமாற்றுஞ்செவ்வேள்
பாங்குறுமயனைநோக்கிப்பரமனாலயமுமபத்தி
யோங்கியமாடவீதிநகரமுமுளதாறுகென்னத்
தாங்கியபணியாற்றேவதச்சனப்பணிமேற்சார்ந்தான்.

(இ - பு.) அவ்விடத்திலிருந்து சிவபிரானைப்பூசைபுரியும் சுப்பிரமணியர் மருங்கிருக்கும் மயனைப்பார்த்துச் சிவபிரான் திருவாலயமும் வரிசையாயோங்கிய மாளிகைஅமைந்த வீதிகளையுடையதிருநகரஞ் சமைப்பாயென்று கட்டளையிட அந்தப் பணிவிடையைத் தலைமேற் கொண்டு அத்தேவதச்சனும் திருக்கோயில் முதலிய செய்யப்புகுந்தான். எ-று. (உகூ)

பன்மணிகுயிற்றிக்கோடிபருதியாங்குதித்ததென்ன
நன்மணிவிமானமாதிசிற்பநூலவின்றவண்ணம்
பொன்மணிமதில்சூழாலயப்பொங்கமுற்றும்
மின்மணிச்சிகரியோடுதேவரும்வியப்பச்செய்தான்.

(இ - பு) நவரத்தினங்களழுத்திகோடிசூரியர்கள் அவ்விடத்திலுதயஞ்செய்தனரென்றுசொல்லும்படி நல்லஅழகமைந்ததிருக்கோயில் முதல் பொன்னும் இரத்தினமும் அமைந்ததிருவாலயத்தின் பொலிவினைத்தும் ஒளிவீசும் இரத்தினமயமான கோபுரங்களோடுமே சிற்பசாத்திரங்களிற் கூறியவாறு தேவர்களுங்கண்டு அதிசயிக்கும்படிசமைத்தான். எ-று. (௩௰)

வேறு.

முழுமையும்பொன்முயங்குமனைகளும்
பழுதில்வெள்ளியயிலுமனைகளும
வழுவில்சந்திரகாந்தமனைகளு
மெழுதுசித்திரமேற்றமனைகளும்.

(இ-பு) முற்றும்பொன்மயமாய் விளங்கும் மாளிகைகளும்பழுதற்றவெள்ளிமயமாய் விளங்கும்மாளிகைகளும் குற்றமிகந்தசந்திரகாந்தக் கற்கள்பதித்தமாளிகைகளும் எழுதப்படும் சித்திரமமைந்த மாளிகைகளும் எ-று. (௫௧)

மாதராடுமோங்குமணிகளாற்
காதலாருடன்கூடிடமுநகவின்
சாதரூபத்திறற்சமைத்திட்டனன்
வேதபாரகர்க்கூட்டும்வெளிகளும்.

(இ-பு.) வேதபாராயணிகளுக்குக்காலந்தாழ்க்காது அமுதப்படைக்கும்சத்திரங்களும் மகளிர்கள்பந்துமுதலியன விளையாடுகின்ற இடங்களும் இரத்தினமயமாகவும் காதலரும் காதலிகளும் அன்புடன்கூடும் அந்தரங்கமானஇடங்களும் அழகியபொன்மயமாகவும் நிருமித்தான் எ-று. (௫௨)

அரதனம்பலவும்மணிமேடையும்
விரதமாதவர்மேவுமடங்களும்
பரதமாதிநடனம்பயிற்றிய
சுரதமாதாகளில்லின்றெருகுதியும்.

(இ-பு.) ஒன்பதுவகைஇரத்தினங்களால் அணிபெறச்செய்தவேதிகைகளும விரதம்அநுட்டிக்கும் மகததுவமுள்ள தவசிகள்வாசஞ்செய்யுமடங்களும் பரதம்முதலியநாடகம் பயின்றுள்ளகணிகையாகளதுகூட்டமாகியமனைகளும். எ-று. (௫௩)

காலுலாவுகதிர்மணிவாயிலு
மேலுலாவும்வியன்பொற்சிகரமும்
நீலமாதிநிறைமலர்வாவியு
மாலவாலத்தவிர்மலாமுல்லையும்.

(இ-பு.) வசந்தக்காற்றுவீசுகின்றஒளிவிளங்கும்இரத்தினங்களிழைத்தசாளரங்களும்விண்ணளாவும் விசாலமுள்ளபொன்மயமான செய்குன்றுகளும்நீலோற்பலமுதலிய புட்பங்கள்நிறைந்துவிகசிக்கும் தடாகங்களும்வயலின்கண் அமைத்த பாத்திகளில் ஒளியுடன்மலர்கின்ற முல்லைச் செடிகளும் எ-று. (௫௪)

வார்மையோங்குமறுகுமறுகெலா
நீர்மையோங்கியநித்திலப்பந்தருஞ்
சீர்மையோங்குஞ்செழுமணித்தோரண
மேர்மையோங்குமெழிற்பொற்கொடிகளும்.

(இ - பு.) மிகவும் நீண்டவீதிகளும் அவ்வீதிகள் முழுதுங்குளிர்ச்சிமி குந்தமுத்துக்களா லமைத்தபந்தல்களும் சிறப்புமிகுந்தசெழிய இரத்தி னங்களால் அலங்கரித்த மகாதோரணங்களும அழகோங்கும் வண்ணத்தி னது பொலிவுடைய துவசங்களும. எ-று, (௫௫)

ஆவணங்களுமாவணத்தார்நிழற
காவணங்களுங்காவணப்பொய்கையும்
பூவணங்கள்பொருந்துபுறவமும்
பூவணங்குபொருநதுறச்செய்தனன்.

(இ - பு-) கடைவீதிகளும அவ்வீதிகளில்நிழல்நிறைந்துள்ளபந்தல்க ளும்விதம்விதமான தோப்புகளமைந்ததடாகங்களும் நானாவிதமலர்களபுட் பித்திருக்கும்பூங்காவனங்களும்திருமகளாவசிக்கத்தக்கதாய்ச்சிருட்டித்தான. எ-று. இவ் வாறுபாடலுங்குளகம். (௫௬)

வேறு.

இப்பரிசுபல்வளங்களிலங்கவெழிலாலயமு
மொப்பரியமணிநகருமுளுற்றிமயனாறுமுகற்குச்
செப்பிடநல்லருள்புரிந்துசெவ்வேளாதியர்நோக்கி
மெய்ப்பொருளவாழ்கயிலையினுமேன்மையெனவியந்தனரால்

(இ - பு.) இத்தன்மையாய்ப் பலவளங்களும பிரகாசிக்கும்படி திரு கோயிலும் ஒப்பற்ற அழகமைந்தநகரமுமமைத்துத்தேவதச்சனமுருகக்கட வுளுக்குத்தெரிவிக்க அவன்மீது மிகக்கயை கூர்ந்தமுருகக்கடவுளும் மற்று ள்ளதேவர்களும் தபோதனர்களும் பார்த்து நித்தியபொருளாகும சிவபி ரான் வீற்றிருந்தருளும் திருக்கயிலையினும் சிறப்புற்றிருக்கின்றது இந்நகர மென்று அதிசயமடைந்தார்கள். எ-று, ஆல்-அசை. (௫எ)

மயனமைத்ததனிநகரில்வானவர்கந்தருவர்சித்தர்
நயமுறுவிஞ்சையரிளைபங்கையர்களொடுமடைந்தார்
புயறவழ்தேம்பொழின்மறைசைப்பொன்னகரின்புனிதத்தாற்
கயிலையில்வாழ்சிவகணமுங்கலந்திவண்வந்திருந்தனவால்

(இ - பு) இவ்வாறு தேவதச்சன் நிருமித்த ஒப்பற்ற அச்சுருதிபுரியில் தேவர்களும் கந்தருவர்களும் சித்தர்களும் நயமபொருந்திய வித்தியாதரர் களும் தங்கள்தங்கள் காதலிகளுடன் வந்துசேர்ந்தனர் மேகங்கள் தவழும கணங்கமழும்பூஞ்சோலைகள்சூழ்ந்த அழகுள்ள அச்சுருதிபுரத்தின் மகிமை

யினுற திருக்கயிலேயில்வாழும் சிவகணங்களும்வந்து அவர்களுடன்கலந்து அவ்விடத்தில்வசித்தன. எ-று. ஆல்-அசை. (௩௯)

ஆயபுரத்திடையுறைவோரகமகிழவருந்தவத்தி
னேயமிகுத்தவர்பலருநெடிதுவந்துதுதிசெய்யச்
சேயமலரவன்மாலுந்தேடியுங்காணுச்சோதி
நாயகற்குப்பலவிழாநடத்தியறுமுகன்ருழுதான்.

(இ - பு.) அச்சுருதிபுரியில் வசிக்கும் தேவர்கள்சித்தர்கள் கந்தருவர்கள் வித்தியாதரர்கள் சிவகணங்கள் முதலியயாவரும் மனங்களிகூர அரிய தவங்களைச்செய்ததபோதனர்பலரும மிகவுமகிழ்ந்து துதிசெய்ய செங்கமலவாசனுன பிரமனும் திருமாலும தேடியுங்காணுத சோதிரூபமான சிவபிரானுக்குநித்தியோற்சவம் பட்சோற்சவம் மாதோற்சவம் அயனோற்சவம் வருடோற்சவம் முதலியவைசெய்துவந்தித்துவந்தார்முருகக்கடவுள் எ-று.

பன்னிருதோளவனிந்தப்பரிசுசிலநாளவனுற்
றன்னையுமைபாகன்மலரடியிணைகளருச்சித்து
மன்னுமவ்வேலேயில்வானின்மழையின்றிமானிலத்திற்
றன்னியவாவிகள்கூபத்தொகைளுகம்வறுமைகூர்ந்த.

(இ - பு) பன்னிரண்டு தோள்களையுடைய முருகக்கடவுள் இவ்வண்ணம் சிலநாளத்தலததிலிருந்து அவ்விடத்து எனது அன்னையாராகிய உமையம்மைபாகரானசிவபிரான துசரணங்களிரணடையும் பூசித்திருக்கும் அக்காலததில் மழையில்லாமல் நிலவுலகின்கணநெருங்கியகுளங்கள் ஏரிகள் கிணறுள் இவைகளெல்லாம் நீரவற்றிவறுமையடைந்தன. எ-று. (௪௦)

புரிந்திடும்பூசனைக்குநறம்புனல்காணுதறுமுகனும்
வருந்தியுளமுருகியொன்றும்வகைமாறுகண்டிலனுய்க்
கருந்தடங்கணுமைகேள்வன்கழலிணையிற்பணிந்தெழுந்து
பொருந்துமலர்க்கரங்கூப்பித்துதித்திதனைப்புகன்றனனுல்.

(இ - பு) சிவபிரானுக்குத்தாம்செய்யும பூசனைக்கும் நீரில்லாமல் முருககடவுள் வருந்திமனமுருகி அதற்குச்செய்யும் உபாயம்வேறொன்றுங்காணுமல கருநீலமலர்போல் அகன்றகணகளுடைய பார்வதிசமேதரான சிவபிரானைத் தொழுதெழுந்துநின்று தாமரைமலரைப்போன்ற கரங்களைச்சிரமேற் கூப்பித்தோத்திரஞ்செய்து இதனைச்சொல்லுகின்றார் முருகக்கடவுள். எ-று. ஆல-அசை. (௪௧)

வேறு.

கனலாய்நிலனுய்க்காலாய்வானுய்ப்
புனலாயககாணும்பொருளாயிலனுய்
மனனுற்காணுவடிவாயுயிரி
னினமாய்நின்றுயெனையாளுநியே.

(இ - பு.) நெருப்புருவமாயும் மண்ணுருவமாயும் வாயுவினுருவமாயும் ஆகாயஉருவமாயும்நீருருவமாயும்காட்சிக்குரியபொருளாயும் இல்லாதவனுயும் மனதினுற்காணப்படாத உருவமாயும் சர்வஆன்மக்கூட்டமாகவும் நின்றருளும் இறைவனே என்னை ஆட்கொள்ளவேண்டும். எ-று. ஏ-அசை

தவமாய்ஞானத்தனியாய்வீடாய்ப்
பவமாய்நீயேபதியாயுயிரா
யவமாயறைதற்கவனுயுவனு
யிவனுய்நின்றுயெனையாளுதியே.

(இ - பு.) தவமாகவும் ஒப்பற்றஞானமாகவும் முத்தியாகவும் பாவமாகவும் எவர்க்குந்தேவரீரேபதியாகவும் ஆன்மாக்களாகவும் தவமறறதாகவும் சொல்லுதற்கரிய சுட்டுப்பொருளவாயஅவனுகவும் உவனுகவும இவனுகவும் நின்றருளும் இறைவனே என்னை ஆட்கொள்ளவேண்டும். எ-று ஏ.அசை.

பொன்னுய்ப்பூணுய்ப்பூணன்புளனுய்
மன்னுய்மன்னைவாழ்த்துமபலராய்ச்
சொனனுர்சொலவிறசோராநின்ற
வென்னுயகனேயெனையாளுதியே.

(இ - பு.) பொன்னுகவும அப்பொன்னுலாகிய ஆபரணமாகவும்அவ்வாபரணந்தரித்துக்கொள்ளும்அன்புடையவனுகவும்இறைவனுகவும் அவ்விறைவனைத்துதிககும பலராகவும முன்னம்ஓதியுள்ள ஆத்தாமொழியிற்கரத்துநின்ற என்முதல்வனே என்னையாட்கொள்ளவேண்டும். எ-று ஏ-அசை.

வேறு.

என்றேபலவாய்த்துதியேத்திடலு
நன்றேயிவனன்பெனநாடியரன்
குன்றேயருளகொம்பனையாருடனுன்
கன்றேபுகழ்கின்றதுகாணெனலும.

(இ - பு.) இவ்வண்ணம் பலவாகத்துதி செய்யுட இவனது பேரன்பு மிகலலதென்று சிவபிரானெணணி இமயவரையரையனளித்த மலர்க்கொம்புபொன்ற மருங்குளள் உமாதேவியாருடன் உனதுபுத்திரன் துதிக்கின்றதைப்பாராயென்றுகூறவும் எ-று. ஏ இரணடும்-அசை. (சரு)

பொன்னுரிதலைப்புணர்பூண்முலைமின்
னன்னுளறிவுற்றனளாகியகிழ்ந
தென்னுயகவொல்லையினெய்தியவ
னுன்னுவரமேயுதவென்றிடலும.

(இ - பு.) பொன்போலும் தேமற்படர்ந்த நெருங்கிய முத்தாரந்தாங்குந்தனங்களையுடைய மின்னற்கொடிபோன்ற உமாதேவியார அறிந்து

கொண்டவளாய் மகிழ்வுற்று எனதிறைவனே அதிவிரைவிற்சென்று அம்முருகன்நினைத்தலாயவரதத்தைத்தாதருளென்றுகூறவும்,எ-று ஏ-அசை. ()

மறிமானணிகைத்தலனுகிமதி
வெறிவார்சடைமீதுவிளங்குறவே
பொறியாரரவப்பணிபூண்டனுற்
றறிவாரறிவிற்றெறியும்மமலன்.

(இ - பு.) மறியென்னும் பெயருடைய மானணிந்த திருக்கரத்தோமெ இளம்பிறைவாசனைகமழும் நீண்டசடையின்கண்பிரகாசிககப்படப் பொறிகளமைந்தபாம்பணிதரித்தவராய்ததன்னைமெய்யறிவாலுணருவோர்க்கு அவ்வறிவில்விளங்கும் சிவபிரான். எ-று. ஏ-அசை. (௪௭)

உலகைத்தருமன்னையுடன்விடைமே
லிலகிக்கமலத்திறையேமுதலா
மலகிற்புலவோர்துதியணபிஞேடுஞ்
சொலமுக்கணாவந்தெதிரேதோன்றினரால்.

(இ - பு.) நிலவுலகின்கணுள்ள ஆன்மவாககங்களை ஈன்றருளியஉமாதேவியாருடன் இடபவாகனத்தின்மீதுவிளங்கிப் பிரமன்முதலாக அளவிறந்ததேவர்கள் உள்ளன்போடு தோத்திரஞ்செய்ய மூன்றுநேத்திரங்களையுடைய சிவபிரான் முருககடவுட்கெதிரில் காட்சியருளினா. எ - று. ஏ, ஆல்-அசை. (௪௮)

வந்தாரைவணங்கிமகிழ்ந்துகுகன்
சிந்தாகுலமாறுதலசெப்பலெனே
தந்தாய்தருதந்தையெதிர்ப்படுனுய்
சிநதாதொருசிற்றடியுண்டுகொலோ.

(இ - பு) இவ்வாறு எழுந்தருளிவந்த சிவபிரானைத்தொழுது களிகூர்ந்து முருகக்கடவுள் சிந்தைததுயரம் தீர்ந்ததென்று சொலலவேணடியதென்னை ஏனெனில் தன்னை ஈன்றருளிய தாய்தந்தையரைக்கண்கூடாககக்கண்டவிடத்துததன்பந்திராதஒருகுழந்தையும்பூலோகத்திலுண்டோ இல்லை ஆகையால். எ-று. ஒ - அசை. (௪௯)

## வேறு.

பரவுமைந்தனைக்கருணையாமபனிப்புனலாட்டி
விரவுபங்கயககரங்களான்மெய்யெலாநதடவி
நிரவுபன்மணியாதனத்திருத்திநெஞ்சுவந்தே
யரவணிந்திடுமையனீதுரைத்தனனன்றே.

(இ - பு.) இவ்வாறுவணங்கி எதிர்நின்ற முருகக்கடவுளை அருளென்னும் குளிர்ந்தநீரால் முழுதுநனைத்துக்கலந்த தாமரைமலர்போன்ற திருக்கரங்

களால் திருமேனிமுழுதுந்தடவி வரிசையமைந்த பலமணிகள் அழுத்திய சிங்காதனத்தில் எழுந்தருளுவித்து மணங்களிகூர்ந்து சர்ப்பாபரணமணிந்த சிவபிரான் இவ்வாறுகூறினன். எ - று. ஏ, அன்று, ஏ-அசை. (ருo)

பகருமாகமநூன் முறைபழுதிலாவண்பி
னிகரில்பூசனை புரிதலினின்னையார்நிகர்ப்பார்
புகரின்மைந்தநீபுந்தியிலோர்ந்திடும்பொருளைப்
பகர்தியென்றலுமீதெடுத்துரைத்தனன்பரிந்தே.

(இ - பு.) நம்மால்விதித்தசிவாகமநூல்விதிப்படி குறைவுபடாதஉன்னன்போடு ஒப்பற்றபூசைசெய்வதில உன்னையொப்பவாயாவா குற்றமற்ற புத்திரனே நீ உன்மனதில்நினைத்த வரத்தைச் சொல்லுவாயென்றவுடன் பேரன்போடு இதனைஎடுத்துக்கூறினா முருகககடவுள். எ-று. ஏ-அசை.

வானிருந்துவநதுய்விக்குமாற்றினல்மழையைப்
பூநிலத்திறுக்கமுதெனபபுகல்வதேபுலமை
கானிருநதலர்கடுக்கையங்கடவுளேதமியேன்
றனிருந்திடுந்தலத்திலேன்வறுமையைத்தந்தாய்.

(இ - பு.) ஆகாயத்தின்கணிருந்து நிலவுலகத்திற்குவந்து இங்குள்ள சராசரங்களைப்பிழைப்பிக்கும் தன்மையினுல்மழையை இந்நிலவுலகத்திற்கு அமுதமொத்தது என்றசொல்வதே தெளிவாகும அப்படியிருக்க வாசனையோடுவிகசிக்குங் கொன்றைமாலைதரித்த சிவபிரானே அடியேனிருக்கும் இச்சுருதிபுரியில்மாத்திரமவன் புனல்வறுமையைககொடுத்தாய். எ - று. தான் - அசை. (ருஉ)

உன்னைப்பூசனைபுரியவுமுதகமில்லவனு
யின்னல்கொண்டனனென்றுயர்தீர்த்தியென்றிறைஞ்ச
மின்னைப்பாதிபொன்மேனியில்வைத்திடும்விமல
னன்னபாலகன்றனக்கருள்செயத்துணிந்தனனால்.

(இ - பு.) உனக்கபிடேகிக்கவும் நீரின்றித்துன்பமடைந்தேன் ஆகையால் எனதுதுயரத்தைத தீர்த்தருள்வாயென்று துதிக்கமின்போலும் உமாதேவியாரைத்தனது பொனபோலும் திருமேனியின் இடப்பாதியில் வைத்தருளும் சிவபிரான் இவ்வாறுகூறியமுருகககடவுளுக்குக்கிருபைகூரத்தொடங்கினர். எ - று. ஆல் - அசை. (ருங)

பாங்குவைகியபான்மொழியுமைமுகம்பார்ப்ப
வாங்கவட்டிறலாரும்வைவேலினையளிப்பக்
கோங்கலர்ப்பசுங்கொன்றையங்கடவுள்கைக்கொண்டே
யீங்கிதன்செயல்கேளெனக்காதலற்கிசைத்தான்.

(இ - பு.) சிவபிரான் தனது இடப்பாகத்தில்வீற்றிருக்கும் பால்போலும் இனியமொழியையுடைய உமாதேவியின் திருமுகத்தைநோகக அவ்

குமாரதேவியார் வன்மைபொருந்திய கூரியவேலாயுதத்தைக்கொடுக்க அரும்புகளுடன் விகசிக்குங் கொன்றைமலாமாலையணிந்த அச்சிவபிரான் அதனைத்திருக்காத்தாலேற்று இவ்வேலின் மகத்துவத்தைக்கேளென்று முருகக்கடவுளுக்குச் சொல்லுகின்றார். எ-று ஆங்கு-ஈங்கு, ஏ-அசை. (௫௪)

மேருவாயினுங்கிசையுறுமலேதலண்டமெனினு
மூருகேமியமபூதரமெனனினுமுலையா
வீரமேயுறுமண்டத்தின்விழுச்சுவரெனினுந்
தீருமேயிதுவிடுதிடிற்றிண்வலிசிதைதரதே.

(இ - ள்) மேருமலையானாலும் அட்டகுலபருவதங்களானாலும் நிலத்தைச்சூழ்ந்திருக்கும் சக்கிரவாளகிரியானாலும் கெடார்தவன்மையுள்ள அண்டங்களின்மேலான சுவர்களானாலும் இவ்வேலாயுதத்தை விடுவோயானால் அவற்றின் மிக்கவலிமைஅழிந்து பொடிப்பொடியாய்ப்போம். எ-று. (௫௫) ஏ, இரண்டும் - அசை.

ஈதுகொள்ளுதியசுரர்தங்களுக்கிடியேறும
பூதலத்தையிவ்வேலினற்கண்டிடிற்புனித
வேதமில்லதோர்கங்கையுந்தோன்றுவளிந்தக்
கோதிலுத்தமதலத்தினைக்கொணாதியெனவுரைத்து.

(இ - ள்.) இவ்வேலைக்கரத்திற்றாங்கிக்கொள் இது அவுணர்களாகிய சர்ப்பங்களுக்கு இடியேறுபோன்றது மேலும்பூமியை இவ்வேலாற்குத்தினாற் பரிசுத்தமானதும் குற்றமற்றதுமான ஒப்பற்றகங்கையுதிக்கும் அகங்கையைப்பழுதற்ற இச்சுருதிபுரியினிடத்துக்கொண்டு வாககடவாயென்றுரைத்தருளி. எ - று. (௫௬)

ஆடனமிருதத்திடுமவேலினையளித்தலுமமரர்
கடலினார்த்தனர்சொரிந்தனாகற்பகநறும்பூ
விடையில்வானகதுந்துபியெங்கணுமதிர்ந்த
படருமாதவர்யோகியர்சயமுறைபகர்ந்தார்.

(இ - ள்) வன்மைமிக்க வேலைக்கொடுத்தவுடன் தேவர்கள்கடன் முழக்கம்போல் ஆரவாரித்தவர்களாய்க் கற்பகமலர்மாரிபெய்தார்கள் இதன் மத்தியில் தேவதுந்துபியெங்கும் முழங்கின அவ்விடத்துக்கூடிய மகாதவசிகளும் யோகிகளும் சயசயவென்று ஆசிகூறினார்கள். எ-று. (௫௭)

## வேறு.

புண்ணியந்தருமஞானம்பொறைநிறைமெய்மைவேதம்
விண்ணவர்முனிவரெல்லாம்விளங்கினமகிழ்வுமேவி
நண்ணியபவங்கள்தீமைநவைகள்பொய்மாயவஞ்சந்
திண்ணுறுமரக்கர்தீயர்சிறுத்தனர்தீய்ந்துபோந்தார்.

(இ-பு.) புண்ணியங்களும் தருமங்களும் ஞானமும் பொறுமையும் திருத்தியும் உண்மையும் வேதமும் தேவகணங்களும் முனிகணங்களும் இவைகளெல்லாம் மகிழ்கூர்ந்துவிளக்கமடைந்தன இந்நிலவுலகத்தடைந்த பாவங்களும்கெடுதியானகுற்றங்களும் பொய்யும்மாயமாகியவஞ்சனைகளும் வன்மையும் பொருந்திய அவுணர்களாகிய புன்மாக்கள் இறந்தவர்களாய் அழிந்துவிட்டார்கள். எ-று. (௫௮)

விடமுறு கண்டத்தெந்தைவிரும்பியிவ்வேலுமீந்தே
யடன்மிகப்பெறுதிநீயென்றரியநல்வரமுந்தந்து
மடவரலோடுநின்றவானவர்முனிவர்காணக்
கடலமுதனையவெங்கடிதையிலிங்கத்திறைகரந்தானன்றே.

(இ-பு.) விடந்தங்குங் கண்டத்தையுடைய எமதுதந்தையாராகிய சிவபிரான் விருப்பத்துடன் இவ்வேலையுந்தந்து மிகவன்மையை நீ அடைவாயென்று அருமையாகிய நல்லவரத்தையுங்கொடுத்து உமாதேவியாரோடும் தம்மெதிர்நின்ற தேவர்களும் முனிவர்களும் காணும்படி பாற்கடலின் கண்ணுதித்த அமுதம்போன்ற அச்சிவபிரான் சிவலிங்கத்தில் மறைந்தருளினார். எ-று. அன்று-ஏ-அசை. (௫௯)

வானவர்முனிவர்வந்துவணங்கவேல்கரத்திலேந்திக்
தேனலர்கடப்பமாலையணிந்தையன்பெய்தியிந்த
மாநிலகத்திழுத்தியுள்ளமகிழ்வுறச்சென்றுமேல்பாற்
றொருகுரோசமேவியங்கொருபரனைத்தாழ்ந்து.

(இ-பு.) தேவர்களும் முனிவர்களும்வந்துவணங்கும்படிவேற்படையைத்திருக்கரத்திலேந்தித்தேன்றுளிக்குங் கடப்பமலர்மாலையணிந்த மார்பினையுடைய முருகக்கடவுள் இதயத்தினிடத்துப் பேரன்புற்று இந்நிலவுலகத்திற்குரியபூதேவிமனமகிழும்படி போய்மேற்றிசையில் ஒருகுரோசதூரத்தில் அடைந்து அவ்விடத்தோர் சிவலிங்கப்பெருமானைத்தாபித்துப் பணிந்து. எ-று, தான்-அசை. (௬௦)

உம்பரின்சிகரிமேவுமுயர்நந்திவரையின்சாரற்
கம்பினும்வேகத்தெய்தியாங்குநின்றயிலவேல்வாங்கி
வம்பணியலங்கற்றோளான்மாநிலத்தூன்றலோடு
மம்பரத்துருவாய்வானமளவுறக்கங்கைநின்றாள்.

(இ-பு.) உயர்வாகிய முடிகளையுடைய சிறந்தநந்திமலைச்சாரற்கு அம்புசெல்லும் வேகத்தினும் அதிவேகமாகச்சென்று அவ்விடத்துநின்று கூரியவேலாயுதத்தைஎடுத்துவாசனைகமழும்கடப்பமலர்மாலையணிந்ததிருப்புயங்களுள்ள முருகக்கடவுள் நிலத்தில் ஊன்றியவுடன் கடல்போற்பிரவாகித்து ஆகாயமளவுமோங்கிக் கங்காதேவி எதிர்நின்றாள். எ-று. இவ்விரண்டும், குளகம். (௬௧)

நோக்கியகுமரனன்பாற்றுதிபலநுவன்றேயெந்தாய்
மாக்கடலளவுங்கீழ்பால்வருதியென்றிசைத்தலோடும்
பூக்குழற்கங்கைசொற்றபுதல்வனையினிதினோக்கி
நீக்கருமகிழ்ச்சிபொங்கியின்னதுநிகழ்த்துகின்றாள்.

(இ - பு) அவ்வாறுகங்கைநின்றதைக்கண்ட முருகக்கடவுள் மெய்யன்பாற்றுதிசெய்பவராய்ப்பலவாறு துதித்து எனதுதாயேகீழ்த்திசையின்வழியாகபெரியகடல்வரையும்பிரவாகித்துவரவேண்டும்என்றுகூறியவுடன்மலர்தரித்த அளகத்தையுடைய கங்கையானவள்அவ்வாறுகூறியதனதுபுத்திரராகிய முருகக்கடவுளை அன்புடன்பார்த்துஎக்காலத்தும்நீங்கரியமனமகிழ்மீக்கூர்ந்து இவ்வாறுசொல்லுகின்றாள், எ-று. எ-அ. (௬௨)

மைந்தகானுந்தைசெய்யவார்சடைவதிந்துநின்றே
னந்நான்முகன்மால்காணுவரன்பணியன்றியெய்தற்
கெந்தனுவிலையென்றோதவெறும்வலிக்குமரன்கேட்டுச்
சிந்தையாலினைந்துதேவதேவனைவணக்கஞ்செய்தான.

(இ - பு.) புத்திரனே நான்உனதுதந்தையாகிய சிவபிரானது சிவந்தநீட்சியுள்ள சடாடவியின்கண் வசித்திருக்கின்றேனாதலால் பிரமன் திருமால் இவர்களாற்காண்டற்கரிய அச்சிவபிரான் கட்டளையில்லாமல் இவ்விடத்துவருதற்கு என்னால் ஏலாதென்றுகூற மிகுத்தவன்மையையுடைய முருகக்கடவுள் கேட்டுத்தமதுதிருவுளத்தில் இவ்வண்ணம் நினைந்து தேவர்கட்கெல்லாந்தேவராகிய சிவபிரானைவணங்கினார். எ-று. (௬௩)

அன்னவேலையின்மால்வேதனடிமுடிதேடிக்காணு
முன்னவன்முன்னமாசமுருகவேளிறைஞ்சிக்கங்கை
பன்னியமாற்றமோதபபரன்மணிமுறுவலபூத்துத
தன்னியம்சடைநீர்தன்னிற்றலையிலோர்திவலைவீழ்த்தான்.

(இ பு) அத்தருணத்துத் திருமாலும்பிரமனும்முறையே அடிமுடிதேடிக்காணாத ஆதிவத்துவாகிய சிவபிரான் எதிரேதோன்ற முருகக்கடவுள் வணங்கிக்கங்கைமொழிந்த சொற்களைக்கூறச் சிவபிரான் அழகியபுன்முறுவல்செய்து தனதிலக்கணமமைந்த சடையின்கணுள்ள கங்கைநீரில் ஒருதுளிநிலத்தில்விட்டார். எ - று. (௬௪)

சிந்தியதிவலைக்கங்கைசேணளவுயர்ந்துபார்மேற்
கந்தவேள்வேலாற்கீறிக்காட்டியவிடத்தில்வானத்
திந்திரன்முதலோரேத்தவிருடியர்முனிவர்போற்றக்
கொந்தலர்கொன்றைமோதுங்குலவவேகத்தோடெய்த,

(இ - பு.) அவ்வாறுசிவபிரானால் விடுத்ததளியாகியகங்கை ஆகாய வரையுயர்ந்த பூமிமீதுமுருகக்கடவுள் தனதுவேலாற்கிழித்துக் காட்டிய விடத்தில் தேவலோகத்து இந்திரன் முதலியதேவர்கள் துதிக்கஇருடியரும் முனிவரும்வணக்கத்தொடு துதிக்கவிகசித்தகொன்றைமலராசங்கமழ அதிவிரைவாய்வர.எ - று. (கூரு)

சைவலமளகங்காட்டத்தாமரைவதனங்காட்டக்
கைவிரலபவளங்காட்டக்கயிரவஞ்செவ்வாய்காட்ட
மைவிழிகயின்சேல்காட்டவாகவென்முலையைக்காட்டத்
தைவருநதிரைக்கைவீசிசசான்மலிவருகின்றாளால்.

(இ - பு.) வேலம்பாசிகள் அளகபாரம்போல்விளங்க தாமரையலர் முகம்போலவிளங்க பவளங்கள்கையின் விரல்கள்போல்விளங்க செவ்வல் லிமலா சிவந்தவாய்போல்விளங்க அழகியசேறகெண்டைகள் மைதீட்டிய விழிகள்போல்விளங்க சக்கிரவாகப்பறவைகள்மிருதுவானதனங்கள்போ ல்விளங்க தாவிச்செல்லும் அலைகளாகியகைகளைவீசிக்கொண்டு கங்காதேவி வருகின்றாள். எ-று. ஆல்-அசை. இவ்விரண்டும் குளகம். (கூகூ)

வரைநிகர்பேனம்வையக்குவால்களும்வனத்திநரக
நிரைகளுந்திரையென்றோதுகிகரின்மாக்குலமுந்துள்ளும்
புரையில்பன்மீனின்சங்கம்பொருபடைக்கலமுமாகி
விரவுறுண்டிவலைப்பூழிமேலெழுச்சேனைபோன்ற.

(இ - பு.) மலைபோல் உயர்ந்தோங்கும் நுரைகளாகிய தேர்க்கூட் டங்களும் காட்டானைகளின்வரிசைகளும அலைகளென்றுசொல்லும ஒப்ப ற்ற குதிரைககூட்டங்களும்துள்ளிக்கொண்டிருக்கும் மறுவற்றபலமச்சக்கூ ட்டங்களாகிய யுத்தத்திற்குரிய ஆயுதங்களு முடைத்தாகிக் கலந்திருக்கும் நுண்ணியதுளிகளாகிய தூசுகளமேற்பரக்கும்படி கங்கைவருகின்றதோற் றம்போருக்குச்சேனைப் பெருக்கம வருவதுபோன்றிருந்தது. எ-று (கூஎ)

வேறு.

ஆறுகங்கையணைலைப்பரவிமூ
வாறுகங்கையணைலைப்பரவிமூ
தூறுகங்கையதென்றுவநதுற்றதே
தூறுகங்கையதென்றுவநதுறறதே

(இ - பு.) அந்நதியானது கரைப்பக்கத்தைப்பொருந்திய அலைகளைப் பரவச்செய்து சிரங்களாறும் திருக்கரங்கள் பனிரண்டுமுடையமுருகக்கட வுளைவணங்கிப்பழமையாகச் சிவபிரான் சடாடவியில் வாழுகின்றகங்கையி ன் சம்பந்தமுள்ளதென்றெண்ணிந்தன்னிடத்து வந்தடைந்த எப்பொருளை

யும் இடையூறறப்புரிந்து முத்திவனட்பைக்கையிலாமலகம் போற்றருவதெ ன்றயாவருக்குந்திக்க அச்சுருதிபுரியின்கண் அடைந்தது எ-று. ஏ அசை.

சந்தங்கோங்கணியாரத்தருக்கொடு
சந்தங்கோங்கணியாரத்தருக்கொடு
வந்தவானந்தமருங்கடலையு
வந்தவானந்தமருங்கடலையும்.

(இ - பு.) சந்தனம கோங்கு நெருங்கும் ஆத்திமுதலிய தருக்களைக் கொண்டு அழகைமந்தோங்கும்சிறப்பாகிய அச்செருக்கினால்வந்து ஒப்பற்ற வெளியசங்கங்கள் தங்கிய கடிய அலையோடுவிரவி அந்த மேலான கங்கை அக்கடலையுஞ் சந்திக்கச்செய்யும எ-று. (சுகூ)

ஓடுநீரரவத்தொடுமொல்லெனி
யோடுநீரரவத்தையுமொண்கணா
லாடுமாதாகளஞ்சிவழிக்கொள
வாடுமாதர்களஞ்சிவழிக்கொளும்.

(இ-பு) ஓடிவரும்கங்கைநீரின் சத்தத்துடன் அதிவிரைவாய் ஓடும் நீர்ப்பாம்பையும் ஒள்ளியதமதுகண்களால் கண்டுநீராடவந்த மகளிர்கள்பய ந்து வந்தவழியேதிரும்பப்பக்கங்களில் அசைந்து கொண்டிருக்கும் பூம்புதல் களைக்களைந்துகொண்டுசெல்லும் அப்பிரவாகம். எ - று. (எo)

பூவிருக்கங்களொடும்பொருவியே
பூவிருக்கங்களொடும்பொருவியே
தாவிருக்குந்தனிமைச்சலஞ்சலன்
தாவிருக்குந்தனிமைச்சலஞ்சலம்.

(இ - பு) மலர்களிடத்துள்ள தேனுடுகலந்து அழகிய விருட்சங் களடியிற் பொருந்திப்பள்ளமுள்ள இடங்கடோறும் ஒப்பற்றமேகநீர்செல் லுங்கால்வழியில் தனித்தனியாகவலம்புரிச்சங்கங்கள் இருக்கும். எ - று. அம்-ஏ. அசை. (எக)

அணையின்மீவிலங்கல்கவெழும்படி
அணையின்மீவிலங்கல்கடிதார்ந்துபோய்
பணையினமுத்தும்பணிலமுமாக்கமும்
பணையின்முத்தும்பணிலமுமாக்குமே.

(இ - பு.) இக்நதியிலுள்ள விலாங்குமீன்கள் தெய்வகங்கையுடன் கூடியதுஆயம்சமீபிக்கும் அழகினால் அக்கங்கையில்வசிப்பதற்குத்தாவும்படி

கரையின்மீதுசலங்கியநீரானது அதிவேகமாய் இரைந்துசென்றவயல்கள் முழுதும்பண்புள்ள நீலோற்பலங்களும் பொன்களும் மூங்கிலிற்பிறந்த முத்துககளும் சங்குகளும் பரவச்செய்யும் எ- ஏ-அசை. (எ௨)

வேறு.

இத்திறத்தின்கங்கைகுகனெய்தியபினங்கெய்திச்
சித்திதருஞ்சிவதலததிற்சேர்ந்துபுவியோர்துதிப்ப
வத்தன்மணியாலயததினருகாகத்தென்புறததே
பததிமணிமாடநகர்ப்பாங்கெய்திக்கடலடைநத.

(இ - பு.) இவ்விதமாகக்கங்கையானது முருகக்கடவுளடைந்தபின் னரடைந்து தன்னிடத தடைந்தவர்க்குச் சருவசித்தியுந் தரத்தக்க சிவ தலமாகிய சுருதிபுரததுற்று நிலவுலகத்தாா துதிக்கச் சிவபிரானது அழகிய திருககோயிலின் சமீபத்துததெனபாரிசமாயவரிசையாக இரத்தினமயமா னமாடங்கணிறைந்த அச்சுருதிபுரத்தின்பக்கத்தடைந்து கட லிற்சோந்தது.

கங்கைவரும்பெருநீத்தங்கால்பரந்துமறைசைநக
ரெங்கணுநீர்க்குறைவகற்றியிணையிலெழிற்சுருதிபுரத்
தங்கணலர்வாவிதடமகனேடைபலநிறைந்து
கொங்கலர்தண்பணைநிலத்துங்குடிமாறுதிருந்தனவால்.

(இ - பு.) கங்கையினின்றுவந்த பெருவெள்ளங்கால்களாகப்பரவிச் சுருதிபுரமெனகனும் நீர்சகுறைவைநீக்கி ஒப்பற்ற அழகுவாய்ந்த அம்மறை சைநகரத்துள்ள விசாலமாகப்பிரகாசிக்கும் கிணறுகளும் தடாகங்களும் பெரியஓடைகளும் பலவாகநிறைந்து வாசனைகமழுங் குளிர்ந்தகழனிவெளி களிலும அக்கங்கைநீங்காதிருந்தது. எ-று. ஆல-அசை. (எ௩)

கண்ணுதல்வேணியில்வதிந்தகங்கைநன்னீராதலினல்
விண்ணவர்மாதவர்முனிவர்விரும்பியினந்தோய்குவரிம்
மண்ணுலகத்தவர்குடைந்துவரும்பிரமகத்திமுத
னண்ணுறமும்மலவிருளைநாசமுறச்செய்குவரால்.

(இ -.பு.) நெற்றிக்கண்ணராகிய சிவபிரான் சடாடவியில் வசித்த கங்கையாகிய நல்லதீர்த்த மாதலால் தேவர்கள் மகாதவசிகள் முனிவர்கள் விருப்பத்துடன் இன்னுப்நீராடுகின்றார்கள் இந்நிலவுலகத்தவர்களும் அதில் நீராடித்தங்களுக்கு சேரும்பிரமகத்திமுதலாக இயற்கையிற்பொருந்தும் ஆ ணவம் காமியம் மாயையென்னும் மூன்றுமலமயக்கங்களையும் நாசம் அடை யச்செய்வார்கள். எ று. ஆல்-அசை. (எ௪)

கந்தவேள்கொணர்ந்தமையாற்காசினியிலந்நதியைக்
கந்தநதியென்றுரைப்பர்கையாற்பூநிலங்கீண்டு
வந்ததனாற்பாகுநதியென்றுமதைவழுத்துவர்க
ளந்நதிக்கிணைதேரிலவனியிலோர்நதியிலையால்.

(இ - பு.) முருகக்கடவுள் கொண்டு வந்ததனாற் பூவுலகத்தில் அந்நநதியைக்கந்த நதியென்று கூறுவர்கள் மேலும் அம்முருகக்கடவுள் தமது திருக்கரத்தினால் வேலைக்கொண்டு நிலத்தைக்கீற அதில வந்தகாரணத்தால் பாகுநதியென்றும அந்நதியைக் கூறுவார்கள் அந்நதிக்கு ஒப்புத்தேடில் இந்நிலவுலகத்தில் வேறோர்நதியிலலை. எ-று. ஆல்-அசை. (௭௬)

அன்னநதிப்புனல்கொடுவேளரனையருச்சனைபுரிய
முன்னவனல்லன்பெய்திமுருகனுக்கிதுரைத்தனனா
லிந்நகரினீங்காமலிருந்துபுவித்துயர்நீக்கி [ல்.
மன்னுதியென்றலுஞ்செவ்வேண்மகிழ்ந்துமனமிசைந்தனனா

(இ - பு.) அத்தகையநதியின் நீரைக்கொண்டு முருகக்கடவுள் சிவபிரானைப்பூசிக்க அச்சிவபிரான் பேரன்புற்று அம்முருகக்கடவுளுக்கு இவ்வாறுரைத்தனர் இந்நகரத்தின்கண் இடைவிடாமல் வசித்து உலகத்துன்பத்தைப்போக்கி நிலைபெற்றிருப்பாய் என்றுகட்டளையிட்டவுடன் முருகக்கடவுள் மனமகிழ்ந்து அதற்குடன்பட்டனா. எ-று. ஆல்இரண்டும்-அசை.

அப்பரிசேயாலயத்துக்கம்பெய்துந்தூரத்திற்
செப்பருந்தென்கீழ்த்திசையிற்றேவதச்சனாற்செய்த
வொப்பரியகோயிறனிலுலகேத்தத்தந்தைதனை
யெப்பொழுதுநோக்கியவணிருந்தனன்செவ்வேண்மன்னோ.

(இ-பு.) அவ்வண்ணமே திருக்கோயிலுக்கமபு செல்லுந்தூரத்தில்சொல்லுதற்கரிய தென்கீழ்த்திசையில் தேவதச்சனால் நிருமித்த ஒப்பற்றதிருக்கோயிலில் உலகமுழுதுந்துதிக்கத் தந்தையாகிய சிவபிரானைச் சதாதரிசித்துக்கொண்டுஅவ்விடத்திருந்தார் முருகக்கடவுள். எ-று. மன்-ஓ-அசை.

ஆறுமுகன்சத்திபெற்றசருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ... ௧௧௬.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வீரநடனச்சருக்கம்.

ஐயநின்சொலமுதமுண்டுய்ந்தன
மெய்யன்வேதமவியப்பாடித்ததைத்
துய்யசொல்லுதியெனறலுஞ்சூதனப்
பொய்யிலாமாதவர்கேட்கப்புகலுவான்.

(இ-பு.) நைமிசாரணிய முனிவர் சூதமுனிவரைப்பார்த்து அழகி யநுமதுசொல்லாகிய அமுதத்தைச் செவிவாயால் மடுத்துய்ந்தனமமெய்ய ஞன சிவபிரான் வேதங்கள்கண்டு அதிசயமடையவீரநடனம் புரிந்த சரி த்திரத்தைப்பரிசுத்தரே சொல்ல வேண்டுமென்றுகேட்கச்சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர். எ-று. (௧)

போதின்மீதுறைபுங்கவனைத்துதித்
தேதமேதுமிலாமறையென்பன
காதலாயெங்கருத்துறுகின்றது
நாதகேளென்றிதனைநவிற்றுமால்.

(இ-பு.) கமலவாசனாகிய பிரமனைத்துதி செய்து சிறிதுங்குற்றமில் லாதவேதங்கள் எங்கள்மனதில் ஆசையாயிருக்கப்பட்டது ஒன்றுண்டு அதைச்சொல்லு கின்றனம் கேளுமையா வென்று சொல்லு கின்றன. எ-று, ஆல்-அசை. (௨)

ஈசனார்நடனத்தொழிலைக்குறு
மாசையாயினதுள்ளமதற்கியல்
வாசமாமலர்நாதவழுத்தெனப்
பேசவிதுபிரமனிலசப்பனால்.

(இ-பு.) சிவபிரான்புரிந்தருளும் வீரநடனம்தரிசிக்க வேண்டுமெ ன்று மனம் ஆசைகூர்ந்தன அதற்கிசையும்படிமணமுள்ள தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனே சொல்வாயென்று வேதங்கேட்கப் பிரமன் சொ ல்லுகின்றனன். எ-று, ஆல்-அசை. (௩)

உங்கருத்தெமக்குமுளதுத்தம
வெங்கருததுமுடிந்திலதின்னமும்
பொன்கருத்துறுபூவைநிறததவன்
றன்கருத்தையுஞ்சார்ந்தறிவோமென்றான்.

(இ-பு.) வேதங்களைப்பார்த்துப்பிரமன் உமதுமனவிருப்பம்போல் எமதுளளத்திலும் சிவபிரான் வீரநடனம்தரிசிக்க வேண்டுமென்றிருக்கின்றது அக்கருத்து இன்னம்முடியவில்லை ஆனாலும் இலக்குமி இதயத்தில்வசிக்கும் பூவைவண்ணனான திருமாலின் மனதையும் போயறிவோ மென்றான் எ-று. (௪)

வேறு.

மறையுடன்றிருமாலிடத்தெய்தியேமறையோ
னறையலுற்றனனாதியெஞ்சிவன்றனிநடனங்
குறைவறததரிசித்திடவிருப்பினைமீககொண்
டிறைவகாரணம்வநதனவுபாயமேதென்றான்.

(இ-பு.- வேதங்களுடன்திருமாலிடத்துககுப்போய்ப்பிரமன் கூறுகின்றனன் முதல்வனாகிய எமதுசிவபிரானுடைய வீரநடனம் தவறின்றிந தரிசிக்கவேண்டுமென்று வேதம்மிகவும ஆசைகொணடுவந்தன எனதுதந்தையே அதற்குஎன்னஉபாயம் விளம்புமென்றான். எ-று, ஏ-அசை. (௫)

கூறுமப்பொழுதரியிளைவியம்புமென்கொன்றை
யேறும்பொறசடையிறையவனடித்திடுமெல்லை
மாறுபட்டுவான்புவிதலைமயக்குறுமதனாற்
றேறுகிறபரியார்வீரமாநடநதரிசிததே.

இ-பு இப்படிபிரமன் சொல்லுங்கால் திருமால்சொல்லுகின்றனர் மெல்லிய கொன்றைமாலையணிந்த அழகியசடையையுடைய சிவபிரான் வீரநடனம்செய்கின்றபொழுது விண்ணுலகும்மண்ணுலகும் ஒன்றுககொன்றுமாறுபட்டு தலைமயஙகிடபோம் அதனால அநதவீரநடனததைத்தரிசனஞ்செய்து தெளியவலலவர் யாவர் என்று சொன்னா.எ-று. (௬)

ஆயவாற்றினாலரனருளில்லவர்க்கந்த
மாயகாட்டியங்காணுதற்கரிதெனவயூங்கித்
தூயமாலினஞ்சொறறனன்பிரமவுஞ்சொற்கு
பாயம்வேறுளததுவலாலவேறிலைபார்க்கில.

(இ-பு.) ஆனபடியாற் சிவபிரான் திருவருளில்லாதவர்க்கு அறிதற்கரியஅந்த வீரநடனம் தரிசிப்பதற்கு அரியதென்று கூறிப்புனிதனான திருமால் பிரமனே உன்சொற்படி வேதம் அந்த வீரநடனந் தரிசனஞ்செய்ய வேண்டுமென்றால் அதற்குவேறு உபாயமொன்றுளது அதுவல்லாமல் வேறொன்றுமில்லை எணணிப்பார்க்குமிடத்திலென்றுசொன்னார்.எ-று.

ஏதெனிற்புவியிடத்திலோர்தலமுளதிறைவன்
காதலித்தவனுறைவதுகருத்தியைந்தன்பி
னாதனைத்தொழிறொழுதலையினனுறுநளினப்
போதினுத்தமவின்னமுங்கேளதன்புனிதம.

(இ-பு.) அந்தஉபாயம் என்னவென்றால பூமியிலொருதலமுண்டு அத்தலஞ்சிவபிரானுமையுடன் வாசம்பண்ணுகின்றது அத்தலத்திற்சென்று மனதொருமித்து அன்பினால சிவபிரானைப பூசைபுரிந்தாலவிரைவிலெழுந்தருளிவந்து நடனதரிசனங் கொடுப்பார் தாமரைமலர் வாசனான பிரமனே இன்னமுங் கேளந்தத் தலத்தினுடைய மகிமையையென்று திருமால்சொல்லுகின்றார். எ-று. (அ)

அத்தலத்திலோரன்பருக்கொருபிடியன்னம்
பத்தியிற்றரிலயமகம்புரிந்ததுமேபலிக்கு
முத்தமகருகநதியிலோர்காற்படிந்தவர்க்குச்
சுத்தகங்கையிலயனமாடியபலன்றருமால்.

(இ-பு.) அந்தத்தலத்தில ஒருஅடியாருக்கு ஒருபிடிஅன்னம் பத்தியுடன இடுவார்களுக்கு அசுவமேதயாகஞ் செய்தபலன் சித்திக்கும் அன்றியுமத்தலத்திலுள்ளசேய்நதியிலொருதடவை நீராடினாற் கங்காநதியிலாறுமாதம நீராடினபலன் சித்திக்கும். எ-று. ஏ-ஆல்-அசை. (கூ)

மகமொன்றத்தலத்தியற்றிடின்வானரசெய்தும்
பகருமாலயஞ்சூழ்ந்தரன்றாளினிற்பணிந்தோர்
புகலுநின்னகரெய்திவீற்றிருப்பர்கள்பூசை
நிகரிலகாலமொன்றியற்றினோர்சிவனைமேவிகாப்பார.

(இ-பு) அத்தலத்திலொரு வேள்விசெய்தவர்கள் தேவேந்திரனாகி வாழ்வார்கள ஆலயத்தை வலஞ்செய்து சிவபிரானுடையபாதத்தில் வணங்குபவர்கள பிரமனே உன்னுடைய உலகத்தை யெய்திவாழ்வார்கள் அச்சிவபிரானையொருகால பூசைபண்ணினவர்கள் சாரூபபதவியடைந்து வாழ்வார்கள். எ-று. (கo)

இந்தவுண்மையையாவருமறிந்திடாதிருக்கு
மந்தவுண்மையேதெனிற்றயிற்றவுணர்களரனை
முந்தியர்ச்சனைசெய்திடத்தருமவர்மொய்ம்பான்
மைந்தநின்னையுமென்னையுநலிவார்கண்மாதோ.

(இ-பு.) அந்தத்தலத்தினுடையமகிமையான இந்த இரகசியத்தை ஒருவருமறியக்கூடாதவண்ணமவைத்துள்ளது அபபடி ஒருவருக்குந்தெரியாமல்வைத்திருக்கின்றதென்னவென்றால் அசுரர்கள் அத்தலத்திற்போய்ச் சிவபிரானைப் பூசைபுரிந்துவரம பெற்று வல்லபத்தால் உன்னையும் என்னை

யும் துன்பஞ்செய்வாரகள்மைந்தனே யென்று பின்னுஞ் சொல்லுவார்.
எ-று. மாது-ஓ - அசை. (௧௧)

பாரினுத்தரதிசையினிற்பயிலுமோர்மலையுஞ்
சீரினுத்தமதெக்கணதிசையிலோர்தலமு
மாருமுற்றறியாரதினுண்மையேதெரியத்
தேரின்மெய்கரும்மாருயிர்க்கனுநதீங்குறாதிருக்கும்.

(இ - பு.) பூவுலகத்தில் இரகசியமாயுள்ளது இரண்டு அவையாதெ னில்வடக்குத் திககிலிருககின்றது ஒருமலையும் சிறப்புடன் உத்தமமான தெற்குத்திக்கிலிருக்கின்றது ஒருதலமும் இந்த இரண்டினுடைய மகிமை யொருவருமறியமாட்டார்கள அதினுணமையைநன்ருயதெளியுமிடத்து உடலழியாமற் காபபதொன்றும உயிரழியாமற காபபதொன்றுமாயிரு க்கும். எ-று. (௧௨)

வடதிசைப்பயின்மலையினன்காகியமருந்தீவ்
வுடலுயிர்க்கொருதீங்கிலாதுதவுவதுதினபேர்
திடமிருத்தசஞ்சீவிநற்சிறநதசநதானந
தொடாவசல்லியஞ்சமானமென்றறிஞ்சவர்சொல்வர்.

(இ - பு.) வட.க்குதிசகிலிருக்கின்றமலையில்நாலுவிதமான மருந்து ண்டு அவைஉடலுககும உயிருக்கும் ஒருதுன்பமில்லாமல் உறுதியப்பண அதுகளின்பெயா திணமைமிருந்த சஞ்சீவிகரணிநலல சிறபபுடைய சநதா னகரணி தொடர்வதாய சலலியகரணி சமானகரணி என்று உணாந்த அறிஞாகள்கூறுவர். எ-று. சஞ்சீவிகரணியாவது:—உயிாபோய்ககிடக் கின்ற உடலினுயிாவரச்செய்வது. சந்தானகரணியாவது:—உடல துணடு துணடாய்க கிடந்தாலும் ஒன்ருயககூடி யுயிாவரச்செய்வது. சலலியகரணி யாவது:-உட்லேயில்லாமலிருநதாலுமஉடலுமுயிருமவரச்செய்வது, சமான காணியாவது:—நெடுங்காலத்துக்குமுன அழிநதுபோனஉடலுடனுயிர் வரச் செய்வது. (௧௩)

தெககணத்துறுந்தலத்தினுநான்குசெய்வினையான்
மிககவாருயிர்க்கிடரிலாதளிபபதுவிளையபிற்
புக்கிருந்திடல்பொருள்பிறர்ச்கீந்திடல்புகழ்ந்து,
நக்கனைதொழல்பூசித்தலென்றுமேநவிலவார்.

(இ - பு) தெற்குத்திக்கிலுள்ள அத்தலத்தினும் நாலுவிதமாய்ச்செ ய்யுந்தொழிலினல் மிகவும ஆருயிாகளுக்குத் துன்பமில்லாது பலன்கொல் த்து இரட்சிக்கும் அதைச்சொல்லுமிடத்து அத்தலத்தில் சென்றுவசித்தல் பொருளுதவல் சிவபிரானைத்துதித்தல் பூசைபண்ணல் என்று அறிஞர் கூறுவர். எ-று. இப்படி அத்தலத்துவசித்தலாற் கயிலையில்வசிப்பதும் பொருளுதவலாற் கயிலையிற் சிவபிரானுக்குத்தொண்டுசெய்வதும்அத்தலத்

திற் சிவபிரானைத் தரிசிப்பதாற்கயிலையிற் சிவபிரானைப்போலுருவங்கொண்டிருப்பதும், பூசித்தலாறகயிலையிற சிவபிரான் திருவடியிற்கலந்துவாழவதுமாம. (௧௪)

வேறு.

அத்தலத்தின் மகிமையனைத்தையுங்
கைத்தலததினிநெல்லிக்கனியென
வத்தனையறிவானன்றியல்லவ
ரெததிறததவரும்முணர்நதாரிலை

(இ - பு) அந்தத தலததினுடைய மகிமைமுழுதும் உள்ளங்கையினெல்லிப்பழமபோற் சிவபிரானேஅறிவா அன்றிமற்றவர் எப்படிபபட்டவாகளும்உணர்நதவரிலலை எ-று. (௧௫)

இநதநன்மகததுற்ரவெழிற்றலந
தஙதமில்பரஞசோதியையாசசனை
சிந்தையனபுடன்செயபதிடிலன்னவன்
வநதுதோன் றுவனுஙகுவணஙகியே.

(இ - பு.) இபபடிப்பட்டமகததுவமுள்ள அழகிய அத்தலத்தில்எழுந்தருளியிருககும முடிவிலலாத சிவபிரானை மனதிலனபுடன் பூசைபுரிந்தால் அச்சிவபிரான வெளிவந்து காட்சியருளவா அவ்விடத்து அவரைத தொழுது எ-று. ஏ-அசை. (௧௬)

ஆசையுள்ளதனைந்திடிலாங்கவ
னேசம்வைதது நிசழ்ததியதிருவன்
மாசறுததமறையினையததலத்
தீசனைத்தொழுவேவுதியென்றனன்.

(இ - பு) உளளத்திற்கொண்ட இசசையைக கூறினல் அவர்கருணைவைத்து கேட்டவரத்தைக கொடுப்பார் ஆதலாற் குற்றமில்லாத வேதத்தை அத்தலத்துச் சிவபிரானைப் பூசைபுரியச்சொல்லி அனுப்புகவென்று திருமால் சொன்னா. எ-று. இம்மூன்றுங்குளகம். (௧௭)

சொன்னவாறயன்சொல்லச்சுருதியு
மன்னுமாசைமனததின்மலிவுறக்
கன்னிபாகனறபூசைகருதியே
யிநநிலத்தினிலெயதியதென்பவே.

(இ - பு.) இபபடி திருமால் கூறியவண்ணம் பிரமன்வேதத்துடன் சொல்ல அந்தவேதமும எண்ணியபடி வீரநடனதரிசனங்கிடைக்குமென்று நிலைபெற்ற ஆசையானதுமனத்தில் அதிகரித்தலால் இளமுலையம்மை பாகராகிய சிவபிரானைப்பூசைபுரியும்வண்ணமெண்ணி இந்நிலவுலகத்திலடைந்ததென்க. எ-று. ஏ-அசை. (௧௮)

குமரனாயில்கொண்டதலத்தினும்
நமராபோற்றுநல்லாற்றினின்மூழ்கியே
விமலநாதனை விண்ணவர்தேவனை
யுமைமணாளனைப்பூசையுஞற்றின.

(இ - பு.) முருககடவுள் வேல்பெற்றுசகொண்ட சுருதிபுரத்தடைந்துதேவர்கள் துதிக்கும் பாருநதியினில் நீராடி மலரஹிதராய சிவபிரானைத் தேவர்கள்தேவனை உமாதேவியார்மணவாளனைப்பூசித்தன. எ-று ஏ-அசை

வேறு.

மறையொருவடிவுகொண்டுமனதொடைம்புலனுமொன்றிக்
கறைமிடற்றவனைப்பூசைகைகளாற்பலநாட்செய்ய
நிறையருளாகியீசனெடியவெள்விடைமீதேறிப்
பிறைவளர்சடையெமமண்ணல்பிறங்கிடதோன்றினால்.

(இ - பு.) வேதங்கள் திரண்டு ஒருவடிவெடுத்து மனமுடன் ஐம்புலன்களும் ஒருப்பட்டு நீலகண்டராகிய சிவபிரானைத் தமது கைகளாற் பலநாள்பூசிக்க இளம்பிறை தங்கும் சடையையுடைய எமதிறைவராகிய சிவபிரான் நிறைந்த திருவருளை யுடையராகி வெள்ளியஇடபத்தின் மீதூர்ந்து அவ்வேதங்கள் காணும்படிகாட்சிகொடுத்தருளினா எ-று. ஆல்-அசை.

பவளமால்வரையேபோற்றிபசுங்கொடிபாகாபோற்றி
தவளவெண்ணீற்றாய்போற்றிசஙகராசம்புபோற்றி
துவளும்வார்சடையாய்போற்றிதுடிமழுககரததாய்போற்றி
கவள்வாரணத்தைக்காய்ந்தகடவுளேபோற்றிபோற்றி.

(இ - பு.) பெரியபவளமலை போன்றவரே வந்தனம் பசியகொடி போன்ற உமாதேவிபாகரே வந்தனம் சங்குபோலும் வெள்ளிய திருநீறுடையவரே வந்தனம் சஙகரனே சம்புவே வந்தனம் துவண்டு அசையுநீண்டசடையவரே வந்தனம் தமருகம் மழுதரித்த திருசகரஙகளுடையவரே வந்தனம கவளங் கவளமாயுணணும் யானையைக்கொன்ற கடவுளே வந்தனம் வந்தனம். எ-று. (உக)

இருவகைத்தோற்றமாகியெங்கணுநிறைந்தாய்போற்றி
யருவமாயணுதியானவாதியபரனேபோற்றி
யுருவமாயுருவினுள்ளத்துண்மையாயுண்மைக்கெய்தும்
பருவமாய்ப்பதியாய்நின்றபானிறவண்ணாபோற்றி.

(இ - பு.) சரம் அசரம் என்னும் இருவகைத் தோற்ற முள்ளவராய் எவ்விடத்தும் நிறைந்தவரே வந்தனம அருவமாக அணுதியான முதன்மை

யாகிய கடவுளே வந்தனம் உருவமாகி அவ்வுருவத்தின் இதயந்தோறும் விளங்கும் மெய்ப்பொருளாகவும் அம்மெய்ப்பொருளுக்குப் பொருந்தும் பரிபாகமாகவும் இவைகட்கெல்லாம் நிறைவாகவும் உள்ளபால்போலும் வெள்ளிய நிறத்தவரே வந்தனம். எ-று. (உஉ)

ஞானமாய்ஞானங்காட்டு நாதமாய்நாதவிந்தாய்த்
தானமாய்த்தானங்காட்டுந் தனிப்பெரும்பொருளாய்ஞாலத்
தானுமாயுள்ளினுள்ளவுயிருமவ்வுயிர்கொளின்பந்
தானுமாய்ச்சகமாய்நின்றதாளுறவேபோற்றிபோற்றி.

(இ-பு.) ஞானமயமாயும் அத்தகைய ஞானத்தை விளக்குவிக்கும் நாதவடிவாயும் நாதவிந்தாகவும் முத்திதானமாகவும் அம்முத்தித்தானத்தை ஆன்மாக்கட்குக் காட்டுவிக்கும் ஒப்பற்ற பெரியபொருளாகவும் நிலவுலகத்திலுள்ள சடரூபமாகவும் அச்சடங்கடோறும் உலவும் உயிராகவும் அவ்வுயிர்கள் நுகரும் சுகரூபமாகவும் உலகவடிவமாகவும் விளங்கும் சிவபிரானே வந்தனம் வந்தனம். எ-று. (உ௩)

என்றிருக்குரைசெதுப்போற்றியேத்தவெம்பெருமானன்பு
மனமிகுத்தருளாலின்றவான பெருமறையேயுன்ற
வினைவுறாத்துதிநியென்னநிகழ்த்தலுங்களித்துவேதங்
கனைகழற்கமலம்போற்றிக்கருத்துகந்திதனைச்சொற்ற.

(இ-பு.) என்றுவேதங்கள் சொல்லித்துதித்துவழிபடச் சிவபிரான் தமது திருவுள்ளந்தனிலன்பு கூர்ந்தருளி எம்மைத்துதித்து நிற்கின்ற சிறந்த பெரிய வேதங்களே உமது கருத்தைக்கூறுக என்று திருவாய்மலர்ந்தருளலுங்களிப்பெய்தி அவ்வேதங்கள் சிவபிரானது ஒலிக்கும் வீரகழலுடையைத்தரித்த தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதித்து மனமுவந்து இவ்வாறுகூறின. எ-று.

அரியயன்காணாஞானத்தமலநாயகவெந்நெஞ்சத்
துரியத்துன்னடனநோக்கியுவந்திடவெனநலோடுந்
தரியலர்புரங்கள்காய்ந்ததற்பரன்மகிழ்கூர்ந்துளப்
பரிவுடன்மறையைநோக்கியின்னதுபகருகின்றான்.

(இ-பு) திருமால்பிரமன்காணாத ஞானசொரூபத்தையுடைய மலரகிதரான இறைவரே எனதிதயத்தில் உள்ளது உமது திருநடனங்கண்டு உவக்கவேண்டுமென்னுங்கருத்தே என்றுரைத்தவளவில் பகைவர்களது முப்புரங்களை எரித்தருளிய சிவபிரான் மகிழ்ச்சியுற்று மனவிருப்பத்துடன் வேதங்களைப்பார்த்து இவ்வாறு திருவாய் மலர்ந்தருளுகின்றார். எ-று. (உரு)

விளங்குமாரணமேயெந்தன்வீரதாண்டவநீர்நோக்க
வுளந்தனிலருத்தியென்னவோதினதுண்மையேனுந்
துளங்குமால்வரையுமண்டத்தொகுதியுந்துறுநிலேலை
வளங்கொள்பூதலமும்வானுமாறுபட்டுழலுமாதோ.

(இ - பு.) விளக்கமுற்றவேதங்களே எமதுவீரதாண்டவத்தை நீங்கள் காணும்படி உள்ளத்தில்விருப்பமென்றுஉரைத்ததுமெய்ம்மையானாலும் அத்தாண்டவகாலத்துப்பிரகாசிக்கும அட்டகுலபர்வதங்களும அண்டகடாகங்களும் ஒலிக்குங்கடலினால் வளமைதங்கிய இந்நிலவுலகமும்விண்ணுலகமும்மாறுபட்டுவருந்தும். எ-று. மாது, ஓ-அசை. (உசு)

ஆதலானீரெங்குற்றெனுடனேக்குவிரென்றேத
வேதமானவையுணர்ந்துவிளம்பினவமலநின்பொற்
பாததாமரையையெய்திப்பணிந்துமெமமனத்திற்பறவ
காதநீர்நிலமேதல்வேறுகடவுளார்கருணைபூரபபார.

(இ - பு.) ஆகையால நீங்களெவ்விடத்தடைந்து எமதுநிருத்தங்காண்பீரென்றுகூற மலரதகிராகிய சிவபிரானே உமது அழகியதிருவடிகளாகிய தாமரைமலரைச்சரணடைந்துதொழுதும் எமதுள்ளத்தெய்திய அவா ஓழியாதிருக்குமாகில் வேறேகிருபைகூருந்தெய்வம எது என்று வேதங்கள் மனம்நெகிழ்ந்து கூறின. எ-று. (உஎ)

வேறு.

என்றுபலவாய்த்துதியியப் பிமறைநிறகக்
குன்றுசிலையாயொருகைகொள்குழகனன்பா
னின்றுபுகழ்வேதவுருவோவாடிதுநிகழ்ந்தது
மன்றுமொனதாடலெழில்காணமனதாகில்.

(இ - பு) என்று இவ்விதமாகப்பலதுதிகள் கூறிவேதங்களிருக்க மேருமலையைவில்லாகவளைத்து ஒருகரத்திற்றாங்கிய சிவபிரான்மெய்யன்புடனதம்மெதிரில்நின்றுதுதிக்கும் அவ்வேதங்களுடன் இவ்வாறுகூறுகின்றார இந்நிலவுலகததில எமதுநடனத்தின் அழகைக்காண விருப்பமிருக்குமாறுல். எ-று. (உஅ)

இநதவிறலசேர்துடியினிற்புகுகிரென்னி
லநதமுறவேநடனவாடலிசைகிறபே
னந்தலிலராகியெனதாடனிகாண்பீர்
சிநதைமகிழ்வாகியவைசெய்கெனவுரைப்ப.

(இ - பு) இந்தவன்மை பொருந்திய தமருகத்திற் புகுவீரேயாகில் அழகமையும்படி வீரநடனமாகிய நிருத்தம்புரிவோம் குறைபாடில்லாதவராய் எமதுநடனத்தை நன்றாகத்தரிசிப்பீர் ஆதலால் மனமகிழ்ந்து அவ்வாறுபுரியுமென்று கட்டளையிட. எ-று. ஏ-அசை. (உகூ)

ஆரணமகிழ்ந்துரையதற்குளமிசைந்தே
காரணமுதற்பொருளகரத்துடிபுகுந்த
நீரணிபளிக்குமணிவட்டநெடுவில்லே
யேரணிதுடிக்கொரிருவாயினுமிசைத்தார்.

(இ-ள்) வேதங்கள் களிப்புற்றுச்சிவபிரான் திருவார்த்தைக்குமன மொருப்பட்டு முதற்காரணமாகிய பரம்பொருளாயுள்ள சிவபிரான் திருக்கரததேந்தும தமருகத்திறபுகுந்து கொண்டவுடனே கீரோட்டமுள்ள பளிங்குமணியாலாகிய வட்டவமமைந்த நீண்டதுண்டுகளை அழகுள்ள அத்தமருகத்தின் ஒப்பற்றஇருபாரிசத்துவாயினும் அமைத்தார். எ-று. ஏ-அசை. இம்மூன்றுங்குளகம். (௬0)

செங்கையிலிருத்தியதிறற்றுடியினுள்ளா
யிங்கிதநடதொழிலிருக்கினிதுகாணச்
சங்காரராமபசதாசிவன்மகிழ்ந்தே
பொங்குறவத்தொழில்புரிந்தனனிசைந்தே.

(இ-ள்) தமது சிவந்ததிருக்கரததிறறங்கிய வன்மையை யுடைய அத்தமருகத்தினுள்ளிருந்தே வீரநடனதொழிலை வேதங்கள இனிமையுடன்பார்க்கும்படி சங்காரதொழிலமைந்தசிராமயராகிய சிவபிரான் திருவுள்ளமகிழ்ந்து சமமதித்து ஆன்மாக்கள் பொலிவடையும்படி அந்நடனமபுரிந்தனா. எ-று. ஏ-இரணடும, அசை. (௬௧)

வேறு.

பாதமணிநூபுரசதங்கையொடிடைக்கணுறு பன்மணிகளும்மசையவே,காதினணிகனகுழையின்முன்னிரவிதோன்றலமலகாணுமவெயின்மினமினியதாஞ், சோதிமணிமேன்மகுடமண்டமுகடைத்துளைதுளைநதருவியேயொளிரவே, வேதமனமேமகிழுஞானபரமான சிவன்வீரநடனஞ்செய்தனனால்.

(இ-ள்.) திருவடிகளில்தரித்த நூபுரமாகிய சதங்கையுடன் இடையிற்றரிததிருக்கும் பலஇரத்தினங்களும் அசையவும் திருச்செவிகளிலஅணிந்திருக்கும்குண்டலங்களின்முனைசூரியன் தோன்றுகின்றது எப்படியிருக்குதென்றால வெப்பம வீசும் அச்சூரியன் வெயிலின்முன் மின்மினியாகவும் பிரகாசமுள்ள இரத்தினங்களழுத்திய மேன்மையமைந்த கிரீடமானது வான்முகட்டைதுளைத்துக்கொண்டு ஊடுருவிச்சென்றுவிளங்க வேதங்கள் மனங்களிக்கஞானமயமாகிய சிவபிரான் வீரநடனம்புரிந்தார். எ-று. ஏ-மூன்று ஆல்-அசை. (௬௨)

• கோலமகமேருமலையாழிமலையாசையலைகூடுறுநலண்டமலைய
ஞாலவுயிர்வானிரவிசீதமதிதாரகைகடுங்கியுழலப்புலவரு
மேலுலகுகீழுலுறஞாலமுயர்வானினுறவேகமுறவேகமுலவே
வேலைவெறிநீர்சுவறபர்ருமுணராத சிவன்வீரநடனஞ்செய்தன
[னால்.

(இ-ள்.) அழகியமேருகிரியும் சக்கிரவாளகிரியும் அட்டகுலகிரிகளும் கூட்டமாகியபெரிய அண்டங்களும் அசையவும் பூமியிலுள்ள ஆன்மவர்க்கங்களும் ஆகாயத்தின்கணுள்ள சூரியன் முளிர்ந்த சந்திரன் நக்ஷத்திரங்கள் ஆகிய இவைகளும் நடுக்கமுற்றுத்தடுமாறவும் தேவர்களும் விண்ணுலகுமகீழாகவும் பூவுலகம் உயர்வாகிய ஆகாயத்திற்பொருந்தவும் வேகத்துடன்சுழலும்படியாகவும் கடலினதுபுலால்கமழும் நீர்சுவறிப்போகவும் யாராலும் இத்தன்மைத்தென்று அறியப்படாத சிவபிரான் வீரநடனம்புரிந்தார். எ-று. ஏ இரண்டும், ஆல்-அசை. (௩௩)

இந்தவகைவீரநடனங்கள்வெகுகாலமிறைவின்பமுடனே புரியவே, சிந்தைமகிழ்வாகிமறைகண்டுதுதிசெய்யமிகுசின்மயமதானசிவனு, மந்தமுறவாடிநடனந்தனையொழித்துநிலமந்தரமொடெந்தவுலகு, முந்தவுறுகின்றபடிதந்துமறையைப்புவியின்முந்துறவிடுத்தனனரோ.

(இ-ள்.) இவ்வண்ணமாக வீரநடனங்கள் அநேககாலம் சிவபிரான் களிப்புடன் செய்தருளமனமகிழ்ந்து வேதங்கள் அந்நடனத்தைக்கண்டுதுதிக்க மிகுசத்தசின்மயரூபமான சிவபிரானும் அழகுபொருந்தஆடித்த அந்நடனத்தை அவ்வளவில்நிறுத்தி மண்ணுலகமும் விண்ணுலகமும் மற்ற எந்தவுலகமும் முன்புள்ளபடி அமைத்து வேதங்களைப்பூவுலகத்தில் முன்புசெல்லும்படி விடுத்தார். எ-று. ஏ-இரண்டும், அரோ-அசை. (௩௪)

வேறு.

ஆடுகின்றநடனத்திலழியுமகிலலோகபுவனங்களுங்
கேடுகொண்டதிவணென்றுமுன்னுறுகிளர்ச்சியார்பொலிவுபற்றிநன்
னாடுகின்றவரிபோடயன்னமரர்நாகர்விஞ்சையரியக்கரும்
பாடுகின்றவிசையோர்கள்கந்தருவர்பானுதிங்கண்முதலியாவரும்

(இ-ள்.) சிவபிரான் ஆடியருளியவீரநடனத்தினால் அழிந்தசகலவுலகங்களும் புவனங்களும் இவ்விடத்துத் துயரடைந்ததென்று முன்னிருந்த பொலிவின்படி சிருட்டித்த நன்மையுடன் நாடுகின்ற திருமால்பிரமன் தேவர்கள் நாகலோகத்தார்கள் வித்தியாதரர்களியட்சர்களும் பாடுந்தொழிலுடைய இசையைத்தேர்ந்த கந்தருவர்களும் சூரியன்சந்திரன் முதலியவெல்லாரும். எ-று. (௩௫)

வந்துகூடிநடனஞ்செய்தாண்மலர்வணங்கியேபலதுதித்தனு
மெந்தைபரமனமிசைந்துநீர்முனமிருந்தவண்ணமிருமெனவருட்,
டந்தபோதவர்மகிழ்ந்துஞானசிவதற்பராபரனையேத்தியே, சிந்த
யன்புகொடுநின்றவேதமுறுசீர்த்தியைச்சொலியுமேத்தினர்.

(இ - பு.) ஒருங்குசேர்ந்து வீரநடனஞ்செய்த பாததாமரைகளைத் தொழுது பலவாறு துதித்திடலும் எமது தந்தையாராகிய சிவபிரான் மனமுவந்து நீவிர்முன்பிருந்தவாறிருமென்று திருவருள்சுரந்தபோது அவர்களெல்லாம்களிப்புற்று ஞானமயமாகிய சிவபிரானைத்துதித்து மனப்பரிவுகொண்டுநின்றவேதங்களினது புகழையுங்கூறித்துதித்தார்கள். எ-று. ஏ-அசை.

விண்ணுளோர்களபுகழாதிநாயகன் விருப்பினொடு நடனந்தெழில்
கண்ணினுலினிதுகண்டுநெஞ்சமிருகாதலிற்புனிதமாகிய
பண்ணிலங்குமறையத்தலத்தயகலாமலுள்ளமுருபற்றினு
லண்ணலாதிபரனை நதுதித்துருகியங்கிருந்தசிலகாலமே.

(இ - பு.) தேவர்களதுதிசரும் முதல்வராகிய சிவபிரான்விருப்பத்துடன் ஆடியருளியவீரநடனத்தின அழகைக்கண்களார இனிமையாகக்கண்டுமிகுந்தபேராசையாறறுாய்மையடைந்த பண்களிசைந்த வேதங்கள் அச்சுருதிபுரியைப்பிரியாமல் இதயத்திற பொருந்திய மெய்யன்பினுல் எமதிறைவராகிய சிவபிரானைததுதிதது மனமுருகி அவ்விடத்துச்சிலகாலம் வீற்றிருந்தன. எ-று. (கஎ)

வீரநடனச்சருக்கம முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨கக,



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# திருமால்நேமிபெற்ற சருக்கம்.



இன்னவாறிசைத்தருளியசூதனையேத்தி
முன்னமாயவனேமிபெற்றனனெனமொழிந்தா
யன்னகாதையைவிரித்துரைத்தருளகெனவன்பான்
மன்னுமாதவர்கேழ்பபமற்றவனிறுவகுப்பான்,

(இ-பு.) இவ்வாறுசிவபிரான் வீரநடனஞ் செய்தருளிய சரிதத்தைக் கூறியருளிய சூதபுராணிகரைத்துதிததுமுன்திருமால் சக்கராயுதம் பெற்றதாகக்கூறினீர் அச்சரித்திரத்தை விரிவாகஉரைத்தருள வேண்டுமென்று மெய்யன்புடன் நிலைபெற்றநைமிசாரணியமுனிவர்கள் கேட்க அச்சூதபுராணிகர் இதனை வகுக்கின்றார், எ-று. (க)

கடலினுப்பணோர்வெற்பிடைக்கதிர்களெண்டிசையும்
படருமாயிரஞ்செங்கதிர்குழுமியபான்மை
யுடையதாயதுமயன்மனம்வருந்திமுன்னுதவு
மடருநற்சிறப்புடையதோரணிநகருளதால்

(இ - பு.) கடல்மத்தியிலுள்ள ஓர்மலையில் எட்டுத்திக்குகளும் கிரணங்கள்பாயும் ஆயிரஞ்சூரியாகள் ஒன்றுகூடிய தன்மையுடையதாகியதும் தேவதச்சன்மனவூக்கத்துடன்முற்காலத்தில்நிருமித்ததும ஆகியவிசேடித்த நல்ல சிறப்பையுடைய ஒப்பற்றஅழகமைந்த ஒருநகரமுண்டு. எ-று. (௨)
ஆல்-அசை.

அன்னமாநகாதனிலிருந்துலகெலாமளிக்குஞ்
சென்னியாயதைஞ்ஞூற்றிணைன்றிரண்மணிததிபடோள்
பன்னுமாயிரமுள்ளவன்பத்நூறுறற
மன்னுமாணரிதன்னினுமுயாநதிடுமவலியான்.

(இ - பு) அத்திருநகரதனி லிருந்து உலகங்களை யெல்லாங் காப்பவனும் ஐஞ்ஞூறு சிரமுள்ளவனும் நவரத்தினவாகுவலயங்களணிந்த யாவராலும துதிக்கும ஆயிரந்திரண்ட தோளகளும் நிலைபெற்ற ஆயிரம் ஆணசிங்கங்களைப் பார்க்கினும் மேமபட்ட வன்மையையும உடையவன். எ-று. (௩)

பூதலத்தவா புயங்கநாட்டவாகள பொனனுலகோா
வேதன்மற்றவர்யாரையுமவென்றிடுவீர
மோதம்வைத்தபொற்சடையவன்வரத்தினாலுளனாய்ப்
போதகத்தினையுரித்தவன்பூசையேபுரிவோன.

(இ - பு.) மண்ணுலகா நாகலோகத்தாவிண்ணுலகத்தாபிரமன்மற்றுமுள்ள எலாகளையும வெற்றி கொளளும் வீரத்தைககங்கையைத தரித்த அழகிய சடாடவியையுடைய சிவபிரான் அனுக்கிரகத்தாற பெற்றவனாய யானையுரித்த அச்சிவபிரானைப் பூசிப்பவன். எ-று. (௪)

இன்பமேவிரும்பியமனனிமயவாதமக்குத் -
துன்பமேசெயுந்தொழிலினனிராக்கசத்துட்ட
வன்பரேமிகுஞ்சதுரங்கவாரிதிமலிந்தோ
னன்பனாயாங்கிருப்பவனடன்மிகுசூரன்.

(இ பு.) இன்பத்தையேவிரும்பிய மனமுடையவன்தேவர்களுக்குத் துன்பத்தையே புரியுந்தொழிலையுடையவன் அசுராகளாகிய துன்மார்க்கமுள்ளவன்மைமிகுந்த சதுரங்கமாகிய சேனாசமுத்திரம் விசேடமாகஉடையவன் சிவபிரானுக்குஅடியனாயிருப்பவன் வல்லமைமிக்கசூரன். எ-று. (௫)

சோமுகப்பெயர்கொண்டவன்றொல்லுலகதனி
லொன்முகத்தினும்வென்றெழினன்னகர்வாழ்வோன்

காமுகந்திறலசுரனுமொற்றராற்கருதிப்
பூமுகத்தினைநிகர்த்திடுமறைசையுட்போந்து·

(இ - பு.) சோமுகனென்னும் பெயர்தரித்தவன்பழமையாகிய இந்நிலவுலகத்தில் நான்குதிக்கிலும் வெற்றிகொண்டு அழகிய அக்கடன் மத்தியில் வாழப்பட்டவன் தூததனுகிய வன்மைமிக்கஅவ்வசுரனும்தூதரால் வேதமிருக்குமிடத்தைத்தெரிந்துகொண்டு பூதேவிகுவதனம்போன்றமறைசைமாநகரத்திற்குவந்து. எ-று. (சு)

மாயவஞ்சனைவினையினுன்மறைசையுளெய்தித்
தூயமாமறைநனைக்கொண்டுசோரனிற்சென்று
நேயமாகியநன்னகரெய்தியேநிகரி
லாயவேதத்தைசசேமதநிலையமைத்தனனன்றே.

(இ - பு.) மாயநதினுலாகிய வஞ்சச்செயகையால மறைசைமாநகரத்தில் அடைந்துபரிசுத்தமாகிய மேலாயவேதஙகளை எடுத்துககொண்டு கள்வனைபபோறபோய அன்புடைய தனது நகரததையடைந்து ஒப்பற்றதாகிய வேதஙகளைச சேமிததுவைத்தனன். எ-று. ஏ-அன்று, ஏ, அசை. இவ் வாறுஙகுளகம். (எ)

வேறு.

சொல்லருமிப்பரிசுசுருதியவனறனிநகரிற
பலலாண்டுகழிதநிருநதபக்குவததிலேயுலக
மெல்லாமபொய்யிருளாகியெப்பிறப்புமொன்றாகி
நல்லாரொல்லாரிலராய்நலிகின்றதுரைக்கரிதால்

(இ - பு) இபபோதுகூறிய இவ்வண்ணம்வேதங்கள் அவ்வசுரனது ஒப்பற்றநகரத்தின்கணபலவருடஙகளகழியுமளவுமஇருந்தகாலத்திலஉலகமுழுதும்பொய்மயமாக இருளடைந்து மானிடாஇலஙகுமுதலிய எல்லாப்பிறவிகளும் ஒருதனமைத்தாகி அறிஞாகளும் அவிவேகிகளும ஏன்கின்றபேதமில்லாமல் நலிவடைவதைசசொல்லுதற்குஅரிதாகும் எ-று. ஏ-ஆல்அசை.

சந்திசெபநியமநிட்டைதவமோமமகம்பூசை
யெநதவினைகளுமிலராயிவைபுனிதமிவைதீமை
முந்தியபுண்ணியபாவமுயலுமவினைநலநதீது
வநதிடுவதிரண்டினுமோர்வகையென்பதுணர்கிலராய்.

(இ - பு.) சந்தியாவநதனம செபம், நியமம், நிட்டை, தவம், ஓமம், யாகம், பூசை, முதலிய எவ்விதநற்கருமஙகளுமின்றி இதுபரிசுத்தம் இது அசுத்தம் முற்பட்டுச்செய்யப்படும்புணணியமும அதல்லாதபாவமும் அவ்விரண்டின் முயற்சியால்வினையும் செய்கைகளாகிய நன்மை தீமைவருமென்பதும் இவ்வாறு அபேதமாயிருப்பதில்வகையுண்டாகுமென்பதையும் உணராதவர்களாய். எ-று. (சு)

வானவர்மாதவர்பலரும்வாடிமனமிகமெலிந்து
கானலருங்கடிக்கமலக்காவலன்பாடைடந்ததம
தீனமுறுஞ்செயலனைத்துமிசைத்திடலும்பவனோர்ந்து
ஞானமுனிவரரிமையோர்முகநோக்கியிவைநவிலும்.

(இ-ள்) தேவர்களும் பலதவசிகளும் மிகவும்மனம்நொந்துவருந்தி தேன்பிலிற்றும் வாசனைகமழும் தாமரைமலரில் வசிக்கும் பிரமனிடத்தடைந்து தம்முடைய துன்பமாகிய செய்கைகளனைத்தையும் சொல்லவும் பிரமன்அறிந்து ஞானமிக்க முனிவர்களுடையவும் தேவர்களுடையவும் முகத்தைப்பார்த்து இவ்வண்ணங்கூறுகின்றான். எ-று. (௧௦)

என்னுயர்வுமாதவர்களேற்றமும்வானவர்சிறப்பு
மன்னுபுவியோருய்யும்வண்மையுமாமறையதனு
லன்னமறைதனைக்கொடுசென்றவுணனொளித்தமைதனு
லின்னவகையுலகனைத்துமிருண்மூடிற்றெனவுரைத்து.

(இ-ள்) எனக்கு உண்டாகிய சிறப்புமகாதவசிகளுக்குண்டாகிய உயர்வும் தேவர்களது பெருமையும் நிலைபெற்றநிலவுலகத்தார் உச்சீவிக்கும் வளப்பமும் மகத்துவம் பொருந்திய வேதத்தினால்தான் அத்தகையவேதங்களை எடுத்துக்கொண்டுபோய் சோமுகாசுரன ஒளித்துவைத்திருக்கின்றான் இதனால் இவ்வாறு உலகமெல்லாம்இருண்மயமாயிற்றென்றுகூறி. எ-று ஆல்-அசை. (௧௧)

அந்தமறைவெளிப்படுவதரியதரிபாற்சென்றே
யிந்தவகையுரைக்கிலதற்கியைந்தவினையியம்புமென
வந்தவருக்குரைத்துமரைமலரயன்பற்றவருடன்வை
குந்தநகர்டைந்துமணிக்குன்றனையான்றனைத்துதித்து.

(இ-ள்) அந்தவேதங்கள் வெளிப்படுவதருமையாகும் ஆகையால் திருமாலிடத்திற்போய் இந்தச்செய்தியைக்கூறில் அதற்குத்தக்கசெய்கையைக்கூறுவாரென்று வந்ததவசிகளுக்கும் முனிவர்களுக்குஞ்சொல்லித்தாமரைமலரில்வசிக்கும் பிரமன் அவர்களுடன் வைகுந்தத்தையடைந்து நீலமணிவரைபோன்ற திருமேனியையுடைய திருமாலைத்தோத்திரஞ்செய்து.

ஆரணந்தியவனகரிலடங்கியதுமந்தமுந்
தாரணியுமிருளாகித்தயங்குவதுந்தெரிவித்துக்
காரணவித்துயர்தீரக்கருணைபுரிந்தருளென்றார்
நாரணனுமதனைக்கேட்டிவ்வாறுநவில்கின்றான்.

(இ-ள்) வேதங்கள் சோமுகாசுரனகரிலடங்கியிருப்பதும் விண்ணுலகமும் மண்ணுலகமும் இருண்மயமாகித் தியக்கமடைந்திருப்பதைத் தெரிவித்துப்பூர்வவினைகாரணமாக சேர்ந்தவித்தத்துயரந்தீரக்கிருபைபுரிந்தரு

ளவேண்டுமென்று குறையிரந்தார் திருமாலும் அவ்வார்த்தையைக்கேட்டு இவ்வண்ணமாகக்கூறுகின்றார். எ-று. இம்மூன்றுங்குளகம். (கங)

கோணுறுசோமுகனை யுயிர்கோறலுமாங்கவன்கொண்ட
மாணுறுவேதத்தினை நாமவாங்குவதுநமக்கரிதாற்
பூணுறுபொன்னணிகலசப்புணர்முலைப்பரிகளையடைந்து
காணுறுமன்னவனுரைத்தகருமமியற்றுவமென்றான்.

(இ-பு.) துட்டசெய்கையுடைய சோமுகாசுரனைக்கொல்லுதலும் அவனுலகவாந்துகொண்டுபோய் மறைத்துவைத்திருக்கும் மாட்சிமைதங்கிய வேதங்களை நாமேவாங்குவதும் நமக்கருமையாகும் பொன்னாலாகிய அழகியமாலைகளைத்தரித்திருக்கும் குடம்போன்ற நெருங்கியதனபாரங்களையுடைய உமாதேவிபாகராகிய சிவபிரானையடைந்து யாவராலும் தரிசிக்கத்தக்க அவர்கட்டளையிட்ட செய்கையைப்புரிகுவம் என்று கூறினன். எ-று. ஆங்கு-ஆல்-அசை. (கச)

வேறு.

மாலுமிந்தவகையுரைத்துவானுளோருமாதவத்
தாலுயர்ந்தமுனிவருஞ்சூழ்ந்ததாமரைத்தண்ணுறுமலர்
மேலிருந்திவவுலகளிக்கும்வேதனோடுமேவியே
கோலமேனியண்ணல்வந்துசாகையூரிற்குறுகினான்.

(இ-பு.) திருமாலும் இவ்வாறாகக்கூறித்தேவர்களும் மகாதபோபலத்தினாலுயர்ந்தமுனிவர்களும் சூழத்தாமரையாகியகுளிர்ந்தமலரின்மீதிருந்து இந்நிலவுலகத்தைச் சிருட்டிக்கும் பிரமனோடுஞ்சென்று வராகாவதாரமெடுத்த திருமேனியராகிய திருமாலானவர்வந்து சுருதிபுரியில் அடைந்தார். எ-று. ஏ-அசை. (கரு)

ஆதியாயன்வேன்முனெங்களையனுக்குதவிய
மாதுபாகனைத்துதித்துவானுளோர்கள்சிறுமையும்
வேதமிங்கிலாததின்மைவிளைவும்வேதமதனையே
சூதமாகச்சோமுகன்கரந்தவாறுஞ்சொல்லினான்.

(இ-று.) தேவர்களுக்குத் தலைவனாகிய திருமாலும வேலாயுதம்முன்னம் எங்களிறைவராகிய முருகக்கடவுட்குதந்த சிவபிரானைத்தோத்திரஞ்செய்து தேவர்கள் துன்பத்தையும் வேதம்இவ்விடத்தில்லாததனால் விளைந்த கேடுதியையும் அவ்வேதங்களைவஞ்சனையாகச் சோமுகாசுரன்ஒளித்துவைத்திருப்பதையுங்கூறினார். எ-று. (கசு)

வேறு.

பூந்தாமரைநயனத்திறைபுகல்கின்றவையாவுஞ்
சேந்தாரிமையவர்மாதவர்செயலும்மவர்துயரு

மேந்தாவட கிரியைச்சிலையெனவாங்கியவெந்தை
தோந்தானருளகூர்ந்தான்மணிச்செவ்வாய்மலர்திறந்தான்.

(இ - ரு.) அழகியதாமரைக்கண்ணனாகிய திருமால்கூறுகின்றயாவற்றும் அங்குச்சேர்ந்தவர்களாகிய தேவர்கள்மகாதவசிகள் ஆகிய இவர்களது செய்கையையும் அவர்கள் துயரத்தையும்யாவராலும்எடுக்கமுடியாதமேருமலையை வில்லாகவளைத்த சிவபிரான் உணர்ந்து அருள் சுரந்து அழகிய சிவந்ததிருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (கஎ)

அன்பார்திருமாலேமறையதனைக்கொடுசென்ற
வன்பாதகனெனினுமவனைவழிபட்டவனதனு
லென்பாணியினுற்கொல்லுவதிலைநீவிர்களெனினு
முன்பாயவனெனதனபமுடித்தான் முடித்திடுவீர்.

(இ - பு.) மெய்யன்புடைய திருமாலே வேதங்களைக்கொண்டு ஒளித்துப்போன வன்மையான பாதகனேயாயினும் என்னை வழிபாடுசெய்தவன் ஆதலால் எனது கரங்களால் அவனைக்கொல்லுவதில்லை நீங்களாயினும் முன்னர் அவனிடத்து எனதன்பிலாமற் புரிந்தால் பிறகுகொல்லலாம். எ - று. (கஅ)

வேறு.

உண்மையிஃதெனவமல னுரைத்துப் பின்னுமுவண நெடுங்கொடியவனையருகிருக்கூவிப, பண்மைமிகுமாரணத்தைக் கவர்ந்த பொல்லாப்பாதகனைநீகொன்றிடெனப்பகர்ந்துதனக்க, வண்மையுறுஞ்சக்கரத்தை மாலுக்கீந்துவானவர்க்கு மஞ்சலுரைவழங்கிநீங்காத், தண்மையுறுந்தனிக்கருணைபுரிந்தேயீசன்சார்ந்திடவும விடையளித்தான்சகங்களுய்ய.

(இ-பு) உண்மையானதிதுவென்றுசிவபிரான்கூறிமறுபடியும்கருடக்கொடியையுடைய திருமாலைச சமீபத்தழைத்துப்பண்ணினதுதன்மைமிக்கவேதங்களைக்கவர்ந்து சென்ற பொல்லாத பாதகனை நீகொல்லென்றுகூறித்தமது திருக்கரத்தில் வுண்மையமைந்தசக்கராயுதத்தை அத்திருமாலுக்களித்துத்தேவர்களுக்கு அஞ்சலளித்து எப்போதும் நீங்காத தண்மையுள்ள ஒப்பற்ற கிருபைசுரந்து சிவபிரான உலகங்களெல்லாம் உச்சீவிக்கும்படி திருமாலுக்குச் சோமுகா சுரனிடஞ் செல்லவிடை கொடுத்தருளினார். எ-று. வ-அசை. (கக)

அரியரிசக்கரமேந்தியமரர்சூழ்வப் புயத்தோனெடுமிப்பாலனை ந்தோரெல்லை, பொருவில்சுரனைவெலுமந்திரங்களோர்ந்துபொங்கரவாபரணனருள பொருந்தாவண்ணந, தரியலன்றன்மனமழியப்புத்தமென்றோர்சமயமுஞ்சாத்திரமுமதற்கிலையச்சாற்றித், தெரிவு

றும் பொன்னவனை விடுத்தயனுமாலுஞ்சென்றனர்தம்பதிக்கமரர்
சேணிற்சேர்ந்தார்.

(இ - பு.) திருமாலானவர் அரியென்னும் சக்கரத்தைத்தாங்கிக்கொ
ண்டு தேவர்கள் புடைசூழப் பிரமனோடும் அவ்விடத்தினின்றும் நீங்கி இப்
பாலோரிடத்தடைந்து ஒப்பற்ற அச்சோமுகாசுரனை வெற்றிகொள்ளுஞ்
சூட்சியை ஆலோசித்து விடமபொங்கும சர்ப்பாபரணராகிய சிவபிரானைப்
திருவருள்அவனிடத்துப்பொருந்தாத வண்ணம்பகைவனாகிய அவ்வசுரனது
மனம் மயங்குமபடி புத்தமென்னும ஒருமதமும் அதற்குததக்கசாத்திரத்
தையுமகூறி அதனைததோந் துணர்ந்த பிரகஸ்பதியை அவ்வசுரனுக்கும்
போதிக்கும்படி யனுப்பிபபிரமனும தாமும் தததம பதவிகளுக்குச்சென்
றார்கள் தேவர்கள் தேவலோகத்திற் சேர்ந்தார்கள், எ-று. (உ௰)

தேவகுருத்தவவேடங்கொண்டு ஞானந்திரண்டொருமெய்வடிவா
கிசசிறந்தவென்ன,மேவியந்தவசுரனகரடைந்துகண்டோரவியப்பு
றமன்னவனிடத்துவிரைவிறசென்றான, பூவினுறுமயன்போலப்பு
னிதமாகப் போந்தமுனிவனையசுரனபொருந்தநோக்கி, மாவன
சமலரடியையவணங்கித்தூய மணியணியாதனத்திருத்திவழங்குகி
ன்றான்.

(இ-பு.) அரியுமயனும் கூறியவண்ணம்தேவகுருவாகிய பிரகஸ்பதி மு
னிவர் ஞானயகள் முற்றும்குழுமி ஒருமெய்மையாகிய வடிவங்கொணட
னவென்று துதிக்கும்படி பொருந்தியஅவுணனது புரத்தைசசேர்ந்துபார்த்
தவர்கள் அதிசயிக்குமாறு சோமுகாசுரனிடத்திலதிவிரைவாகப்போந்தன
ன் அப்பொழுது கமலவாசனான பிரமனைபபோல வடிவங்கொண்டு வந்த
முனிவனை அச்சோமுகாசுரன் அமையநோக்குற்று அம்முனிவருடைய
பெருமையுள்ள தாமரைமலர்போலுந்திருவடிகளிரண்டையும போற்றித்து
ய்யஇரத்தினங்களால் இழைத்த பீடத்தின்கண் எழுந்தருளச் செய்து
கூறுகின்றான், எ - று. (உக)

வேறு.

சீரையுடையுங்கமண்டலமுஞ்செபமாலிகையுஞ்செழும்பீலி
யாருங்கரமுந்திருவெண்ணீறணியுஞ்சிறப்பவிவணடைந்தீ
ரருமனத்தினுறுகின்றவுணமையைபபொருளுமுமதுதிருப் [ல்
பேருமுரைத்திடெனவடைந்த பெரியோனிதனைப பேசுவனா

(இ - பு.) மரவுரியாகிய ஆடையணிந்த இடையும் கமண்டலமும்
செபமாலையும் செழியமயிற்பீலியும் பொருந்தியகைத்தலங்களும் திருநீற்றி
னலங்காரமுஞ் சிறக்கும்படி இவ்விடத்திலெழுந்தருளினீர் எனக்குத்தெரி
யும்படி உமதுாகரமும் உள்ளத்திற்பொருந்தியிருக்கும் மெய்மையாகியபொ

ருளும் திருநாமமும் திருவாய்மலர்ந்தருளுமென்று சோமுகாசுரன்கூற அவ்விடத்திலிருந்துள்ள பெரியோனாகிய பிரகஸ்பதிமுனிவர் இதனை உரைக்கின்றனர். எ-று. ஆல்-அசை. (உஉ)

உடலூடிருக்குமளவுமிந்தவுலகினைகரமுழுதுமுவன்
சடலம்விடுத்தபினெவெளியாநதனியூரிருப்பன்றலமீதிற்
படருஞானமுங்கருமமுடற்பசிக்கூண்டேடல்பாரிடைனெ
யடரும்பெயர்சித்தானந்தயோகியெனவுமறைந்திடுவார்.

(இ - பு) இத்தேகத்தோடிருக்கும் வரையில் இந்தவுலகின்கணுள்ள பலநகரங்களிலுஞ் சஞ்சரிப்பன இந்தேகம்விடுத்தபின்னர் வெளிமயமான ஒப்பற்ற முத்திநகரத்திருப்பன இவ்வுலகத்திருக்குமளவுந் தொழிலாவது இவ்வுடற்குநேரிடும் பசிப்பிணிக்கு ஆகாரந்தேடுத லொன்றுமாத்திரமே இப்பூவுலகின்கண் எனக்குரியபெயர் சித்தானந்தயோகியென்று கூறுவர். எ-று (உங)

துறந்தபெரியோனிவையுரைப்பத்தொடக்கிற்புனிதனிவனென்
சிறந்தவுள்ளத்தடலவுணனமேவேயிவணீசேர்ந்ததென் [னச்
தறைநதகுலத்தோரியறறியநல்லரியதவத்தின்பயனெனறு
நிறைந்தமகிழ்வாலுரைசெய்துமீட்டுமிதனைமகிழ்த்தினனால்.

(இ - பு) துறவறத்தையுடைய பிரகற்பதிதேவனிவ்வாறுகூறப் பந்தபாசத்தொடக்கு நீங்கிய பரிசுத்தராகுமிவரென்று சிவபத்தியாற்சிறந்த மனமுடையவன்மையுள்ளசோமுகாசுரன் எமதிறைவனே இவ்விடத்துத் தேவரீர் எழுந்தருளியது எனது குலத்தோரியற்றியுள்ள சிறந்த அருமையானதவப்பேறென்று பூரணமகிழ்ச்சியுடன் கூறித்திரும்ப இவ்வாறுகூறினன். எ-று. ஆல்-அசை. (உச)

என்மேற்கருணைபுரிந்திவணீயிருந்தேயெனதுமடநீக்கி
நன்றேயுறசெய்தருள்கியெனநவிலசோமுகனுமுரைசெய்யப்
பொன்மேனியனுமாங்கிருநதுபுத்தர்சமயசாததிரத்தை
மென்மேலுறநாளாதிபிலேவினைத்தானவன்கைவசத்தானன்.

(இ-பு.) என்மீது கருணைகூர்ந்து தேவரீர் இவ்விடத்தேவீற்றிருந்து எனது அறியாமையை ஒழித்துஅடியேன்நன்மையடையும்படிக்குஅருள்புரியவேணுமென்று யாவரும் புகலும் சோமுகாசுரன்கூறப் பொன்போன்ற மேனியையுடைய பிரகற்பதியும் அவ்விடத்துத்தானேயிருந்து புத்தமதத்தாரது சாத்திரத்தினைமேலும் மேலும் விரிவாக நாளாவட்டத்திற்போதித்து வந்தான் அச்சோமுகாசுரனும் அப்பிரகற்பதியின் வயப்பட்டான். எ-று. ஏ-அசை. (உரு)

புத்தர்சமயசாத்திரத்தைப்பொன்னேனுரைத்த புனிதத்தாற்
சித்தமதனிற்கலந்தசுரன்சிவனைத்துறந்துசிந்தையுனை

பத்திபதன்மீதினிலுயர்ந்துபரமாமதங்களைமுழுதிகழ்ந்து
நித்தமதுவேபூசித்துநெஞ்சினதனை நிலைக்கொண்டான்.

(இ - பு.) புத்தமதசாததிரத்தினைப் பிரகற்பதிபோதித்த தூய்மை யின்றிச் சித்தத்தில் நன்றாயுறைந்த அசசோமுகாசுரன் சிவபிரானைமறந்து தனமனதின்கண் முன்னிருந்ததினும் உயாவாகிய பத்திஅப்புத்ததெய்வத் தின்மீதுசெலுத்தி இதரமதங்கள் அனைத்தையும இகழ்ந்து கூறித்தினந் தோறுந்தவறாத அத்தெய்வத்தையே பூசனைபுரிந்து தனதிதயத்தில்அதனை யே நிலைமையாகக் கொணடான. எ-று. (௨௬)

அரசன்மூவாண்டங்கணிருந்தசுர னுள்ளத்தியல்பையறுத்
துரைசெய்புததவன்புவினைததநோங்கிபபடாந்தசெயனுக்கி
விரைசெய்குழற்றாரையின் கேள்வன்விலங்குவுலகினினிதேகிப்
புரைசோசமயத்தவனடைந்த புணர்ப்பை முழுதும்புகன்றனன்
[ஞல்.

(இ - பு ) பிறசற்பதி மூன்றுவருடம் அவ்விடத்திருந்து சோமுகா சுரன் இதயத்திருந்த சிவபததியை ஒழிததுத்தன்னால் உரைககப்பட்டபுத் தமததின் அனபாகியவிதையைவிதைதது அவ்விதை ஓங்கிபபடாநததன் மையைக்கண்டுவாசனைகமழும்அளகததையுடையதாரைமணாளனாகிய அப் பிரகற்பதிதிருமாலுலகமாகிய வைகுந்தததினிமையாக அடைந்து குற்றம பொதிந்தபுத்தமதத்தில் அச்சோமுகாசுரன் செலுத்தியபததிவலிமை முழு துங்கூறினன். எ-று. ஆல-அசை. (௨௭)

வந்துகுருசொற்றவைகேட்டுவலியவசுர னுயிர்செகுப்பக்
கந்தமலாக்கட்டிருமாலுங்கருதியமராகணங்களுடன்
கொந்துமலர்ககற்பகத்திறையுங்கோகனகமலாழ்கொற்றவனுஞ்
சிந்துபுடைசூழ்சுரர்புரஞ்சோந்தாரபோர்சிந்தித்தே

(இ - பு ) பிரகறபதிவந்து சொன்னதைககேட்டு வன்மையுள்ள சோமுகாசுரனது உயிரைககொலலும்படி வாசனைதஙகிய தாமரைக்கண ணனாகிய திருமால் நினைத்துத் தேவகணங்களுடன் கொத்துககளாயுள்ள மலர்கணிறைந்த கற்பகவிருட்சத்திற் கிறைவனாகிய இந்திரனும் தாமரைம லரில் வசிக்கும்பிரமனும வெற்றிபொருந்தும் யுத்தஞ்செய்யக்கருதிக்கொ ண்டு கடலாற்புடைசூழும் அசுரபுரத்திற் சோந்தார்கள். எ-று. ஏ-அசை.

போருக்கிசைந்துவானவர்கள்புகுந்தாரென்னப்புகழசுரன் [தோர்
றேருக்கிசைநதோர்கரிக்கிசைநதோர்செறியும்வேகப் பரிக்கிசைந்
பாருக்கிசைந்தோர்நான்காயபடைகள்கடல்போற்புடைசூழ
வூருக்கிசைந்தவயல்வெளியேயுற்றான்வரங்களறாதே.

(இ-பு.) யுத்தம்புரிவதற்கொருப்பட்டுத்தேவர்கள் வந்தாரென்று கேள்வியுற்ற புகழுடைந்த சோமுகாசுரன் தேர்ககாரர் யானைக்காரா கு

ருக்கமான வேகத்தையுடைய குதிரைக்காரா பூமியில்நடந்துசெல்லும் காலாள்கள் ஆகியநான்குவிதமான சதுரங்கசேனைகளும் கடலைப்போன்று தன்னைப்புடைசூழும்படி அவ்வூருக்கடுத்த வயல்வெளியிலே அடைந்தான் தான்பெறறிருந்த வரங்களையிழந்தஅவ்அசுரன் எ-று. ஏ-அசை. (உகூ)

தீயவசுரர்படைநோக்கித்தேவர்வெருவிப்புறத்தெய்த
மாயன்முனிந்துவாளாலும்வளையாறபாலிறகதையாலும்
பாயும்பகழிவிசையாலும்படாநதவசுரர்படையழிப்பக் [தான்.
காயுங்கனல்போற் சோமுகனுங்கனன்று திருமாலுடனெதிர்ந்

(இ - ள்) கொடிய அவ்வசுரர்படைகளைசகண்டு தேவாகள்பயந்து ஒருபக்கத்தொளிக்கத் திருமால்சினங்கொணடு தமது வாளினாலும் பாஞசசன்னியத்தாலும் பக்கத்திருக்குந் தண்டாயுதத்தாலும பாய்நதுசெல்லும் அம்பின்வேகததாலும் படாந்துவந்திருந்த அவ்வவுணாசேனைகள முற்றும் அழிககககொதிககும் அககினியைப்போன்று சோமுகாசுரனுங்கோபிதது த்திருமாலுடன் எதிர்த்தான். எ-று. (கூ0)

வானுமபுவியுநடுக்கமுறமலையுங்கடலும்புகைசூழக்
கானுங்கடுங்கற்களுமெரியக்கண்டோருள்ளம்பதைபதைப்பத்
தேனுமணமுநதிகழ்துளபததேவுமசுரததேவுமெதிர்த
தானுமுயிருமின்னலுறவுடற்றிபபெருமபோரடர்த்தாரே.

(இ - ள்) விணணுலகமும மண்ணுலகமும் நடுககமடையவும் மலையிடத்துங் கடலிடத்தும் புகைசூழ்ந்திடவும் காடும்கடியகறகளும் எரியவும் கண்டவாமனம்பதைபதைககவும தேனும்வாசனையும் பொருந்திய துளசிமாலையணிந்த திருமாலும அவுணத்தேவாகிய சோமுகாசுரனும் ஒருவரோடொருவர் எதிர்த்துத்தேகமும்பிராணனும்துன்படையும்வணணம் பெரியயுத்தத்தைப்புரிந்தாாகள். எ-று. ஏ-அசை. (கூக)

வேறு.

இக்கணமெவம்போரியற்றிடுமெல்லையிந் திரைநாயகன்றேர்ந்து
மிக்கவின்னவனோடமாபுரிந்திடில்வான்மேதினி யழிந்திடுமென்ன
நக்கனையுளத்தாற்றுதித்தவ னளிதகநள்ளிருடொலைத்திடு கிரணச்
சக்கரம்விடுத்துசோமுகன்றலையைததளனிஞன்மறைதுயர்தள்ள.

(இ - ள்.) இந்தத்திரண்ட கொடியயுத்தம் புரிந்திடும் போது இலக்குமி நாயகனாகிய திருமால் ஆராய்ந்து மிக்கவும் இச்சோமுகாசுரனுடன் யுத்தம்புரிந்துகொண்டிருந்தால் விண்ணுலகமும் மண்ணுலகமும் அழிந்துபோ மென்று சிவபிரானைத் தனதிதயத்தில் தோத்திரஞ்செய்து அச்சிவபிரான்கொடுத்தமிக்கஇருளையோட்டும் கிரணம்வீசும் சக்கராயுதத்தை வி

ட்டுவேதங்களின் துன்பத்தைநீக்கச் சோமுகாசுரன்சிரசை அறுத்துத்தள ளினார். எ-று. (கஉ)

வானவர்மகிழ்ந்தார்மாதவரார்த்தார்மறையரியிடத்தில்வந்துற்ற
தானவராழ்ந்தார்தருமமூந்தவமுந் தண்மையுமுண்மையும்வளர்ந்த
ஞானமுமுவரம்பு நன்மையுமுயர்ந்த நான்மறைபுனிதமுற்றிருந்த
பானிறவண்ணன்பணியினைநோக்கிப்பாடினராடினர்விண்ணோர்.

(இ-பு.) தேவர்கள் மகிழ்ச்சியுற்றார்கள் மகத்தாகிய தவசிகள் ஆர வாரித்தார்கள் வேதங்கள் திருமாலிடத்தடைந்தன அவுணர்கள் அழிந்தார் கள் தருமம்தவமசாந்தம் மெய்ம்மை இவைகள் விர்த்தியுற்றன ஞானமும் முறைமையும்நற்செயகைகளும் மேன்மேலும்ஓங்கினநான்குவேதங்களும் பரிசுத்தமடைந்திருந்தன பானிறத்தைப்போன்ற திருமேனியை யுடைய சிவபிரான் திருவருளைக்கண்டு தேவர்கள்துதித்து ஆனந்தக் கூத்தாடினார் கள். எ-று. (கங)

வேறு.

வாசமெனதுளபமாயன்மாமறையதனைக்கொண்டு
வாசவன்வானோர்ஞானமாதவர்சூழ
வாசமெனமலரினானோடெய்திநன்மறைசைதன்னில்
வாசவன்முனனர்சென்று வாழ்த்தினரேத்தினாரே.

(இ-பு.) வாசனைகமழும் மிருதுவானதுளபமாலையணிந்ததிருமால் மகத்தாகிய வேதங்களைக் கைக்கொண்டு இந்திரன் தேவர்கள் ஞானம் பொருந்திய மகாதவசிகள் தன்னருகிற்சூழ்ந்து வரச்சுகந்தம் வீசும் மெல்லி யதாமரைமலரில்வசிக்கும் பிரமனுடன்போய் நல்லசுருதிபுரியில் வீற்றிருந் தருளும வேதநாதர் திருச்சந்நிதிக்குமுன்பாகச்சென்று அவரைப்பலவாறு வாழ்த்தித்துதித்தார். எ-று. (கச)

கோதிலாரணத்தைமாயன்கொணாந்துமுன்விடுத்தலேடுந்
தாதுலாமதலைசூடுநதனிமுதன் மகிழ்வுபூத்துச்
சீதநாண்மலராட்கன்பன்றிருமுகநோக்கிநின்போ
லேதிலார்தம்மைவெல்வாரிலையெனவிளம்பியன்பால்.

(இ-பு.) குற்றமற்ற வேதங்களைத் திருமால் கொண்டுவந்து சந்நிதி க்கு முன்பாக விட்டவுடன் மகரந்தங்கள் நிறைந்த கொன்றைமலர் மாலை யணிந்த ஒப்பற்றமுதற் காரணராகிய சிவபிரான் மகிழ்ச்சியுடனிருந்து தண் ணிய அன்றலர்ந்த தாமரைமலரில்வசிக்கும் இலக்குமிக்குக்கணவனை திரு மால் திருமுகத்தைப் பார்த்து உன்னைப்போலப் பகைவர்களைச் சயிப்பவா கள் இல்லையென்று திருவாய்மலர்ந்து அன்புடன். எ-று. (கரு)

இன்றுதொட்டென்றன்பக்கத்திடப்புறத்திருந்தாரூ
மன்றல்வான்புவியிலயாருமவந்துனைதொழுதபோககு
நன்றுறுமவரங்களீந்துவைகெனநவிற்றவுற்று [ன்.
னன்றுதொட்டெறிசங்கயாழியாதிகேசவப்பேர் கொண்டா.

(இ-பு) இந்நாள்முதல எமது பக்கத்தில் இடபுறத்திருந்து எந்நா ளுமமங்களகரமாக விளங்கும் விண்ணிலும் மண்ணிலும் உள்ளவா யாவரே னும் வந்துஉன்னை வணங்கினவர்கட்கு நன்மை பொருந்தும்வரங்கள் கொ டுத்து இவ்விடத்திலேயே வீற்றிரு என்றுகட்டளையிட அவ்வாறே அவ்விட த்திருந்தார் அந்த நாள்முதல் ஒளிவீசும சக்ராயுதமேந்திய கரத்தையுடை ஆதிகேசவப்பெருமாள் என்னுந் திருப்பெயா புனைந்தனர். எ-று. (௯௬)

திருமாலநேமிபெறறசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ௬௯.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வேதமோதுவித்த சருக்கம்.

---

சூதனிப்பரிசுசொற்றபோது தூய்வனத்தின்மன்னு
மாதவர்மகிழ்ந்துமீட்டுமறைசையெம்பெருமான்வாயால்
வேதமுத்தமவிண்ணோர்க்குவிளம்பியசரிதைதன்னை
யோதுதியையவென்றார்மற்றவனுமைப் பபதானன்.

(இ-பு.) சூதமுனிவா இவ்வாறு திருமால் சக்கரம்பெற்றசரித்திரத் தைச்சொன்னபொழுது புனிதமான நைமிசாரணியத்தில் நிலைபெற்றவா ரூம் பெரியதவத்தையுடைய முனிவரெல்லாம் மனங்களித்துப் பின்னும் சுருதிபுரியின்கண் எழுந்தருளியிருக்கும் எமதுசிவபிரான் திருவாயினுல் வேதத்தை நல்லதேவாகளுக்கு ஓதுவித்தசரித்திரத்தை எங்களுக்குக்கூறுமை யாவென்று கேட்டனர் அதற்கிசைந்து அச்சூதபுராணிகர் சொல்லுவதாயி னர். எ-று. மற்று-அசை. (க)

அன்னதுநிசழ்ந்தபின்னையண்டர்மாதவத்தோர்கூடிப்
பன்னகக்கலன்பூணிசன்பதமலரிணையிற்றாழ்ந்து
முன்னவமூவராகிமூவுலகளித்துக்காத்தும
பின்னரேயழிக்காநின்றபிஞ்ஞகவெனவேயேத்தி.

(இ - பு) அச்சோமுகாசுரனைச் சங்கரித்து வேதத்தைக்கொண்டு வந்தபிறகு தேவர்களும் முனிவர்களும் ஒருங்குகூடி நாகாபரணம்பூண்ட சிவபிரானுடைய இரண்டுமலர்போன்ற பாதங்களிலவணங்கி எங்கள்முதல்வரே மும்மூர்த்திகளாகிமூன்றுலகையும் சிருட்டித்தும் இரட்சித்தும்பின்பு சங்கரிக்கின்ற சிவபிரானே என்றுதோத்திரஞ்செய்து. எ-று. ஏ-அசை.

தூய்மறைதுறந்துபலவாண்டொழிந்தனந்துய்மைதீர்ந்தோம
வாய்மறையிழந்தோநலவழிமறந்திட்டோநன்மை
தீமையென்றிணங்கோந்தேவாகேட்டேவேநீயே
யாயமறையுரைத்தெயெங்கட்கறிவுறுத்திடுதியென்றார்.

(இ - பு) புனிதமுள்ளவேதத்தைநீங்கிப்பலவருடகாலங்கழிந்தோம் சீலத்தையொழிந்தோம் இசைந்தவேதபாராயணத்தையிழந்தோம நன்மார்க்கத்தைமறந்தோம இதுநனகு இதுதீங்கு என்று இணங்கெளியோம் ஆதலால் தேவதேவராய சிவபிரானே நீரே அத்தியாபகராய் எழுந்தருளி வந்து ஆயத்தக்கவேதத்தை ஓதுவித்து எங்களுக்கு மெய்யறிவுநிலைக்கச்செய்தருள்வாய்என்றனர். எ-று. ஏ-அசை. இவ்விரண்டுங்குளகம (௩)

வேதநீயெங்கட்கோதுவித்திடவேண்டுமென்று
மாதவர்மாகேட்பமங்கையோர்பாகத்தெந்தை
போதுவித்திடத்திருவுள்ள மொருப்பட்டாங்கொளிரும்பைம்பொற்
சோதிமண்டபத்தினோர்பூசுரவடிவாகிவந்தான்.

(இ - பு,) எங்களுக்கு நீரேவேதத்தை யோதுவித்திடவேணுமென்று முனிவர்களும் தேவர்களும் கேட்டுக்கொள்ள உமையொருகூறுடைய எந்தையான சிவபிரான் அவ்வேதத்தை யோதுவிக்கத்திருவுள்ள மிசைந்து அவ்விடத்திற் பிரகாசிக்கும் பசியபொன்னலாகிய சாந்தியையுடைய ஒரு மண்டபத்தினிடத்து ஒப்பற்றஅந்தணர் வடிவங்கொண்டுஅத்தியாபகராகி யெழுந்தருளிவந்தார். எ-று. (௪)

வேறு.

பூத்திடுங்கமலவதனமுங்கக்கம்பொலிதருஞானபுத்தகமுங், கோத்திடுமுருத்திராக்கமாலிகையுங்குலவியகமண்டலந்தண்டுஞ், சேர்த்தியவிடதுசெங்கையும்வலக்கைத் திகழ்செபமாலையுநூலும், மேற்றவெள்ளுடைசேரிடையுமென்பூதியிலங்குபுண்டரந்திகழ்நுதல
[வே,

(இ - பு.) விகசிக்கும் தாமரைமலர்போன்ற திருமுகமும் கக்கத்தில் பொலிந்துள்ள மெய்ஞ்ஞானபுத்தகமும கண்டத்தில வரிசையாய்க்கோத்துள்ள உருத்திராக்கத்தாழ்வடமும் கொண்டாடத்தக்ககமண்டலமும் தண்டமும் தாங்கிய சிவந்தஇடக்கரமும் வலக்கரத்திற் பிரகாசிக்கும் ஜெபமாலையும் மார்பினில் முப்புரிநூலும் தகுந்தவெள்ளிய ஆடைஉடுத்தமருங்கும்மிருதுவான் விபூதிகார்த்திசெய்யும நெற்றியில் திரிபுண்டரமுந் துலங்கும்படி. எ - று. ஏ - அசை. (௫)

நித்தனுமிறைவனரை திரைமுதிர்ந்த கிழப்பினனுமாய்ப்புயமே, லுத்தரியமுமென்காதினிற்புனைந்தவுயர்மணிக்குண்டலமொளிர, மெத்தரவணையானயன்மருங்கமர விண்ணவர்முனிவரர்சூழ, வத்திவத்திரனுங்குகனருகிருப்பவவர்குசையாதனத்திருந்தான்.

(இ - பு.) என்றும்மழிவிலலாதவராகிய சிவபிரான் நரையுந்திரையும் முற்றியகாலங்கடந்தபெரியவிருத்தவடிவமுமாய் தோண்மீதுஉத்தரியவத்திரமும் மென்மையான செவியிற்றரித்த விலையில்லாத இரத்தினமிழைத்த குண்டலம்பிரகாசிக்கவும் மிருதுவுள்ள நாகசயனரான திருமாலும் பிரமனும் அருகிலிருக்கவும்தேவர்களுமமுனிவர்களும்பக்கத்திற்சூழவும்கரிமுகரானகணபதியும் சுப்பிரமணியருமசமீபத்தில் அமர்ந்திருக்கவும பரந்த தர்ப்பாசனத்தின்கணவீற்றிருந்தனர். எ-று, இவ்விரண்டுங்குளகம். (௬)

தக்கவானவர்கந்தருவர்கிம்புருடர்தண்ணருள்விஞ்சையரியக்கர் திக்குறுமிறைவர் வசுக்களாதித்தர் சீதமாமதியொடுங்கோள்கள் மிக்கநற்றவஞ்செயிருடியர்ஞானவித்தகரியாவருங்குழுமிப், புக்கனராகிமண்டபமதனிற்புனிதன்முனின்றனர்மாதோ.

(இ - பு.) தகுதியுள்ளதேவர் காந்தருவர்கிம்புருடர்குளிர்ந்த தயையுடைய வித்தியாதரர் இயக்கர் பொருந்தியதிக்குப்பாலகர் அட்டவசுக்கள் பன்னிருசூரியர் சீதளமிருந்த சந்திரன் மற்றுமுள்ள கிரகங்கள் மிக்கதவம்புரியும் முனிவர் ஞானமுணர்ந்தபெரியோர் இவர் யாவரும் ஒன்றுகூடி புகுந்தவராய் இரத்தின மண்டபத்தின் கண் எழுந்தருளியிருந்த அத்தியாபகராய சிவபிரான்திருமுன்னர்நின்றனர். எ-று. மாது-ஓ அசை.

மணிவெயிலெறிக்குமண்டபத்தடைந்த வானவர்திரைதனைநோக்கிப், பணியணிபுனைந்தபராபரத்தொருவன்பரிவுளத்தெய்தினனாகி, யணிமலர்க்கரத்தாலிருக்க வென்றுரைத்தேயருணிறைவிழி மலர்பரப்பித்தணிவுளவேதசாத்திர முறைபகர்தகைமையி னமைந்தனன்மாதோ.

(இ - பு) இரத்தினங்களுடைய காந்தியானது பிரகாசிக்குமண்டபத்தின்கணசேர்ந்ததேவர்கணங்களைப்பார்த்து சர்ப்பாபரணமணிந்தபராபராகிய ஒப்பற்ற சிவபிரான் தமதுள்ளத்தில் அன்புற்றவராகி அழகிய தாமரைமலர்போன்ற கைத்தலத்தால்அவரவர்களைத்தக்க இடத்தில் இருக்வென்றுகூறிக்கருணைநிறைந்த கடாட்சம்வைத்துசாந்தமுள்ளவேதநூலைச் சொல்லும்பொருட்டு மேன்மையுடன் பொருந்தினர். எ-று. (௮) மாது, ஓ-அசை.

வேதத்தைநான்குகூறாய்விரித்ததில்விளங்குகின்ற
பேதத்தின்றுறைகள்பல்லாய்ப்பிரணவங்கலக்கப்பேசிச்
சாதிக்குமந்திரங்கள்சாத்திராகமங்கள்ஞானம் [றைவ.
போதிக்குமவகையையெல்லாப் பொருள்களும்புகன்றிட்ட

(இ - பு.) சிவபிரான் வேதத்தை இருக்காதி நான்குவேதங்களாய் விரித்து அவைகளில் விளங்குகின்ற பேதங்களாகியமார்க்கங்கள் பலவிதமாய்ஆதியந்தத்திலும் பிரணவம்பொருந்தும்படி ஓதுவித்துபிறகு சாதனஞ்செய்யத்தக்கமந்திரங்களும் சாத்திரங்களும் ஆகமங்களும் ஞானமும் போதிக்கின்றபக்குவத்தின்படி சகலபொருள்களும் உபதேசித்தனர். எ-று.

ஆதிவித்தாயஞானத்தமலனுரணங்கண்முற்று
மாதவத்துயர்ந்தோர்வானோர்மற்றுளபலருந்தேற
வோதுவித்திடலுமன்னோருணர்ந்துளத்தவலநீர்ந்தப்
போதின்மெய்ப்போதமேவிபொலிந்தனர்புகழ்மிகுத்தே.

(இ - பு.) முதற்காரணமாகிய ஞானமயனுன சிவபிரான் வேதங்களமுழுதும் பெரியதவத்திலுயர்வடைந்தமுனிவர்களும் தேவர்களும் மற்றுமுள்ளபலர்களும் மனந்தெளியும்வண்ணம் ஓதுவித்திடலும் அம்முனிவர முதலானோர் தங்களுள்ளத்தின்கண் உள்ளவருத்த நீங்கியப்பொழுதே மெய்ஞ்ஞானம் பெற்று மிக்கபுகழுள்ளவராய்ப் பிரகாசித்தார். எ - று. ஏ - அசை. (கo)

துறையார்சுருதிமுழுதுமந்தவானவருக்கோதுவித்து
மறையார்வடிவதெம்பெருமான்மன்னுமிலிங்கத்திடைக்கரந்தே
யுறையாநின்றான்வானவருமுலகத்தவரும்வியப்பெய்தப்
பிறையார்சடிலத்தவன்பெருமைபேசப்பேசப்பெரிதேயால்.

(இ - பு.) சன்மார்க்கம்பொருந்திய வேதமுற்று அவ்வானுலகுள்ள தேவர்களுக்கு ஓதுவித்து வேதியாதுவடிவங்கொண்ட எமதுசிவபிரான் தேவரும் இந்நிலவுலகத்தினரும அதிசயமடைய நிலைபெற்ற இலிங்கத்திடத்தில் மறைந்தருளினர் இளம்பிறைவளரும் செஞ்சடையுள்ள அச்சிவபிரானது மகிமையைச் சொல்லச்சொல்ல அளவுபடாதாகும். எ-று. (கக)
ஏ, ஆல்-அசை.

வேதமதனைத்திருவாயால்விளம்புநாளேமுதலாக
வேதபுரமென்றந்நகரைவிதித்தாரந்தவிதத்தகனை
வேதபுரிநாயகனென்றுவிண்ணோயாதியுலகுரைக்கும்
வேதபுனிதன்மான்முதலோர்விலகாதிருப்பரவணென்றான்.

(இ - பு) சிவபிரான் திருவாய்மலர்ந்து வேதத்தை ஓதுவித்தநாளே ஆதியாகக்கொண்டு அந்நகரத்தைச் சுருதிபுரமென்றுவழங்கினர் அச்சிவபிரானை வேதபுரீசரென்று வானுலகமுதலிய உலகத்துள்ளவர்களும் புகழ்ந்துத்துதித்தனர் வேதபுங்கவனுன பிரமன் திருமாலாதியமற்றைய தேவர்களும் அத்தலத்தைவிட்டு நீங்காது அவ்விடத்திலேயே வாசமாயிருப்பாரென்றுஞ்தமுனிவா னைமிசாரணியமுனிவர்களுக்குக்கூறினர். எ-று, (கஉ)

வேதமோதுவித்த சருக்கம் முற்றிற்று.

ஆ..திருவிருத்தம் உஅ௩.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அம்மைதவம்புரிந்த சருக்கம்.

இவ்வகையேசூதமுனியியம்பலுநைமிசவனத்துச
செவ்வியமாதவர்வியந்துசிவன்செயலையுளந்தேரா
அவ்வியந்தீர்த்திடும்பெரியோயம்பிகையாதவம்புரிந்து
வெவ்வினைதீர்த்தவையுரைத்தியெனவவனுமவிளம்புவான்.

(இ-பு.) இவ்வண்ணம் சூதமாமுனிவர் வேதமோதுவித்த சரித்திரத்தைக் கூற நைமிசாரணியத்துள்ள செட்பம அமைந்த மகாதவசிகள் வியப்படைந்து சிவபிரான் திருவருளை உள்ளத்தின்கண் தேர்ந்து அழுக்காறகன்ற சூதபுராணிகரே உமாதேவியார் தவம் புரிந்து கொடியவினை நீத்தமையைக் கூறவேண்டுமென்று கேட்கச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர். எ-று (௧)

முன்பொருகற்பாந்தத்தின்முகுந்தன்முதல்வானவரும்
வன்புயர்பன்னகராதிமண்ணுலகத்துயிர்பலவு
மின்பெருமாமேருமுதல்விளங்கியதாவரம்பலவு
நன்புகழாரணமுறைத்தநாதனிடத்தேகரந்த.

(இ-பு.) முன்னம் ஒருகற்பகமுடிவில் திருமால் முதலியதேவர்களும் வன்மையின் மிக்கநாகமுதலிய நிலவுலகத்தின்கணுள்ள பலஜன்மவர்க்கங்களும் விளக்கத்தையுடைய பெரிய மகமேருகிரிமுதலான ஓங்கும் பலதாவரவர்க்கங்களும் நல்லபுகழமைந்த வேதங்களையோதியருளிய சிவபிரானிடத்து ஒடுங்கின. எ-று. ஏ-அசை. (௨)

அண்டத்தினுறுந்தோற்றமனைத்துந்தன்னிடத்தடங்கக்
கண்டத்தின்பெருமையினற்கருத்திலுயர்களிப்போங்கிப்
பண்டைப்போலுலகளிப்பப்பண்புநுதன்றிருவுளத்திற்
கொண்டக்கால்வீரட்டகாசஞ்செய்குணத்தவனாய்.

(இ-பு) உலகத்திலுள்ள சராசரங்களாகிய அனைத்தும் தன்னிடத்து ஒடுங்கக்கண்டு அப்பெருமிதத்தாற்றமது திருவுள்ளத்துமிக்கவியப்பதிகரித்து முன்போலச்சராசரங்களைத் தோற்றுவிக்கப்பண்பமைந்த தமதுதிருவுள்ளத்துக்கொண்டு அக்காலையில் வீரட்டகாசஞ்செய்யுங்குணமுடையவராய். எ-று. (௩)

குணக்கிலரைக்குரோசத்திற்கோலமுடனங்கிருந்து
மணக்குழுயர்பைந்துளபமான் மலரோனையுமளித்துக்
கணக்கறுபலவிதத்தாயசராசரங்களகற்பனைசெய்
திணக்கமுறுமபண்டேபோலியாவையுந்தந்தங்கிருந்தான்.

(இ - பு.) கிழக்குத்திக்கில் ஒருகுரோசதூரத்தில் அலங்காரத்துடனெழுந்தருளிஇருந்துபரிமளிக்கும் உயர்ந்தபசியதுளபமாலையணிந்ததிருமால் பிரமனையுந்தோற்றுவித்து எண்ணற்றபலவிதங்களாய சராசரங்களைச்சிருட்டித்து இணக்கமாகும்படிமுன்புபோலவே எல்லாவற்றையுஞ் சிருட்டித்து அவ்விடத்தில்வீற்றிருந்தருளினா. எ-று. ஏ-அசை. குரோசமென்பது கூப்பிடுதூரம். (௪)

இப்பரிசுசிவனுங்கணினிதிருக்கும்போதுமையா
ளொப்பரியகன்னியாகளோரெழுவருடனுக
மைப்புயலினெழில்குலவமகிணனைதேடினளாகிக்
கைப்பயிலாமலகமெனக்கண்ணுதலாங்குறக்கண்டாள்.

(இ-பு.) இவ்வண்ணமாகச் சிவபிரான் அவவிடத்தினிமையாகவிருக்குங்காலத்து உமாதேவியார் ஒப்புகூறுதற் கருமையாகிய சத்தகன்னியர்கள தன்னுடன்வர பசியமேகத்தினசெலவுபோல் அழகுவிளங்கத்தமது கணவராகிய சிவபிரானைத்தேடிக்கொணடு கையில் ஆமலகம்போல் நெற்றிக்கணணுடைய அச்சிவபிரான் அவ்விடத்திருககக்கண்டாா. எ-று.

கண்டுமகிழ்நதாங்கிருக்குங்கடவுடனைக்காதலினால
வண்டமர்பூங்குழலுமையாள்மாாபினுறத்தழுவினளா
லண்டர்பிரான்மகிழ்ந்தனையோடாங்கிருந்தாளுடன்வந்த
சண்டியெழுவருஞானதற்பரனைப்பூசித்தார்.

(இ - பு.) கண்டவுடன்மகிழ்ச்சியுற்று அவ்விடத்திருககுஞ் சிவபிரானைப் பேராசையுடன் வண்டுகள சஞ்சரிக்கும் மலர்களணிந்த அளகத்தையுடைய உமாதேவியார்தமது மாாபம்பொருந்தத் தழுவிக்கொண்டனர் தேவர்பிரானுகிய சிவபிரான்களித்து எமதன்னையாாகிய உமாதேவியாருடன் அவ்விடத்து வீற்றிருந்தனா அவ்வுமாதேவியாருடன்வந்த காளிமுதல் சத்தமாதரும் ஞானதற்பரனுகிய சிவபிரானைப்பூசித்துவந்தார்கள். எ-று. ஆல்-அசை. (௬)

சாமுண்டி முதலேழுமையலர்பூசித்திடலுந்
தேமண்டியலர்கடுகைத்தேவர்பிரான்மகிழ்வெய்திப்
பூமண்டலத்திவுணீர்புரிந்திடுபூசனைக்குகந்தோங்
காமண்டுவான்புகழிக்கவினகரினிருமென்றான்.

(இ-பு) சாமுண்டிமுதலிய சத்தகன்னியர்களும் இவ்வாறு பூசித்துவர வாசனைமிகுவிகசித்த கொன்றைமாலையணிந்த தேவர்களிறைவராகிய சிவபிரான்மகிழ்கூர்ந்து இந்நிலவுலகத்து இவ்விடத்தில் நீங்கள்செய்து வந்த வழிபாட்டிற்கு வியந்தோம் சோலைகள் நெருங்கிய சிறந்தபுகழமைந்த இந்த அழகியநகரத்திலிருங்களென்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று.

வேறு.

வாரையிட்டகொங்கைகாளிவைகுகின்றவண்மையாற்
பேரையிட்டழைப்பர்காளியூரதெனறுபேசரும
வீரவட்டகாசமாகமேவியுற்றநாதனை
வீரவட்டவீசனென்றுவிண்ணுளோருமோதுவார்.

(இ-பு) கச்சணிந்த தனங்களுடைய காளிகாதேவி வீற்றிருக்கும் வளப்பத்தால் அவ்வூரைக் காளியூரென்னும் பெயரிட்டழைப்பார்கள் யாவராலும் சொல்லுதற்கரிய வீராட்டகாச உருவத்துடன் அவ்விடத்து வீற்றிருக்கும் சிவபிரானை வீரட்டேசரென்று தேவர்களுந்துதிப்பார்கள். எ-று.

இந்தவாறவ்வெந்தையும்மிலங்குகொங்கைநங்கையு
முந்துகற்பகோடிகாலமுத்தொழிற்குநாதராய்த்
தந்தளிந்தழிந்துவந்துசார்ந்திருந்தவெல்லையில்
வந்தவாறுகேளுமீசன்மகிமையென்றியோதுவான்.

(அ-பு.) இவ்வண்ணம் எமதுதந்தை யாராகிய சிவபிரானும் விளங்கும் தனபாரங்களுள்ள உமாதேவியாரும முற்பட்ட கற்பகோடிகாலம் சிருட்டிதிதிசங்காரம் என்னும் மூன்றுதொழிற்கும் தலைவராய்ச் சகலசராசரங்களையும் சிருட்டித்தும் காத்தும் சங்கரித்தும் மனக்களிகூர்ந்து அவ்விடத்திருந்த காலத்துச் சிவபிரான்திருவருளினால்விளைந்ததைக்கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே என்று சூதபுராணிகர் இதைக்கூறுகின்றார்.

வேறு

முன்னம்பிறைவனையிகழ்ந்துதக்கன்மகமுடித்திடுவான்முயலும
ஞ்ஞான்று, றன்னையிறைவனைவணங்கிபெந்தைமகங்காணவிடையளிக்கவென்றாள், பன்னிமொழிக்கரன்றடுப்பக்கேளாமற்றுயில்லப்பரிவாற்சென்று, தன்னனைதந்தையர்வெறுப்பத்தானுணர்ந்துமறை
நதிமயச்சயிலஞ்சார்ந்தாள்.

(இ-பு) பூர்வம் சிவபிரானை அவமதித்துத்தக்கன்யாகஞ் செய்து முடிக்கமுயன்ற அந்நாள் நமதன்னையாராகிய உமாதேவியார்சிவபிரானைத் தொழுது எனதுபிதாசெய்யும் யாகத்தை நான் காணும்படி விடைதரவேண்டுமென்று கேட்க அவ்வாறுரைத்ததமது காதலியார்வார்த்தைக்குச்சிவபிரான் இணங்காது தடுக்க அதைகேளாமல்தாய்வீட்டின் ஆசையாற்செ

ன்று தமதுமாதாவும் பிதாவும்தம்மீது வெறுப்படைந் திருப்பதைத்தெரிந்து உடனே அவ்விடத்தி னின்றும் மறைந்து இமயமலையைச் சார்ந்தனர் உமா தேவியார். எ-று. (௧0)

மலையரையன்மகளாகி வருமயிலைமேனையன்பால்வளர்ப்ப வீழ்க் கலைமதிபோலவளர்ந்தேறுங்காலையிறசேடியாகருடன்கனிவாய்நெ ஞ்சரு, சலமறுவெமபெருமான்பொறறுளையருசிக்குமவினைதவிர் தலின்றிப, பொலன்மலர்க்கொம்பெனமங்கை பொமமவிளமுலைப் பருவமபொருந்தினளால,

(இ - பு) அவ்வாறு இமயமலையரையனிடத்துப்புத்திரியாகி அவதரித்தமயிலபோலுஞ் சாயலுடைய உமாதேவியாரை அவ்வரையன் பத்தினியாராகிய மேனாதேவியார் பேரன்புடன் வளர்க்க வளர்ந்துற்று சோடசகலைகளையுடைய சந்திரனைப்போல வளர்ந்து வருங்காலத்து தாதிகளுடன் மனக்கனிவுடையராய் திருவுள்ளத்துத்துன்பம் நீங்க எமது சிவபிரான் பொன்போலும் திருவடிகளைப்பூசிக்கும வழிபாட்டில்தவறுதலின்றி அழகியமலர்க்கொம்பு போல அவ்வுமாதேவியார் பூரிப்படைந்த இளமுலையுடையபருவம் அடைந்தனர். எ-று. ஆல- அசை- (௧௧)

மங்கையெழிற்பருவத்தில்வளர்தநியலைவந்தழுறைப்பண் வதிந்து ஞானப்புங்கவனையுளத்திருத்திபூசைவதவமபுரிதலுமப்புனிதனே ர்ந்து, பொங்குமருட்கடலபெருகபபுங்கவர்மாதவர்சூழபபோந்து தோற்ற, விங்கிதபபொற்கொடியாளையிளமுலையேயென்னவழைத்து இதனைச்சொன்னன.

(இ - பு.) அழகியமங்கைப் பருவத்தில் வளர்க்கப்பட்ட பஞ்சாக்கினிமத்தியிலிருந்து சிவபிரானைத் திருவுள்ளத்தமைத்து உமாதேவியார் தவம்புரிந்து கொண்டிருக்கஇதைச்சிவபிரானுணர்ந்து ஓங்கியதிருவருட்கடலானது பெருகிய காரணத்தால் தேவர்களும் மகாதவசிகளும் தம்மைப் புடைசூழ்ந்துவர அவ்விடத்தடைந்து அருந்தவம்புரிந்தஅலங்காரமமைந்த பொன்னாலாகிய கொடிபோன்ற உமாதேவியாரை இளமுலையே யென்று அழைத்துஇவ்வாறு திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (௧௨)

நீயியற்றுமருந்தவத்தினினைவுணர்ந்தேமுனைவேட்டனிலமையே னுந், தாயகத்துக்கெமதுமொழிதடுத்துமுனமகங்காணச்சார்ந்தபாவம், போயபிறப்பினிலுன்னைபபொருந்தியுளதவைதீர்திபூவையெ ன்ன, வாயவுரைகேட்டமலனடியிணையிலிறைஞ்சியிலவயறைகின் [றுளால.

(இ - பு.) நீ இயற்றுகின்ற அரியதவத்தின்கருத்தறிந்தோம் உன்னை மணம்புரிதல் இயலியானாலும் உனதுதாய்வீட்டுக்கெமதுவார்த்தையை

மறுத்து முன்னே தக்கனது யாகங்காணச்சென்ற பாவமானது சென்றபிற வியிலும் என்னிடத்துப் பொருந்தியிருப்பதால் அப்பாவத்தைத்தீர்த்துக்கொள் பெருமானே என்றுகூற அவ்வார்த்தையைக்கேட்டுச்சிவபிரான் இரண்டுதிருவடிகளிலும்வணங்கி உமாதேவியார் இவ்வாறுகூறுகின்றனர். எ-று. ஆல்-அசை. (கந)

நான்பேதைச சிறுமியென்பானண் ணுபவந்திரும்வகைநயற்றியென்னை, தேன்போதங்கொன்றையணிதேவனிவையுரைக்கின்றான் சின்றுடனனி, ஊன்பேதத்துறுபவமபோமுணமையிதுகேட்டியுமபர்க்குயர்வேதத்தை, நான்போதித்திடுதல மொனறுளததனிலெற்பூசைநடத்திலென்றான்.

(இ - பு.) யான்பேதமையுடைய சிறியாளாகையால் என்னிடத்துப் பொருந்தியுள்ள பாவம்நீங்கும்விதத்தைத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேணுமென்றுகூறத்தேன் தங்கிய அழகிய கொன்றைமலர்மாலையையணிந்த சிவபிரான் இவ்வாறு திருவாய மலர்ந்தருளுகின்றார் தேவர்களுக்குமேலாகிய வேதங்களையாம் போதித்ததலம ஒன்றிருக்கின்றது அத்தலத்தில்என்னைப பூசித்தால சிலநாளைக்குள் உனக்குமுறபிறவியிறசேர்ந்தபாவம நீங்கும இது உண்மையானவாக்கியம என்றுரைத்தருளினர். எ-று. (கச)

வேறு.

நாதனீதுரைத்தலோடுநாகராசனூர்சுதை
யேதமேதுமேயிலாதவெநதைதாளிறைஞ்சியே
வேதமோதுவித்தக்கேதத்திரத்தில்யானுமெய்தியுன
பாதமீதிலேயலோபணிந்துபூசைசெய்வதே.

(இ - பு.) சிவபிரான் இவ்வாறுரைத்தருளலும இமயவரையரையன் புதல்வியாகிய உமாதேவியார் குற்றமெனபதனுமேனும்பொருந்தியிலாத எமதுதராகிய சிவபிரான்திருவடிகளைத்தொழுது வேதங்களைத்தேவர்களுக்கு ஓதுவித்ததலத்தில் யான் அடைந்து உமதுதிருவடிமீதுதானே தையா பணிந்துபூசைசெய்யவேணுமெவது. எ-று. ஏஇரண்டும்அசை. (கரு)

ஈண்டிசைந்துபூசையுன்பதத்தில்யானியற்றுவேன்
பூண்டவென்பவக்குறும்புபோகவென்றுபூங்கொடி
வேண்டுகின்றபோதுஞானவித்தகன்மகிழ்ச்சியாற்
றாண்டுமென்பினுலுமீதுமாதிரேறுசொல்லினன்.

(இ - பு) இவ்விடத்திற்றானே எனதுமனமொருப்பட்டு நமதுதிருவடிகளில் பூசையியற்றுகின்றனன் அதனையேற்றுக்கொண்டு எனக்குநேர்ந்தபாவமாகிய குற்றத்தை நீக்கவேண்டுமென்றுமலர்க்கொடிபோன்ற உமா

தேவியார் பிரார்த்தித்தகாலத்துசிவபிரான் உள்ளக்களிப்பினால் அதிகரித்த பேரன்புடனும் இவ்வாறு அவ்வுமாதேவியாருடன்கூறியருளினார். எ-று

அரும்புமென் மணித்தனத்தணங்குகேட்டியுன்னலம்
விரும்புகின்றவாற்றினால்விளம்புகின்றதாதறோர்
சுரும்புகவ்வையுண்டுபாண்மிழற்றுசோலைசூழுமப்
பெரும்புகழ்த்தலத்தின்மேன்மைபேசுவேன்றெளிதியால்.

(இ - பு.) தாமரையரும்புபோலும் மிருதுவாகிய அழகியதனங்களையுடைய உமையேநீகேளாய உனதுநேயம் விருமபுகின்றதன்மையால்சொல்லுகின்றதென்று தெரிந்துகொள தேனைபபுசித்து வண்டுகள் பண்களைப் பாடும் சோலைசூழ்ந்த அந்தபெரியபுகழையுடைய தலத்தின்பெருமையைச் சொல்லுகின்றேன தெளிந்துகொள. எ-று. ஆல்-அசை. (கஎ)

மாதர்தங்கள் மகிணர்சொன்மறுத்தன்மிக்கபாதமாந்
தீதுதீருமென்னை யாண்டுநூறுபூசைசெய்திடிற்
கோதில்வேறுகேதிரத்துகூறுமவேதமவிண்ணவர்க்
கோதுமததலத்திறபக்கமொன்றிறதீருமன்றியும்.

(இ - பு.) மகளிர்கள் தஙகள் மணாளர்கள் வார்த்தையை மறுத்தல் மகாபாதகமாம் அப்பாதகம் வேறுகியகூறமற்ற இத்தலங்கிளில் நூறுவருடம்என்னைபூசித்தாலதீரும யாவரும்துதிக்கும வேதஙகளைதேவர்களுக்கு ஓதிய அநதத்தலததில் பதினைந்துநாள பூசிததால்தீரும் அதுவன்றியும. எ-று

அன்னநற்றலத்தின்மிக்கவன்பெமக்குமுள்ளதான்
மன்னுவெறபில்யானிருக்குநாண்மதிககில்வானமறை
பன்னுநற்பதிக்குள்வாழுநாள்களபததிலொன்றெனக
கன்னிகைக்குளஙகலநதகாதலோடுமோதியே.

(இ - பு) அந்ததிவ்வியதலததில் மிகவும அன்புஎனைக்குமுண்டு இநிலைபெற்றதிருக்கயிலையில் யானிருக்கும் நாளையெண்ணிபபாாககில் உயர்ந்த வேதஙகளையோதுவிசத நலலதலததில் வாழுநாளகள பததில் ஒருநாளாகுமென்று உமாதேவியாருக்குத்தமது திருவுளததிற்கலந்த ஆசையுடன் கூறியருளி. எ-று. ஆல்-ஏ-அசை, (கக)

வேறு.

கொடியனையாட்கிவையுரைததுக்குன்றரசன்முகநோக்கிப்
படிமிசைவானவர்க்குமறைபகர்ந்தவெழிற்றிருநகரிற்
கடிமணஞ்செய்தற்கமைநதேங்கதிர் மணிமெல்லிளமுலையாந்
துடியிடையையவண்கொடுபோவெனுமாற்றஞ்சொற்றலுனால்

(இ - ள்.) கொடிபோன்ற இடையையுடைய உமாதேவியாருக்கு இவைகளைக்கூறி இமயவரையரையன் முகத்தைப்பார்த்து இந்நிலவுலகின் கண் தேவர்களுக்குவேதம் ஓதுவித்த அழகியசுருதிபுரியில்திருமணம்புரிதற் கிசைந்தேம் ஆகையால ஒளிவீசும் இரத்தினமாலைகளணிந்த இளமுலையா ளாகிய உடுக்குப்போலும்இடையையுடைய உமதுபுத்திரியை அவ்விடத்து அழைத்துக்கொண்டுபோ என்னுமவார்த்தையைக் கூறியருளினார். எ-று.

கருணையினாற்பின்னுமெழுகன்னியர்கண்முகநோக்கி
யரிவையுடனீவிர்களகடைதிரெனவருள்செய்து
பெருகுமெழிலயிராணிமுதலவானப்பெண்களையு
மருவுகுழலுடனேகெனவுரைத்தமலனவரைசார்ந்தான்.

(இ-ள்.) பின்னும் கிருபையினால் சத்தகன்னியருடைய முகத்தைப் பார்த்து உமாதேவியோடு நீங்களும் அம்மலைசைமாநகரத்தையடையுங் களென்று திருவருள்புரிந்து மிக்க அழகுவாய்ந்த இந்திராணிமுதலிய தெய் வப்பெண்களையும் அவ்வுமாதேவியுடன் செல்லும்படி திருவாய்மலர்ந்து சிவ பிரான் திருக்கைலையை அடைந்தார். எ-று (௨௧)

வரையரையன்றிருமடந்தைமணிச்சிவிகைமீதேறி
யரமகளிர்புடைசூழவருகிலெழுமாதர்களும்
விரைமலர்க்கால்வட்டபெழிலவெண்கவரிகாளாஞ்சி
புரையின்மணிப்பொன்னடைப்பைபொறுத்தவர்கைக்கொ
[டுபோத.

(இ - ள்) இமயவரையரையன் திருக்குமாரத்தியாகிய உமாதேவி யார் இரத்தினகசிதமான பல்லக்கின்மீதாரோகணித்துத் தெய்வமாதர்கள் புடைசூழ்ந்துவரவும் பக்கத்திலே சத்தகன்னியர்களும் வாசனைகமழும் மலர்களாலாகிய காற்றுவீசநீக்க ஆலவட்டத்தையும் அழகிய வெண்ணிற மான சாமரங்களையும் நடைப்பட்டிக்கத்தையும் குற்றமற்ற இரத்தினங்க ளழுத்திய பொன்னாலாகிய அடைக்காயப்பையையும் தங்கள்கைகளிற்றாங் கிக்கொண்டுசெல்ல. எ-று. (௨௨)

மாடகயாழ்வீணைபலமாதர்கரத்தேந்திவர
வாடல்புரிந்திடுங்கழங்கம்மானையுடனன்பினொடும்
பாடுமடக்கிளிகளையும்பொற்பசும்பூவைபலதாங்கி
யேடவிழுமலர்க்குழலாரினிதுதனிசூழ்ந்துவர.

(இ - ள்.) முறுக்காணியையுடையயாழாகிய வீணைகளைப் பலதெய் வப்பெண்கள் கரத்திற்றாங்கி வாசித்துக்கொண்டுவர விளையாடுகின்ற கழங் கும் அம்மானையும் அன்போடு இசைபாடும இளங்கிளிகளையும் அழகிய பசியநாகணவாய்ப்பறவைகளையும் பலமாதர்த்தாங்கிக்கொண்டு இதழ்விரிந்த

மலர்தரித்த அளகத்தையுடைய பலமாதர்கள் இணைமையாகத் தனித் தனி புடைசூழ்ந்துவர. எ-று. (உ௩)

அன்னைபெழிற்சிவிகைமிசையரிவையர்கள்குழுமலொடும்
பின்னணியிற்றொடர்ந்துவரப்பிறங்குமணிதேர்கரிமா
மன்னுபடைக்கலவயவாமலிந்தபலசேனையொடும்
பொன்னணிசெய்தேர்மிசையிமவான்புறங்காத்துப்பின்புவர.

(இ-பு.) எமதன்னையாராகிய உமாதேவியார் பல்லக்கின்மீது மகளிர்கள் கூட்டங்களுடன் பின்னணியாகத்தொடர்ந்துவர ஒளிவிளங்கும் அழகிய இரதம் கசம் துரகம் நிலைபெற்றபதாதிகள் ஆகியவெற்றிமிகுத்த சதுரங்கசேனையுடனும் பொன்னாலாகிய அழகிய தேர்மீது இமயவரையரையன் புறக்காவலாகப் பின்தொடர்ந்துவர. எ-று. (உ௪)

வானவர்பூமழைபொழியமாதவத்தோர்துதிசெய்யக்
கானவிசைநாரதருங்கந்தருவர்பாடிவர
வானிடைத்துந்துபிமுழங்கவழிகொண்டுநடந்தெய்தித்
தேனலருமலர்ச்சோலைத்திருமறைசைப்புறத்தடைந்தாள்

(இ-பு.) தேவர்கள் மலர்மாரிசொரிய மகாதவசிகள் தோத்திரஞ்செய்யக் கானத்தோடுகூடிய விசைகளைப்பாடும்நாரதரும் கந்தருவர்களும் பாடிக்கொண்டுவர ஆகாயத்தினிடத்து தேவதுந்துபிகள்முழங்கப் பிரயாணப்பட்டுச்சென்று சமீபித்துத் தேன்றுளிக்கும் மலர்கள்நிறைந்த சோலைகள்சூழும் அழகிய மறைசைமாநகரத்தின் புறத்திற்சேர்ந்தார் உமாதேவியார். எ-று. இந் நான்குங்குளகம், (உ௫)

வேதபுரத்தினிலிருக்கும்விண்ணவருமந்தணரு
மாதவருமரம்பையருமணிநிறைபொற்குடமேந்தித்
தாதவிழ்பூங்குழலாளுக்கெதிர்சென்றுதாடொழுது
கோதிலெழின்மறைநகரிற்கொம்பனையைக்கொண்டடைந்தார்.

(இ-பு.) சுருதிபுரியில்வசிக்கும் தேவர்களும் மறையவர்களும் மகாதவசிகளும் தெய்வப்பெண்களும் இரத்தினகசிதமான பொன்னாலமைத்த கரகங்களையேந்திக்கொண்டு மகரந்தப்பொடிகள்சிந்தும் மலர்மாலையணிந்த அளகபாரத்தையுடைய உமாதேவியாருக்கு எதிரிற்சென்று திருவடிகளில் வணங்கிக் குற்றமற்ற மறைசைமாநகரத்தினுள்ளே அவ்வுமாதேவியை அழைத்துக்கொண்டு சேர்ந்தார். எ-று. (உ௬)

வேறு.

அந்தரதுந்துமியார்த்தனவானோர்
சிந்தினர்பூம்மழைசெய்தவரெல்லா

மந்திரவாசிவழங்கினரியாரும்
புந்திமகிழ்ச்சிபொருந்தினர்மாதோ.

(இ - பு) அந்தரதுந்துமி முழங்கின தேவர்கள்மலர்மாரிசொரிந்தார்கள் தவசிகள் அனைவரும மந்திரமாகிய ஆசிவசனங்கூறினர் மற்றுள்ள யாவரும் மனக்களிப்புற்றனர்கள். எ-று. மாது, ஓ-அசை. (உஎ)

ஆரணமாநகரின்னணிநோக்கிக்
காரணிநெஞ்சுகளித்தனளாகித்
தோரணவீதிகடந்துதுலங்குந
தேரணிகோபுரவாயிலசெறிந்தாள்.

(இ - பு.) சுருதிபுரியின் அழகைப்பார்த்து உமாதேவியார் மனக்களிப்புடையராகித் தோரணங்கள் அசைந்து கொணடிருக்கும வீதிகளைககடந்து பிரகாசிக்கும தோகிறகும நிலைக்கெதிரிலுள்ள கோபுரவாயிலை அடைந்தார். எ-று. (உஅ)

எழின்மிகுதண்டிகைநின்றுமிறங்கித்
தொழுதிடுகையினடொல்லமராக்கோர்
வழிநிகாகோபுரவாயிலபுகுந்தே
பழுதறுமங்கலவாவிபடிந்தார்.

(இ - பு.) அழகுமிகுத்த சிவிகையினின்றும் இழிந்தவழிபாடு செய்யுங்கையினராய் பழய தேவாசுருகுக ஓர்வழியொத்தகோபுரவாயிலிற்புகுந்துகுற்ற மற்ற கல்யாணகோடியென்னுந்தீர்த்தத்தில் நீராடினர். எ-று. ஏ-அசை. (உகூ)

புண்ணியவெள்ளியநீறுபுனைந்தா
ணண்ணியவக்கரமஞ்சுநவின்றாள்
கண்ணுதலைக்கருதிகதொழுகையா
ளுண்ணிறையன்பினொடெந்தையையுற்றாள்.

(இ - பு.) புண்ணிய வண்ணமாகிய வெணடிருநீறு தரித்துக்கொண்டு அன்பர்கள் இதயத்தில் விளங்கிய பஞ்சாக்கரத்தைச் செபித்து நெற்றிக்கண்ணராகிய சிவபிரானைத் தியானித்துத்தொழுகின்ற திருக்கரங்களுடையவளாய் உள்ளத்தின் கண்நிறைந்த மெய்யன்பினோடும் எமது தந்தையாராகிய சிவபிரானைத்தரிசித்தார். எ-று. (௩0)

கோகனகக்கைகுவித்துவணங்கி
யாகமுறத்தழுவத்தனதாசைச்
சோகமுரைத்தனள்சூழ்ந்துபணிந்தே
யேகனையர்ச்சனைசெய்யநினைந்தாள்.

(இ-பு.) தாமரைமலர் போன்றதமது திருக்கரங்களைக் குவித்துத்தொழுது திருமேனியிற் பொருந்தத் தழுவும்படிக்குத்தனக்குண்டாயிருக்கும் ஆசைப்பெருக்கைக்கூறினவாராய் வலம்வந்து பணிந்துஏகபரம் பொருளாகிய சிவபிரானைப்பூசிக்கத் தொடங்கினர், எ-று. (௬௧)

வேறு.

உம்பர்தமக்கோத்தளித்தவொருமுதலுக்குத்தரத்திற்
செம்பொன்மதிற்பிராகாரமிரண்டதனிற்றிலதநுதற்
கொம்பனையாளபூதத்தின்கொள்கையினாலமைந்திருந்த
நம்பரரைவரையுமங்குநவின்முறையாற்பூசித்தாள்.

(இ-பு.) தேவர்களுக்கு வேதம்ஓதுவித்த இறைவராகிய சிவபிரான் ஆலயத்திற்கு வடக்கின்கண் சிவந்த பொன்னாலாகிய இரண்டாவது மதிற்பிராகாரத்தில் திலதமிட்டிய நெற்றியையுடைய உமாதேவியார்பஞ்சபூதத்தின்கூறாக பொருந்தி இருக்கும சிவபிரானாகிய ஐந்துமூர்த்திகளையும் அவ்விடத்திற்றானே ஆகமத்திலவிதித்தமுறைப்படிபூசித்தார. எ-று. (௬௨)

பூஙகொடியாளபினுந்துகிரைப்போன்றவெழிலணிவிரலா
லோங்கியநன்னிலத்தூன்றவுரகருலகளவாழ்ந்து
தேங்கியதண்கங்கையினாற்றேவருக்காரணங்களுரைத்
தாங்குறையும்பெருமானையன்பினுடனாட்டினளால்.

(இ-பு.) மலாக்கொடி போன்ற உமாதேவியார் திரும்பவும்பவளம் போன்ற அழகுவாய்ந்த தமது திருவிரலால வளாநதோங்கும் பூமியில் ஊன்றின வுடன் நாகருலகளவும் அழுந்திப் பெருகிய குளிர்ந்த கங்கைநீரினால் தேவர்களுககு வேதம் ஓதுவிதது அவ்விடத்தெழுந்தருளியிருக்கும் சிவபிரானைப் பேரன்புடன் அபிடேகித்தாா. எ-று. ஆல்-அசை. (௬௩)

கன்னியரோரெழுவர்களுங்கையேவலசெய்துநிற்பப்
பொன்னுலகத்தரம்பையாகளபுடைசூழ்நதுதொழுதிறைஞ்ச
விந்நிலமாதியற்றுதவத்தியல்போங்கவிப்புவிமே
லன்னையெகநோன்றனைப்பூசையாதரித்துசசெய்தமர்ந்தாள.

(இ-பு.) சத்தகன்னியாகளும் பூசைககேற்றபணிவிடைகள்செய்துகொணடிருக்கத் தேவலோகத்து அரம்பாமாதாகள் பக்கத்திற்சூழ்ந்துவணங்கியேதத இந்நிலவுலகத்துமாதாகிய பூதேவிசெய்த தவத்தினமேம்பாடு விளங்க இப்பூமியின்கண எனதன்னையாராகிய உமாதேவியார் எமதிறைவராயுள்ளசிவபிரானைவிரும்பிப்பூசித்து அவ்விடத்திறறானேவீற்றிருந்தாா.

காதலுடனிவ்வாறுகயமுகனைப்பூசனைபுரியச்
சீதமதிநுதி வெள்ளிரசிவபெருமானைசிந்தைதரியச்

தேதமறும்பவளமலையெனவெழிலோங்கிடவிடப
மீதினிற்பண்ணவர்முனிவர்மிகத்துதிப்பமுனமடைந்தான்.

(இ - பு.) பெருவிருப்புடன் இவ்வண்ணம் இளமுலைநாயகியாராகிய உமாதேவியார் பூசிக்கக்குளிர்ச்சிபொருந்திய சந்திரனையுங்கங்கையையுந்தரித்தசடையையுடைய சிவபிரான்திருவுள்ளமுவந்து பழுதற்றபவளமலைபோன்று அழகுவிளங்கும்படி இடபவாகனத்தின்மீது தேவர்கள் முனிவர்கள் மிகவுந்துதிக்க அவ்வுமாதேவியார்க்கு எதிரில் காட்சிகொடுத்தருளினூர.

அன்புடனே பூசித்தவாடகமென்கொடிவேற்கண்
முன்புறநின்றிடனேக்கிமுகிணகையுட்களிபொங்கி
மென்புணர்சேவடிக்கமலவிரைமலரைத்தொழுதேத்த
நன்புகழ்நாயகன்கருணைகூர்ந்திதனைநவிற்றினூல்.

(இ - பு) மெய்யன்புடனேவழிபாடுசெய்த பொற்கொடியாகிய வேல்போலுங் கண்களையுடைய உமாதேவியாருக்குஎதிரில் சிவபிரான் காட்சிகொடுக்கக்கண்டு முகிழ்த்த புன்முறுவலுடைய அவ்வுமாதேவியார்தமதுள்ளத்தின்கண் மிக்க வியப்படைந்து மென்மை பொருந்திய அவரது சிவந்ததிருவடிகளாகிய தாமரையென்னும்வாசனைகமழும்மலர்களைவணங்கித்துதிக்க நல்லகீர்த்தியுள்ள சிவபிரான் கிருபைகூர்ந்து இவ்வாறு திருவாய்மலர்ந்தருளினர். எ-று ஆல்-அசை. (௩௬)

பன்னெனதுமொழிகடந்தபவந்தொலைந்ததினியுன்னை
யண்டரருந்தவர்ஞானத்தவரறியவித்தலத்தே
கண்டினையபணிமொழியாய்கடிமணஞ்செய்குவனென்னத்
துண்டமதிச்சடையெந்தைசொற்றனன்மாதுளமகிழ.

(இ - பு.) முன்பு எமதுவார்த்தையைக் கடந்ததனூல் நேர்ந்த பாவந்தீர்ந்தது இனிமேல் கற்கண்டுபோலும் மதுரமுள்ள குளிர்ந்த வசனங்களுடைய உமையே உன்னைத் தேவர்களும் அரிய தவசிகளும் ஞானிகளும் கண்டு களிக்கும்வண்ணம் இத்தத்தலத்திலேயே திருமணம்புரிவோமென்று இளம்பிறையணிந்த சடையுள்ள எமது தந்தையாராகிய சிவபிரான் உமாதேவியார் மனங்களிகூரத் திருவாய்மலர்ந்தருளினூர். எ-று. (௩௭)

அம்மைதவம்புரிந்த சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்...௩௧௮







சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமணச் சருக்கம்.

வடித்துணர்ந்தசூதனிவைவழங்கலுமற்புதமுள்ளத்
தடுத்துநைமிசாரணியத்தருந்தவத்தோர்பின்னுநன்னூற்
படித்தமுனிதனையேத்திபரமனிளமுலையைமண  [ன்.
முடித்தவியப்பினை யெமக்குமொழிகென மற்றவனுரைப்பா

(இ - பு.) புராணங்களை ஆராய்ந்துணர்ந்த சூதமாமுனிவர் இவைகளை ஓதினவுடன் தமதுள்ளத்து வியப்படைந்து நைமிசாரணிய முனிவர்கள் மறுபடியும் உயர்ந்தபலசாத்திரங்களை நன்குணர்ந்தஅச்சூதமுனிவரை வணங்கிச் சிவபிரான் இளமுலைநாயகியாராகிய உமாதேவியைத்திருமண முடித்த அற்புதச்சரிதையை எங்களுக்கு உரைத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கச் சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (௧)

பச்சைமணிநிறத்தாளுக்கிவையுரைத்துப்பாங்கிருந்த
வச்சுதனை முகநோக்கியாதியரனிவையுரைத்தான்
இச்சயிலத்திறைமகளை யீண்டுகற்கடகமதியின்
மெச்சியநற்பூரத்தின்விழையுமணம்புரிவோமால்.

(இ - பு.) பசியமணிபோலும் நிறத்தையுடைய உமாதேவியாருக்கு இவ்வண்ணந்திருவாய் மலர்ந்தருளிப் பக்கத்திருந்த திருமாலினவதனத்தைப்பார்த்து ஆதியாகியசிவபிரான் இவைகளைத்திருவாய்மலர்ந்தருளுகின்றார் இந்த இமயவரை யரையன் மகளாகிய உமாதேவியை இவ்விடத்திற்றானே ஆடிமாசத்தில் யாவராலும் புகழப்படும் பூரநட்சத்திரத்தில் விருப்பந்தரும் திருமணம்புரிவோம். எ-று.ஆல-அசை. (௨)

அக்கருமநோக்குகவென்றரனியம்பத்திருமகிணன்
றக்கசிவகணங்கள்பலதாளைழைத்துமலைமகட்கு
நக்கர்பிரான்றனக்குமணநடக்கின்றதென்னவுரைத்
தெக்கவின்வானவாகளையுமீண்டழைமினெனவிடுத்தான்.

(இ - பு.) அக்காரியத்திற்குவேண்டிய முயற்சி செய்வாயென்றுசிவபிரான்கட்டளையிட. இலக்குமிமணாளராகிய திருமால் தகுதியமைந்தபல சிவகணங்களை அழைத்து இமயவரையரையன்மகளாகிய உமாதேவியாரு

க்கும் சிவபிரானுக்கும் திருமணம் நடக்கின்றதென்றுகூறி அழகுள்ள வராகிய எத்தேவர்களையும் இவ்விடத்தழையுங்களென்று விடுத்தார். எ-று.

ஆசையினெண்பதியோருபமரருங்கந்தருவர்களுந்
தேசுறுவிஞ்சையரியக்கர்தினகரனுதியகோள்கள்
வாசமலரயன்முதலோர்வைகுந்தநகரினுளோ
ரீசனுறுங்கயிலையுளோரியாவரும்வந்துற்றனரால்.

(இ - பு.) அஷ்டதிக்குப்பாலகர்களும்தேவர்களுமகந்தருவர்களும் வித்தியாதரர்களும இயக்கர்களும் சூரியன்முதலியநவகோள்களும வாசனைகமழும் தாமரைமலரில் வசிக்கும் பிரமன்முதலியோரும வைகுந்தத்திலுள்ளவர்களும சிவபிரான் வீற்றிருந்தருளும திருக்கயிலையில் உள்ளவர்களும்ஆகிய யாவரும் வந்தடைந்தார்கள். எ-று ௬௱-அசை (ச)

மாயவன்சொற்படியாங்குமயனியையநுநிறைமணியா
லுயிருபல்லாயிரமுநண்ணியபோலொளிதிகழத்
தூயமணிமண்டபமுஞ்சுந்தரத்தண்டரளத்தா
னேயமணப்பந்தர்களுநிகரறவேநிருமித்தான்

(இ - பு.) திருமாலின் கட்டளைப்படி அவ்விடத்துத் தேவதச்சனான மயன் இலக்கணங்கள்அமைந்துநிறைந்த இரத்தினங்களால் அநேககோடி சூரியர்கள் ஏககாலத்தில் உதித்தது போன்று ஒளிவிளங்கத் தூய்மையாகிய இரத்தினமண்டபங்களும் அழகிய குளிர்ச்சிபொருந்திய முத்துக்களினால் அன்புதரும திருமணப்பந்தல்களும் ஒப்பற்றுவிளங்கும்படி நிருமித்தான்.

வேறு.

இலகுபல்வளமோங்குமெழினக
ரலகில்வீதிகளியாவுமழகுற
நலமணிச்சரத்தோரணநாட்டுவார்
பொலன்மணித்திகழ்மேடைபுதுக்குவார்.

(இ - பு.) விளங்கும்பலவளங்களும் நிறைந்த அழகியஅச்சுறுதிபுரியின் எண்ணில்லாத வீதிகளெல்லாம அணிபொருந்த நல்ல இரத்தினமாலைகளாகிய தோரணகம்பங்கள்நிறுத்துவார்கள் பொன்மணிகள்பிரகாசிக்கும் வேதிகைப்புதிதாகக் கட்டுவார்கள். எ-று. (ரு)

வாழைபூகமருங்கணிநாட்டுவார்
தாழையாதிகளிகள்சரஞ்செய்வார்
கோழரைச்செழுங்குங்குமநீர்கொடு
சூழும்வீதிகளியாவுந்துலக்குவார்.

(இ - பு.) வாழை கமுகு இவ்விரண்டையும் ஒன்றன்பின் ஒன்றாக அழகுடன்நிறுத்துவார்கள் தெங்குமுதலிய கனிவர்க்கங்களைச் சரஞ்சரமா

கத்தொங்கவிடுவார்கள் சருச்சரையோடுகூடிய அரையினையுடைய செழுமையாகிய குங்குமச்சேற்றைக்கொண்டு சூழ்ந்திருக்கும் வீதிகளெல்லாம் மெழுகுவார்கள், எ-று. (எ)

இனமணித்தொகைக்கோலமியற்றுவார்
கனமணிக்கலசங்கணிரப்புவார்
மனமிகுத்தமகிழ்ச்சியமாலிகை
தனைநிரைத்தவர்தமிற்றுதிசெய்வார்.

(இ-பு) நவரத்தினங்களின்றொகுதிகளால் கோலமிடுவார்கள் இரத்தினங்களழுத்திய பொற்கலசங்களாகிய பூரணகும்பம்வைப்பார்கள் மனதின்கண் மிகுத்தமகிழ்ச்சியையுடையவராய பலமலர்மாலைகளை வரிசையாகக்கட்டிப்பின்பு தங்களுக்குத் தாங்களே துதிக்கின்றார்கள். எ-று.

மாதர்தத்தம்வருணத்திற்கூடுவார்
கோதில்கங்கநதியிற்குழுமுவா
ரேதில்பந்தெறிவார்கழங்கேற்றுவா
ராதரத்தின்குரவைகளாடுவார்.

(இ-பு) மகளிர்கள் தங்கள்தங்கள் வருணத்தினரோடு சேர்ந்தவர்களாய்க் குற்றமற்றகங்காநதியில் நீராடுதற்குக் கூட்டமாகக்கூடுவார்கள் பழுதற்றபந்தாடுவார்கள் கழற்சிக்காயெறிவார்கள் அன்புடன்கைகோத்து விளையாடுவார்கள். எ-று (௯)

பூடணங்கள்பலவுமெய்பூணுவா
ராடலின்மனமன்புற்றியற்றுவார்
நீடணங்கினார்நின்றுநின்றநகர்
மாடமேவுமலங்கங்களைநோக்குவார்.

(இ-பு.) ஆபரணங்கள் பலவற்றையுந் தரித்துக் கொள்வார்கள் விளையாட்டில் மனவிருப்புற்றாடுவார் பெருகியதேவமாதர்கள்நின்று அச்சுருதிபுரியின்கணுள்ள மாளிகைகளில் அமைந்த அலங்காரங்களைப் பார்ப்பார்கள். எ-று. (௧0)

வேறு.

பூதலத்தவர்களும்பொன்னினாடரும்
பாதலத்தவர்களும்பரமன்மன்றலுக்
காதரத்தொடுமடைந்தடர்ந்துவைகிய
வேதநூபுரிநலமியம்பற்பாலதோ.

(இ-பு) மண்ணுலகத்தவரும் விண்ணுலகத்தவரும் நாகலோகத்தவரும் சிவபிரான திருமணத்திற்காக அன்போடுவந்துநெருங்கியிருக்கும் சுருதிபுரியின் பெருமையைச்சொல்லத் தக்கதோ. எ-று. (௧௧)

வந்ததுகடகநன்மதியிற்பூரமென்
றந்தாளறிந்துமாலரனுக்கோதினு
னெந்தையுமணமதற்கியைந்தகோலமா
வந்தனன்மன்றலுக்கிழைத்தமண்டபம்.

(இ-ப) ஆடிமாசத்திற் பூரநட்சத்திரங்கூடிய சுபதினம்வந்ததை யறிந்து இன்றைய தினந்தான் திருமணத் தினமென்று திருமால்சிவபிரானுக்குக்கூறினர் எமதுதந்தையாராகிய சிவபிரானும் அததிருமணத்திற் குரிய கோலத்துடன் அத்திருமணத்திறகாக அமைத்துள்ள மணடபததில் வந்து சேர்ந்தார். எ-று. (கஉ)

அமராகந்தருவர்விஞ்சையர்களாரணரு
சமைவுறுமுனிவருந்தபனர்சநதிர
னிமயவெற்பரசனுமிநதிராதியுந
தமனியமண்டபநதனிலவநதெய்தினா.

(இ-பு.) தேவாகளும் கந்தருவாகளும்வித்தியாதரர்களும்வேதங்களை ஓதியுணர்ந்த முனிவாகளுமசூரியாகளும் சந்திரனும் இமயவரையரையனும் இந்திரன்முதலானவர்களும் திருமணத்திற் கமைத்த பொன்மணடபத்தில் வந்து சோநதாாகள். எ-று. (கங)

பஙகயக்கண்ணினுன்பணியினுன்மலர்
மங்கையும்வாணியுமவநதுபாலவரைப்
புங்கவன்மகளினைக்கொண்டுபொற்புறுந்
தங்கநற்பீடிகைதனிலிருததினர்.

(இ-பு.) தாமரைமலர்போலுமகணணை யுடையதிருமால்கட்டளைப் படி இலக்ஷ்மியும் சரஸ்வதியும் வந்து இமயவரை யரையன் புத்திரியாராகிய உமாதேவியாரை அழைத்துகொணடு அழகமைந்த நல்ல தங்கப்பீடிகைமீதுஉட்கார வைத்தார்கள். எ-று. (கச)

மருமலரெண்ணெயால்வசந்தமாட்டிநல்
விருமணசசுண்ணமெய்யெஙகும்பூசியே
யரியநறகங்கையேயாதியாமெழு
திருநதிச்செழுமபுனல்சிறப்பவாட்டினர்.

(இ-பு) வாசனைகமழும் மலர்கள்சேர்ந்த எண்ணையினுல்வசந்தமாட்டி நல்லவிசேஷமணந்தஙகும் பொடிகளைத்திருமேனிமுழுதும்பூசி அருமையமைந்தகங்கைமுதலிய சத்தநதிகளின்செழுமையாகிய தீர்த்தத்தினல் பெருமையாக நீராட்டினர்கள். எ-று. (கரு)

உலகெலாமதித்திழையொன்றுக்கோதினும்
விலையிலாக்கோசிகவியன்பொன்னுடையக்

கலைநிலாமுகத்தவண்மருங்கிற்கட்டினார்
புலர்தரக்குழற்கதிற்புகையுமூட்டினார்.

(இ - பு.) உலகத்துள்ள பொருள்களெல்லாவற்றையும்மதித்து ஓரிழைக்கோதினும் விலையமையாதபட்டினலாகிய மேலானபீதாம்பரத்தைப் பதினாறுகலைகளையுடைய சந்திரனைநிகர்த்ததிருமுகத்தையுடைய உமாதேவியார் இடையிற்றரித்தார்கள் ஈரம்உலரும்படி அளகபாரத்திற்கு அகிற்புகையையும் ஊட்டினார்கள். எ-று. (௧௬)

வேறு.

•கடிகமழ்புழுகுநானமுஞ்சேர்த்துக்கருங்குழலழகுறநீவிச் [அணி
சுடிகையினிமைந்தமாமணியணிவைத்து லங்குறசிகழிகைமுடித்
வடிவுறுகாதினிரவிபொற்குழையும்வாளியுமற்றுளதணிந்து
பொடிமணியொளிருநித்திலத்தொங்கலபொருத்திடமூக்கணிபுனை
[ந்தார்.

(இ - பு.) வாசனைகமழும் புனுகும் கத்தூரியும் சேர்த்துக்கரியகூந்தல்அழகமையவாரி நெற்றிச்சுட்டியுடன்சேர்ந்த உயர்ந்தஇரத்தினங்களழுத்திய ஆபரணங்களை விளக்கமமைந்தமயிர் முடியுடன்முடித்து உருவுற்ற திருச்செவிகளில் சூரியனைப்போன்ற பொற்குழையலங்களும் வாளியும்மற்றுமுள்ள ஆபரணங்களுந்தரித்து சிறியஇரத்தினங்கள் பிரகாசிக்கும் முத்துத்தொங்கலமையும்படி மூக்குத்தியுந்தரித்தாகள். எ-று. (௧௭)

முந்துசெங்கையிற்பொற்கங்கணங்கவினமுழுநிலாக்கதிருமிழ்தரள, மநதமுற்றிடுதுப்பிவைநிரைத்திட்டவணியல்செஙகரதலத்தணிந்து, சந்தமென்குழம்புநான முமபுழுகுந்தடமணிமுலையிசைமெழுகிச், சுந்தரநதிகழதொயில்வரைந்ததன்மேற்சுடர்மணிக்கச்சிறுக்கினரால்.

(இ - பு.) முன்பாகச்சிவந்த திருககரங்களில் பொன்னாலாகிய கங்கணம் அழகுசெய்யப்பூரணசந்திரனது கிரணங்கள்போல் விளங்கும் முத்துக்கள் அழகமைந்த பவளங்கள் இவைகளாலவரிசையாகககோக்கப்பட்ட மாலைகளாலாகிய வங்கியைச்சிவந்தமுழங்கைகசகு மேலாகததரித்துச் சந்தனத்தின் குழம்பையும் கஸ்தூரியையும் புனுகையும் விசாலமாகிய அழகியதனங்களின்மீதுபூசி அணிவிளங்கததொய்யில் எழுதிஅதன்மீதுபிரகாசிக்கும் இரத்தினங்களாலாகிய கச்சினைத்தரித்தாகள். எ-று. ஆல்-அசை.

தரளமென்வடமும்பிறையணிவடமும் தயங்கியநவமணிவடமும், வரையிளமுலைமேலிளவெயில்வீசவணிந்துமேகலைமருங்கசைத்தே, கரையில்பல்வகைத்தாமுறுப்பினுக்கேற்றகலன்களைப்புனைந்

தடிக்கமலத், திரைமணிச்சதங்கைநூபுரந்தண்டையிலகுபாடகமு
மிட்டனரால்.

(இ - பு.) முத்துக்களினாலாகிய மெல்லியமாலைகளும சந்திரஆரமும் ஒளிவிளங்கும் நவரத்தினமாலைகளும மலைபோல்விளங்கும் இளமுலையின் மேல் இளங்கிரணம்வீசத்தரித்தது மேகலாபரணம் இடையில்தரித்தது எண்ணற்றபலவிதங்களாகிய அவயவங்களுக்குத்தகுந்த ஆபரணங்களைத்தரித்துத் திருவடிகளாகிய தாமரைமலரிலஒலிக்கும அழகிய சதங்கைகிண்கிணிதண்டைவிளங்கும் பாடகம்இவைகளையுந்தரித்தார்கள். எ-று ஏ-ஆல்-அசை,

தாரணிகழையைப்பொருவுதோண்மிசைமுன்றானைபினபோக்கி
வெவ்வடிவேற், கூரணிவிழிகட்கஞ்சனந்தீட்டிக்குளிரிளம்பிறைபு
ரைநுதலிற்,சீரணிதிகழச்சிந்துரந்திட்டிச்செழுமலரோதியிற்செறி
த்தே,யாரணிகடவுட்கிதம்பெறவணியலாற்றினரிளமுலையவட்கே.

(இ - பு.) இளமுலைநாயகியாராகிய உமாதேவியாரசகு மாலைகளைத் தரித்த மூங்கிலையொத்த தோண்மீது முன்றானையைப்போட்டுப் பின்றைவாங்கிச்செருகிகொடியவடித்தவேல்போலும்அழகமைந்ததிருவிழிகளுக்கு மையெழுதிக குளிர்ந்தஇளமபிறைபோலும நெற்றியில் சிறப்பாகிய அழகுவிளங்கசசிந்துரத்திலதமிட்டுச செழுமையாகிய மலர்களைககூந்தலிறசூட்டிஆத்திமாலையைசசூடியசிவபிரானுக்கின்பம உண்டாகும்படி அலங்கரித்தார்கள். எ-று. ஏ-இரண்டும-அசை. (௨௦)

உலகெலாமளித்தவொப்பிலாதவளுக்குலகுறுமொப்பனைபுரிந்து
நலமுலாவியபொற்கஞ்சனங்காட்டிநவில்பலகோடிவான்மாத
ரிலகுபொற்கலத்தினையனிசுற்றியெண்ணிலடங்காயிரகோடி
பொலன்மணிநந்தக்கட்டிற கருப்பூரதீபம் புரையறககாட்டினாமா
[தோ.

(இ - பு) உலகம்முழுதும ஈன்றஒப்பற்ற உமாதேவியாருக்கு உலகத்தாருகருச்செய்யும்அலங்காரங்களைபுரிந்து நன்மைபொருந்தியபொன்னாலமைந்தகண்ணாடியைககாட்டி பலகோடிஎன்று சொல்லததககதேவமாதர்கள் விளங்கும பொறபாத்திரத்தில் திருட்டிநீரென்றுகூறும ஆலத்திசுற்றி எண்ணற்றபல ஆயிரங்கோடி அழகியஇரத்தினத்தாமபாளங்களில கருப்பூரதீபங்களைககுற்றமறககாட்டினார்கள். எ-று. மாது-ஓ-அசை, (௨௧)

வேறு.

இப்பரிசொப்பறுமிளங்கதிர்முலைக்கே
யொப்பனைபுரிந்தமரரொண்கொடியினார்கள்
செப்பரியகந்தருவசித்தாட்டவாரக
[illegible]

(இ-ள்) இவ்வாறு ஒப்பற்றவிளக்கமமைந்த இளமுலையாராகிய உமாதேவியாருக்கு அலங்காரஞ்செய்து தேவமாதர்களும் சொல்லுதற்கரிய கந்தருவர்கள் சித்தர்கள் இவர்களுடையமாதர்களும் பவளம்போலும் இதழையுடைய யட்சர்கள்மாதர்களும் புடைசூழ்ந்தனர். எ-று. (௨௨)

காமன்மனையாளுமுயர்காமன்மனையாளுஞ்
சாமரையிரட்டவடமீன்கவிகைதாங்கப்
பூமகளுநாமகளும்பொற்கைமலரேந்தி
வாமமணிமண்டபமருங்குகொடுவந்தார்.

(இ-ள்) மன்மதன்தேவியாகிய இரதியும் கற்பகத்தினையுடையவனாகிய தேவேந்திரனதுதேவியான இந்திராணியும் வெண்சாமரைவீசவும் அருந்ததி குடைபிடிக்கவும் இலக்குமியும் சரஸ்வதியும் பொன்போலும் அழகிய கைகளாகியமலர்களால் தாங்கிக்கொண்டு அழகிய இரத்தினகசிதமானதிருமணமண்டபத்திற்கு அருகிலேகொண்டுவந்தார்கள். எ-று (௨௩)
இவ்விரண்டுங்குளகம்.

அளவறுமணிக்குலவையழுத்தியநலத்தால்
விளைவுறுகதிர்ப்பரிதிபோலுமெயில்வீசத்
தளமுறுநலாமேடைமிசைத்தபரனிருப்ப
வளரிளமுலைக்குயிலைவைத்தனர்வலத்தே.

(இ-ள்) அளவற்ற இரத்தினக்குவியல்களை அழுத்தியிருக்குந்தன்மையால் ஓங்கிவளருங்கிரணங்களையுடைய சூரியர்களைப்போலப் பிரகாசம் விளங்க அதிவாரம்போட்டிருக்கும் பொன்னாலாகிய மேடையின்மீது சிவபிரான்வீற்றிருக்க வளரும்இளமுலையையுடைய குயில்போலும்மொழி வாய்ந்தஉமாதேவியாரை வலப்பாகத்திலிருத்தினார்கள். எ-று. ஏ அசை.

வேறு.

விண்ணவர்தஞ்சுரபிமணிவியனிதியுமைந்தருவுங்
கண்ணுதறன்றிருமணத்திற்கையேவல்செய்திருப்ப
நண்ணியமாதவர்ஞானநான்மறையோரிருக்குரைப்பத்
தண்ணறுந்தாமரைக்கிழவன்சடங்குகளெல்லாமுடித்தான்.

(இ-ள்) தேவர்களின்காமதேனு சிந்தாமணி அழகிய சங்கநிதிபதுமநிதியும் பஞ்சதருக்களும் சிவபிரான திருமணத்திற்கு வேண்டியபொருள்களை யப்போதைக்கப்போது கொடுத்துஏவல்புரிந்து நின்றுகொண்டிருக்க அவ்விடத்தடைந்த மகாதவசிகளும் ஞானமமையப்பெற்ற நான்குவேதங்களையுணர்ந்த மறையவர்களும் வேதமோத குளிர்ச்சியுற்ற தாமரைமலரில் வீற்றிருக்கும்பிரமன் திருமணத்திற்குரிய சடங்குகளெல்லாம்செய்து முடித்தான். எ-று. (௨௫)

உதகமளித்திடுமோரையுற்றதெனப்பொன்னுரைப்ப
மதகளிற்றைநிகரிமயவரைவேந்தனினிதெழுந்து
ததையுறுதோளுத்தரியந்தனைமருங்கினுறச்சூழ்ந்து
சுதைமயிலைமடியிருத்திச்சுமைநெல்விதைமீதிருந்து.

(இ - பு.) தாரைவார்க்கும் முகூர்த்தம் சமீபித்ததென்று பிரகற்பதி கூறமதத்தைப்பொழியும் யானையைப்போன்ற இமயவரையரையன் இனிமையுடன் எழுந்திருந்து தோண்மீதுதரித்திருந்த உத்தரியத்தை இடையிற் கட்டிக்கொண்டு தனதுபுத்திரியாகிய மயில்போன்ற உமாதேவியாரைத் தனது மடித்தலத்தில்வைத்துக்கொண்டு குவியலாகக்கொட்டியிருந்த நெல் வித்தின்மீது உட்கார்ந்து. எ-று. (௨௬)

பங்கயத்தின்மீதுசெழும்பசுங்காந்தள் பூத்தெனச்
சங்கரன்பொற்கரத்தின்மிசைத்தன்சுதைமென்கைவைத்துக்
கொங்கையிளமேனைதருங்குளிர்கங்கைப்புனல்விடுத்தான்
புங்கவர்பொற்பூமாரிபொழிந்தனர்துந்துபிமுழங்க.

(இ - பு.) தாமரைமலரின்மீது செழுமையான பசியகாந்தள்மலர் மலர்ந்ததுபோலச் சிவபிரானது பொன்போலும் அழகியதிருக்கரத்தின்மீது தனது புத்திரியினது மெல்லிய திருக்கரத்தைவைத்து இளமையாகிய தனங்களையுடைய மேனாதேவியார்க்கும் குளிர்ந்தகங்கை நீரைவிட்டான்உடனே தேவதுந்துமிமுழங்கத் தேவர்கள் மலர்மாரிசொரிந்தார்கள். எ-று. இவ்விரண்டுங்குளகம். (௨௭)

பின்னுமுளசடங்கியற்றிப்பிறங்குநெல்வெண்பொரியள்ளி
வன்னிதனக்கவியளித்துமாதுகையங்குலிபற்றிப்
பொன்னமியினிளமுலைதன்பூங்கமலப்பதம்வைத்து
மன்னுமருந்ததிகாட்டிவளர்கனலைவலம்வந்தான்.

(இ - பு.) மற்றும்செய்யவேண்டிய சடங்குகள்அனைத்தையும் செய்துமுடித்துப்பிறகு சிவபிரான் பிரகாசிக்கும் நெல்லினாலாகியவெள்ளியபொரியைத்திருக்கரத்தாலள்ளி அக்கினிக்குஅவிகொடுத்து இமயவரையரையன்புத்திரியாராகிய இளமுலைநாயகியாரது திருக்கரத்தினுள்ள சிறுவிரலைப் பிடித்துக்கொண்டு அவரதுகுளிர்ந்த தாமரைமலர்போலுந் திருவடியைப் பொன்னாலாகிய அம்மியின்மீதெடுத்துவைத்து கற்புநிலைபெற்ற அருந்ததியையுங்காட்டிவளர்க்கப்பட்ட அக்கினியைவலமாகவந்தார். எ-று. (௨௮)

நிரம்பியநற்கருணைவிழிநிமலனுக்குமிளமுலைக்கு
மரம்பையர்கந்தருவமடவாருநகரரிவையரும்
வரம்பறுகோடியர்குழுமிமணிவளைச்சூடகக்கரத்தி
னரும்பொனொளிர்மணிக்கலத்திலமெடுத்தனர்மாதோ.

(இ - பு.) திருவருள்கிரம்பியவிழிகளையுடைய சிவபிரானுக்கும் இள மூலைநாயகியாருக்கும அரம்பையாகளும் காந்தருவமகளிர்களும் அச்சுருதி புரியின்கணுள்ள மகளிர்களும் அளவுகடந்தகோடிக்கணக்காகக்கூடி இர த்தினவளையல்களும் கங்கணங்களும் தரித்திருக்கும் தங்கள்கரங்களினால் அருமையாகியபொன்னாற்செய்து பிரகாசிக்கும் தாம்பாளங்களில் ஆலாத்தி சுற்றினார்கள். எ.று. மாது-ஓ-அசை. (உகூ)

மலர்மகளும்பாமகளும்வடமீனுமனமகிழ்ந்து [மதனிற்
பொலன்மணிபூக்கொடிக்கரத்திற் பொன்னொளிர்மென்கல
குலவுமருக்கருப்புரத்தின்கொழுஞ்சுடர்கொண்டெழிற்றிங்க
ளிலகுமணிமுடியாற்குமிளமுலைக்குங்காட்டினரால்.

(இ - பு) இலக்குமியும் நாமகளும் அருந்ததியும் மனக்களிப்படை ந்து பொன்னாலாகிய இரத்தினங்களழுத்திய அழகியவளையல்களணிந்திருக் கும் தமது கரங்களில் கனகமயமாய்ப்பிரகாசிக்கும்மெல்லியதட்டுகளில்வா சனைகமழும் கருப்பூரத்தின் கொழுவியசுடரைவிளங்கும்சந்திரன்வாழும்அ ணிபெற்ற திருமுடியையுடைய சிவபிரானுக்கும் இளமுலைநாயகியாருக்கும் காட்டினார்கள். எ-று. ஆல் அசை. (ங0)

வேறு.

காண்டற்கரியபரஞ்சோதிகருணைபூத்ததிருக்கோல
மீண்டுபெறறோமெனறயன்மாலிமையோர்நாகர்முதலானோர்
வேண்டித்துதித்துப்பூசித்தார்விளங்குங்கதிர்மெல்லிளமுலையா
ரீண்டுங்காதற்றாய்தந்தைதுணைமெனபாதந்தொழுதனரால.

(இ - பு) யாவராலுங்காணுதற்கரிய சிவபிரானது கிருபை நிறைந்த திருக்கோலத்தை இத்தலத்திலேகண்டு தரிசிக்கப்பெற்றோமென்று தேவர் கள் நாகர்கள் முதலானவர்கள் சிவபிரானைபலவாறு வேண்டித்தோத்திரஞ் செய்து வழிபட்டார்கள் பிரகாசிக்கும் ஒளியையுடையமெல்லிய இளமு லைநாயகியார் பேரன்புவிருத்தியடைந்திருக்கும் தமது தாய்தந்தையர்களா கிய இமயவரையரையன்மேனை இவர்களது இரண்டுமிருதுவானதிருவடிக ளையும்வணங்கினர். எ-று. ஆல்-அசை. (ஙக)

மன்றற்கடைந்தவானவர்களாதியெவர்க்கும் வரன்முறையாய்
நின்றசுரபியமுதூட்டநிறைந்தவரிசைதருவளிப்ப
மன்றற்றுளபமாலினியவாய்மையுரைப்பமலைமகளுங் [ல்
கொன்றைச்சடைநாதனுங்கருணைகூரமகிழ்வுகொண்டனரா

(இ - பு.) திருமணத்திற்காக வந்ததேவர்கள்முதல் எவர்களுக்கும் முறைப்படி அவ்விடத்து வந்திருந்த காமதேனுதிருவமுதுபடைக்கசந்தனம்

புட்பமுதலிய வரிசைகளைக்கற்பகதருகொடுக்க வாசனைகமழும் துளப
மாலையணிந்த திருமால் இனிமையான உபசாரவார்த்தைகளைகூற இமய
மலையரையன்மகளாகிய இளமுலைநாயகியாரும கொன்றைமலர்மாலைதரி
த்தசிவபிரானும் கிருபைகூர அவர்களெல்லாம மகிழ்ச்சியுற்றார்கள். எ-று
ஆல்-அசை. (கூஉ)

வேறு.

சொல்லுமித்திறமன்றல்முடிந்தபின்சுருதியோதியவெந்தையுந்
தோகையும், வில்லுயர்ந்தபொனையாடகதனிநகர்வீதிவாய்மணக்
கோலமினிவர, மெல்லிதழ்ப்பசுங்கொன்றைச்சடைமுடி வேந்தன்
மால்விடைமீதினிலேறினா, னெல்லிசைதரவிரும்பிறைநேர்நுதலி
ளமுலைப்பரையன்னத்தின்மேலேறினாள்.

(இ - ள்.) யாவராலும் துதிக்கும இவ்வண்ணமாகத் திருமணம் முடி
ந்தபிறகு வேதங்களைத் தேவர்களுக்கோதுவித்தருளிய எமது தந்தையாரா
கிய சிவபிரானும மயில்போலும சாயலையுடைய இளமுலைநாயகியாரும்
ஒளிவிளங்கும் கனகமயமான மாளிகைகளினால் அலங்காரமமைந்த அச்
சுருதிபுரியின் திருவீதியினிடத்து இனிமேல்திருமணக்கோலர்வரவேண்டி
மெல்லிய இதழ்களையுள்ள பசியகொன்றைமாலையைத்தரித்த சடைமுடி
யினராகியசிவபிரான்பெரிய இடபவாகனத்தின்மீது ஆரோகணித்தார் ஒளி
விளங்கும் பெரியபிறைபோலும நெற்றியமைந்த இளமுலைநாயகியார் என்
னும் உமாதேவியார அன்னவாகனத்தின்மீதில ஆரோகணித்தார். எ-று.

தேவதுந்துமியும்பலபல்லியத்திரளுமார்ப்பினொப்புறச்சித்தரும்
பூவமன்றருநாரதர்கின்னராபுகலுமயாழ்க்கிம்புருடரும்பாடவே
யேவிலுண்கணரம்பையுருப்பசியெழின்மிகுத்ததிலோத்தமையா
ருடன், கோவையங்கனிவாயரமகளையர் கோடிகோடிகுழுமிநடிக்
கவே,

(இ - ள்.) தேவதுந்துமியும் பலவாத்தியத்தொகுதியும் கடல்போலச்
சத்திக்கச்சித்தர்களும் சலவாசனாகிய பிரமனாற்றரப்பட்ட நாரதர் கின்ன
ரர் எவராலுமபுகழும்யாழிசைவல்ல கிம்புருடர்களும் பாடிக்கொண்டுவரவும்
அம்பைப்போலும் விளங்கும் மைதீட்டியகண்களையுடைய தேவமாதர்களா
கிய ஊர்வசி அழகுமிக்க திலோத்தமையோடும் கொவ்வைக்கனியொத்த
இதழையுடைய மற்றதேவமாதர்களும் கோடிகோடியாகக்கூடி நாட்டியம்
புரிந்துக்கொண்டுவரவும். எ-று. ஏ, இரண்டும்-அசை. (கூச)

வேறு.

கந்தருவமாதர்யக்கமாதர்நாகக்கன்னியர்கள்பலர்கூடிக்கீதம்பாட
கிங்கரர்கைப்பிரம்புகொண்டு நெருக்கம்நீக்கவெழுதாளன்பலவு

ருவாயிருளையோட்ட, மந்திரமாதவர்சனகாதியர்கள்கூடி மறையோ
தமற்றுளவானவர்களருழ, வந்தமுறுமணிமாடவீதியோங்குமார
ணமாபுரத்தைவலமாகவந்தார்.

(இ-பு) கந்தருவமகளிர்களும் யட்சமகளிர்களும் நாகலோகத்துமகளிர்களும் பலராகக்கூடிக் கீதம்பாடிக்கொண்டுவரவும் இந்திரன்சையில் பிறம்பெடுத்துக்கொண்டு ஒருவரோடொருவர்நெருங்காமல் ஒதுக்கிக்கொண்டு வரவும் ஏழுநாக்கையுடைய அக்கினிபகவான் பலஉருவங்களெடுத்து இருளைத்தூரத்திக்கொண்டுவரவும் வேதமந்திரங்களைநன்குணர்ந்தமகாதவசிகளும் சனகாதிமுனிவர்களும் ஒருங்குகூடிவேதபாராயணஞ்செய்துவரவும் மற்றுமுள்ளதேவர்கள புடைசூழவும் அழகமைந்த இரத்தினகசிதமான மாடவீதிகளவிளங்கும் அம்மறைசைமாநகரதனை வலமாகவந்தார்கள். எ-று. இவ்விரண்டுங்குளகம். (௩௫)

வேறு

அன்னமிசையிளமுலையு மணிவிடைமேல் வேதமுரைத்தவனு
மாக, வின்னவகைசிறப்பிலங்கவெழில்வேதபுரத்தைவலமெய்துங்
கோல, மன்னுமகத்திறைதவத்தோரவானவர்கந்தருவாசித்தராவள
ருநாக. ரங்கரத்துளராதியவனியருந்தொழுதுபிறப்பறுத்தாரம
ன்றே.

(இ-பு.) அன்னவாகனத்தின்மீது இளமுலைநாயகியாரும் அழகிய இடபவாகனத்தின்மீது வேதமுரைத்தசிவபிரானுமாக இவ்விதஅலங்காரம் விளங்கசிறப்பமைந்த சுருதிபுரியைவலமாகவரும் திருமணக்கோலத்தை நிலைபெற்றமகபதியாகிய இந்திரன தவசிகளதேவர்கள கந்தருவர்கள சித்தர்கள் வளாகதோரங்களும் நாகலோகத்தார்கள் அச்சுருதிபுரிவாசிகள்முதலாக பலதேசத்தார்களும் தரிசித்து வணங்கித்தமதுபிறவியை நீக்கிக்கொண்டார்கள். எ-று. மன்-ஏ-அசை. (௩௬)

மணிமாடவீதிவலம்வந்துவானமளவியுயர்கோபுரப்பொன்வாயி
ன்முன்னித், கிளியார்மென்முலைமடவார்கோடிகோடி சேர்ந்துமங்
கலத்துதிகளசெய்துபோற்ற, பணியாருமெழின்மருமத்தெந்தை
யந்தப்பசுங்கிளியினுடனைந்திப்பணிபெறச்செய்ய, வணியாருமன்றலி
ன்மண்டபத்துள் வைகியவரவர்க்கு விடைகொடுத்தா னருளின்
மன்றே.

(இ-பு) இரத்தினகசிதமான மாடவீதியைவலமாகவந்து ஆகாயத்தையளாவியுயர்ந்த கோபுரத்தின் பொன்மயமான வாயிலையடைந்து வாரிட்டிறுகிய மிருதுவானதனங்களையுடையமாதர்கள் கோடிகோடியாகக் கூடி மங்கலவாழ்த்துகள்கூறித்துதிக்கச் சருப்பமாலைகளைத்தரித்த அழகிய

திருமார்பினையுடைய எமது தந்தையாராகிய சிவபிரான் அவ்விளமுலைநாயகியாராகிய பசியகிளிபோலுஞ் சொன்மிழற்றுபவரோடும் உள்ளேசென்று இலக்கணங்களமைய நிருமித்த திருகளும் சிறப்புப்பொருந்திய திருமணமண்டபத்தில்வீற்றிருந்து திருவருள்சுரந்தவராய்த் திருமணத்திற்குவந்தவர்கள் ஒவ்வொருவருக்கும் அவரவர்க்குத்தக்கவாறு விடைகொடுத்தருளினார். எ-று. மன்-ஒ-அசை. (௯௭)

கடற்கருணையிளமுலைநாயகியோடையன்கலந்துமகிழ்ந்திடப் வேலைகருத்தினனபான், படற்கமலமுகத்தமுதேநீயேயிந்த மகிமை பெறுந்தலத்திறுக்கோரிறைவியாகிப , படைத்தலைநான்முகனுதி, யெவர்க்குமுன்னைப்பணிந்துதுதித்தவர்க் கெல்லாம்பரிசுதருசூழ்ந்த தொடக்கறுத்து வேண்டும்வரந்தருதி யென்றுதூயவரமெம்பெருமான்ரேருகைக்கிந்தான.

(இ - பு.) கடல்போலும் திருவருளுடைய இளமுலைநாயகியாரோடு சிவபிரான் கலந்து மகிழ்கூர்ந்திருக்கும் தருணத்துத்தமது திருவுளத்தன்பின்மிகுதியால் இதழ்விரிந்ததாமரைமலர்போன்ற முகத்தையுடையஅமுதமொத்தபெண்ணே இன்றுமுதல் நீதானே இம்மகிமைபொருந்துந்தலத்திற்குத் தலைவியாயிருந்து சிருட்டிக்குத்தலைவனாகிய பிரமன்முதலாக எல்லாத்தேவர்களுக்கும் அவர்களல்லாமல் உன்னைவணங்கித்துதித்தநிலவுலத்திலுள்ளவர்களுக்கெல்லாம் அவர்களைச்சூழ்ந்த வினைத்தொடக்கை நீக்கியிருப்பத்துடன் அவர்களுக்கு வேண்டியவரங்களைக்கொடு என்று தூய்மையாகியவரத்தைச்சிவபிரான இளமுலைநாயகியாருக்குக்கொடுத்தருளினார்.

முன்பருகன்னிகைதவசுபுரிந்த ஞான்றுமுன்னவன்வந்திளமுலைபேயென்னக்கூவி, யன்புடனேயழைத்ததனலது வேநாமமாயினபினைபாலயத்திலையன்பூசை, யின்புறச்செய்திடுங்காலைவிரலையூன்றியேற்றுமுந்நூற்றறுபதுநற்கோடிதீர்த்த,நண்புறவந்திடுகவெனநினைத்தவாற்ருநவிலுவர்மானதசரசுநாமமாதோ.

(இ - பு.) முன்னம் அரியகன்னிகையாயிருந்து தவஞ்செய்தகாலத்துச் சிவபிரான் காட்சிகொடுத்து இளமுலையே என்றுபெயரிட்டு அன்புடனே அழைத்ததனால் அவ்வம்மையாருக்கு அதுவேதிருநாமமாயிற்று பிறகுதிருவாலயத்துச் சிவபிரானது பூசையையின்பத்துடன் செய்யுந்தருணத்துத்தமது திருவிரலைநிலத்திலூன்றிகீறி இவ்விடத்து முந்நூற்றறுபதுகோடி. தீர்த்தங்கள் ஒன்றுகூடி வரக்கடவதென்று நினைத்தமையால் அத்தீர்த்தத்துக்குமானதசரசு என்னுந்திருநாமங்கூறுவார்கள். எ-று. (௯௯)
மாதோ, ஓ-அசை.

வழுத்தியமானதப்புனிதப்புனலிற்றோய்ந்துவருகின்றசுக்கிரவாரங்கடோறு, மழுத்தியபன்மணியொளிராலயத்தின்மேவியாதிசிவபரனைவலமாகவந்து, தொழுததகையர்மனதினுறும்பொருளையெல்லாநதோராமலளிததியெனசசொல்லுமிநத, வழித்தகவானவாபுரிந்தோரனந்தமந்தமலைமகடன்மகிமை சொலவசமோவென்று.

(இ-பு.) யாம் இப்போது கூறியமானதசரசுஎன்னும் தூய்மையானகஙகையில் நீராடிப்பிரதிவாரமும் வருகின்றசுககிரவாரங்கடோறும் விளஙகும் பலஇரததினஙகளழுத்திய திருவாலயத்தில் அடைந்து ஆதிசிவபராகிய வேதபுரீசுரரை வலமாகவந்து தொழுந்தன்மையுடையவாகள் மனதிற்கருதும் இஷ்டஙகளனைத்தையும கெடாமல்கொடுவென்றுஅததிர்த்தத்திறகுக் கட்டளையிட்டபடி தவம்புரிந்துபலனடைந்த தேவாகள்அநேகா ஆகையால் அந்த இளமுலைநாயகியாரது மகிமையைககூறததரமோ என்று. எ-று. (௪0)

வேறு.

இன்னவாறன்னையாங்கணிருநதுமாதவ ததோர்வானோர்
முன்னியேதொழுதோக்கெல்லாமுன்னுறுதெய்வமாகி
மன்னியதீமைதீரநதுவைகுவாடானுமநறோ
பொனனியலிலிஙகபூசைபுரிநதனளதனைககேண்மின.

(இ-பு.) இவ்வாறு எமதன்னையாகிய இளமுலைநாயகியாா அவ்விடத்திருந்து மகாதவசிகள் தேவர்கள் முன்னுமநினைநததுதொழுதவர்சகெல்லாம காட்சிகொடுததருளும தெய்வமாகி அவாகளுக்குநிலைபெறறகெடுதிகளைபபோக்கி வசிககின்றவா தாமுமஇன்றொரு இலிஙகம்பூசித்தனா அச்சரிததைதைககேளுஙகள, எ-று. (௪க)

தரைக்குண்முன் றொருகாலநதிற்றவத்தினல்வலிமைபூண்ட
வரககரின்மயிடன்சுமபனந்தகனரததபீச
னிரக்கமினிசுமபன்பொல்லாச்சலநதரனென்னுமபேரார்
நரர்க்கும்வானவர்க்குமின்னடசெயேதிரிகினறரால்.

(இ-பு) இந்நிலவுலகத்தின்கண முன்னொருகாலததில் தவததினல் வல்லமைபெற்ற அசுராகளில் மயிடன் சும்பன அந்தகன் ரததபீசன் இரக்கமிலலாத நிசும்பன் பொல்லாதசலநதரன்என்னும பெயருடையவர்கள் மானிடாகளுக்கும்தேவாகளுககும் துன்பம்புரிந்து திரிகின்றார்கள். எ-று ஏ-ஆல்-அசை. (௪உ)

அன்னராக்கதாகடங்கட்கடுத்திடும்படையையெல்லாம்
பன்னகாபரணன்வாமபாகம்பெறறியாவுமீன்ற [போற்றச்
வென்னையாளுடையாள்வாளகொண்டெறுழழித்திமையோர்
சென்னியார்கேசம்பறறித்திறலஉராவிகொண்டாள.

(இ-பு.) அத்தகையஅவுணாகளுக்குச சேர்ந்த சேனைகளனைத்தையும் சாப்பாபரணாரது இடப்பாகத்தைபபெற்று உலகமெலாம்பெற்றருளிய

என்னையாண்டுகொண்டருளிய இளமுலைநாயகியார் வாளாயுதத்தைக் கொண்டு அவர்களாவல்லமையைக்கெடுத்துத் தேவர்கள்துதிக்க அவ்வவுணர்களுடைய தலையிடத்துப்பொருந்திய மயிரைப்பற்றியிழுத்து வன்மையுள்ள அவர்களுடையவுயிரைக்கவர்ந்தனர். எ-று. (௪௩)

சொலவியவரக்கராவிதொலைத்திடும்பாவந்தீர
வெல்லையிலசுருதிவானோர்கதியம்பியபதியினெய்தித்
தொல்லையில்வேதங்காணத்துடியடைத்தாடுமெங்கோ
னம்பியலகமலத்தாளினையறப்பூசைசெய்தாள்.

(இ - பு.) மேற்கூறிய அவுணர்கள் உயிரைப்போக்கிய பாவந்தீரவேண்டி அளவிடற்கரிய வேதங்களைத்தேவர்கட்கோதுவித்தத்தலமாகிய சுருதிபுரியில் அடைந்து பண்டு அவ்வேதங்கள் தரிசிக்கும்படி உடுக்கையையடித்து நடித்த எமதிறைவராகிய சிவபிரானது நல்ல இலக்கணமமைந்த தாமரைத்தாள்களிலகுற்றமற வழிபாடுபுரிந்தனள். எ-று. (௪௪)

வேதநாயகனைப்பூசைவிருப்பொடுஞ்செய்தபின்னை
மாதர்வாணகையாடென்கீழ்பாரிசத்தெய்தியாங்கோர்
கோதிலாவிலிங்கமொன்றுநாட்டியாகமநூல்வண்ணந்
தீதிலாமகிழ்வின்பாற்செய்தனள்பூசைமன்னோ.

(இ - பு.) அவ்வேதபுரீசரை விருப்பத்துடன் பூசித்தபிறகு அழகிய ஒளியமைந்த நகையையுடைய இளமுலைநாயகியார் தென்கீழ்த்திசையிற்போய் அங்கொருகுற்றமற்ற இலிங்கந்தாபித்து யாவராலுந்துதிக்கும் ஆகமநூல்விதிப்படி தீமைகளெல்லாம் நீங்க இன்புடன் பூசித்தாள். எ-று. மன், ஓ-அசை. (௪௫)

பரிபுரத்திருப்பொற்பாதபங்கயம்பத்தர்க்கீயுந்
திரிபுரையம்மைபூசைசெய்ததுவெம்பவங்கடிந்த
கரியுரித்தருளுமத்தக்கடவுளையருச்சிப்போர்க [ள்.
ளரிதிற்புகலவோர்கண்டோருமபவந்தொலைப்பரென்று

(இ - பு) பரிபுரந்தரித்த அழகிய பொன்னைப்போன்ற திருவடிகளாகிய தாமரைமலரை அடியார்களுக்குத் தந்தருளும் திரிபுரையென்னுந் திருநாமத்தையுடைய எனதுதாயாகிய இளமுலைநாயகியார் பூசித்ததுகொடிய தீவினைகளைத்தீர்த்துக்கொண்ட யானையுரித்தருளிய அச்சிவபிரானைப்பூசிப்பவர்களும் அருமையாகத்துதிப்பவர்களும் தரிசிப்பவர்களும் நீக்குதற்கரிய பிறவிநோயைநீக்கிக்கொள்வார்களென்று சூதபுராணிகர் நைமிசாரணிய முனிவர்களுக்குக்கூறியருளினார். எ-று. (௪௬)

திருமணச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௯௪.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சூரியன்பேறுபெற்ற சருக்கம்.

தாயிற்றவத்தைவளாக்குமருட்டகைசேர்சூதனிவையுரைப்ப
மாய்ப்பிறவிவேராறுக்குமவாட்கொண்டவரின்மனமுகந்து
தூயசவுனகாதியர்கள்சொற்றமுனிவைத்தொழுதேத்திச்
சேயகதிரோன்கதிபெற்றசெயலையுரைபீரெனவுரைப்பான்.

(இ-பு) மகவைவளாக்கும் மாதாவைப்போல் தவத்தைவளர்க்குங் கருணையுள்ள சூதமுனிவர் இவ்வாறு இளமுலையம்மைதிருக்கலியாண விபவங்களைக்கூற வஞ்சனையாகிய சனனமென்னும் பெருங்காடடைவேரறக் களைந்து வெட்டும திருவருவாளைக்கொண்டவரைப்போல உள்ளமகிழ்ந்து சுத்தமுள்ளசவுனகா முதலியநைமிசாரணிய முனிவாகள இபபடிககூறி வந்த சூதமுனிவரை வணஙகிததுதிசெய்து செய்யகிரணஙகளை யுடைய சூரியன் அத்தலத்தில வேதபுரீசரைபபூசித்துப் பேறுபெற்றசரித்திரத்தைத் திருவாய் மலாந்தருளுமென்ன அவவாறு சூதபுராணிகாகூறுவார். (க)

முன்னோர்காலமரீசியருண்முனிவர்தொழுங்காசிபன்மனையாள
பொன்னோநிகர்பூத்தமணிபபுணாமாமுலைநல்லதிதியென்பா
டன்னுயகனைநோக்கியிந்தச்சகங்களேத்துந்தனிமகவொன்
றெனனுபகனையெற்கருளென்றிறைஞ்சித்துதித்தேயிரந்தனளால்.

(இ-பு) முன்புஒருகாலத்திலமரீசிமுனிவரான்றமுனிவர்கள்வணங்கும் காசிபமுனிவா பத்தினியாகிய பொன்போலும பொருந்திய தேமல்படர்ந்த அழகிய புணரும்பெருமைவாய்ந்த தனங்களையுடைய நல்ல அதிதியென்னும பெயருள்ளவள் தனதுகணவரான அககாசிப முனிவரைப்பார்த்து இந்த உலகங்கள் துதிக்கும் ஒப்பற்ற ஒருமகனை எனது நாயகனே எனக்குத் தரவேணடும்என்றுவணங்கித் தோத்திரஞ்செய்து குறையிரந்து கொண்டனள். எ-று. ஏ-ஆல் அசை. (உ)

உள்ளத்துகந்தமனைக்கிழத்தியிவ்வாறுரைப்பவொருப்பட்டு
விள்ளற்கரியகாதலொடுமவிரும்பிபபுணரவேதமுதக
வெள்ளற்கரியகலைகளுணர்ந்திமிழுங்கடல்சூழிரும்புவியிற்
றள்ளற்கரியவிருடிலைக்குந்தனிமாமதலைதோன்றியினளால்.

(இ-பு.) மனத்துக்கினிய இல்லறத்துக்குரிய அதிதியென்னுந்தேவி இவ்வண்ணம் புத்திரன் வேண்டுமென்றுகூற அதற்கிசைந்து சொல்லுதற்கரும்பேராசையோடும் விருப்புற்ற காசிபமுனிவர் அவ்வதிதியோடுபுணர்தலசெய்ய எள்ளப்படாத வேதாதிகலைகளுணர்ந்து சந்திக்கும் கடல்சூழ்ந்த பெரியநிலவுலகின்கண் அகற்றக்கூடாத அந்தகாரத்தைப்போக்கும் ஒப்பற்ற ஒருபுதல்வன் உதித்தனன். எ-று. ஆல் அசை. (௩)

பிறந்தகுறியோன்றனைக்கைப்பிராயமதனிற்றந்தைமகிழ்
சிறந்தமனனுபனழைத்திதனைச்சொற்றனெமதுசிறப்படியே
யறைந்தமறையாகமங்கலைகளரியபொருள்விஞ்சைகள்பலவு
நிறைந்தவுளனியாபிடும்கோரநேயமுறைபயவிதுகேண்மோ.

(இ-பு.) இவ்வாறு உதித்தசூரியனையொத்த புதல்வனை ஐந்தாமவயதிற் தந்தையாகிய காசிபமுனிவர் மகிழ்ச்சிமிக்க மனமுடையவராய் அழைத்து இதனைச் சொல்லினர் எங்கள் சிறப்படிச்செல்வமே சிவபிரானாற் கூறிய வேதாகமங்கள் சாத்திரங்கள் அவைகளின்பொருள்கள் மற்றுமுள்ள கலைகள்முழுதும் பூரணமாய்த் தெளிந்துள்ளவனாக நீ ஆவதற்கு ஒருநல்லமார்க்கம் புகலுகின்றேன் இதைக்கேட்பாய் எ-று. (௪)

சிந்துபுடைசூழ்பாநிலத்திற்சென்றுமறைசைத்தலத்தெய்தி
யிந்தொண்மவுலிபெருமானையிறைஞ்சிப்பூசையினிதியற்றி
யெந்தவுலகுமுனைத்தொழுதேயோதவென்றுமழிவின்றி ன்.
யுந்துமனத்தில் வேண்டுமவைமொருங்குபெறுவையென்றுரைத்தா

(இ-பு.) கடல்சூழ்ந்தபெரியநிலவுலகினைச்சென்றுபோய்ச் சுருதிபுரியை அடைந்து இளம்பிறையணிந்த ஒளிபொருந்தியசடைமுடியையுடைய சிவபிரானை வணங்கி இனிதுடன் பூசைபுரிந்தால் எவ்வுலகமும் நின்னைத்தொழுது துதிக்கும்படி எந்நாளும் அழிவில்லாமல் முன்செல்லுமனதில் இச்சித்தவரங்களை ஒருசேரப் பெற்றுக்கொள்வாய் என்று கூறினர். எ-று. ஏ-அசை. இவ்விரண்டுங் குளகம். (௫)

நல்குமபெரியோனிவையுரைப்பநயக்குமதிரோனுளமகிழ்ந்து
மலருங்கமலவாவிகள்சூழ்மறைசையூதூர்வந்துபணி
யல்குலதிதிதருமதலையமரர்முனிவர்கணநாதர் [ன்
பல்கிநெருங்குங்கோபுரவாய்ப்பணிந்தஞ்சலி செய்துடன்புகுந்தா

(இ-பு.) தன்னையீன்ற காசிபமுனிவர் இவைகூற இச்சித்தமனமகிழ்ந்து நிறைந்ததாமரைபூத்த தடாகங்கள் சூழ்ந்ததிருமறைசையென்னும் பழையநகரத்தின்கண்வந்து அரவப்படம்போன்ற நிதம்பத்தையுடைய அதிதியீன்ற அச்சூரியனொத்தபுத்திரன் தேவர்கள்முனிவர்கள்கணநாதர்கள் பரவிநெருக்குறுங்கோபுரவாயிலைக்கண்டுவணங்கிக்கரங்களைக்குவித்தபடி திருவாலயத்தினுள் புகுந்தான். எ-று (௬)

தாவிலுலகமூன்றினுளோர்தந்தைதந்நபடியுங்கலியாண
வாவிமூழ்கி நியதியினுய்ப்பருமான்கரத்தின்வள்ளலின்முன்
மேவிப்பணிந்துபூசைதனைவேதாகமத்தின்படியாற்றிப்
பூவிற்பொலிபுங்கவனையாயன்போற்றும்பதங்களேத்தினனால்

(இ-பு) குற்றமில்லாத மூவுலகத்துள்ளவர்களும் அடைந்த தீராடுங் கலியாணகோடியென்னுந் தீர்த்தத்தில்முழுகிச்செபமாதிகடன்களைமுடித்து வனயமழுவும்மானும்தரித்ததிருக்கரமுள்ளவள்ளலாகிய வேதபுரீசர்திருமுன்சென்றுவணங்கி வேதாகமங்களிற் சொல்லியமுறையின்படி அருச்சனைசெய்துதாமரைமலரில்வாழ்கின்றபிரமனுந்திருமாலுந்துதிக்கின்ற திருவடிகளைத்தோத்திரஞ்செய்தனன் எ-று-ஆல்-அசை. (எ)

போற்றி வணங்கிப்புறம்போந்து பொன்னாலயத்துக்குத்தரத்
தோர், சாற்றுங்கடிகைதூரத்திற்சார்ந்தவ்வுழியிற்கோடமெனு
மாற்றமுறுபாய்பரியினங்கள்வைத்திட்டிருக்கும்புக்கசனைச்
சீற்றமுடனங்கிரவணைந்துரந்தாவிடையிற்செறிந்திருந்தான்.

(இ-பு) இவ்வாறு துதிசெய்து பணிந்து வெளிவந்து திருக்கோயிலுக்கு வடக்கிலெ சயல சொல்லுகின்ற ஒருநாழிகைவழித்தூரத்தில அணைந்து அவ்விடத்தில் கோடமென்னும் பெயருடையகுதிரைக்கூட்டங்களைவைத்திருக்கும் சண்டாளனை அவனிருந்தபடி கோபத்தோடுதுரத்திவிட்டு அவ்விடத்தில் உறைந்திருந்தனன் சூரியன் எ-று. (அ)

இருந்துபறைநாளகினுங்கேடற்கெட்டாதகல்டாசாரமதாய்ப்
பரந்துபுவியெங்கணுநிலவும்பரனைப்பரிந்தோரிலிங்கமெனத்
திருந்தவமைத்தாகமநூலின்செலவாற்பூசைசெய்தடியேன்
வருந்தகறவிர்ந்துமிகவாழ்வுவழங்கென்றிரந்துவணங்கினான்.

(இ-பு) சூரியன் அவ்விடத்திருந்து நான்கு வேதங்கள் இன்னமுந்தேடுதற்கரிய எல்லார்க்குமாகிய திருமேனியோடு பரவி உலகமுழுதும் விளங்கும் சிவபிரானைப்பரிவுகொண்டு ஓரிலிங்கமாகத் திருத்தத்தோடு பிரதிட்டைசெய்து சிவாகமத்திற்கூறிய முறையாற் பூசைபுரிந்து அடியேன்வருத்தத்தையொழித்துமிக்க அழியாத வாழ்வுதரல் வேண்டுமென்று குறையிரந்து வணங்கினன். எ-று. (௯)

அன்னகாலையிலிங்கவடிவத்தின்கணின்றுமமலேசன்
மன்னவெளிவந்திளஞாயிறின்வதனநோக்கிமனமகிழா
வுன்னும்வரங்களியாவுமவற்குதவிக்கருணைபுரிந்தென்றுங்
கன்னிபாகனுமிடையிற்கரந்தான்பதங்கன்களிகூர.

(இ-பு.) அத்தன்மையான காலத்தில் இலிங்க ரூபத்தினின்றும் நின்மலராகிய சிவபிரான்தம்முடைய திருவுருவம் முழுதும் விளங்க வெளியில்வந்து இளஞ்சூரியன் முகத்தைப் பார்த்து இதயங்களித்து நினைக்கும்

ரங்கள்முழுதும் அவனுக்குக் கொடுத்து என்று மாறுதகிருபை செய்து உமைபாகராகிய அச்சிவபிரான் அச்சூரியன்மகிழும்படி அச்சிவலிங்கத்தில் மறைந்தருளினார். எ-று. (௬௰)

மொழிக்தபரன்றாட்கதிர்க்குழக்தைமுன்னை மருச்சித்திட்டமையா
கொழுந்தீசரனென்றேயுரைப்பாரோடமிருந்தபரிசதனாற் [ற்
செழுந்தாமரைவாவிகளோடைசிறந்தகோடநகராயா
லழுந்தாபவத்திலவற்றேழுவோரமரரினுமேன்மையராவார்

(இ-பு.) இப்படிக் கூறிய சிவபிரான் திருவடிகளைக் கிரணங்களையுடைய சூரியன் முன்னம் குழந்தைப்பருவத்தில் பூசனைபுரிந்தமையால் அச்சிவபிரானது திருநாமங்கொழுந்தீசரரென்றுசொல்லுவாரோடமேன்னும்குதிரைக கூடடங்களிருந்த தன்மையாற் செழியதாமரை பூத்ததடாகங்களும் மடுக்களுமமிகுந்துள்ள அத்தல கோடநகராதும் அங்கனே வீற்றிருந்தருளுங் கொழுந்தீசரரை வணங்குகின்றவாகள சனனமென்னும்கடலிலாழமாட்டாாகள் தேவாகளினும மேம்பாடுடையவர்களாவாாகள். எ-று. ஆல்-அசை. (௬௧)

அந்தக்கொழுந்தீசரனருள்பெற்றணியார்திருவோத்தூரதன்கண்
வந்தக்கணம்வானவாமுனிவர்வணங்கித்துதிப்பமனத்தினுற
வைந்தக்கரத்தைவியந்தோதியணியாமதிலசூழாலயத்துக்
கிந்துக்குயர்ந்தகோபுரத்தினெழிலாாவாயிலுடபுகுந்தான்.

(இ-பு.) அக்கொழுந்தீசரென்னுஞ் சிவபிரானது திருவருள் பெற்றுக்கொண்டு அந்நிமிடம அழகுநிறைந்த சுருதிபுரியின் கண்வந்து தேவர்கள் முனிவாகள் பணிந்து தோத்திரஞ்செயயத்தன்மனதிற்பொருந்தும்படி பஞ்சாக்கரத்தை வியப்புடன் ஓதிஇரத்தினங்கள பதித்த மதில்சூழ்ந்த திருக்கோயிலுககு சந்திரமண்டலத்தினும உயாந்த கோபுரத்தினுடைய அழகியவாயிலுட்புகுந்தான். எ-று. (௬௨)

தொழுவார்சிலர்கடொழுதெழுந்துதுதிப்பார்சிலர்கடுதித்துருகி
யழுவார்சிலர்களழுதெந்தையாடுஞ்சாழறபம்பலவு
மொழிவார்சிலர்கண்மூக்கனலைமூட்டித்தீயின்மொண்டிமூது
பொழிவார்சிலர்களிவையெல்லாம்புதல்வனோக்கிவியந்தெய்தி.

(இ-பு.) வணங்குகின்றவர்கள்சிலர் வணங்கித்துதிசெய்கின்றவர்கள் சிலர் துதிசெய்து மனமுருகி அழுகின்றவாகள் சிலர்அழுது எந்தையாகிய சிவபிரான் செய்தருளும்திருவிளையாடல்களைமுழுதும் கூறுகின்றவர்கள்சிலர்மூன்றனலையும் வளர்த்தி அத்தீயில்நெய்களை முகந்து பொழிகின்றவர்கள்சிலர் ஆகியஇவைகளை யெல்லாம் இளஞ்சூரியன்பார்த்து அதிசயித்து வந்து. எ-று. (௬௩)

பவத்தனலையவித்திடு நீர்க்கலியாணகோடிதனிற்பலகாறோய்ந்து
சிவத்தவெழின்மேனியில் வெண்டிருநீற்றினொளிதயங்கச்சிந்தையூ
ன்றித், துவர்த்தமணிவாயாலுந் தூயபஞ்சாக்கரப்பொருளேசொற்
றுமேவித், தவத்தவர்கள்குழுமியுறுந் தடமதிலாலயம்புகுந்துதகவி
ற்சூழ்ந்து.

(இ - ள்.) தீவினையாகிய அக்கினியை அவித்திடும் நீரையுடையகலி
யாணகோடியென்னும் தீர்த்தத்தில பலவிசைமூழ்கிச்சிவந்த அழகியமே
னியின்கண் வெளிய திருநீற்றினொளிபிரகாசிக்க மனதைநிறுத்திச்செவ்
விய அழகுள்ள வாயினாலும் அஞ்செழுத்தாகிய பொருளையேயுச்சரித்துப்
பொருந்தித்தவம்புரிகின்ற பெரியோர்கள் கூடியிருக்கின்ற விசாலமாகிய
மதிலையுடைய திருக்கோயிலுட்புகுந்து பெருமையுடன்வலம்வந்து எ-று.

பிரமாதியவரறியாப்பிஞ்ஞகனைத்தரிசித்துப்பேணிப்போற்றிப் [ல்
பரமாதிமுதற்பொருளைப்பனிமலராற்றண்புனலாற்பாலாற்கன்ன
வருமாதிசுவைரசத்தான்மதுவாற்றேறங்கிளநீரால்வாசந்தோய்வாற
சிரமாதியணிகலனாற்றூபத்தாற்றீபத்தாற்செய்தான்பூசை.

(இ - ள்.) பிரமன்முதலிய தேவர்கள்காணமாட்டாத பிஞ்ஞகனாகிய
வேதபுரீசரைத்தரிசனஞ் செய்து விரும்பித்துதித்து எவைக்குமுதற்கார
ணப்பொருளாயுள்ள அவ்வேதபுரீசரைக்குளிர்ந்தபுட்பத்தாலும்தண்ணியகங்
கையாலும் கரும்பிலவருகின்ற முதன்மையுள்ள மதுரமானசாற்றினாலும்
தேனாலும் இளநீராலும் வாசனையுள்ள சந்தனத்தாலும் சிரமுதல் திருவடி
வரையிலும் அங்கங்கே அணியத்தக்க ஆபரணங்களாலும் குங்குலிய பு
கையாலும் கற்பூரதீபத்தாலும் பூசைபுரிந்தான். எ-று. (௧௫)

இம் மூன்றுங்குளகம்.

செந்நெலன்னமினியசுவைசேர்ந்திடுநற்கறிவருக்கந்தெவிட்டாத்தே
மா, மன்னுமதுரந்தரம்பைவருக்கைமுதலியகனியின்வகைகளெல்
லா, மன்னநடையுமைபாகற்கன்புடனேபடைத்தருளியடியிற்றாழ்
ந்து, முன்னிருகைகுவித்தெழிற்பொன்முடிமீதில்வைத்துநின்று
மொழியலுற்றான்.

(இ - ள்.) செந்நெல் அரிசியாலாகிய அமுதமும் இனிய அறுசுவை
யோடுங் கூடியகறியமுதுவருக்கங்களுந் தெவிட்டுதலில்லாத தேமாங்க
னியும் நிலைபெற்றமதுரமுடைய வாழைக்கனி பலாக்கனி முதலானகனி
வருக்கங்களும் ஆகிய இவைகளெல்லாம் அன்னம்போலும் நடையை
யுடைய உமையாகிய இளமுலைநாயகியார் பாகரானவேதபுரீசருக்குப்பத்தி
யுடன் நிவேதித்தருளித் திருவடிகளிற்பணிந்து இரண்டுகைகளும் கூப்பிப்
பிரகாசிக்கும் அழகிய சிரத்தின்மேல்வைத்துக்கொண்டு எதிர்நின்று சொல்
லத் தொடங்கினான். எ-று. (௧௬)

மல்லற்புவனத்தெவருமுனை வணங்கித்துதித்தோர்மனத்திலுறு
மல்லற்பிணிகடீர்த்திடவுமவனிதனிற்பைங்கூழாதி
வல்லதருவஞ்சிகளைவையுமழையுமுனதுவசமுறவுஞ்
சொல்லிறசுருதிநூல்விஞ்சைதொக்கதுனதுதுறையெனவும்.

(இ-பு.) வளப்பமிக்க இந்நிலவுலகின்கண் உன்னைத்தொழுது தோத்திரஞ்செய்தவர்களுக்கும்அவர்கள்மனதிற் பொருந்தியஅல்லலாகியநோய்தீர்க்கவும் பூமியில்விளையும்பயிர்கள் முதலாகவன்மையுள்ளவிருட்சங்கள் கொடிகள் எல்லாமும்மேகமும்உன்வசத்தாகவும் இன்னும்சொல்லுமிடத்துவேதங்கள்சாத்திரங்களமந்திரங்கள் இவைகளின்தொகுதியும உன்வசமாகவும்,

வரங்களளித்தேனின்னமுன்றன்மனதின் பொருளைவுரைத்திடெனப், புரங்களழித்தான்புகன்றிடலும்பொன்னூற்றியபொற்புறு
செங்கேழ்க, கரங்களுடையோனகமகிழ்ந்து கண்ணீர்மல்கவுளமுருகிந, தரங்கவிடமுண்டமரிடர்தவிர்த்தமுதனுக்கிவையுரைப்பான.

(இ-பு) இப்படிவரங்கள்கொடுத்தோம் இன்னும் உன் மனதில்உள்ள இஷ்டத்தைச்சொல்லென்று திரிபுரங்களழித்த சிவபிரானதிருவாய்மலர்ந்தருளலும பொன்னைக்காய்ச்சியூற்றியதுபோலும் சிவந்தநிறமுள்ள கிரணங்களுடைய சூரியனமன மகிழ்ந்து ஆனந்தக்கண்ணீர சொரிய நெஞ்சுருகித் கடல் விடமுண்டு தேவர்கள் இடுக்கணைநீக்கிய அச்சிவபிரானுக்கு இவ்வாறுகூறுகின்றான் எ-று இவ்விரண்டுகுளகம் (௨௪)

விரிஞ்சன்முதலவரறியாவியனுன்னதுதிருக்கோலந்
தெரிந்தவெனதுவிழிமுன்னஞ்செய்ததவமேதென்றறியேன்
பரிந்துவரமெற்றுகருளியநம்பாலடைந்தேனகுறைவேறிலையுன்பா
லிருந்துகணப்போதினுமகலாதேந்துமவரமொன்றினிதருள்வாய்,

(இ-பு.) பிரமன்முதலிய தேவர்களறியாத உமதுதிருக்கோலத்தைத்தரிசித்த எனதுகண்கள முன்புசெய்த தவப்பயனேதோ அதையின்னதென்றறியேன தேவரீரே பரிவுடன் அநேகவரங்களை எனக்குத்தரவும்பெற்றுக்கொண்டேன்.ஆதலால் வேறொருகுறைவுமில்லை ஆனால் உம்சமீபத்திருந்து ஒருகணப்பொழுதும்பிரியாது வழிபாடுசெய்யும ஒருவரம்மாத்திரம் இனிமையாக அருளலவேண்டும். எ-று. (௨௫)

எனப்போதிரவியிசைத்திடலுமிமவான்மகளையகன்மகிழ்ந்து
தினைப்போதினுநீயெற்பிரியாதிருவென்றிசைத்துச் சிறுவன்மிசை
மனப்போதினிற்பேரருளைபெருகிவாயாற்பின்னுமருமதலை
நனைப்போதணிந்தபொலன்வேணிநாதனிதனைநவிற்றுவனால்,

(இ - பு.) என்று பகற்பொழுதையுடையசூரியன் கூறவும் இமயவ ரையரையன் புத்திரியாராகிய உமாதேவியார்தலைவரான சிவபிரான்மகி ழ்ந்துநினையளவுகாலத்துமநீயென்னைப்பிரியாதிரு என்று திருவாய்மலர்ந்து சூரியன்மீதுதமதிதயதாமரை யிறகருணைத் தேன்பெருகித்திருவாயினாற்பி ன்னும் அரியகொன்றையினது குளிர்ந்தமலரணிந்த அழகிய சடையை யுடைய ; வேதபுரீசர் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளு கின்றார். எ-று. ஆல்-அசை. (உகூ)

தருக்குமெழிலிக்ஷேத்திரத்திற்சார்ந்தோர்சித்திசாருதலாற்
செருக்குமமரர்முன்பிதனைசசிவக்ஷேத்திரமென்றுரைத்திடுவா
ரிருகருமெனைப்பூசிந்ததனுலிசைப்பார்மறைசைக்ஷேத்திரப்பே
ரருக்கவுன்னுறபாற்கரக்ஷேத்திரமென்றெவருமறைகுவரால்.

(இ - பு,) மிக்கவளமமைந்த இந்தத்தலத்தில் அடைந்தோர் இஷ் டசித்தியடைதலால் செருக்குடைய தேவர்கள்முன்பு இதனைச்சிவதல மென்றுகூறுவர் வேதங்களும இவ்விடத்து என்னைப்பூசித்ததனுல் மறை சைத்தலமென்று கூறுவாாகள்சூரியனே உன்னுற் பாற்கரதலமென்றுயா வரும் கூறுவாாகள். எ-று. ஆல்-அசை. (உஎ)

என்றங்கையின்மான்மழுவேந்தியிசைப்பக்கதிரோனினிதுகந்து
சென்றங்கிருந்தான்சிவபூசைசசிலநாட்பரிவினுடுபுரிந
தன்றங்கமலத்திறைமுனிவரமரரொடும்வந்தமலன்முன
னின்றங்கவனைத்துதிசெய்தேயிதனை மகிழ்வானிகழ்த்துவனுல்.

(இ-பு) என்று அழகிய திருக்கரத்தில் மானும்மழுவும் ஏந்தியசிவ பிரான் திருவாய்மலர்ந்தருளச்சூரியன் மிகமகிழ்ந்து அத்தலத்திற்சிலதி னம சிவபூசையைப்பேரன்போடுசெய்து கொண்டு ஓரிடத்திரு தான் அக் காலததில்அழிகிய தாமரைகசமலத்திற்றங்கும் பிரமன்முனிவர்கள் தேவர் களோடும்வந்து சிவபிரான் சந்நிதிகெதிரில்நின்று அவ்விடத்து அச்சிவ பிரானைத்துதித்து இவ்வாறு மகிழ்ச்சியுடன் கூறுகின்றான். எ-று. ஆல்-அசை. (உஅ)

ஆக்குநதொழிலு மாக்கியவையளிக்குந் தொழிலுமளித்ததன்பின
போக்குந்தொழிலுமுனதன் றேபுவனமனைத்தும் பொருந்துமிரு
ணீக்கும்பரிசைநீயுணராதிருக்கின்மற்றார்நினைகுவரோ
காக்குந்தொழிற்குக்கரியதுவேகாட்டிப்புரிவதுளதொன்றே.

(இ பு) சிருட்டிக்குந்தொழிலும் அவ்வாறுசிருட்டித்தபொருள்களை க்காக்குந்தொழிலும் அவ்வாறுகாத்தபிறகு சங்கரிக்குந்தொழிலும் ஆகிய மூன்றும் உமமுடையதல்லவா உலகமெங்குமமூடிய இருளைப்போக்கும் வகையைத்தேவரீர் உணராதிருந்தால் மற்றவயாரா நினைப்பார்கள் உலக த்தைக்காக்கும் தொழிலுக்குச்சாட்சியாகக்காட்டிச்செய்யவேண்டியதொ ன்றுண்டு. ஏ-று, ஏ, இரண்டும்-அசை. (உகூ)

சொல்லும்புவனத்திருளகலச்சுடரோன்றனைக்கோட்பதியாக்கி
மல்லன்மேருமலையைநிதம்வலம்வந்திடவும்வரமருளி
யல்லும்பகலுமிரண்டாக்கியதனிற்காலமூன்றாக்கிச்
செல்லுங்காலமளவுரைப்பதவனாலென்னச்செய்குவையே.

(இ-பு) யாவரும்புகழும்உலகத்தின்இருளைநீக்கிச் சூரியனைக்கிரகங்களுக்கெல்லாம் தலைவனாக்கிவன்மையுள்ள மேருகிரியைநிதமும் வலமாகவரவும்வரந்தந்தருளி இரவும்பகலும் இரண்டாகச்செய்து அவ்விரண்டிலும் மூன்றுகாலமாக்கித் தினந்தோறுஞ்செல்லும் நாழிகையளவைக்கூறுவது அச்சூரியனாலென்றுசொல்லும்படிச் செய்தருளவேணும். எ-று. (௰)
ஏ-அசை.

சகதலவியற்றுங்கருமத்தின்சாட்சியிவனேயாயிருப்ப
மகத்துமளித்துமணிநெடுந்தேர்வளமுமளித்துமாமேரு
நகத்தைவலமாவந்திடவுரைத்திடென்றுநளினப்பதியுரைப்பப்
புகைத்துப்பகைத்தோர் புரமெரித்தபுனிதனதற்குடம் பொருந்தினனால்.

(இ-பு.) இந்நிலவுலகத்திற்புரியுந்தொழில்களுக்குச்சாட்சியாகஇவனேயிருக்கவும் மகத்துவந்தந்து அழகியபெரியதேரின்வளத்தையுங்கொடுத்து மகாமேருமலையை வலமாகவரவுந்திருவாய்மலரவேண்டுமென்று பிரமன்கூறசகோபங்கொண்டு பகைகொண்ட அசுரருடையதிரிபுரங்களையெரித்தருளியசிவபிரான் அவ்வார்த்தைக்குத்திருவுளமிசைந்தருளினர்.
எ-று. ஆல்-அசை (௰க)

பொற்றாமரைப்போதுறைகிழவன்புகலக்கெங்கோனினிதுகந்து
நற்றாமரைகண்பனையழைத்துநவின்றபரிசுவரமளித்தே
யெற்றாயிதனையுரைத்தனனீயென்னைநீங்காதிருக்கவரஞ்
சொற்றாமன்றேமுனமந்தச்சொலவிறப்பழுதுவாராமல்.

(இ-பு.) பொன்போன்ற தாமரைமலராசனனாபிரமன் புகன்றதற்கெமதிறைவராகிய சிவபிரான்திருவுள்ளமுவந்து நல்லகமலநேசனாகிய சூரியனையழைத்து அப்பிரமன் கூறியவாறுவரங்களைத்தந்து எனதுதாய்போன்ற அச்சிவபிரான் கூறுகின்றார் ஓசூரியனேமுன்னம் நீஎம்மைநீங்காதிருக்கும்படி வரங்கொடுத்தோம் அல்லவா அவ்வாததிறகுப்பழுதுவாராமல்.
எ-று. ஏ-அசை. (௰உ)

நீயெங்கிருந்தபோதினும்யானீங்காதிருப்பனின்னிடத்திற்
பாயுங்கதிநல்லயம்பூட்டிப்பயிலோராழித்தேரேறிக்
காயுங்கதிர்கடிசைபரப்பிக்கலந்தபுவனத்துறுமிருடான்
றீயும்பரிசுசெல்கென்றான்செங்கேழ்நனுக்கிவைசொன்னான்.

(இ-பு.) நீஎவ்விடத்திருக்கினும் நான்உன்னைவிட்டுநீங்காதிருப்பன்
[illegible] பாயக்கக்ககதிகளமைந்தநல்லகுதிரைகளைப்பூட்டியிரு

க்கும் ஒற்றைச்சக்கரத்தையுடைய இரதத்திலேறிவெப்பமுள்ள கிரணங்க
ளைஎண்டிக்கினும்விரித்து உலகத்தில்மூடியுள்ள இருட்கூட்டங்கள்நீங்கும்
படிபோவாயென்று திருவாயமலர்ந்தருளச்சூரியன் இதற்கிவ்வாறுகூறினான்.
(௩௩)
எ-று. தான்-அசை. இவ்விரண்டுங்குளகம்.

தேவதேவேயுனதுபணிசிரத்திற்கொண்டேன்செய்கின்றே
னேவரேனுமுனதுமொழிக்கெதிர்வேறுரைப்பாருளர்கொல்லோ
சேவின்மேனின்றருள்செழுஞ்சுடரேசிற்பரையனுள்ளத்திறைசெறிவிளைவை
யிவைதுவுமுனதருளேயதனாலுரைப்பேனெனநவின்றான்.

(இ-பு.) தேவர்கள்தேவனே தேவரீரகட்டளையைச்சிரசிலேற்றுக்
கொண்டேன் அல்லாமலும் அவ்வாறே இயற்றுகின்றேன் யாவராயினும்
தேவரீர்திருவாக்கிற்கு எதிராகவேறு கூறுவாரெவருண்டோ இடபவாகன
மேறும் சுயஞ்சோதிசொரூபரே அடியேன் மனதிலுதித்திருப்பதைக்
கொடுப்பதும் தேவரீர் திருவருளேயாகையால உரைக்கின்றேனென்று கூ
(௩௪)
றினான். எ-று. ஓ-அசை.

என்பாலன்புற்றினிதளிக்குமிரதமதனின்மீயேறி
மின்பாய்பசும்பொனெழினமனைசேர்வியன்மாநகரை வலம்வந்தே
யன்பாயுனைநேர்பிசைத்தொழுதோரியாவரெனினுமவர்க்கெல்லா
மென்பாலுள்ளவருளவர்பாலிசைத்துவரமீந்திடவேண்டும [ர

(இ-பு.) இப்போது என்னிடத்தன்புற்றருளிய இவ்விரதத்தின்மீது
தேவரீரேறிஒளிவீசும்பசும்பொன்மயமான அழகியமாளிகைகள் நிறைந்த
அகன்ற இம்மநைசைமாநகரைவலமாகவந்து மெய்யன்போடு அக்காலத்து
இவ்விரதத்தின்மீதுதேவரீரைத்தொழுதவர்கள் எத்தன்மையராயினும் அவர்
களுக்கெல்லாம் என்னிடத்திப்போது வைத்திருக்குந்திருவருளை அவர்களி
டத்தும் செலுத்திவேண்டியவரங்களைக் கொடுத்தருளவேண்டும். எ-று.
(௩௫)
ஏ-அசை.

ஆண்டுதோறுமித்தினத்திலடுத்தேயுனைநான்பூசித்து
நீண்டமணிப்பொற்றேரேறிநின்பொற்கோலமியான்காண
வேண்டுமெனச்செங்கேழுரைப்பவிடவாய்மணிச் சூட்டரவினணி
பூண்டமருமப்பொலிநுதற்கட்புனிதன்மகிழ்வுபூத்தனனால்.

(இ-பு.) வருடந்தோறும் இத்தினத்தில் இவ்விடத்தணைந்து தேவ
ரீரையான்பூசித்து நீட்சியாகியஇரத்தினங்களழுத்திய அழகியஇரதத்திலே
றியதேவரீரது திருக்கோலத்தையான் தரிசிக்கவேண்டுமென்று சிவந்தகிர
ணங்களையுடையசூரியன் கேட்டுக்கொள்ளவிடந்தங்கிய பற்களமைந்தவா
யையும்இரத்தினம்பொருந்தியமுடியையுமுடைய சர்ப்பத்தினாலாகிய ஆபர
ணந்தரித்ததிருமார்பமும் நெற்றியினிடத்துள்ள நேத்திரமும் விளங்கும்
சிவபிரான் திருவுளமகிழ்கூர்ந்தார். எ-று, ஆல்-அசை. (௩௬)

பானுவேண்டும்பரிசெங்கோன்பசும்பொற்சிகரத்தேரேறி
வானும்புவியும்பாதலமும்வணங்கநகரைவலமவந்து

மானுமழுவுமணிகரத்தான்வணங்கித்துதிக்குமாவதிதி
சூனுமலர்மாமுகநோக்கியன்போடிதனைச்சொற்றனனால்.

(இ - பு.) சூரியன்வேண்டியவாறு எமதிறைவராகிய சிவபிரான்பசு ம்பொன்னாலாகிய முடியையுடைய இரதத்தின்மீது ஆரோகணித்து மீதலமும பூதலமும் பாதலமும் வணங்கும்படி அம்மறைசைமாநகரைவலமாகவந்து மானும் மழுவுந்தரித்த திருக்கரங்களையுடைய அச்சிவபிரான் தம்மை வணங்கித்துதித்துக்கொண்டு எதிரில்நிற்கும் மகத்தாகிய அதிதியென்பவளுடையமைந்தனை சூரியனது தாமரைமலர்போலும் முகத்தைப்பார்த்து அன்போடு இவ்வாறுதிருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. ஆல், அசை.

வரும்வற்சரங்கடொறுமகரமதியிற்சுத்தசத்தமியில் [தோர்
விரும்பிக்கதிரோய்நீயியற்றும்விழவின்வையத்தெமைத்தொழு
ரரும்பொற்றலத்தோர்பூதலத்தோரரவின்றலத்தோரியரைவரெனுந்
திரும்பிக்கருவினெய்தாதுசித்தியளிப்பேமெனவுரைத்தான.

(இ - பு.) வருகின்ற வருடங்கடோறும் தைமாசம் பூர்வபட்சசத்தமிதிதியில் சூரியனே நீவிருப்பமுடன்புரியும் திருவிழாவில இரதத்தின்மீது எம்மைத்தொழுத அரியவிண்ணுலகத்தோர மண்ணுலகத்தோர் நாகலோகத்தோர இவர்களில் எவர்களாயினும மறுபடிகருப்பையிற்சிக்காது முத்தியின்பத்தைக்கொடுப்போமென்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று

இன்னங்கேளிச்சத்தமியையெமதிரதசத்தமியென்று
மன்னுமுளராய்க்கிடந்துருவிவருநங்கந்தருதியென்ன
வுன்னித்தோய்ந்துதிலோதகம்விட்டுளத்தேயெமைநினைந்திடினு
மன்னநிலத்தோர்தென்புலத்தோரடைவார்சித்தியெனவுரைத்தான்

(இ - பு.) இன்னுங்கேளாய் இந்தச்சத்தமியைஎம்முடைய இரதசத்தமியென்று நிலைபெற்றசித்தமுடையவராய் பலதிவ்வியநதிகளும் ஒருங்கேசேர்ந்து பூமிமீதூர்ந்து ஊருருவிவருகின்றது நம்முடையகுந்தியென்று எண்ணிஅதில்நீராடித்திலதாப்பணம்செய்து தமதிதயத்தில் எம்மைநினைந்தாலும் அம்மறைசைமாநகரத்திலுள்ளாரது பிதிர்கள முத்தியடைவார்கள்என்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று (௩௯)

இவ்வாறரன்பால்வரம்பெற்றேயிரவியிரதமிசையேறி
மைவாருதிசூழுலகைவலமிரவியின்னம்வருகின்று
னெவ்வாக்கணிதூற்கவனேயொருவனென்னத்தொழுதவர்க்கு
வெவ்வாய்வினைதீர்த்துள்ளத்தின்விருப்புமுதவுமெனவுரைத்தான்.

(இ - பு.) இவ்வாறு சிவபிரானிடத்து வரம்பெற்றுக்கொண்டு சூரியன் இரதத்தின்மீது ஆரோகணித்து கருங்கடல்சூழ்ந்தநிலவுலகத்தை அச்சூரியன் இன்னம் வலம்வருகின்றான் ஒப்பற்றகணிதசாத்திரத்திற்குஅவனே ஒருவனென்று வணங்குகின்றவர்களுக்குக்கொடுமைவாய்ந்தவினைகளைத்தீர்த்து அவர்கள்மனதில்விரும்பியவைகளையும் கொடுத்தருளுவர்என்று சூதபுராணிகர்கூறினார். எ-று. (௪0)

சூரியன்பேறுபெற்ற சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்,,, ௪0௪.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விநாயகர் அங்குசபாசம்பெற்ற சருக்கம்

அருளுறவிதுரைப்பநைமிசாரணியரகம்வியந்து
தெருளுறுமாதவவாங்குத்தீயகிசரக்கோடன்
மருளுறுசிந்தையனங்குவைகினன்முன்னெனவின்சொற்
பொருளுறுகின்றனவதனைவிரித்தெமக்குப்புகல்கென்றார்.

(இ - ள்.) கிருபையுடன் இவ்வாறு சூரியன்பேறுபெற்ற சரித்திரத் தைக்கூறக்கேட்டு நைமிசாரணிய முனிவர்கள் மனக்களிப்புற்று தெளிந்த சிந்தையையுடையமகாதவசிரேட்டராகிய சூதபுராணிகரே அச்சுருதிபுரியி ன்கண் கொடியகோடனென்னும்அசுரன்மயக்கமுள்ள மனமுடையவனாய் அத்தலத்திலேயே முன்வசித்திருந்தனனென்று இனியசொற்பொருளமை யக்கூறிய அச்சரிதத்தைவிரிவாக எங்களுக்குச் சொல்லவேண்டுமென்றார் கள். எ-று. (௧)

அந்தவகையினைக்கேண்மினெனச்சூதனறைகின்றான்
முந்தவொருகாலதனின்முகிண்முலையம்பிகையரனுஞ்
சிந்தைமகிழ்ந்துயர்வெள்ளிச்சிகரியிற்சித்திரம்பொறித்த
சுந்தரமண்டபத்தெய்தித்துன்னுமெழினோக்கினரால்.

(இ - ள்.) அவ்விருத்தாந்தத்தைக் கேளுங்களென்று சூதபுராணிகர் சொல்லுகின்றார் முன்னொருகாலத்தில் தாமரைமொட்டைப்போலுந்தனங்க ளையுடைய உமாதேவியாரோடு சிவபிரானும் மனக்களிப்புற்று உயர்வாகிய திருக்கயிலையிற் சித்திரந்தீட்டிய அலங்காரமண்டபத்தடைந்து அவ்விடத் தில் நிறைந்திருக்கும் அழகைப்பார்த்தார்கள். எ - று. ஆல் - அசை.

எழுதியசித்திரநோக்குமெல்லையிலம்பிகையங்கோர்
தொழுதகையவோங்காரச்சொரூபமிருந்ததுகண்டாள்
வழுவிலந்தவக்கரதனின்வடிவினைக்கண்டதிசயித்து
மழுவணிந்தகரத்தானைவணங்கியிவையுரைத்தனளால்.

(இ - ள்.) அம்மண்டபத்தெழுதி யிருந்த சித்திரங்களைப் பார்த்துக் கொண்டிருக்குந்தருணத்தில் உமாதேவியார் அவ்விடத்து ஒப்பற்றயாவரா

ஓம்தொழற்குரிய ஓங்காரத்திருவுருவம் எழுதியிருக்கதனைநோக்கினள் தவ றந்ற அவ்வோங்காரத்தின் திருவுருவத்தை உற்றுப்பார்த்து அதிசயம்அடை ந்து மழுவாயுதம்தரித்திருக்கும்திருக்கரத்தையுடைய சிவபிரானைத்தொழுது இவ்வாறு கூறினள். எ று. ஆல்-அசை. (ங)

வாரணத்தினுருவம்போல்வடிவமைந்தவிப்பொருளின்
காரணத்தையுரையென்னக்கண்ணுதலுமுரைசெய்வா
ரணத்தின்பொருளாகியபலமந்திரத்தின்
பூரணந்தையோங்காரப்பொருளென்பர்பெண்ணமுதே.

(இ - ள்) யானையின் சொரூபத்தைப்போல் திருவுருவமைந்துள்ள இவ்வக்ஷரத்தின் பெருமையை எனக்குத் தெரிவிக்கவேண்டு மென்று கேட்க நெற்றிக்கண்ணையுடைய சிவபிரானும் திருவாய் மலர்ந்தருளுகின்றார் மகளிர்களுக்குள் அமுதம் போன்றவளே வேதங்களின் சத்தார்த்தமாய்வி ளங்கும் அருமையாகிய பலமந்திரங்களின் நிறைவையே ஓங்காரப் பொரு ளென்று அறிஞர்கள் கூறுவர். எ-று. (ச)

என்றுசிவனுரைத்திடலுமிமயவரைசுதைமகிழ்ந்து
பொன்றிகழிவ்வோங்காரமபோன்றகரியுருவாகி
யின்றுமகிழ்புணர்ச்சியினிலெய்துதற்கென்னுளமென்றுன்
மன்றுணடம்புரிந்தவரன் மணிமுறுவல்பூத்திசைந்தான்.

(இ - ள்.) என்று சிவபிரான் திருவாய் மலர்ந்தருளலும் இமயவ ரை யரையன் புத்திரியாராகிய இளமுலைநாயகியார் மனமகிழ்ந்து அழகுவி ளங்கும இவ்வோங்காரத்தை யொத்தயானைத்திருவுருவமமைந்து இத்தினம் மகிழ்வுடன் புணருதற்குஎனக்கு விருப்பமென்று கூறினர் பொன்னம்பல த்தில் ஆனந்தத்தாண்டவம் புரிந்த சிவபிரான் அழகிய புன்னகை புரிந்து அவ்வாறே தானும் இசைந்தார். எ-று. (ரு)

கண்ணுதலுமவ்வேலைகரிமுறியினுருவெடுத்திடலும் . .
பெண்ணமுதமனையவளும்பிடியாகியிருவோரு
நண்ணியுயர்மானதப்போகன்குறுவாவிபிற்படிந்தே
யுண்ணிகழ்ந்தபடிபுணராவுள்ளமிகமகிழ்ந்தனரால்.

(இ - ள்) சிவபிரானும் அத்தருணத்து ஆண்யானை யினுருவமெடுத் திடப்பெண்களுக் கமுதமொத்த உமாதேவியாரும் பெண்யானை யினுருவ மெடுத்து இருவரும் ஒருங்கு சேர்ந்து சிறப்பமைந்தமானத மென்னும் திருப்பெயருடைய நன்கமைந்த தடாகத்தில் இறங்கித் தமதுள்ளத்தின் கண் தோன்றியவாறு புணர்ந்து திருவுள்ளம் மிகவும்களிகூர்ந்தனர். எ-று ஏ-ஆல்-அசை. (சு)

இப்பரிசிவர்கூடியின்பமுற்றவெல்லையினி
லொப்பரியகரிமுகத்தோடொருமதலையுதித்தனனா
லப்புதல்வன்றன்னைக்கொண்டரனுமைதம்முருத்தாங்கிச்
செப்பரியகயிலைதனிற்றேவர்தொழச்சென்றிருந்தார்.

(இ-ள்) இவ்வாறு இவர்களிருவருங்கூடி இன்பமுற்றதருணத்து ஒப்பற்றயானைமுகத்துடன் ஒருபுத்திரர் உற்பவித்தார் அப்புத்திரரைத்தம்முடன் அழைத்துக்கொண்டுசிவபிரானுமுமையம்மையார் இருவரும்தமது சுயவுருவத்தை எடுத்துக்கொண்டு சொல்லற்கரிய திருக்கயிலையில் தேவர்கள் வணங்கப்போய்வீற்றிருந்தார். எ-று. (எ)

அளித்தகரிமுகமதலைக்கணிமுடியாதிகள்பூட்டிக்
களித்தவன்முகநோக்கிக்கண்ணுதலுமிவையுரைத்தான்
றளிர்த்ததருவேந்தன்மலராசனமுதலியரான
வெளித்தகைவானவரெல்லாம்வேண்டுகின்றதெய்வமுநீ.

(இ-ள்) தாம்பெற்றெடுத்த யானைமுகக்குமாரருக்கு அழகியமகுடம்முதலிய ஆபரணங்களணிந்து மகிழ்ந்து அப்புத்திரரது முகத்தைப்பார்த்துச்சிவபிரானு மிவ்வாறு திருவாய்மலர்ந்தருளினர் தழைத்தோங்கும் கற்பகதருவுக்கு இறைவனாகிய இந்திரன் தாமரை மலராசனனாகிய பிரமன்முதலிய வெளிப்படையான தேவர்களனைவரும் பிரார்த்திக்கும்கடவுளும்நீ.

கயிலையினிற்பயிலுகணங்களுக்கும்பதிநீயே
செயிரறுமூவுலகினுக்குஞ்செய்வினைக்குமுதற்றுதிக்கு
மயலறுநற்றெய்வமுநீவருமிடையூறினைத்தவிர்த்து
நயமுறுபூசனைகொள்ளுநாயகனுநீயாமால்.

(இ-ள்) திருக்கயிலையில் வாழும்மிக்கசிவகணங்களுக்கும் தலைவன் நீயே குற்றமற்ற திரிலோகத்திற்கும் அம்மூவுலகத்திற்புரியும் தொழில்களுக்கும் முதலில் தோத்திரஞ்செய்யும் மயக்கமற்ற நல்லகடவுளும் நீயே அவ்வாறுதுதிப்பவர்களுக்குநேரும் இடையூறுகளைநீக்கிஅவர்களால் பயமிக்கவழிபாட்டை ஏற்றுக்கொள்ளும் தலைவனும் நீயேயாகும். எ-று. ஆல் அசை (கூ)

இந்தவரமியாவுமுனக்கீந்தனநீபூதலத்தி
லந்தமுறுமிக்கயிலைக்கதிகமெனக்கன்புடைய
கொந்தலரும்பொழில்சூழுங்கோதின்மறைசையிலெய்தி
யெந்தனைப்பூசனைகள்புரிந்தெல்லணியவைபெறுகென்றான்.

(இ-ள்) இந்தவரங்களெல்லாமுனக்குக் கொடுத்தனம் ஆகையால் நீநிலவுலகத்தில் அழகமைந்த இத்திருக்கயிலையினும் எனக்குவிருப்பமுடைய பூங்கொத்துகள் விகசிக்கும் சோலைகள்சூழ்ந்தகுற்றமற்ற மறைசை

மாநகரத்தடைந்து என்னைப்பூசித்து நீநினைத்தவைகளைப்பெறுவாயென்று திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (௯0)

வேறு.

ஈசனோதியவெல்லைகயமுக
னாசில்வேதவணிககரெய்தியே
மாசிலாமறையோதியவள்ளலைப்
பூசைசெய்துபுகன்றவைபெற்றனன்.

(இ - பு.) இவ்வாறு சிவபிரான் திருவாய்மலர்ந்தருளியகாலத்து யானைமுகமுள்ளவிநாயகக்கடவுள் குற்றமற்றவேதபுரியையடைந்து பழுதீர்ற வேதங்களைத்தேவர்களுக்கோதுவித்த சிவலிங்கப்பெருமானைப்பூசித்து அவரால் கூறியவாறு பெற்றுகொண்டனர். எ-று. (௯௧)

பின்னுமாங்குத்தென்கீழ்த்திசைப்பிள்ளையார்
மன்னுமோராகடிகைத்தூரம்வைகியே
யங்நிலத்திலிலிங்கம்வைததர்சசனை
துன்னுமன்பொடுசெய்துதுதித்தனன்

(இ - பு) பின்னும் அவ்விடத்துக்குத்தென்கிழக்குத்திக்கில் விநாயகக்கடவுள் நிலைபெற்ற ஒருநாழிகைவழிதூரத்தில் சென்று வசித்து அப்பூமியில்சிவலிங்கப் பெருமானைத்தாபித்துப்பூசனையைமிகக அன்புடன் புரிந்து தோத்திரஞ்செய்தனர். எ-று. (௯௨)

அந்தவீசற்குக்காலுறுமாசையின்
முந்துவான்மிகிபூசைமுடித்ததோர்
சுந்தரச்சிவனுண்டுதொழுதவர்
பந்தநீக்கிப்பரகதியீயுமால்.

(இ - பு.) அச்சிவலிங்கப்பெருமானுக்கு வாயுதிக்கில் முன்னாளில் வான்மீகிமுனிவர் பூசித்தஒப்பற்ற அழகமைந்தசிவலிங்கமூர்த்தமுண்டு அங்குத்தொழுதவர்களது பந்தபாசங்களைநீக்கி முத்தியின்பத்தைகொடுக்கும் எ-று. ஆல்-அசை. (௯௩)

வேறு.

அக்காலந்தனில்வேதபுரத்தினைச்சூழ்ந் துயர்தூரமடவியாகப்
பொக்காவைக்கண்டகவேற்புடைபடர் வேத்திரமீஞ்கபபொலனுடெய்தி,நிற்காவஞ்சீத்தாவுநெடுந்தாலமுதலாகநெருங்கியோரீ,புக
காதவனமாகிப்புடையோரியோசனைபரந்துபொருந்துமாதோ.

(இ - பு.) அக்காலத்து வேதபுரியைச்சூழ்ந்து நெடுந்தூரம்காடாக அவ்வழிச்செல்வோரது கால்களிற்பொற்றுக்கொள்ளுங்கூர்மையாகிய மு

ட்களையுடைய வேலமரங்களும் பக்கங்களிற்படர்ந்திருக்கும் பிரப்பஞ்செடிகளும் ஈச்சமரங்களும்தேவலோகத்தளவுஞ்சென்றுநின்று அழகியசித்தாமரங்களும் நீண்டபனைமரங்கள்முதலிய விருட்சங்களும் அடர்ந்து ஓர்ஈயும் புகக்கூடாதகாடாகிப் பக்கத்தில் ஒருயோசனைதூரம் பரவியிருக்கும். எ-று. மாது-ஓ-அசை. (கச)

*ஆரணியத்தினிற்கோடவரக்கனயமுகமானோனடலின்மிக்கோ*
*னைத்துயிரையுமெடுத்தூணென விழுங்கிச் சிசுபாலகரையுமீன்ற,*
*தந்தைதாயருப்பதைப் பதைப்பவுறநின்றுடற்பொறுத்துத தடுப்*
*பாரின்றிச், சிந்தைமகிழ்ந்தவணிருந்துதேவருக்குமிடுக்கண்மிகச்*
*செய்துதாமனனே*

(இ-பு) அந்தக்காட்டில் கோடனென்னுங்குதிரைமுகத்தையுடையவன் வலிமையின்மிக்கவன் எவ்வுயிர்களையும் ஆகாரமாகவெடுத்துவிழுங்கிச் சிசுபாலர்களையும்பெற்ற தாய்தந்தையர்கள் மனம்பதைக்கத்தயையில்லாமலெடுத்துத்தின்று தன்னைத் தடுப்பவரொருவருமில்லாமல் மனமகிழ்ந்து அக்காட்டிலேயேயிருந்து தேவர்களுக்கும் அநேகதுன்பங்களைச்செய்து கொண்டுவந்தான் எ-று. மன்-ஓ-அசை (சரு)

*பரிமுகத்துக்கோடன்மிசைபடையெடுத்தேயுயர் குலிசபாணி*
*வெம்போரா, புரிமுகத்தினுடைந்தோடிப்புரிமறைசைப் பெருமான்*
*பாற்போந்துசொன்னான், வரிமுகத்துக்கொடும்புலித்தோன்மருங்*
*கசைத்துவிடையஞ்சலவழங்கிநின்ற,கரிமுகத்துப்பிள்ளையினைக்கரு*
*ணையினானோக்கியிதுகழறினான்.*

(இ-பு) குதிரைமுகத்தையுடைய கோடாசுரன்மீது வச்சிராயுதமேந்திய இந்திரன்படையெடுத்து கொடியயுத்தம்புரிந்து தோல்வியடைந்து புறங்காட்டிச்சென்று திவ்வியத்தலமாகிய மறைசைமாநகரத்தில்வீற்றிருக்கும் சிவபிரானிடத்தடைந்து நடந்ததைக்கூற வரிகளையுடைய புலித்தோலையிடையிற்றரித்த அச்சிவபிரான் அபயாத்தமளித்துத்தனதெதிரில்நிற்கின்ற யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளைக்கிருபையுடன் பார்த்து இவ்வாறு திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. ஆல்-அசை. (கசு)

*இருநலத்துமிடரியற்றுமிவுளிமுகத்தசுரனைநீயெய்தித்துண்டக்*
*கரதலத்தாலெடுத்தறைந்துகால்வேறுகைவேறுகண்டுமாய்த்துத்*
*தருநலத்தோரிடர்தீரத்தவளவிளக்கமீன்றியென்றுதந்தைகூறப்*
*பொருதலும்பேரன்வரமாளப் பொங்கழனெற்றியின்விழியும்பெறு*
*கென்றீந்து.*

(இ-பு) மண்டலம்விண்டலம் என்னும் இவ்விருதலத்தும் இடர்புரியும் குதிரைமுகத்தையுடைய அரக்கனிடத்துநீசென்று துதிக்கையினால் அவனையெடுத்து மோதிஅவனது கால்களைவெவ்வேறாகும்படி கொன்று

கற்பகவிருட்சமிருக்குந் தலவாசிகளாகிய தேவர்களது இடுக்கண்டீரவும் நிலவுலகம்விளங்கவும் வெற்றியடைந்து மீளக்கடவாயென்று தந்தையாராகிய சிவபிரான் திருவாய்மலர்ந்து எதிர்த்தஅவ்வரக்கனது வரங்களைக்கெடுக்கும்படி அக்கினிவிளங்கும் நெற்றிக்கண்களையும் பெற்றுக்கொள்ளென்று கொடுத்து. எ-று. (௧௭)

அரக்கன்மிசைவிடுத்திட லுமைமங்கையன்சென்றிளமூலையாமன்னை பாத, மரைக்கமலின்மிசைவணங்கிவழுத்தலு மங்குசபாசம்வழங்கிநீசென,மிரக்கமிலாவரக்கனைக்கொன்றிடமீளுதிவிரைந்தென் றெந்தாயோத,நிரைக்கணங்கள்புடைசூழ்நிசிசரர்களிடந்துடிக்கநிவர்ந்துசென்றான.

(இ-பு) அசகோடாசுரனிடத்துப் போயபடிவிடுக்க விநாயகக்கடவுள் இளமூலைநாயகியாரென்னும் அன்னையாரது கமலலணிந்த தாமரைமலர்போலும் பாதங்களின்மீதுவணங்கித்துதிக்க அங்குசமும்பாசமுங்கொடுத்து நீபோய் சற்றேனும தயையில்லாத அவ்வசுரனைமடித்து யாதோரிடையூறுமில்லாமல் விரைவிலதிரும்பிவரக்கடவாயென்று எமது மாதாவாகிய அவ்விளமூலைநாயகியார் திருவாய்மலர்ந்தருளச்சிவகணங்கள் வரிசையாகப்புடைசூழ்ந்துவரும்படியாகவும் அவ்வரக்கர்களது இடதுபக்கந்துடிக்கும்படியாகவும் ஓங்கிவீரத்துடன்சென்றார். எ-று. (௧௮)

சசிமகிணனுடனமரர்சங்கமுமாரப்புறக்கணங்சடானுஞ்சூழ, நிசிசரர்களிடப்புயத்துநெஞ்சகத்துந்துடிப்பெய்தநெடியநீல, செலம்வருகின்றதெனவருமபொறையாணிலைஞ்சுளிப்ப வாழியேழும, விசையினுடன்வருவதெனவெங்கயமாமுகத்தெந்தைமேவினானல்.

(இ-பு) இந்திராணியின் கொழுநனாகிய தேவேந்திரனும தேவகணங்களும் ஆரவாரிக்கச்சிவகணங்களும புடைசூழவும அவுணர்களது இடதுபுயத்திலும் நெஞ்சிலும் துடிப்புண்டாகவுமவருகின்றபாரத்தினால்பூதேவியார்றுதவருந்தவும் சத்தசமுத்திரமும் ஒருங்குசேர்ந்து விசையாகவருவதையொத்துப்பெரிய நீலமலைவருகின்றதென்று சொல்லும்படி கொடியயானையினது முகத்தையுடைய விநாயகக்கடவுளாகிய எமதுதந்தையார்சென்றனர். எ-று. ஆல்-அசை. (௧௯)

இடக்கியற்றுமடல்வாகுவிவுளிமுகத்தசுரனைக்கொன்றிடவேவந்த,கடக்களிற்றினதிருமுகத்தான்கண்டகவேலபனைபடர்ந்தகானை நோக்கி, மடித்திடெனபபணித்திடுமுன்வலியநெடுந்தோட்கணங்களவாவித்தூறிப்,படுத்திடுங்கைக்கருவிகொடுபயில்வனத்தையழித்துவெளிப்படுத்திற்றேயால்.

(இ-பு.) கெடுதிபுரியும் வன்மையையுடைய புயங்களுள்ள குதிரைமுகத்தவுணனைக்கொல்லுதற்காகவே எழுந்தருளியமதம்பொழியும் யானை

மூகக்கடவுள் முட்கணிறைந்துவேலமரங்களும் பனைமரங்களும்படர்ந்திருக்கும் அவ்வனத்தைப்பார்த்து இக்காட்டைஅழித்து விடுங்களென்று கட்டளையிடுவதற்குமுன் வன்மையமைந்த நீண்டதோள்கள்வாய்ந்த கணங்கள் ஓடிச்சென்று வெட்டியெரியத்தக்க கோடாலிமுதலிய கைக்கருவிகளைக் கொண்டு அவ்வனத்தையழித்து வெளியாக்கிவிட்டதுகள். எ-று. ஏ ஆல் அசை. (உ0)

அன்பர்பவக்காட்டையழித்தருள வெளியிற்சேர்த்து சித்தியருளு ஞானக், தும்பிமுகத்தெம்பெருமான்சூழ்ந்தவைமுட்டருகானந தொலைத்தபபோற், படிபுமிருட்பருகுமொளிர்பருதியெவ்வெளி யாக்கிடப்பதலேபோல, வும்பர்பிரான்முதலாதேரோல்சுரங்கடாழ நின்றுலகமுய்ய.

(இ - ள்) அடியார்களது பிறவிக்காட்டையழித்து அருளாகியவெளியிற் கூட்டி முத்தியின்பத்தைத்தரும் ஞானசொரூபராகிய யானைமுகத்தை யுடைய எமது விநாயகக்கடவுள அங்குச்சூழ்ந்திருந்த கூர்மையுள்ள முள மயமானகாட்டையழித்து இந்தவுலகத்தை மூடியஇருளைப்போக்கிப்பிரகாசிக்கும் சூரியனைபபோலவெளியாக்கசசெய்து அருள்மலையையொத்த தேவர்க்கிறையாகியஇந்திரன்முதலியோர்தமது ஒள்ளியகரங்களைக்கூப்பித்தொழும்படிக்கும் இவ்வுலகமுழுதும பிழைக்கும்படிக்கும் காட்சிகொடுத்து நின்றருளினார். எ-று. (உக)

வேறு.

அந்தவெல்லையிலமரருஞ்சிவகணத்தவரும்
வந்தத்திண்டிறற்பூதவாகினிகளும்வலிய
சுந்தரப்பொறைதோள்கொட்டியார்த்தலுந்துளங்கித்
தந்திகெட்டுமுட்டளர்ந்தனவோசையாற்சலித்தே.

(இ - ள்.) அத்தருணத்துதேவர்களும் சிவகணங்களும் விநாயகக்கடவுளுடன் வந்ததிண்ணியவன்மையையுடைய பூதவேதாளங்களும தமது பராக்கிரமமிகுந்தபுயங்களைகொட்டி ஆரவாரித்தவுடன் அவ்வோசையினால அஷ்டகசங்களும் கலங்கிச்சலிப்படைந்து நெருக்கதளர்ந்தன. எ-று. ஏ அசை. (உஉ)

ஆயவோசைகேட்டண்டகோளகையுடைந்ததுகொ
லோயுங்காலையிலுருமுகொல்கடலுடைந்தனகொ
றாயரேருவுமிடைதுணிந்ததுகொலோவென்றுசை
நேயமேதெனப்பரிமுகனிலைநெழுந்தனனால்.

(இ - ள்.) ஆகியஇவ்வோசையைக்கேட்டு அண்டகோளகையுடைந்ததோ கற்பாந்தகாலத்தில்இடிக்கும்இடியோ கடல்கரைகடந்ததோபரிசுத்

தமாகியமேருகிரியும் இடையில் துணிவுபட்டதோ அல்லதுதோன்றியதொகை யின்காரணம்யாதோ என்று குதிரைமுகத்தவுணன்பலவாறு எண்ணி எழுந் தான். எ-று. ஆல்-அசை. (உங)

அன்னவெல்லையிலொற்றர்வந்தடியிணைதாழ்ந்து
முன்னமுன்னுடனமாசெய்துமுதுகிட்டவின்னோர்
மன்னனோர்கரிவதனமதலையோடளவிற
றன்னுசேனைகள்சூழவந்தனனெனச்சொன்னார்.

(இ-பு.) அத்தருணத்துதூதாகள் ஓடிவந்து அவ்வசுரனதுபாதத் தில்வணங்கிமுனபு உம்முடன்யுத்தம்புரிந்து புறகாட்டியோடியதேவாக ள ... இந்திரன் யானைமுகத்தையுடையஒருபிள்ளையோ... அள வுற்றநெருங்கியசேனைகள் சூழும்படிவந்தானனென்றுசொன்னாகள். எ-று.

கேட்டியான்பசிகெடவிழுங்கிடுங்களிறறுணவான
மீட்டுமவநதனனேறுவெனவெளளெயிறிலங்கத்
தோட்டுணைகருவடதிர்நதிடநதுணைக்கையாறகொட்டி
நாட்டுமண்டமுங்குலுங்கிடக்கோடனுநக்கான்.

(இ-பு.) அவ்வாறு சொன்னதைகேள்வியுறறு நான்பசிதீரும்படி புசிக்கும் யானையாகிய உணவைக்கொண்டு திரும்பிவந்தனனே என்றுவெ ண்மையாகிய பற்கள்விளங்கத்தோள்களாகிய இரண்டுமலைகளும் அதிரும் படிதனது இரண்டுகைகளாலுந்தட்டி நிலைநாட்டியுள்ள அண்டகடாகங் களும குலுங்கும்படி கோடாசுரனுஞ் சிரித்தான். எ-று. (உரு)

உம்பரார்பயிணைவிழுங்கிடவொண்கரப்புடைத்து
வெம்பலாலுருமிடித்தெனக்கறித்துவெம்பனைய
வம்பராக்கததொகைபுடைவளைவுறக்கோடன்
செம்பராகத்தின்சென்னிவான்றடவுறச்சென்றான்.

(இ-பு.) தேவர்கள் ஆரவாரத்தினை விழுங்கத்தக்கதாய்த்தனது ஒ ள்ளியகைகளைக் கொட்டி வெவ்வியபற்களை இடிஇடித்ததுபோலக்கடித்து மலைபோன்றதுட்டர்களாகிய அவுணக்கூட்டங்கள் பக்கத்தில்சூழ்ந்துவரக் கோடாசுரன் சிவந்தமகரந்தப்பொடிதவழிய பூங்கொத்துகளணிந்த சிரசா னது ஆகாயத்தைமுட்டும்படிபோாக்குச்சென்றான். எ-று. (உசு)

சென்றுவானவர்சேனைகள்கடலெனச்செருக்கி
நின்றவாண்மையைநோக்கினனெருக்கியவெயிற்றான்
குன்றனைத்தவரக்கரைப்போர்செயக்கூறி
வென்றியார்புயப்பரிமுகனின்றனன்வெகுண்டே.

(இ-பு.) இவ்வாறாகச்சென்று தேவர்களது சேனைகள் கடலைப் போலத்தருக்குற்று நிற்கின்ற வன்மையைக்கண்டு பல்லைநெறநெறெனக் ... மலைபோன்றசரீரத்தையுடைய அவுணர்களையுத்தஞ்செய்யக்

சொல்லி வெற்றிபொருந்தியபுயங்களுள்ள கோடாசுரன் கோபித்தனன் றான். எ-று. எ-அசை. (உஎ)

அரக்கரார்த்துயர்குறும்பொறையெடுத்தெடுத்தமரர்
நிரைக்கணும்பூததநினிதானத்தின்மீதினுநிறைத்தார்
மரைக்குலங்களை வேருடன்வாங்கியேயநதப
பருபபதங்களைப்பொடி செய்தபூததநின்பந்தி.

(இ - பு.) அவனாகள் ஆரவாரிதது பெரியமலைகளையெடுத்தெடுத்து தேவர்கள்கூட்டத்தின்மீதும் பூதப்படைகளின்மீதும் எறிந்தார்கள பூதகண ங்களவிருட்சத்தொகுதிகளை வேருடனபிடுங்கி அந்தமலைகளைபபொடிசெய தன. எ-று. எ-அசை. (உஅ)

எறிநதகலலெலாம்பொடிபட வேற்றியேகணங்கள்
செறிநதராக்கதர்தலைகளைததோளகளைசசிதைப்ப
வறிநதமாறுகன்கையிலொாகதைகொடேயடர்த்தான்
முறிநதுவானவர்சேனைகண்முதுகளித்ததுவே.

(இ - பு.) இவ்வாறு அரக்கர்களால் எறிந்தமலைகளெல்லாம் பொடி யாகும்படிசெய்து பூதகணங்கள் நெருங்கிய அவ்வரக்காகளது சிரஙகளையும புயஙகளையும்வெட்ட இதையறிந்தகோடாசுரன் தன்கையில்ஒருகதாயுதத் தைககொணடு எதிாததான் அவ்வாயுதத்தால் மொத்துண்டு தேவாகள்சே னைகளெல்லாம் புறஙகாட்டி யோடிறறு. எ-று. எ-இரணடும்-அசை.

கோடன்கைக்கதைபட்டுவானவர்கணக்குழும
லோடலுறறதையுணாந்துகுஞ்சரமுகதெொருவ
னுடகப்பணிக்கோளகையார்ததிடவடரு
மூடனைத்தொடாந்தெண்கையான்பிடிச்சிகைபற்றி.

(இ - பு.) கோடாசுரன் கையிற்கொண்ட கதாயுதத்தால் வருந்தித் தேவகணங்களாகியகூட்டங்கள் புறங்காட்டியோடுவதைததெரிந்து யானை முகத்தையுடைய ஒப்பற்றவிநாயகக்கடவுள் பொன்னுலாகிய ஆபரணங்க ளென்னும பதக்கங்கள் சத்திக்கஎதிர்த்துநிற்கின்றமூடனுகிய அக்கோடா சுரனைப்பின்தொடர்ந்து ஒள்ளியதமது திருக்கரத்தால் அவனதுசிரசின் கணுள்ளசிகையைப்பறறி. எ-று. (௩௦)

எடுத்துவான்மிசைக்கவுண்கலேற்றுவரெனவெறிந்தா
னடுத்தகோடனுந்தாரகையளவுறச்சென்றான்
றெடுத்ததன்னினைத்தாசையாறசொல்லுமச்சுவனி
யிடத்தினெய்துவானெண்ணியேநின்றனனென்ன.

(இ - பு.) உடனே அக்கோடாசுரனை எடுத்து ஆகாயத்தின்மீது கவு ண்கல் எறிபவனைப்போன்று எறிந்தார் அப்போது தன்முகத்தைப்போன்ற

வுருவமுடைமையாற் றன்னினமெனக்கருதி அதைப்பார்க்கவேண்டும் என்னும் ஆசையால்யாவரும் முதலாகச்சொல்லும் அசுவனிநட்சத்திரத்தினிடத்துபபோகும்படி எண்ணங்கொண்டு செல்கின்றதுபோல எதிர்த்துநின்ற அசுகோடாசுரன் நட்சத்திரமண்டலம் வரைக்கும்போனான். எ-று.

மேலெறிந்தவன்படியிசைவீழுமுன் விரைவி
னூலுமுன்கையானடுவுறத்தூக்கியேமீட்டுங்
காலும்பண்டுபோற்கல்லகசசிகரந்தனையெறிந்த
போலும்வேகத்தோடெறிந்தனன்வானிடைப்புனிதன்.

(இ-பு.) இவ்வாறு ஆகாயத்திலெறியப்பட்ட அகசோடாசுரன் பூமியில்விழுவதற்குமுன் விரைந்து முற்காலத்துவாயுபகவான் மாமேருகிரியின்கொடுமுடியைபபிடுங்கி யெறிந்ததுபோலத் தொங்குநுதிக்கையினால் விநாயகக்கடவுள் அவனது இடுப்பிற்பிடித்து மறுபடியும் அதிகவேகத்தோடு ஆகாயத்திலெறிந்தார். எ-று. ஏ, உம்-அசை. (௩௨)

கறங்குபோற்சுழன்றேறியசுறங்கிவதிரத்தோன்
றிறங்களாற்பயசிந்தையுள்பந்திரந்தோந்து
பிறங்குபோர்மலையிடைச்சுருதித்தந்தனையேபிடுங்கி
யிறந்தவானவரினமெனவீசினனெடுத்தே.

(இ-பு.) இவ்வாறு காற்றாடியைப்போற்சுழன்று ஆகாயத்திற் சென்ற அகசோடாசுரன் தனதுவலலமைகளால் பயமடைந்த மனதின்கண் ஓர்விதமந்திரத்தை உச்சரித்து அவ்விடத்துவிளங்கும் ஓர்மலையிற்குதித்து அம்மலையையே வேருடன்பிடுங்கித் தேவாகூட்டங்கள் இறந்தனவென்று சொல்லும்படி எடுத்தெறிந்தான். எ-று. ஏ-அசை. (௩௩)

மலைவருங்கடுமவேகத்தைவானவர்நோக்கி
யலவருமனத்தாயினர்கணங்களுமகத்தின்
புலன்மடங்கினராகியோங்காரத்தின்பொருளை
வலமவரும்புலங்கண்டனர்மற்றொன்றுங்காணார்.

(இ-பு) அவ்வாறு மலைவருகின்றகடியவேகத்தைத் தேவர்கள்பார்த்துவருந்துமமனம உடையவர்களானார்கள் பூதகணங்களும் மனத்தின்கண் ஐம்புலவுணர்ச்சி குன்றினவராய்ப பிரணவசொரூபியாகிய விநாயகக்கடவுளைப்பிரதட்சணம்வருகின்றசெயலையலலாமல் மற்றொர்செயலும் அறறவர்களானார். எ-று. (௩௪)

அஞ்சிவந்தவர்க்கஞ்சல்தந்தைங்கரனெதிர்த்து
வஞ்சனெற்றியமலையினைத்துதிக்கையால்வாங்கிச்
செஞ்சிகைத்தலைத்தியன்மேலெறிதலுந்தண்டா
னஞ்சினிற்கொடிபோனடிக்கதிர்க்கனனவிந்தே.

(இ-பு) அச்சங்கொண்டுவந்த தேவகணங்கட்கு அபயாத்தம்அருளி ஐந்துதிருக்கரங்களையுடைய விநாயககடவுள் எதிர்த்துக்கபடமுடைய அவ்வசுரன் விட்டெறிந்த அம்மலையைத்தமது துதிக்கையினால் வாங்கிச் சிவந்த மயிரையுடைய சிரசினனாகிய அவ்வசுரன்மீது விடவும்விடத்தினுங்கொடியோனாகிய அக்கோடாசுரன் தனதுகையிற்றாங்கிய தண்டாயுதத்தால் நூளாகும்படி அடித்துப்பொடித்தனன். எ-று. (௩௫)

வீசுமவெற்பினையழித்ததலும்வெகுண்டுவெங்களிற்றேனை
பாசமவிட்டநதப்பகைனைப்பிணித்தருகிழுத்தே
யாசிலகைததலத்தாற்பற்றித்தீயனுகத்தின
மூசுமேதாண ரமபுதிரமாருயிர் முதலுதறி.

(இ-பு.) தாம்வீசியமலையைப பொடியாகருதலும கோபங்கொண்டு வலிய யானைமுகத்தையுடைய விநாயககடவுள் பாசத்தைவிட்டு அவ்வசுரனைககட்டி அருகில இழுத்துக் குற்றமற்றதமது திருககரத்தினால பிடித்துக்கொடியவனாகிய அவனதுசரீரத்திலநெருங்கியுள்ள தோல்நரம்புஇரத்தம் பிராணனமுதலியதுகளை நன்றாய் உதறிவிட்டு. எ-று (௩௬)

கையிற்றயங்கியவெனபையகசேத்திரங்கடக
வையனறெககணநதிசையினிலெறிந்தனனதனை
வையகததிலவெண்மலையெனவின்னமுமவகுப்பார்
தொய்யிலவெம்புகர்முகன்றனைவானவர்தொழுதார்.

(இ-ம்.) பிறகுவிநாயககடவுள் தமததிருக்கரத்தில எஞ்சியிருந்த அவனது எலும்புகளையெலலாம் அந்ததலத்திறகப்பால்தெற்குததிசையில எறிந்துவிட்டனர் அதனை இந்நிலவுலகத்தில் வெண்குன்றமெனறு இன்னமும கூறுகின்றார்கள் உடனே சித்திரம்போலும இனியபுள்ளிகளமைந்த யானைமுக விநாயகக்கடவுளைத தேவாகள வணங்கினாகள். எ-று. (௩௭)

இவ்விரண்டுங் குளகம்

வரமிகுத்திடுங்கோடனைவதைத்துமாதங்கச்
சிரமுதற்பொருடேவர்கள்சூழ்தரசசென்று
கரங்குவித்துவிண்ணவாதொழச்சுருதிநாலகழுறு
மரனமுகததெதிரின்றனரமலனுமறிந்தான.

(இ-பு.) மிகுத்தவரங்களைப் பெற்றிருந்த கோடாசுரனைக்கொன்று யானைச்சிரமுள்ள விநாயககடவுள் தேவாகள் சூழ்ந்துவரச்சென்று இருகரங்களையுஞ் சிரமேற்குவித்து அத்தேவாகள் வணங்கிக கேட்டுக்கொள்ள முன்புவேதம் தேவர்களுக கோதுவித்தருளிய வேதபுரீசா திருச் சந்நிதிக கெதிரில் நின்றா சிவபிரானும இதனையுணாந்தாா. எ-று. (௩௮)

வயமிகுத்திடுநிசிசரருயிரினைவாங்குந்
கயமுகததவன்மெய்நலமுழுவதுங்கருதி

யுயர்மகிழ்ச்சிநெஞ்சடையவோரின்பமுமுறுதான்
றயைமனத்தனுய்மைந்தனைமெய்யெலாந்தடவி.

(இ-பு.) வன்மைமிக்க அவுணர்கள் உயிரைப்போக்கிய யானைமுக விநாயகக்கடவுளது திருமேனியின் அழகையெல்லாம் சிந்தித்துத்தமதிதயத்தில மிக்கமகிழ்ச்சியுண்டாக ஒன்றிலும் இன்பதுன்பமெய்தாத சிவபிரான் அருண்மனமுடையவராய்த் தமதுமைந்தராகிய அவ் விநாயகக்கடவுளின் திருமேனிமுழுதும் தமதுதிருக்கரத்தாற்றடவி. எ-று. (ருகூ)

மைந்தவுன்னுயர் வல்லதுக்கீடொன்றுமதிக்கி
னிந்தமுப்புவனத்தினும்வேறொன்றுமில்லை
சிந்துரத்திருமுகத்தவச்சகத்தினிற்சிறந்து
முந்தருச்சிக்குங்கடவுளாய்முயலுதியென்றான்.

(இ-பு.) புத்திரனே உனதுவல்லமைக்கு ஒப்பு ஒன்றை ஆராய்ந்து பார்க்கில திரிலோகத்தினும வேறொன்றுமிலலை ஆகையால யானைமுகத்தையுடையவனே இவ்வுலகத்திற்சிறப்புற்று எவர்களும் எக்காலத்தும எக்காரியத்தினும் முதலில துதிக்குந்தெய்வமாய திருக்கக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. இவ்விரண்டுங்குளகம். (சு௰)

வன்னியாசையிலொருகணத்தூரத்திலவல்லோர
பன்னிடுந்தொண்டிபுரமெனுநாட்டினிற்பரிவாய்த்
துன்னியாங்குளார்பூசனையுகந்திடார்தொலைத்து
மன்னிவாழெனவீசனாமறித்தும்வாய்மலர்ந்தார்.

(இ-பு.) அக்கினிதிக்கிலகணை ஓர் அம்பேர்டுந்தூரத்தில் அறிஞர்களால் சொல்லப்படும தொண்டிபுரநாட்டில் அன்புடனிருந்து அங்குள்ளவர்கள்செய்யும் வழிபாட்டை அங்கீகரித்து அவர்களுக்கு நேருந்துன்பங்களையொழித்து நிலைபெற்றுவாழ்வாயென்று சிவபிரான்மீளவும திருவாய்மலர்ந்தருளினார். எ-று (சுக)

சூழ்ந்திருக்குங்காடெலாந்தொலைந்திடுந்துதிக்கை
வேழவத்திரனறனையிந்தமேதினிமாந்த
ரேழைப்பற்பலவைகலுமிறைஞ்சியேத்தித்த
வாழ்வுபெற்றவாவரமபலரெனவுரைவழங்கி.

(இ-பு,) சூழ்ந்திருக்குங்காடுகளையெல்லாம்வெட்டியெறியும தும்பிக்கையுடைய யானையின் முகமுள்ள விநாயகக்கடவுளை இப்பூவுலகவாசிகளாகிய பல ஏழைகள தினந்தோறுமபூசித்துத தோத்திரஞ்செய்து செல்வம அடைந்தார்கள் அயாளவனிலா என்றுகூறி. எ-று,ஏ-அசை. (சுஉ)

வேறு.

இன்னமுங்கேண்மினந்தவிளங்களிற்றுண்மையென்னப்
பனுவன்சூதனந்தப்பதிக்கிருகுரோசங்கீழ்பாற்
றுன்னியவனத்தினாகுவெனுமொருசூரன்றாவா
னனிலத்தவர்க்குந்தீமையியற்றுவனாளுமன்னே.

(இ-பு) நைமிசாரணியமுனிவர்களே இன்னுங்கேளுங்கள் அந்த விநாயகக்கடவுளின் வன்மையையென்று சூதபுராணிகர் சொல்லுகின்றார் அச்சுருதிபுரத்திற்குக் கிழக்குப்பக்கத்தில் இரண்டுகுரோசதூரத்தில் நெருங்கிய ஆரணியத்தில் ஆகுவெனனும் ஓர் அசுரன்பரிசுத்தமாகியதேவலோகத்தார்க்கும் இந்த நல்லநிலவுலகத்தார்க்கும் எந்நாளும் தீங்குபுரிந்துகொண்டிருந்தான். எ-று. மன், ஓ-அசை. இவ் விரண்டுங்குளகம். எ-று.

ஆங்கவன்றீமையாற்றுந்தமரர்களணுகியீசன்
பூங்கழற்றொழுதுசொற்றபுன்மையன்வினைகளோர்ந்த
வோங்கியவானோர்க்குள்ளமிரங்கியெம்பெருமானந்த
வீங்கியபுகழ்ச்சீரியானைமுகனுக்குவிடைதந்தேவ.

(இ-பு,) அவ்வசுரன்புரியுந்தீங்கினாற்றுன்பமடைந்து தேவர்கள் வந்துவேதபுரீசருடைய அழகியதிருவடிகளைவணங்கிமுறையாய்க்கூறிய அத்தீயோனது தீங்குகளைக்கூறவருந்துகின்ற தேவர்களுக்கு எமது பெருமானாகியவேதபுரீசர்திருவுள்ளமிரங்கி ஆகுசூரனைவெல்ல மிக்கபுகழையுடைய அவ்வியானைமுக விநாயகக்கடவுளுக்கு விடைகொடுத்தனுப்ப. எ-று. (௪௪)

வானவர்கணமும்பூதவாகினித்திரளுஞ்சூழ
வானைவந்திரன்சென்றந்தவடவியையழித்துச்சூரன்
சேனைகண்முழுதுமாய்த்துச்செப்பியவசுரனோடு
வேனெடுங்கரத்தாலையன்விளைசமர்புரிந்தான்மன்னே.

(இ-பு.) தேவகணமும் பூதவேதாளகணங்களுந் தம்மைப்புடைசூழ்ந்துவர யானைமுகமுள்ள விநாயகக்கடவுள்போய் அவ்வனத்தையழித்து அவ்வசுரன் சேனைகளெல்லாங்கொன்று முன்கூறிய அவ்வாகுசூரனுடன் எமதிறைவராகிய அவ்விநாயகக்கடவுள் வேலேந்திய திருக்கரத்துடன் பெரியயுத்தம்புரிந்தார். எ-று. மன்-ஓ-அசை. இவ்விரண்டுங்குளகம்.

கருமலையிரண்டுவெம்போர்கலந்தெனக்கடும்போர்வானோர்
வெருவுறவிளைத்துவேழவிடலைதீயவனைத்தன்கை
பொருவுநீள்பாசத்தாலேபுயமலையொடுங்கிநைய
வரியுறப்பிணித்தான்சூரனவ்வலியெலாமழுங்கிற்றம்மா.

(இ-பு.) கருநிறம்பொருந்திய இரண்டுமலைகள் கொடியயுத்தத்திற்குக்கலந்ததுபோலதேவர்களும் அச்சங்கொள்ளக்கடியஅமர்புரிந்து யானைமுகப்பிள்ளையார் கொடியனாகிய அவ்வசுரனைத்தமது திருக்கையிலிருக்கும்,

பாசத்தினால் அவனது புயங்களாகிய மலைகள் ஒடுங்கிவருந்தத் தழும்புண்டாகத்தக்கதாய்க்கட்டினார் உடனே அவ்வசுரன்வன்மையெல்லாம் சோர்வடைந்தது. எ-று. அம்மா-வியப்பிடைச்சொல். (சசு)

பிணிப்புறுமாகுவென்னும்பெயரினனறிவுதோன்றி
மணிப்பெருங்கோட்டினான்பொன்மலரடிமுடிமேற்சூடித்
தணிப்புறுமுளத்தனாகித்தாழ்விலபல்துதிகளோதிப்
பணிப்பதொன்றுளதெற்கென்றேயின்னதுபகரலுற்றான்.

(இ-பு.) பாசத்தினாற்கட்டப்பட்ட ஆகுவெனனும்பெயரையுடைய அவ்வசுரனுக்கு அறிவுதித்து அழகியபெரிய ஒற்றைக்கொம்பையுடைய அவ்விநாயகக்கடவுளது பொற்றாமரைமலர்போன்ற திருவடிகளைத்தனது சிரமேற்சூடிக்கொண்டு கோபந்தணிந்த சிந்தையையுடையனாய்த் தாழ்மையோடுபல துதிகளைக்கூறி எனக்குக்கட்டளையிடவேண்டியது ஒன்றுண்டு என்று இவ்வாறு சொல்லத்தொடங்கினன் எ-று. ஏ-அசை. (சஎ)

பண்டுவெண்கயிலைவெற்பிற்பயினுமென்பாலோர்தீமை
யுண்டியான்புரிந்ததற்றாலுற்றனன்புவியின்மீது
கண்டவர்வெருவுமாகுமுகத்தொடுங்கருணையெந்தா
யண்டரானவர்க்குஞானத்தவர்க்குமேயிடுக்கண்செய்தேன்.

(இ-பு.) முன்புவெண்மையான திருக்கயிலைமலையில் இருந்த என்னிடத்து அவ்விடத்துப்புரிந்த தீமையொன்றுண்டு அப்பாவத்தால பார்த்தவர்கள் பயங்கொள்ளத்தக்கதாக பெருச்சாளிமுகத்துடன் யான்பூலோகத்தில் பிறந்துவந்து கருணைசொரூபியாகிய எனதுதந்தையே தேவர்களுக்கும் ஞானிகளுக்கும் துன்பம்புரிந்தேன். எ-று. ஏ-அசை (சஅ)

ஈண்டுநின்பாசமென்மெய்யிணங்கியநலத்தாலென்பா
லூண்டவெம்பவங்களெல்லாமுற்றுமற்றறிவுபூண்டேன்
வேண்டுவதொன்றுண்டென்னைவிரும்பிநீயூர்தியாக
வாண்டிடவேண்டுமென்றேயடிமலர்தொழுதுநின்றான்.

(இ-பு.) இவ்விடத்துமது பாசமென்சரீரத்திற்பட்டவிசேடத்தால் என்னிடத்துமூண்டிருந்த வெய்யவினைகளெல்லாமுழுதும்நீங்கி அறிவுடையமாகப்பெற்றேன் இன்னும் எனக்குவேண்டியவரமொன்றுண்டு அதுயாதெனில் தேவரீர் அடியேனைவாகனமாக ஆண்டுகொண்டருளவேண்டியதென்று அவரது திருவடிகளை வணங்கிநின்றான். எ-று. ஏ-அசை. இவ்விரண்டுங் குளகம், (சகூ)

துலங்கியவுளத்தானீதுசொற்றலுந்துதிக்கைவீர
னலங்கிளர்கருணைகூர்ந்துநவின்றனனருகுவேநீ
பொலன்மணிவேணியானைப்பூசனைபுரிந்தேயுன்றன்
குலங்களின்றீமைநீங்கச்சிறந்தவைபெறுதியென்றான்.

(இ-ள்.) அறிவுநயமாகிய அவ்வாகுசூரன் இவ்வாறு கூறவும் விநாயகக்கடவுள் நன்மைமிக்க கிருபைகூர்ந்து திருவாய்மலர்ந்தருளுகின்றார் ஓ அசுரனே நீ பொன்னிறமாய் அழகிய சடையுடைய சிவபிரானைப் பூசித்து உன் குலங்களின் தீங்கைத் தீர்த்துக்கொண்டு பிறகு எண்ணியபடி வரம்பெறக்கடவாய் என்றருளிச்செய்தார். எ-று. ஏ-அசை. (௫௰)

ஆயபோதாங்கு லிங்கமமைத்து நற்பூசைசெய்து
நாயகனருளாலாகுவாகனமாகி நண்ணத்
தூயவாரணத்தோனூர்ந்து துந்துமி முரசமார்ப்பச்
சேயவானவர்கள் சூழச் சேர்ந்தனன் காளிகோட்டம்.

(இ-ள்.) அப்போது அவ்விடத்து ஓர் சிவலிங்கப்பெருமானைத் தாபித்து நன்றாகப்பூசித்து அச்சிவபிரான் திருவருளினாலே பெருச்சாளி வாகனமாக வரத் தூய்மையாகிய யானைமுகமுள்ள விநாயகக்கடவுள் அதன்மீது ஆரோகணித்துத் தேவதுந்துமியும் முரசங்களும் சத்திக்கச் செப்பமாகிய தேவர்கள் புடைசூழக் காளிநகரம் வந்துசேர்ந்தார். எ-று. (௫௧)

ஆங்கிருந்தமரர்சூழ அடியிணைத்தொழுதோர்க்கெல்லாந்
தீங்கறவரக்கராலே நீங்கிலாதருள்வேனென்றே
யோங்கியவலக்கைதந்தவ்வுபகாரக்கோதுவிந்தப்
பாங்குறுபதியைமுற்றும் பண்டைபோல்வதிந்தான்மன்னோ.

(இ-ள்.) அவ்விடத்திருந்து தேவர்கள்புடைசூழத் தமதுதிருவடியைத்தொழுதவர்கட்கெல்லாந் துன்பஞ்செய் அசுரர்களாலே கேடு இல்லாது திருவருள்புரிவோமென்று சிறப்போங்கியதமது அபயாத்தமருளி அத்தேவர்களுக்கு முன்புபோல உதவிசெய்தமேன்மையமைந்த வேதபுரியையடைந்து முன்புபோல்வீற்றிருந்தருளினார். எ-று. மன், ஓ-அசை. (௫௨)

இலக்குறுவலியானாகு பூசனையியற்றுந்தேவன்
விலக்கரும்வரங்களீந்தாங்கிருந்தனனின்னோர்க்கஞ்சல்
வலக்கைதந்தருளாற்சொல்வலம்புரிப்பிள்ளையென்றந்
நிலக்கணின்றெவர்க்குந் தீமைநீக்குகின்றனனென்றுஞல்.

(இ-ள்.) அளவிறந்த வன்மையுடைய ஆகுசூரன் பூசிக்குந்தேவனாகிய சிவபிரான் யாவராலும்விலக்குதற்கரிய வரங்களைத்தந்து அவ்விடத்து வீற்றிருந்தனர் இப்பால்அசுரபயம்வேண்டியதில்லையென்று தேவர்களுக்கு அபயாத்தமாகத் தமதுவலத்திருக்கரத்தைக்கொடுத்தருளிய காரணத்தால் அக்காளிநகரத்தில் வலம்புரிப்பிள்ளையாரென்னுந் திருநாமத்துடன் எழுந்தருளியாவருக்குந்தீங்கு நீக்கிக்காக்கின்றனர் விநாயகக்கடவுளென்று சூதபுராணிகர் நைமிசாரணியமுனிவர்களுக்குக் கூறினர். எ-று. ஆல்-அசை.

விநாயகர் அங்குசபாசம்பெற்றசருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் . ௬௩௭.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அரிசாபந்தீர்ந்த சருக்கம்.

உரைத்ததுணைந்துதவமுனிவருள்ளக்களிப்பொடியா திருமால்
பரித்தசாபந்தீர்ந்ததந்தப்பதியினைமுன்பகர்ந்தீரான
மறைத்தண்மலரோனனையாயவ்வாய்மையுரைத்தியெனக்கேட்ப
நிறைந்ததவருமெய்ச்சூதனிதுநெஞ்சத்துவகையுடனுரைப்பான்.

(இ - ள்) இவ்வண்ணம் விநாயகர் அங்குசபாசம்பெற்ற சரித்திரத்தை ஆதியோடந்தமாக வுரைத்ததைக்கேட்டேனாகிய நைமிசாரணியமுனிவர்கள்மனக்களிப்புடன் மீளவுஞ்சூதபுராணிகரைநோக்கி கமலவாசனனை பிரமனையொத்தவரே திருமாலடைந்தசாபந்தீர்ந்ததும் அச்சுருதிபுரத்திலேயே என்றுமுன்பு திருவாய்மலர்ந்தீர் அச்சரித்திரத்தையும் உரைக்கவேண்டுமென்றுகேட்டுக்கொள்ள அரிய உண்மைகள்நிறைந்த சூதபுராணிகர் இவ்வாறு மனமகிழ்வுடன் கூறுகின்றார். எ-று. (க)

ஆயும்வேதமுழுதமரர்க்கருளும்பெருமான்றிருத்தலத்தின்
மாயன்முன்னமவந்தரனை வழிபட்டனனவ்வண்மையெல்லாந்
தூயநைமிசாரணியத்தொடக்கிறவத்தீர்யானுரைப்ப
னேயமுறக்கேட்டிடுமினெனவிதனைச்சூதனிகழ்த்தினனால.

(இ - ள்) அறிஞர்களால் ஆராய்ந்துரைத்தக்க வேதங்களெல்லாவற்றையும் தேவர்களுக்கோதுவித்த சிவபிரானை வீற்றிருந்தருளும் சுருதிபுரியில் முன்புதிருமால வந்தனைகளுநோந்த சாபம்நீங்கும்படிவழிபட்டனர் அச்சரிதங்களையெல்லாம் யாதொருபற்றுமிலலாத பரிசுத்தராகிய நைமிசாரணியமுனிவர்களே யான்கூறுகின்றேன் அன்புடன் கேளுங்களென்று இவ்வாறு சூதபுராணிகர்கூறினர். எ-று. ஆல்-அசை. (உ)

தொன்றுடிரேதாயுகமதனிற்சொலுமந்தரபேர்க்கற்பத்திற
பொன்றுடிறையுநெடுமாலும்புகுந்தோர்தனிமண்டபத்திருந்து
சொன்றுடினர்கள்வ்வெல்லைதூயதவத்தாலவனிபெற்றோன்
முன்றுடியிற்காண்பவன்போலமூன்றுகாலங்களுமறிவோன்.

(இ - ள்) பழையகாலமாகியதிரேதாயுகத்தில் அந்தரகற்பத்தில் தேவேந்திரனும் திருமாலும் ஒப்பற்ற ஒருமண்டபத்திற்புகுந்திருந்து வார்த்தை

யாடிக்கொண்டிருந்தார்கள் அத்தருணத்து பரிசுத்தமாகியதவத்தினால் வல்லமையடைந்தோன் தனக்குப்பின்னாலுள்ளபொருள்களை முன்னுள்ள கண்ணாடியிற் பார்த்தறிபவனைப்போலத்திரிகாலவர்த்தமானங்களையும் ஐயந்திரிபற வுணர்ந்தவன். எ-று, (ங)

செய்யசடையுங்கமண்டலமுஞ்சிறந்தசீரை செறிமருங்குங்
கையிற்செபமாலிகையுமொளிர்காதிற்புனைந்தகுண்டலமு
மெய்யிற்றரித்ததிருநீறும்வேதமபழுத்தகனிவாயும
மையநடையுமெழில்காட்டப்பககணாறுவமாமுனியுற்றான்

(இ-பு) சிவந்தசடையும் கமண்டலமும் சிறப்பமைந்த மரவுரிதரித்த இடையும் திருக்கரத்திலிருந்கிய செபமாலிகையும் திருச்செவியில் அணிந்த ஒளிவீசுங்குண்டலங்களும் திருமேனியிற்பூசிய திருவெண்ணீறும் வேதங்களோதிச்சிவந்த கொவ்வைக்கனிபோன்றதிருவாயும் மிருதுநடையும்அழகைத்தரக்கணாறுவரெனறுந்திருநாமமுடைய முனிவர்வந்தார். எ-று. இவ்விரண்டுங்குளகம். (ச)

வந்தமுனிவேந்தனையுறுவருமன்னெனச்சிலபோதிருந்தா
னந்தவரியுமிந்திரனுமறிந்துமவனமாட்டானுசிலராற
சிந்தைமந்த்தாலிவரின்னாருஞ்சோகந்தாரிலைநம்பாலெனறு
பந்தமறுத்தவனினைந்துபார்த்தான்சீறப்போறாற்றானே.

(இ-பு.) இவ்வாறுவந்த அசகணாறுவமுனிவர் தேவசபையடைந்து தேவேந்திரன்வருவானென்று சிலநாழிகையிருந்தார் அதுவரையில் அந்த திருமாலும இந்திரனும் இம்முனிவர்வந்திருப்பது அறிந்திருந்தும அவரிடத்துவரவில்லை இவர்கள் மனோகருவத்தால் இன்னம்நம்மிடத்துவரவில்லை என்று பாசபந்தங்களற்ற அம்முனிவர் யோசித்துப்பார்த்துக் கோபத்தை அடக்கக்கூடாதவராய். எ-று. ஏ-அசை. (ரு)

மெய்யுந்துடிப்பவாய்துடிப்பவிழிகடுடிப்பநாத்துடிப்பக், கை
யுந்துடிப்பக்காறுடிப்பக்கடைக்காலுருத்திரன்போல், வெய்
யகனல்போன் மிகக்கொதித்துவிண்ணுடனேசுது மழிப்பனெனப்
பையுந்துடிப்பச்சீறியெழும்பணிபோலெழுந்துபற்கடித்தான்.

(இ-பு) தேகமுந்துடிக்கவும் வாய்துடிக்கவும் கண்கள்துடிக்கவும் நாத்துடிக்கவும் கைகள்துடிக்கவும் கால்கள்துடிக்கவும் பிரளயகால உருத்திரனைப்போலவும் சொடியவடவாமுகாக்கினியைப்போலவும் ஆக்கிரமித்துத தேவலோகம் முழுதும் அழித்துவிடுவேனென்று பணமகுடங்கள்துடிக்கச் சீறியெழுகின்ற ஆதிசேடனைப்போல கோபித்தெழுந்து பல்லைக்கடித்தார்.

கண்டார்தேவர்கலக்குற்றார்காக்குமிடங்களசருந்தோர்ந்தார்
வண்டாரளகத்தரமகளிர்மணிக்கைமுறித்துவயிறலைத்தார்
தண்டார்தருவுந்தழையுதிர்த்ததருந்தன்றொழிலுமறந்தயங்
கொண்டாரமுதுங்கொடுத்திலவான்கோனியருங்குலைகுலைந்தார்.

(இ - பு.) இவ்வாறு கண்ணுவமுனிவர் கோபங்கொண்டதை தேவர்கள்பார்த்து கலக்கமடைந்து தங்களைக்காத்துக்கொள்ளும்பொருட்டு ஒளித்துக்கொள்ளத்தக்க இடத்தைக்கருத்தில் ஆலோசித்தார்கள் வண்டுகள் ரீங்காரஞ்செய்யும் கூந்தலையுடைய தேவமாதர்கள் தங்கள் அழகியகையை முறித்து வயிற்றைப்பிசைந்து கொண்டார்கள் பூவின்தாள்களமைந்த கற்பகவிருட்சமும் தன்னிடத்துள்ள தழைகளையுதிர்த்துக் கேட்டோர்க்குத் தட்டாது கொடுக்கும்தனது தொழிலையம் மறந்துவிட்டது காமதேனுவும் பயமுற்று அமுதத்தையுங் கொடுக்கவில்லை இந்திரன்முதலானவரும் நடுநடுங்கினார்கள். எ-று. (எ)

ஏதுபுரிவோமினிநாமென்றிமையோர்வேந்துந்திருமாலும்
வேதமுனிபாற்பயமடைந்து வேண்டிப்பலவாத்துதித்திடலும்
கேதமகலவானசொலுமின்சொற்கேளானின்றகேசவனை
பேதமுறமூங்கையனாகியிருக்கவெனச்சாபமுமுரைத்தான்.

(இ-பு) இனியாது செயவோமென்று இந்திரனும் திருமாலும் அக்கண்ணுவமுனிவரிடத்து மெல்லப்போய் பலவாறுகக்குறையிரந்து தோத்திரஞ்செய்யக் குற்றம்பொருந்திய இந்திரன்கூறிய இனியசொற்களைக்கேட்டுக்கொண்டு எதிரில்நிற்கின்றதிருமாலைப்பழிப்படைந்த ஊமையனாக இருக்கக்கடவாயென்று சாபமுமிட்டார். எ-று. (அ)

மலர்மாதொருபெண்மானாகவான்வேந்தொருவேடுவனாகக்
கலனார்களபமுலைச்சசியுநாகனக்குறவர்மகளாக
வலனாதவத்துமாமுனிவிவ்வண்ணஞ்சபித்துவழிக்கொள்ளச்
சொலநாவிலராய்ப்பின்றொடர்ந்துதாமொன்றனகதங்கிவைசொன்னார்.

(இ பு.) தாமரைமலரில்வசிக்கும இலக்குமிபெண்மானாகவும் இந்திரன் ஒருவேடனாகவும் ஆபரணங்களணிந்த கலவைசசார்ந்த தோய்ந்ததனங்களையுடைய இந்திராணியும்வனாந்தரவாசிகளாகியகுறவர்மகளாகவும இவ்வண்ணம தவவலிமையுள்ள அக்கண்ணுவமுனிவர்சபித்துஎழுந்துபோனார் அப்போது இவர்கள யாதொன்றுஞ்சொல்ல நாவெழாதவர்களாய் அவரைப்பின்னேதொடர்ந்துசென்று அம்முனிவருக்குஇவைகளைக்கூறுவதாயினார்கள். எ-று. (கூ)

கடல்வாயாலமெடுத்துண்ட கறையார்கண்டத்தனைநிகர்த்த
வடன்மாதவனேநீசபித்ததகவுநெறிநீயறைதியெனத்
தொடர்மாமணிவண்ணனைநோக்கிநடுநாலினுனதுதுயருமலர்
மடமானுறுசாபமுமகலுமவகையிதென்றுவகுத்திடுவான்.

(இ - பு) பாற்கடலிற்றோன்றியவிடத்தை எடுத்துண்டருளிய கரியகண்டத்தையுடைய சிவபிரானைப்போன்ற தவவலிமையுள்ள கண்ணுவமு

தால்இந்நிலவுலகத்தோர்பகைவாகளது திரிபுரமெரித்தருளிய அச்சிவபெரு
மானைத்தவத்திசுரர் என்றுகூறுவாகள விதிதவறாது அச்சிவலிங்கப் பெரு
மானைப்பூசித்தவர்களது இடுக்கணையகற்றுவரென்றுசூதபுராணிகாகூறினா

வேறு.

இன்னமுமாயன்பூசைமுடித்ததவியல்கேண்மின்
முன்னமோர்காலத்திந்திரைகேளவனமுனிவாமேல
வன்னலமில்லாததீயவரக்காவலிமாளப
பன்னுமகத்துயாபிருகுவினுக்குபபகையாக.

(இ-பு.) இன்னுந்திருமால பூசித்தசரிதங்கேளுங்கள் முன்னொரு காலத்தில் திருமாலகோபத்தினலமிக்க நன்மையென்பதில்லாத கொடிய அவுணாகளது தவவலிமையைக்கெடுக்கும்படி நினைத்துஅவாகள விருத்திக்காக யாகமபுரியும் பிருகுமுனிவருக்குவிரோதமாக எ-று. ஏ அசை. (கஅ)

அந்தமுனிக்கோரபன்னியையுமறறவடன்னைத
தந்தகுலத்துநதையலையுங்கொறலைசெய்தான
வந்துதவத்துப்பிருகுவறிந்துமாயோன்மேற
சிந்தைசினத்துத்தீயதொர்சாபஞ்செபபுறறுன்.

(இ-பு.) அப்பிருகுமுனிவரது ஒப்பறறபத்தினியையும் அவளைப்பெற்ற உயர்குலத்தினளாகிய அவளதாயையுமகொன்ருா இதனைத்தவசிரேட்டராகிய பிருகுமுனிவாஅறிந்து திருமால்மீது மனத்தின்கண்கோபம அதிகரித்துஒப்பற்ற கொடியசாபங்கூறினுர். எ-று. இவ்விரண்டுங்குளகம்.

மாயிருஞாலமாதாவயிற்றின் மகவாக
வாயிரம்யோனியின்வழியாவந்தலையென்னச
சேயிரும்வேணிச்செய்தவனீதுசெபபுமபோ
தாயிரநாமத்தண்ணலுமுள்ளமருளுறறுன்.

(இ-பு) பெரிய நிலவுலகத்தில மகளிாகள் வயிறறிற்பிள்ளையாக ஆயிரம்பிறவிகள் யோனிவழியாகவந்து அலையக்கடவாயென்றுமிகப்பெரியசடாபாரத்தையுடைய தவசிரேட்டராகியபிருகுமுனிவா இதனைக்கூறும்போது ஆயிரந்திருநாமத்தையுடையதிருமாலும்மனத்துயரடைந்தார். எ-று

மாதவனேதுஞ்சாபமகறறுமவகையுன்னி
வேதமுரைத்தநாதனிடத்துவிரைவெய்தி
யோதிவணங்கிபபூசனைமுறறியுளநைந்தே
சீதரன்மிக்கவீசனையன்பிற்றுதிசெய்தான்.

(இ-பு.) பிருகுமுனிவாகூறியசாபத்தைத் தீர்த்துக்கொள்ளும் வழியைக்கருதி தேவர்களுக்கு வேதமோதுவித்தவேதபுரீசரிடத்தில் விரைவாகச்சென்று தனக்குநேர்ந்த சாபத்தைக்கூறித்தொழுது பூசித்துமனமுருகி

த்திருமாலானவர் மேலான சிவபிரானை மெய்யன்போடு தோத்திரஞ்செய் தார். எ-று. (உக)

இந்திரைநாதனேத்தியவெல்லையிறையோனுங்
கொந்தலர்கொன்றைசூன்பிறைசூடிக்கூர்ங்கோட்டு
மந்தரமானுமான்மழுவேந்திமலையீன்ற
செந்துவர்வாயுமைபாலுறவந்தான்சேவேறி.

(இ-பு.) இலக்குமிநாயகராகிய திருமால் இவ்வாறுதோத்திரஞ்செய்தத்தருணத்துச் சிவபிரானும் கொத்துகளாக அலர்ந்தகொன்றை மலாமாலையையும் இளம்பிறையையும் சடைமிற்றரித்துக்கொண்டு கூர்மையானசிகரங்களையுடைய மந்தரகிரியைப்போன்ற மானையுமழுவையுந்திருக்கரத்திற்றாங்கிக்கொண்டு இமயமலையரையன் பெற்றருளியசிவந்தபவளம்போலும் இதழையுடைய உமாதேவியார இடப்பாகத்திற் பொருந்தவிடைமீதூர்ந்துகாட்சிகொடுத்தருளினார். எ-று (உஉ)

வேறு.

மலைமகளகேள்வனவந்துமாயனையன்பினோக்கி
யலகின்மாதவத்தோன்சாபமகன்றனவமரர்க்காக
நிலனிலீரைந்துமாதரிட்டுநதினீயவதரித்து
வலன்மிகுமரக்கர்தீமைமாற்றுதிமாலேயென்றான்.

(இ-பு.) பார்வதிபாகராகிய சிவபிரான் இவ்வாறு காட்சிகொடுத்துத்திருமாலைப் பேரன்பினோடுபார்த்து எண்ணற்ற தவங்களைப்புரிந்த பிருகுமுனிவரிட்டசாபம் ஒழிந்தது தேவர்களுக்காக இந்நிலவுலகத்தில் பத்துமாதர்களிடத்து நீ பிறந்துவல்லமைமிக்க அவுணர்கள்புரியும இடுக்கணை ஒழிக்கவேண்டுமெ திருமாலேயென்று கட்டளையிட்டருளினார். எ-று. (உ௩)

இன்னவாறுரைத்தவ்வீசனேகியபின்னைமாயன்
பின்னர்மாறுரிதிக்கிறபேசுமோருரோசமேவி
மனனுமோரிலிங்கமபூசையியற்றயேமாலுஞ்செலவுற
னன்னநாயகனைப்பூதேவலிங்கமெனனச்சொலவார்.

(இ-பு) இவ்வாறு கட்டளையிட்டு அச்சிவபிரான் மறைந்தபின்னர் திருமால் அச்சுருதிபுரிக்குப் பின்பக்கம் வாயுமூலையில் ஒருகுரோசதூரத்திற்சென்று அவ்விடத்து நிலைபெற்றஒரு சிவலிங்கப்பிரதிட்டை செய்து பூசித்து அத்திருமால் போய்விட்டார் அச்சிவலிங்கத்தை இந்நிலவுலகத்தினார் அரிலிங்கமென்றும சோல்வார்கள், (உச)

வேறு.

முனனொருகாலம்பொன்னுறைமார்பன்முறணுரும
பன்னகராசனோர்தன்னரிமொயமபிறபரிந்தேதயிக

தன்னிணையில்லோன் வெண்கயிலைக்குச் சார்கின்ற
நன்னெறி தன்னிற் புள்ளரசின்னை நவில்கின்றான்.

(இ-பு.) முன்னொருகாலத்தில் இலக்குமிவசிக்கும் மார்பினையுடைய திருமால் வன்மைநிறைந்த நாகங்களின் வயிரியாகிய கருடனது தோளின் மீதுவிசைவாக ஆரோகணித்து தமக்குவேறு ஒப்பில்லாத சிவபிரானது திருக் கயிலைக்குச்செலகின்ற நல்லவழியில பறவைகளின் இறையாகிய அக்கருடன் இவ்வாறுசொல்கின்றான். எ-று. (௨௫)

ஆயிரநாமங்கடையநீமுந்தவலையாழி
மாயிருஞாலத்துள்ளவையாவுமவாயாலுண்
டேயுதரத்தினுள்ளுறவைத்தவெறுமெழுந்தன்
சேயிருந்தோளுமேபெறுகின்றசெயலன்றே.

(இ-பு) ஆயிரந்திருநாமங்களையுடைய எனதிறைவனே தேவரீர் முன்புஇந்த அலைவீசும கடலாற்சூழ்ந்த மிககபெரிய இந்நிலவுலகத்துள்ள பொருள்களனைத்தையுந்திருவாயினாலுண்டருளித் திருவயிற்றினுள்ளிருக்க வைத்த வல்லமையெல்லாம எனது உயர்ந்தஇரண்டு தோள்களுமேபெற் றிருக்கின்ற தன்மையினாலுள்ளதல்லவா. எ-று. (௨௬)

என்றிவனோதுமெல்லையின்மாயனிவனுள்ளது
தோன்றியதீதேவனமதற்குறுமுரையென்று
நன்றெனவுன்னியென்னினுநீநல்லடலென்றான்
பொன்றிகழ்மேனிப்புள்ளிறைபினபிறபோகின்றான்.

(இ-பு.) என்றிவ்வாறு கருடன்சொல்லுந்தருணத்தது திருமால இவன்மனத்திற்கொடிய செருக்குற்றதனால்வந்த அகங்காரவார்த்தையென்று ஆயினும நல்லதென்றும நினைத்து என்னைப்பார்க்கிலும் மிககபலமுள்ளவன் நீயென்றார் பொன்போலும் விளங்குஞ் சரீரத்தையுடைய கருடன் அவனுடன் செல்கின்றான். எ-று. (௨௭)

எய்தியமாயன்வெள்ளியலைக்கணினிதுற்று
மெய்திகழ்நந்திமுனனுவணத்தைவிறலோய்நீ
வைகுதியென்றேவவுதக்கருண்மாயோன்மகிழ்வோடு
மைதிகழ்கண்டத்தெமபெருமான்மன்றிடைவந்தான்.

(இ-பு) இவ்வாறு சென்றதிருமால் திருக்கயிலைக்கு இனிமையுடனடைந்து உண்மைப்பொருளாய் விளங்குநந்தியெம்பெருமானுக்கு முன் பாகநின்று கருடனைப்பார்தது வல்லமையுள்ளவனே நீயிங்குதானே இருவென்றுகட்டளையிட்டு அருள்தங்கிய அத்திருமால்மனமகிழ்வுடன் நீலகண்டராகிய எமதிறைவர் சந்நிதானத்திற்சென்றார். எ-று. (௨௮)
இம்மூன்றுங்குளகம்.

கண்ணுதலார்திதத்துண்டவுயிர்ப்பாற்கருடன்ற
னண்ணியசூறைக்கண்ணுறுமந்தினலிகின்றான்
புண்ணியநாசியூதையினுள்ளாய்ப்புறமேலாம
விண்ணிடையுந்திமீளநுழைப்பமெலிகின்றான்.

(இ - பு) சிவபிரான்வாகனமாகிய நந்திதேவரது நாசியினின்றும் வருகின்றமூச்சியினாற் கருடனை அக்கினியோடுகூடிய சூறைகாற்றிலஅகப்பட்ட அந்துப்பூச்சியைப்போலவருந்துகினறான அந்நந்திதேவரது சிறந்த நாசியின்காறறினால் அந்நாசிக்குட்சென்றும் வெளியிலஉயாந்த ஆகாயமளவும்போய்மீணடு நாசிக்குட்செலுததலநாதுகின்றான். எ-று (உகூ)

சக்கரபாணிதன்னுடனேதுநதனைசசிநதி
நெக்குடன்மாயநெஞ்சுதளாநதுநிலையாத
துக்கமுழன்றுசோாவுறுபெல்லைதூயோருந்
தக்ககணத்தோரொருவனரிநததயவாகி.

(இ - பு) சக்கரபாணியாகிய திருமாலுடன் கூறியவன்மைசெட்டுத் தேசமைநதழிய மனாதளாவெயதி ஓரிடத்தில நிலைசசவமையாததுசகத்தினால்வருந்திச் சோாவடையுஞ்காலத்தில் அதிபரிசுததராகிய தகுதியமைநத சிவகணத்தவர் ஒருவாரறிநது கிருபையுடையவராய. எ-று. (கூ0)

சென்றரியோடுசெப்பலுமன்னோன்சிவனோடே
பொன்றிகழ்மேனிப்புள்ளிறைசெய்கைபுகன்றிட்டா
னன்றெனவீசனவ்வுவணறகூய்நவில்வானீ
மன்றன்மிகுமபொறபைந்துளவோனைமதியாமல்.

(இ - பு) சிவபிரான் சநநிதிககுச்சென்று அவ்விடத்துள்ளதிருமாலுடன்கூற அத்திருமால்சிவபிரானுடன் பொன்போலுந்திருமேனியையுடையகருடனது செய்கையைககூறினா அப்படியாகலவதென்று சிவபிரான் அககருடனையழைத்துததிருவாய் மலாநதருளுகின்றா நீவாசனைமிக்க அழகியபசியதுளபமாலையுடைய இநதிருமாலைமதிககாமல. எ-று. (கூக)

மதமுறுகின்றநெஞ்சினனாகிமாலோனைப்
பதறிமொழிந்தாய்நநதியுயிர்ப்பாறபடுகின்றா
யிதமுறுமாயனையினைமதியாதவிடர்தீர
நிதமறைசொற்றபொருளையருச்சித்திடுவாய்நீ.

(இ - பு.) அகங்காரங்கொண்ட மனமுடையவனாய் இத்திருமாலினிடத்துப்பதறினவார்த்தைகூறினாய் அதுகாரணததால் நந்தியினதுசுவாசத்தாற் றுன்பப்படுகின்றாய் நன்மையமைந்த திருமாலை மதிக்காதபாவந்தீர வேதத்தைததேவாகளுக்குக் கூறியசிவபிரானைத் தினந்தோறும் நீபூசிக்கக்கடவாய். எ-று. இவ்விரண்டுங்குளகம். (கூஉ)

வேறு.

பன்னகவயிரிக்கிவ்வாறுரைத்தவன்படர்ந்தபின்னைத்
தன்னிகளூர்திநந்திதன்னையழைத்தென்சொலின்றி
நன்மையவயினதேவனலிவுறச்செய்தாய்பாவந்
துன்னியதகலவேதருசோலவியைப்பூசியென்றான்.

(இ-பு) கருடனுக்கிவ்வாறு கட்டளையிட்டு அவன்சென்றபின்பு தமதுவன்மையுள்ளவாகனமாகிய நந்திதேவரையழைத்து எமது உத்திரவில்லாமல நன்மையமைந்தகருடனை வருந்தச்செய்ததனை அதனால் பாவம்வந்தது அப்பாவந்தீரும்படி வேதபுரீசரைப்பூசிக்கக்கடவாயென்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௫௩)

நந்திக்குநந்தியீது நவின்றவன்போயபின்னைக்
கந்திக்குந்துளபக்கஞ்சக்கண்ணனைநோக்கியுன்றன்
சிந்தைக்குடசெறிந்தபுண்ணைஞ்சேமுனுயிர்த்ததுசொலாது
நிந்திக்கும்பாவந்தீரநீயுமப்பரிசுசெய்தி.

(இ-பு.) நந்தியெம்பெருமானுக்குச்சிவபிரான் இவ்வாறுகூறிஅவர் சென்றபிறகு பரிமளிக்குந்துளபமாலையுடைய தாமரைக்கண்ணராகிய திருமாலைப்பார்த்து உன்மனதின்கண் வஞ்சத்தை மறைத்துவைத்துக்கொண்டு இக்கருடனைநமது இடபத்தின்முன்பு நிறுத்திவந்ததைசொல்லாமல் நீர் இத்தபாவந்திரும்படிநீயும் அந்தப்படி வேதபுரீசரைப் பூசைசெய்யக்கடவாய்.

என்றுமைபாகன்சொல்லலவிந்திரைகேள்வனைத்திப்
பொன்றிகழ்மாடவேதபுரத்தினிற்சென்றுவானோர்க்
கன்றுமாமறைகளோதுமமலனைப்பூசைசெய்து
மன்றலந்துளபமாலுமணிமதில்வாயினீங்கி

(இ-பு) என்று உமாதேவியாராகிய சிவபிரான் திருவாய்மலர்ந்தருள இலக்குமிநாயகராகியதிருமால பொன்மயமாய்விளங்கும் மாளிகைகள்நிறைந்த அச்சுருதிபுரியிற்போய் அக்காலத்துத்தேவர்களுக்கு மகத்தாகியவேதங்களை யோதுவித்தவேதபுரீசரைப்பூசித்து வாசனைகமழும் அழகியதுளபமாலையணிந்த அத்திருமாலும் இரத்தினங்களழுத்திய மதில்களையுடையகோபுரவாயிலினின்றும்நீங்கி. எ-று. (௫௫)

வடகிழக்காசைதன்னில்வாளியொன்றேவநூற
நெடியவனெய்தித்தூயலிங்கமொன்றியற்றிநீரார்
கடிமலராதிகொண்டுகவினுறுபூசைசெய்தான்
படியிலப்பரனைச்சுந்தரேசப்பேர்பகருகிற்பார்.

(இ - பு) அத்தலத்திற்கு வடகிழக்குத்திக்கில் ஓர்அம்போதந்தூரத்தில் திருமால்அடைந்து பரிசுத்தமாகிய ஓர்சிவலிங்கப்பெருமானைப்பிரதிட்டைசெய்து சலம்வாசனைநிறைந்தமலர்கள் முதலியகொண்டு அழகமைந்த பூசைபுரிந்தார் இந்நிலவுலகத்தில் அச்சிவலிங்கப்பெருமானைச சுந்தரேசரென்று கூறுவார்கள். எ - று. (ருசு)

முரணுறுநந்திவேதமொழிந்தவன்பதியிலெய்தி
யரணுறுகோயிற்கப்பாலம்புமூன்றேடுந்தூரத்
தரைமிசைவடபாற்சென்றுசங்கரற்பூசைசெய்தான்
பரனவன்றன்னைநந்தியீசனென்பார்கள்பார்மேல்.

(இ - பு.) வன்மையுள்ள நந்தியெம்பெருமான் வேதபுரியிற்சென்று காவலமைந்த அங்குள்ளதிருக்கோயிலுக்கப்பால் மூன்றுஅம்போதந்தூரத்திலுள்ள பூமியில வடபக்கமாகப்போய்ச சிவலிங்கப்பெருமானைப்பூசித்தான் அச்சிவபிரானை இந்நிலவுலகத்தில நந்தியீசரென்றுகூறுவார்கள். எ - று. (ருஎ)

பொற்சிறைவயினதேயனபோந்தவணெய்தித்தூய
நற்சிவலிங்கபூசைநடத்தினனவனைப்பார்மேற்
றற்பரபட்சியீசனெனபாகடாழுந்தோர்க்கெல்லா
மற்புதமானசெல்வமளித்தறனகடையுந்தீர்ப்பான்.

(இ - பு.) பொன்போலும் சிறகுகளையுடையகருடன் அத்தலத்தைச் சென்று பரிசுத்தமாகிய நல்லசிவலிங்கபூசைபுரிந்தனன் அச்சிவலிங்கப்பெருமானை இந்நிலவுலகத்தில் தமக்குத்தாமேபரமாகிய பட்சியீசரென்றுரைப்பார்கள் அச்சிவலிங்கப்பெருமானைத் தொழுதவர்கட்கெல்லாம் அற்புதமான செல்வத்தைக்கொடுத்துப் பாவத்தையுந்தீர்ப்பார். எ - று. (ருஅ)

இன்னமூன்றுகேண்மினைந்தவெழிற்கருடேசமுற்றும்வோர்
நன்னயபணமுமக்கட்பேறுமுவாணாளுமியாக்கைத
துன்னுநோயில்லாவாழ்வுஞ்சொல்லபிராமிநோக்கும்
பொன்னருளாதிமற்றைப்புகழொடும்புவிமேல்வாழ்ந்து.

(இ - பு,) இன்னமுங்கேளுங்கள் நைமிசாரணியமுனிவர்களே அந்தஅழகியபட்சீசரைவணங்குகின்றவர்கள் மிக்கநன்மையுள்ள திருமணமும் புத்திரப்பேறும் ஆயுளும் தேகத்தில் அடைகின்ற நோயில்லாதசம்பத்தும் சரச்சுவதியினுடைய கருணைகடாட்சமும் இலட்சுமியின் திருவருளையும் ஆதியாகமற்றைச்சிறப்பினுடனும் இந்நிலவுலகத்தில் நெடுநாள்வாழ்ந்துபிறகு.

வானகமடைந்தங்குள்ளவளமெலாந்துய்த்துப்பின்னர்
ஞானமாதவர்கள்வாழுநற்றிருக்கைலைநண்ணி
மானமெய்யடியர்கூட்டநாப்பணின்னவுகிமிக்க
தேனவிர்கடுக்கைசூடுஞ்சிவபிரானடிசேர்வாரால்,

(இ - ள்) தேவலோகஞ்சேர்ந்து அவ்விடத்திருக்கின்ற அச்சம்பத்துக்களையும் அநுபவித்தபின்பு மெய்ஞ்ஞானமுடைய பெரியதவமுனிவர்கள் வாழும் நல்லதிருக்கயிலையங்கிரியை அடைந்து மகத்துவமுள்ள மெய்த்தொண்டர் திருக்கூட்டத்தின்மத்தியில் தங்கியிருந்து மேன்மேலும் தேன்பெருகுகின்ற கொன்றைமலர்மாலைசூடும் சிவபிரான் திருவடிநிழலையடைவார்கள். எ-று. ஆல் அசை. (௪௰)

வேறு.

தலையுகந்தரியனைத்தனைக்கண்ணுவ
னலையுறுமானுருவாய்ச்சபித்திடக்
கலைப்பெண்மானெனக்கானகந்தனி
னிலையறத்திரிந்திடுநெடியநாட்டனில

(இ - ள்) திரேதாயுகத்தில் இலக்குமியைக்கண்ணுவமுனிவர் அலையுந்தன்மைவாய்ந்த மானுருவையடையும்படி சபிக்கக் கலையென்னும் பெண்மானுருக்காட்டில் யாதோர் நிலையுமில்லாமல் நெடுநாளதிரிந்துகொண்டிருக்கையில். எ-று. (௪௧)

மாயனைநினைந்துளமவாடியோடியே
யாயதோர்பூதரத்தடியிலெய்தனு
நேயமானமவுனியாய்நிகரின்மாதவந்
தூயனாயிருந்தனன்சொற்றசாபத்தால்.

(இ - ள்) திருமாலை நினைந்து மனம்வருந்தி யோடி அவ்விடத்திருந்து ஓர்மலையின்அடிவாரத்திற் சென்றகாலத்து அங்கு கண்ணுவமுனிவர் கூறியசாபத்தால் தன்னிடத்து அன்புமிக்க திருமால்மவுனியாக ஒப்பற்ற மகாதவத்தைப்புரியும் பரிசுத்தராயிருந்தார். எ-று. ஏ-அசை. (௪௨)

ஆங்குமானொடியேயன்பினன்முகந்
தோங்கியேமகிழ்ந்துளமுவந்தகாலையிற்
றூங்கியகருப்பமுந்தயங்கப்போயொரு
பூங்கொடிபோலிளம்பொன்னைப்பூத்ததே.

(இ - ள்) அவ்விடத்தில் அந்தமான்ஓடி அன்போடு அத்திருமாலை முகந்து மகிழ்மீக்கூர்ந்து மனங்களித்ததருணத்துக் கருப்பமெய்த அக்கருப்பத்துடன்சென்று ஒப்பற்றமலர்க்கொடிபோல இலக்குமியையொத்த ஒருபெண்ணைப்பெற்றது. எ-று. ஏ-அசை. (௪௩)

அளித்திடுங்குழவியையன்பினோக்கியே
களித்திடுமெல்லையிற்கானவேடுவர்

தளிர்த்திடுமவனமெலாந்தாவியங்குற
வொளித்திடுமான்பயந்தோடிச்சென்றதே.

(இ-பு.) இவ்வாறீன்ற அக்குழந்தையைப்பார்த்து மனங்களித்திரு க்குந்தருணத்து வனவேடர்கள் தழைத்திருக்கும் காடுகளெல்லாம் சுற்றி ப்பார்த்துக்கொண்டு அவ்விடத்துவர அங்குக்குழந்தையுடன் ஒளித்துக் கொண்டிருந்த அம்மான்பயந்து ஓடிப்போயது எ-று. ஏ-இரண்டும் அசை

வந்திடும்வேடுவர்மானைக்காண்கிலர்
சுந்தரக்குழவியைத்தூக்கிப்போயின
ரிந்திரைநொந்துளம்பிரங்கிமாழ்கவே
சந்திரசேகரனடைவுற்றனன்.

(இ-பு) அவ்வாறுவந்த வேடுவர்கள் அம்மானைக்காணாதவராய் அழ கமைந்த குழந்தையைத்தூக்கிக்கொண்டு சென்றார்கள் இலக்குமிமனம் நொந்துவருந்தித்துயரடைய சந்திரசேகரராகிய சிவபிரானத்தையடைந்தது. எ-று. (சரு)

மானுருநீக்கினண்மறைக்குநாயகன்
றானிடையிலிங்கமாய்த்தாக்கணங்கின்முன்
பூநிலத்திருந்தவன்பொன்னுங்கண்டனள்
பானலமொழியுடன்பரிந்துபூசித்தாள்.

(இ-பு) சிவபிரான அம்மானுருவத்தை நீக்கியருளி நிலத்தின்மீது சிவலிங்கரூபமாய் அவ்விலக்குமிக்குமுன்பாக விருந்தனர் அவ்விலக்குமி யுங்கண்டு பால்போலும் இனியதுதிமொழிகளைக்கூறி உளப்பரிவோடு பூசி த்தனள். எ-று. (சசு)

தாதவிழ்கடுக்கைப்பந்தாமநாயக
னேதமிலிந்திரையென்னுநான்மலர்
மாதினுக்காயவண்வந்ததாலந்த
நாதனைச்சீலிங்கமெனநவிற்றுவார்.

(இ-பு.) மகரந்தப்பொடிகளசிந்தும் கொன்றைமலராலாகிய சிவ பிரான் குற்றமற்ற இலக்குமியென்னும் அன்றலர்ந்த தாமரைமலரில் வசிக் கும்மாதுக்காக அவ்விடத்து எழுந்தருளினமையால் அச்சிவபிரானைச் ஸ்ரீலிங்கமென்று உலகோர்கூறுவர் என்று சூதபுராணிகர் நைமிசாரணிய முனிவருக்குக்கூறினர். எ-று. (சஎ)

அரிசாபந்தீர்ந்தசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்...ருoச.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# பிரமன்சாபந்தீர்ந்த சருக்கம்.

என்றுபுகழ்சூதமுனியின்பமுமினமெய்தினராய்
நன்றுலவுந்திருவுள்ளநைமிசாரணியத்தோர்
மன்றிடையாடுபதவுண்மலரடியைவழுத்திமுனம்
பொன்றிகழ்பங்கயன்பூசைபுரிந்ததனைச்சொல்லுதியென்றார்.

(இ-ள்) இவ்வாறு எவர்களாலும் புகழப்படும் சூதமுனிவர் திருமால் சாபந்தீர்ந்தசரித்திரத்தைச் சொன்னவுடன் இன்பமடைந்தவர்களாய் நன்மைகுடிகொண்ட திருவுள்ளத்தையுடைய நைமிசாரணியமுனிவர் சிற்சபையின்கண் திருக்கூத்தாடிய சிவபிரானது தாமரைமலர்போன்ற திருவடிகளைத்துதிசெய்து பூர்வத்தில் பொன்போலும்பிரகாசிக்கும் தாமரைமலராசனத்தில்வசிக்கும் பிரமன் தனதுபாவம்நீங்கப் பூசைபுரிந்த சரித்திரத்தைச்சொல்லவேண்டும் என்றனர். எ-று (க)

ஆங்கவரீதுரைக்கிடலுமன்புமனத்தினின்மிகவு
மோங்கிமுனிவரைநோக்கியுயர்மறைசைக்கலத்திலயன்
றீங்ககலப்பூசித்தவகைசெப்புவன்யான்கேண்மினெனத்
தேங்குமருட்கடற்சூதமாமுனிவனுஞ்செப்புவனால்.

(இ-ள்) அந்த நைமிசாரணிய முனிவர்கள் இவ்வாறுகூற உள்ளத்தில்மிக்க அன்புபெருகி அம்முனிவரைப்பார்த்து மேலாகியசுருதிபுரத்தில் பிரமன்தனது பாவம்நீங்கப் பூசைபுரிந்தசரித்திரத்தைச் சொல்லுவன்கேளுங்கள் என்று தேங்கியகருணைக்கடலாகிய சூதமுனிவர் ஆசையுடன் கூறுகின்றனர். எ-று. ஆல்-அசை- (உ)

ஆதியில்வெண்கயிலைதனிலரன்மலரோன்றனையழைத்து
வேதமறுமுகற்கோதுவித்திடுகென்றுரைத்திடலும
போதுறுநான்முகனுமந்தப்புனிதனைமுன்பிரணவத்தை
போதுதியென்றலுமதன்கணுறுபொருளையுரையென்றான்.

(இ-ள்) ஆதிகாலத்தில் வெள்ளியதிருக்கயிலையில் சிவபிரான் பிரமனைவரவழைத்து வேதங்களை முருகக்கடவுளுக்கு ஓதுவிப்பாயென்று கட்டளையிடவும் தாமரைமலரில்வசிக்கும் அப்பிரமனும் அந்தமுருகக்கட

வுரை முதலில் பிரணவத்தைச்சொல்லென்றுசொன்னவுடன் அப்பிரணவத்திலுள்ள பொருளைச்சொல்லென்று கேட்டார். எ-று. (௩)

அறைகின்றபிரணவத்தின்பொருள்யானேயெனவறிந்து
நிறைகின்றமறையுரைததிநீயென்றங்கயனுரைபப
நறைகொண்டமலர்க்கடம்பிலுயகனுநகைத்துமல •
ருறைகின்றவனையிகழ்ந்துகணங்களைக்கூயிவையுரைத்தான்.

(இ - பு.) சொல்லுகின்ற அப்பிரணவத்தின்பொருள் நானேஎன்றறிந்துக்கொண்டு நிறைந்திருக்கும் வேதங்களைச்சொல் நீ என்று அவ்விடத்துப்பிரமன்கூற வாசனையுடைய கடப்பமலாமாலையணிந்த முருகக்கடவுளும் சிரித்துத் தாமரைமலரில்வசிக்கும் பிரமனையிகழ்ந்து சிவகணங்களைக் கூவி இவ்வாறு கூறினா எ-று. (ச)

முனைசிறக்தமொழிதெரியாமூடனைக்காற்றளைபூட்டி
வன்சிறையிலிடுகென்னவலிக்கணங்களீர்த்திடலுந
தன்சினங்கட்குவைகாட்டிநதன்பெயரததிரம்விட்டு
டென்சினங்கொண்டறுமுகனும்விட்டபடைதனையழித்து.

(இ-பு.) முதன்மையான உயாந்தவார்த்தைக்குப்பொருள்தெரியாத இந்தமூடனைக்காலில் விலங்குமாட்டி வலியசிறையிலிடுங்களென்று கூறக் கேட்டவலிய கணங்களிழுக்கவும் தனதுகோபாக்கினியைவீசும் எட்டுக் கண்களையுங்காட்டி தனதுபெயரையுடைய அத்திரத்தை விட்டவுடன் கொஞ்சங்கோபங்கொண்டு முருகக்கடவுளும் அப்பிரமன்விட்ட அததிரத்தை அழித்து. எ-று. (ரு)

திசைமுகனைத்தளைபூட்டிச்சிறைவைத்துச்சிருட்டிவினை
யிசையுறுநானமுடியோடிருநததனைநடத்தினரல்
வசையறுமாநிலத்திலவன்சிருட்டியினில்வருகின்றோ
ரசைவறநான்முகத்தோருருமியாவருமோருருவாளுர்.

(இ - பு.) பிரமனைவிலங்குமாட்டிச்சிறையில்வைதது சிருட்டித்தொழில் இசைந்த நான்குமுடியுடனிருந்து அச்சிருட்டித் தொழிலைநடத்தினர் புகழ்பெற்ற நிலவுலகத்தில் அம்முருகக்கடவுளின்சிருட்டியில் உறபவிக்கின்றவர்கள் அசைவில்லாமல் நான்குமுகமுடையவர்களாகவும் ஒரேஉருவத்தையுடையவர்களாகவும் இருந்தாாகள். எ-று. ஆல்-அசை. (சு)
இவ்விரண்டுங்குளகம்.

பாரதனிலிப்புதுமைபார்த்தருண்மாயவனிடத்தி
னாரதனும்போயுரைப்பநாரணனுந்தானுணர்ந்து
நீரதனைச்சடிலத்தினிறைத்தவன்பாற்சென்றுலகின்
சீரதனையுரைத்திடலுஞ்சிவனுமனத்தேதெளிந்து.

(இ - பு.) நிலவுலகத்தில்விளைந்த இப்புதுமையைப்பார்த்துக் கிருபை யுடைய திருமாலிடத்தில் நாரதமுனிவரும் சென்றுரைக்க அத்திருமாலும் அதனையுணர்ந்து கங்கையைச்சடையில்தரித்த சிவபிரானிடத்திற்சென்று உலகத்திலுள்ள சிறப்பினைக்கூறச் சிவபிரானும் அதனைத்தமது திருஉள்ளத தில் உணர்ந்து. எ று. எ-தான், ஏ-அசை. (எ)

அன்புறுதன்மகனையழைத்தலர்மகனைத்தளைபிணித்தா
யென்புதுமையுரைதியெனவினைபோனுமிவையுரைப்பான்
முன்புரைத்தபிரணவத்தின்பொருள்கேட்டான்முண்டகத்தோன்
றன்பெருமையஃதென்றனகலினற்றனைத்தடுத்தேன்.

(இ-பு.) அன்புடையதமது குமாரராகிய முருகக்கடவுளை வரவழைத்துப் பிரமனைவிலங்கிட்டனை என்ன அதிசயமசொல்லென்றுகேட்க முருகக்கடவுளும் இவ்வாறுகூறுகின்றார் அப்பிரமன் முதலிற்கூறிய பிரணவத்துக்குப்பொருளைக்கேட்டபோது அவன் தனதுபெருமைதான் அப்பொருள் என்று கூறினன் அதனாற்றான் விலங்கிட்டனன். எ-று. (அ)

என்றிடலுமரன்மகிழ்வுறறியம்பியவப்பிரணவத்துக்
கொன்றியநற்பொருடனைநீயுணர்ந்தனைகொலெனக்கேட்ப
வென்றியுறுமகனறிவேனெனவவனும்விளம்புகெனப் [ன்.
பொன்றிகழ்வேணியன் காதிற்பொருமயிலவேலவன்புகன்றா

(இ - பு.) என்றுகூறச்சிவபிரான திருவுள்ளமகிழ்ந்து நீ கூறிய அப்பிரணவத்துக்குப்பொருந்திய நல்லபொருளை நீ அறிந்திருக்கின்றாயா என்று கேட்க வெற்றியடைந்த அமமுருகக்கடவுள் அறிந்திருக்கின்றனன் என்று கூறச் சிவபிரானும் அதைச்சொல்லுவாயென்றுகேட்கப் பொன்போலும் விளங்கும் சடையையுடைய அச்சிவபிரானது திருச்செவியில் யுத்தத்திற்குரிய கூறியவேற்படைதாங்கிய முருககடவுள் கூறினர். எ-று. இம்மூன்றுங்குளகம். (௯)

ஆதிபிரணவத்துண்மையறைகுதலுமரன்மகிழ்ந்து
வேதனையாங்கணவித்துவிளங்கியவோங்காரத்துக்
கோதுபொருளென்றேயுரைத்தபவந்தவிர்ந்திடுதி
பூதலத்தாரணைபுரத்திற்போந்துநமைப்பூசித்தே.

(இ - பு.) முதன்மையாகிய பிரணவத்துக்குரிய உண்மைப்பொருளைக்கூறக்கேட்டுச் சிவபிரான் திருவுள்ளகளித்துப்பிரமனை அவ்விடத்து வரவழைத்துப்புகழ்விளங்கிய பிரணவத்துக்குக்கூறும்பொருள் நான்தான் என்றுகூறியதோடத்தை நிலவுலகின்கணுள்ள கருதிபுரியிற்சென்று நம்மைப்பூசித்து நீக்கிக்கொள்ளக்கடவாய். எ-று. ஏ-இரண்டும்-அசை.

வெண்கயிலைக்கடவுளிதுவிளம்பலும்பூதலத்தினிடை
நல்கமலத்தயன்மறைசைத்தலஞ்சார்ந்துவானவர்க்குப்

பண்கலந்தமறையுரைத்தபரமன்மலரடியிணையைக்
கண்கலந்தேயுறநோக்கிக்கருத்திறம்பூசனைபுரிந்தான்

(இ-பு.) வெண்மையான திருக்கயிலைக்கிறையாகிய சிவபிரான் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளவும் குளிர்ந்தகமலவாசனாகிய பிரமன் நிலவுலகின்கண்ணுள்ள வேதபுரியையடைந்து அங்குத்தேவர்களுக்குப் பண்களமைந்தவேதம் ஓதுவித்தவேதபுரீசர் தாமரைமலர்போலும் இரண்டுதிருவடிகளைத் தரிசித்துத் தனதிதயத்திருத்தி உயர்ந்தவழிபாடியற்றினன். எ-று. ஏ-அசை (௧௧)

தினம்பலதிரத்தயன்பூசைசெய்திடலும்மெய்ப்பெருமான்
மனம்பயினதகருணையனும்மாளமுபூசைதகலமேந்தி
யனம்பயிலகேதனமுன்னராகியேயபிரமவதனை
கனம்பயிலும்பொருளெனயென்றவுறனகனடகழிந்தோம்.

(இ-பு) இவ்வாறு பிரமன்பூசித்துவரப் பலதினங்கழிந்தது எமதிறைவர் தமதிதயத்தில் திருவருளுடையராய் மாணும்மூவர் திருக்கரத்திற்றங்கி அன்னக்கொடியையுடைய அபிராமனுக்குக் காட்சிகொடுத்தப்பிரணவத்தின் பெருமையிற்சிறந்தபொருள் நானேயென்றுகூறிய பாவத்தை ஒழித்தோம். எ-று. ஏ-அசை (௧௨)

இத்தலத்திலொருலிங்கமியற்றியெமைபூசித்து
முத்தலத்துஞ்சிருட்டிவினைமுயலுதியென்றுரைத்தருளக்
கொத்திதழ்த்தாமரையவனுங்குணக்கிருகடிகைதூரஞ்
சித்தமகிழ்ந்தெய்தியங்கோர்சிவலிங்கம்பூசித்தான்.

(இ-பு) இந்தத்தலத்தில் ஒருசிவலிங்கப்பிரதிட்டைசெய்து நம்மையருச்சித்துச் சொர்க்கம்மத்தியம் பாதலம் என்னும் மூவுலகத்திலும் உனது சிருட்டித்தொழிலைச் செய்யக்கடவாயென்று திருவாய்மலர்ந்தருளக் கூட்டமான இதழ்களையுடைய தாமரைமலர்வாசனாகிய பிரமனும் கிழக்கில் இரண்டுநாழிகைவழித்தூரத்தில் மனமகிழ்ந்துசென்று அவ்விடத்து ஒருசிவலிங்கத்தைத்தாபித்துப் பூசித்தனன். எ-று இவ்விரண்டுங்குளகம். (௧௩)

சிரமொருநான்கவன்பூசைசெய்ததனலப்பரனைப்
பிரமலிங்கமெனவெவரும்பேசுவரப்பிஞ்ஞகனைக்
கரமலர்கூப்பினர்துதித்தோர்காசினியிற்பவந்தீர்ந்து
வரமதுபெறவிருமையினும்வாழ்வினமிசவயங்கிடுவார்.

(இ-பு) நான்குசிரங்களையுடைய பிரமன் பூசித்ததனால் அச்சிவபிரானைப்பிரமேசரென்று யாவருங்கூறுவர் அச்சிவபிரானைக் கைகளைக்கூப்பித்தொழுதவர்களும் தோத்திரஞ்செய்தவர்களும் இந்நிலவுலகத்திற்பாவந்தீர்ந்து அனேகவரங்களைப் பெற்றுக்கொண்டு இம்மையிலும் மறுமையிலுமமிகவாழ்வடைந்து விளங்குவார்கள். எ-று. (௧௪)

அப்பரனுக்கீசனுறுமாசையிலோர்கடிநெறியி
லெப்புவியும்புகழ்சுகமாமுனிவனிருந்ததிற்பன்னு
ளொப்புரவினுடன்பூசைமுடித்துரகவிடந்தீர்ந்தான்
செப்புமந்தசிவற்றொழுதார்தீவினைதீர்ந்திடுவர்களால்.

(இ-பு.) அச்சிவபிரானுக்கு ஈசானியதிக்கில் ஒருநாழிகைவழிதூரத்தில் எவ்வுலகத்திலும் புகழ்பெற்ற சுகமுனிவர் இருந்து அவ்விடத்து ஓர் சிவலிங்கப்பெருமானைப் பிரதிட்டைசெய்து அநேகநாள் மெய்யன்போடு வழிபாடுசெய்து சர்ப்பவிடத்தைத்தீர்த்துக் கொண்டார் யாவரும்புகழும் அச்சிவபிரானைத்தொழுதவர்கள் தங்கள்தீவினைகளைத் தீர்த்துக்கொள்வார்கள். எ-று. ஆல்-அசை. (கரு)

மீட்டுமொருக்காலந்தவேதபுரத்தினிலெய்தி
வாட்டடங்கணுமைகேள்வன்மலரடியைப்பூசித்தே
யோட்டவரிதாயபவமோட்டியதுண்டக்கதையைக்
கேட்டுமெனச்சூதமாமுனிவருமிதுகிளத்தினரால்.

(இ-பு) திரும்ப ஒருவிசைபிரமன் அந்தவேதபுரியிலடைந்து வாள்போன்ற விசாலமாகிய நேத்திரமுள்ள உமாதேவியார் மணாளராகிய சிவபிரான தாமரைமலர்போலும் திருவடியையருச்சித்து யாவராலும் ஒழித்தற்கரிய பாவத்தை ஒழித்துக்கொண்டதனை அச்சரித்திரத்தைக் கேளுங்களென்று சூதபுராணிகர் பின்னும் இவ்வாறு கூறுகின்றனர் எ-று. ஆல்-அசை

வேறு.

கற்பகநாட்டரமகளிர்கவினினுங் குணத்துங்கண்டோருள்ள
மற்புதமுறவிடப் பரதமாடல்புரிவலத்தாலுமியாவேயிந்தப்பொற்
பதியிற்குரைகடல்சூழ் புவியிலரவுலகுசேர் பெண்பாற்றன்னி
னறபுனிதத்தினுநம்மைமிகாப்பவரென்றவ்விம்மதைநண்ணினரால்

(இ-பு) தேவலோகத்து அரம்பாமாதர்கள் அழகினாலுங் குணத்தினாலும் கண்டவர்கள் மனதின்கண் அற்புதமடையும்படி பரதநாட்டியம்புரிகின்ற தன்மையாலும் இந்தத்தேவலோகத்திலும் சத்திக்குங்கடல் சூழ்ந்த பூவுலகத்திலும் நாகலோகத்திலும் பெண்களாய்ப்பிறந்தவர்கள் நல்ல பரிசுத்தத்தாலும் நம்மைப்போன்றவர்கள் யாரிருக்கின்றார்களென்று தங்கள் மனதின்கண் அகங்காரங்கொண்டார்கள். எ-று. ஆல்-அசை. (கஎ)

அணங்கினர்நெஞ்சினின்மமதையடைந்ததைவச்சிரபாணியறிந்
துஞானமிணங்கியசிந்தையனாநாராயணனாமாமுனிபாலின்றினை
ய்திக், குணங்களினுமிளமையினுங்கோதினீர்மையினுமொப்புக்கூ
றவானம், பணங்குலவுபணிபுலத்துமாதர்தனிமாதரிலாயபான்மை
யாக.

(இ-பு.) தேவமாதர்கள் மனதில் அகந்தையுற்றதைத் தேவேந்திரனறிந்து ஞானமடைந்த மனமுடையவராகிய நரநாராயணமுனிவரிடத்தில் இனிமையுடன் அடைந்து சகலகுணங்களிலும இளமையிலும குற்றமற்ற ஒழுக்கத்திலும் ஒப்புரைத்தற்குத தேவலோகம்படத்தையுடைய நாகங்கள்வசிக்கும் நாகலோகம்பூவுலகம் இம்மூன்றுலகத்திலும் பெண்களில்லாததன்மையாக எ-று. (௧௮)

ஒருமாதுதனைச்சிருட்டித்துத்தருகென்றமரர்பிரானுரைப்பக்கேட்டே, யருமாதவப் பெருமானுங்குகவானைக் கீறவதனினின்றும் வருமாதுதனைநோக்கி மகிழ்ந்தனன் மகாதிபன்மாதவததோனன் பாற், றருமாதுக்குயர் பரதசாததிரமே முதலெவையுநதயவிறறந்தான்

(இ-பு.) ஒருபெண்ணைசசிருட்டித்துத் தரவேண்டுமென்று இந்திரன்கூறக்கேட்டு அருமையமைந்த மகாதவசிரேட்டராகிய அந்நரநாராயணமுனிவர் அவ்விடதுதத்தமது தொடையைசகீற அதினின்றும் உற்பவித்த பெண்ணைப்பார்த்து இந்திரன்மனமகிழ்ந்தான் மகாதவசிரேட்டராகிய அந்நரநாராயணமுனிவர் அன்பினால் உற்பவிக்கச்செய்த அப்பெண்ணுக்கு உயர்ந்த பரதசாத்திரம முதலானசகலமும நயவினோடு கற்றுக்கொடுத்தார். எ-று. (௧௯)

கலையனைத்துமறிவித்துக்கவின்மேனியுறுமுறுப்பின்கண்ணிற தோன்று, நலமதனுலுருப்பசியானாயமுமிட்டருந்தவத்தோனல்கினனப், பொலன்கொடியைக்கொண்டமரர்புரத்தினிற்சென்றவணிருக்கும்பொன்னனைரிற், றலைமையுறுமியல்காட்டநதனிமயிலூட்டியநோக்கித்தயையுற்றானால.

(இ-பு) இவ்வாறு அநேகசாத்திரங்களையுந்தெரிவித்து அழகுபொருந்திய சரீரத்திற்பொருந்திய அவயவங்களினிடததுக கண்ணுக்குத்தோன்றும்நன்மையினால் ஊர்வசி என்னும்பெயருமிட்டு அருமையாகிய அம்முனிவர் இந்திரனுக்குககொடுத்தார அநதப்பொன்போலுங அழகியகொடிபோன்றஅப்பெண்ணை அழைததுக்கொண்டுதேவலோகததிற்போய் அவ்விடத்திருக்கும் இலக்குமியையொதத அரம்பைமாதர்களில் முதன்மையுறற தன்மையைக்காட்டும்படி ஒப்பற்ற மயிலைபோன்ற சாயலையுடைய அப்பெண்ணின் நாட்டியததைககண்டு அப்பெண்ணின்மீதுகிருபை கூர்ந்தனன் எ-று. ஆல்-அசை. (௨௦)

கறைமதிமூன்றரைகைபோனிறமழுங்கியரமகளிர்நெஞ்சிற்றத்தங் குறையுறுகின்றனர்சூழிமிகக்கோகனகததயன்மருங்கிற்குறுகியீதை யறைகுவரெவ்வுலகுமெளிதளிக்குமூன்றன் பெருமைமதியாமலெங்க, ளிறைநரநாராயணன்பாலெம்மினலமுயவொருமாதினிதிற்பெற்று.

(இ - பு.) பூரணசந்திரன் முன்னட்சத்திரங்கள்போலத்தமது தேசசுருறைந்த அரம்பையாகள்மனதில் தங்கள்தங்கள் குறைவுகளையெண்ணுகின்றவர்களாய் ஒருங்குசேர்ந்து தாமரைமலராசனஞகிய பிரமனிடத்தடைந்து இவ்வாறுகூறுகின்றனா எல்லாவுலகத்தையும் எளிதிற்சிருட்டிக்குந்தேவரீரது பெருமையைமதிக்காமல் எங்களைறவனுகிய இந்திரன் நாராயணமுனிவனிடத்து எம்மினும் அழகுயர்ந்த ஒருபெண்ணையினிமையுடன் பெற்றுகொண்டு. எ-று. (உ௧)

தன்னவைக்குப்புனிதமவடானெனக்கொண்டெனமயிகழ்ந்தான் சாறுமந்த,மினனிடைக்குமுயர்வடிவாய்விளங்குமொருமாதெம் பால்வேண்டியாங்க, ளுன்னிடத்துகருற்றனமென்றுரைத்திடலு மயன்மகிழ்ந்தேயுமபர்நாக, ரிநிலத்துமுறுமாதருத்தமத்திலெள் ளளவாயெடுத்துக்கொண்டு

(இ - பு) தனனுடையசபைக்குப் புனிதமானவள் அவளேயெனக் கொண்டு எங்களையெலலாம் இகழ்ச்சிசெய்தான் ஆசையால் அந்தமின் போன்ற இடையுடைய பெண்ணினுஞ்சிறந்த சவுந்தரியமுடையவளாக விளங்கத்தக்க ஒருபெண் எங்களுக்குவேண்டி நாங்கள் உன்னிடத்தில் அடைந்தோம் என்றுகூறப் பிரமன்மனமகிழ்ந்து மீதலபாதலம்பூதலம் ஆகியமுத்தலத்துமுள்ளமாதர்களது உத்தமகூறில் ஓரெள்ளளவுஎடுத்து,

வானொளிமின்னேருருவாய்வந்ததெனமலாமகளில்வனப்புமி க்க, கானெழுகுங்குழறறனிமோாகாரிகையைச்சிருட்டித்துக்கம லததையன், மீனெழுகுவிழியுலகமெலவியர்பாலுக தமத்தெள்வி தையிறசோதத, தேனெழுகுமொழிமயிலைதிலோத்தமையாமெ னபபெயரைசசெப்பினுால.

(இ-பு.) ஆகாயத்தின்கண் பிரகாசிக்கும் மின்னலே ஒருருவெடுத்து வந்ததென்று சொல்லும்படி இலக்குமியினும்மிக்க அழகுவாய்ந்த நறுமணங்கமழுங் கூந்தலையுடைய ஒப்பற்ற ஒருபெண்ணைச்சிருட்டித்து அப்பிரமன் சேற்கெண்டைபோல்விளங்கும் விழிகளையுடைய மூவுலகத்துமாதர்களிடத்துள்ள உத்தமக்கூறில் எள்ளளவு எடுத்துச்சேர்த்துச் சிருட்டித்ததான் தேன்போன்றினிக்கும் வார்த்தையையுடைய மயில்போலுஞ்சாயலுள்ள அப்பெண்ணுக்குப்பெயர் திலோத்தமையென்று கூறினன். எ-று. ஆல்-அசை. இம்மூன்றுங்குளகம். (உ௩)

வேறு.

தந்தமடமாதெழிலேக்கித்தண்டாமரைமீதுறுமிறைவன்
சிந்தைகலங்கிமயறேய்ந்துசேர்வானெண்ணியுறுமெல்லை
யந்தமடமானனித்தவனென்றஞ்சியோடவயனறுடரப்
பந்துமுலையோர்மானுளபதுமத்திறையுமதுவானுன்.

(இ-ள்.) இவ்வாறுதான் சிருட்டித்தமடமையுடைய அம்பெண்ணின் அழகைக்கண்டு குளிர்ந்ததாமரைமலர்மீது வசிக்கும்பிரமன் மனமபேதித்து காமநோய்கொண்டு அவளைப்புணர நினைத்துச்சமீபித்தபோது அப்பெண்ணானவள் நம்மைப்பெற்றவனென்று பயந்தோடப் பிரமனும் விடாது பின்பற்றித்தொடர்ந்துசெல்ல உடனேபொற்பந்துபோலும் தனங்களையுடைய அவள் ஓர் பெண்மான்வடிவெடுத்தனள் பிரமனும் ஆண்மான் வடிவெடுத்தனன். எ-று. (உ௪)

மானுங்கலையுமாகிப்பசுமருவிக்களித்ததாகிழ்ந்தபின்னர்த்
தேனுண்குழலாளரம்பையாதந்திரத்திறகலந்தசெலகினறு
ஏனங்கருதித்தனதுருவமெடுத்தபிரமனினிதெய்தித்
தானங்குறுமிலவினிறசென்றனவைமுனிருந்தோர்தாங்கண்டார்.

(இ-ள்.) இவ்வாறு ஆண்மானும் பெண்மானுமாகி உருவெடுத்து அவ்விடத்திற்சேர்ந்து சந்தோஷித்து மனமகிழ்ந்தபின்பு வண்டுகள்தேனுண்ணும் கூந்தலையுடைய அப்பெண் தன்னுருவடைந்து அரம்பையர்கள் கூட்டத்திற்சேர்ந்து போயினள் பிரமன் இவ்வுருவந்தானடைந்த இழிவைநினைத்து உடனே அவ்வுருவத்தை மாற்றிக்கொண்டு தன்சுயவுருவத்தோடு இனிமையாகச்சென்றுதானலங்கரிக்கும்பதவியை அடைந்தான் அப்போது அச்சபையிலிருந்தோர் அனைவரும்பார்த்தார்கள். எ-று. (உ௫)

தான்-அசை. இவ்விரண்டுங்குளகம்.

அளித்தமகளைக்கொடாந்தெய்தியனங்கன்கணையிலேனுய்தீர்ந்து
களித்தபிரமனெனவிகழ்ந்தாகமலக்கிறையுஞ்சிருட்டிவினை
யொளித்துத்துணர்ந்துதுயரெய்தியுருப்பழுந்தவத்தினமனனுகி
நளிர்த்தண்ணிமயவரைப்பசாரந்தானவனைவந்துற்றனாதனுர்.

(இ-ள்.) தான்பெற்றமகளையே பின்றொடர்ந்து சேர்ந்து மன்மதன் மலரம்பினலுண்டாகிய காமநோய்தீரப்பெற்று மனங்களித்தபிரமன் என்று இகழ்ந்தார்கள் அப்பிரமனும் சிருட்டித்தொழில் செய்வையாய் வாராமையைத்தெளிந்து துன்பமடைந்து செய்யவேண்டியதவத்தின்மீது மனமுடையவனாய் மிகக்குளிர்ந்த இமயமலையை அடைந்தான் அவ்விடத்து நாரதரும் வந்தார். எ-று. (உ௬)

தருமுன்செழிலுமுன்னுலகுந்தவிர்த்திப்பொருப்பின்சாரலினகண்
வருநின்கருமமுரைத்திடெனமகனகேட்டிடலுமயன்றளர்ந்து
மருமென்குழலைச்சேர்ந்துறறவசைகள்பலவுமவழங்கியதற்
கிருமுன்முதலைநினைந்துதவமியற்றவிவணெய்தினனென்றான்.

(இ-பு) சிருட்டிக்கும் உனதுதொழிலையும் உனதுபதியையும் விட்டு மலைச்சாரலினிடத்துவந்திருக்கும உனதுகாரியத்தைக்கூறென்றுநாரதர்கேட்கப் பிரமன்மனந்தளர்ந்து தான்பெற்ற வாசனைகமழும்மெல்லிய

கூந்தலையுடையபெண்ணைச் சேர்ந்ததனால் தனக்குவந்த கேடுகள் பல வற்றையும் எடுத்துக்கூறி அது தீரவேண்டிச்சிறந்த திரிமூர்த்திசொரூப மாய்விளங்கும் சிவபிரானைநினைந்து தவம்புரிய இவ்விடத்தடைந்தனன் என்றுகூறினான். எ-று. இவவிரண்டுங்குளகம். (உஎ)

வண்டாமரையோன்மனத்துயரும் வருத்தவுரையின்வண்மையை யுங், கண்டான்முனிநாரதனுள்ளங்கனிந்தேதகருதியிவையுரைத்தா ன், கொண்டாய்பவமேபெரிதததறகுக்குறிநதமொழியோபெருநதா க, முண்டானவனோகூவமெடுத்துறுநீருண்ணவெண்ணினதொத்த.

(இ - பு.) வளப்பமான தாமரைவாசனாகிய பிரமனது மனவருத்த மும் அவன்கூறிய வார்த்தைகளின் வன்மைப்பாட்டையும் நாரதமுனிவர் கண்டு மனமிரங்கி ஆராய்ந்து இவ்வாறு கூறினார் மிகப்பெரிய பாவத்தை அடைந்த நீ அதற்றுத்தீர்வாகக்குறித்த வார்த்தையோ பெருந்தாகமெடுத்த வன் ஒருகிணறுதோண்டி அதிலுண்டாகும் நீரைக்குடிக்க நினைத்ததை யொக்கும். எ-று. (உஅ)

வேறு.

யாங்குசவமெர்தனைநாள்புரிவாயந்த விறைவனெந்தநாள்வருவனி யற்றுமபாவ, நீங்குவதெக்கால மதனபின்புசென்றுநீ சிருட்டித் தொழிலபுரிந்துநிறபதென்று, பூங்கமலத்திறைவாதெளிதென்றந்த பூதலத்தில்வாயாலுமபுகலறகொவவா, தீங்குறுமெப்பவமுமொ லலைதீர்க்குமவேதத்திருநகாநாதனைபபூசைசெய்குவாயால்.

(இ - பு.) இவ்விடத்து எத்தனைநாள் தவஞ்செய்வாய் அந்தச்சிவபி ரான் எந்நாளில்வருவார் நீ பெற்றியதோடம நீஙகுவது எக்காலம்அதன்பி றகு நீ போயப்பழயபடி சிருட்டித்தொழிலைச் செய்துகொண்டிருப்பது என்றைக்கு ஆதலால் அழகியதாமரையிலவசிக்கும பிரமனே இது எளி திலமுடிவதல்ல இந்நிலவுலகத்தில் வாயால் கூறுதற்குச் சமமதியாதகொ டுமைவாய்ந்த எந்தத்தோடத்தையும் விரைவில்நீக்கும் சுருதிபுரியில் வசிக் கும் வேதபுரீசனைப பூசிப்பாய. எ-று. ஆல-அசை. (உகூ)

சொல்லுதற்குமரிதானபாவமேனுந தொடருகின்றபிரமகத்தி தோடமேனும், வலலமுனிவரரிமையோசாபமேனுமனத்தினுறு துயரேனுமவறுமையேனு, மல்லலுறும்பிணியேனுங்கொண்டாரந் தவாரணமாககாப்பெருமானடியிற்சூழ, மெல்லியபஞ்சனலில்வீழு நதனபோறறீர்நதுவிரும்பியவைபெற்றுநலமேவுவாரால்.

(இ - பு.) வாயாற்கூறுதற்கு மருமையான பாவமாயினும் பின்பற் றித்தொடரும் பிரமகத்திதோடமாயினும தவத்தில்வல்ல முனிவர்கள் தேவர்கள் இவர்களால் சேர்ந்தசாபமாயினும் வேறுவகையால் மனதிலுண்

டானதுயரமாயினும் தரித்திரமாயினும் துன்பப்படுத்தும் வியாதியாயினும் அடைந்தவர்கள் மேற்கூறிய சுருதிபுரியில் வீற்றிருந்தருளும் வேதபுரீசரது திருவடியில் வணங்கினவுடன் மிருதுவாகிய பஞ்சு நெருப்பில்விழுந்தது போல நீங்கித்தாங்கள் விரும்பியவரங்களைக் குறைவின்றிப்பெற்று நன்மையடைவார்கள். எ-று. ஆல்-அசை. (ருo)

ஐயமுறாவினையொருகதைகேளினவசணரிற்சுவார்த்தனெனு மறிவுதீர்ந்தோன், றெய்யின்முலைமாதர்கலவியின்மேலுள்ளந்தோய்ந்துபொருள்பலவுமந்தத்துறைபாற்றோற்றுக், கையினிதியிலனுக்காமம்விற்குநகணிகையாமாட்டனுக்கிலனுய்க்காமநோயை, மெழுயனைபாற்றீர்ந்திடுவான்கருதியின்றவிப்பிரனைக்கொலைசெய்தான்வினைவந்தோரான.

(இ-பு.) இதில் உனக்குச்சந்தேகந்தோன்றில இன்னொரு திருஷ்டாந்தங்கேளென்று சுவார்த்தனென்னும் பெயருடைய அறிவில்லாத ஓர் மறையவன் மகளிர்களது கலவியின்மீது மனமழுந்தி அவ்வழியிலேயே தனது கைப்பொருள்யாவுமிழந்து கொஞ்சமேனும் பொருளில்லாதவனாய் வறுமையடைந்து காமஇன்பத்தைவிலைப்படுத்தும் பரத்தையர்களிடத்திற் செல்லாதவனாய்த் தனக்குண்டாகிய அக்காமநோயை தன்றுடையமாதாவினிடத்துத் தீர்த்துக்கொள்ள எண்ணி பிறகு தனக்கு விளையுங்கேடுகளைச் சற்றும் உணராதவனாய்த் தன்னைப்பெற்ற மறையவனாகிய பிதாவைக் கொலைபுரிந்தான். எ-று. (ருக)

நிலநவிக்குநகருவியினுற்றந்தையாவிநீக்குநனும்பிரமகத்திநெடியநீல, மலைநிகர்ப்பக்கையிலொருமுசலந்தாங்கிமறையோனைத் தொடரமனநடுங்கியிந்த, வலைகடல்சூழுலகமெலாந்திரிந்து தேவராலயங்களபல தொழுதுமகன்றிடாமற், கலைநிலவுதவழுமாடவீதி வேதக்கவினகரில்வந்தரனறன்கழலிறைஞ்சினான.

(இ-பு.) நிலத்தினின்றும் மண்ணைவெட்டியெடுக்கும் மண்வெட்டியினாற் பிதாவின் உயிரைநீக்கினவனை பிரமகத்திதோஷம் பெரியநீலமலை போலத்தனதுகையில ஒரு இருப்புலக்கையை எடுத்துக்கொண்டு அச்சுவார்த்தனென்னும் மறையவனைப்பின்றொடர அதைக்கண்டு நெஞ்சுநடுக்கமுற்று அலைகளையுடைய கடலாற்சூழப்பட்ட இந்நிலவுலகம் முழுதுமதிரிந்து அவ்வவ்விடங்களிலுள்ள தேவாலயங்கள்பலவும் வணங்கியும்அப்பிரமகத்தி தன்னைவிட்டுநீங்காமல் சோடசகலைகள்நிறைந்த சந்திரன்வந்து தவழும் மாடங்கள்விளங்கிய வீதிகளையுடைய அழகமைந்தவேதபுரியில்வந்து சுருதிபுரீசர் திருவடிகளில் வணங்கினான். எ-று. (ருஉ)

அங்ககரிற்றொடராமற்பிரமகத்தியயவிருந்ததறிந்துமறையவனு மாங்கு, மன்னியபொற்கலியாணகோடிதீர்த்தமதிற்றோய்ந்துபரா

கும் நான்குமுகங்களையுடைய அப்பிரமனுக்கெதிரிற்றோன்றி இவ்வாறு திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (௬௫)

தந்தமகடனையன் பாற்றழுவுபவங்கவிர்ப்பதற்கோ
ரிந்தநிலத்தோரிலிங்கமினிதமைத்துப்பூசித்தே
நந்தலிலாப்படைப்பதனை நடத்துகெனக்கூறிட வு
கந்தமலரவன்றுதித்துக்கருத்தினுறுந்துயரொழிந்தான்.

(இ - பு.) சிருட்டித்தபெண்ணைத் அன்புடன்றழுவிய தோடத்தை நிவாரணமாக்கிக்கொள்ளத்தக்கதாக ஒப்பற்ற இவ்விடத்தது ஒரு சிவலிங்கம் பிரதிட்டைசெய்து பூசித்துக்குறைவுபடாத சிருட்டித்தொழிலை நடத்தக்கடவாய் என்று கட்டளையிட்டவுடன் வாசனைதங்கமழுந் தாமரைவாசனாகிய பிரமன்தோத்திரஞ்செய்து தன்மனதின்கணிருந்த துயரநீத்தான். எ-று. ஏ-அசை. (௬௬)

கோகனகத்தவன்குணக்கிற்குரோசமிரண்டரையதனில
வேகமுறச்சென்றங்கோர்சிவலிங்கமவிளையிலவருரு
சோகமறத்தாபித்தாசசுருதிசிவாசமவழியா
லேகனையாராதனைசெய்திரும்புளகமெய்தினனால.

(இ - பு.) தாமரைமலராவாசனாகிய பிரமன்கிழக்கே இரண்டரைகுரோசதூரத்தில் அதிவிரைவாகப்போய் அவ்விடத்தது ஒரு சிவலிங்கப்பெருமானைத்தான்புரிந்த தோடத்தினால் விளைந்த துன்பங்களெல்லாந்தீரும்படி பிரதிட்டைசெய்து வேதசிவாகமமுறைமைப்படி ஏகசொரூபியாகிய அச்சிவலிங்கப்பெருமானைப்பூசித்து உடலமுழுதும் பெரியபுளகாங்கிதமடைந்தான். எ-று. ஆல்-அசை. குரோசமென்பது-கூப்பிடுதூரம். (௬௭)

வேறு.

அவ்வேலையினையழைந்தாலயமாமணிமயமாயமைத்தியென்னக்
கைவேலைமுயற்சியினாற் கனகமணிகோபுரமுங்காப்புமிணையார்
மைவேலைக்களத்தனமகிழ்மண்டபமுந்தாபிகையும வழங்கித்தூய
வைவேலைப்பொருவுவிழிமாதுமையாட்கிருப்பிடமும வயங்கச்செய்தான்.

(இ - பு.) அத்தருணத்தில் தேவதச்சனைவரவழைத்து இச்சிவலிங்கப்பெருமானுக்குத் திருவாலயம் இரத்தினமயமாகச் சமைக்கக்கடவாயென்று கட்டளையிட அவனது கைத்தொழில்முயற்சியினால் பொன்னும இரத்தினமும் அமைந்தகோபுரங்களும் மதிலும ஆகாயத்தை அளாவிய கருங்கடல்போன்றகண்டத்தையுடைய அச்சிவலிங்கப்பெருமான் மகிழும்படியானமண்டபங்களும அமைத்துத்தூய்மையான கூரியவேல்போன்ற கண்களையுடைய உமாதேவியாருக்குத்திருவாலயமும் விளங்கும்படி நிருமித்தான். எ-று. (௬௮)

செய்தவினைகரநோக்கிச்செழுமலரோனகமகிழ்ந்துதேவைத்தாழ்ந்து, கைதொழுதுமெய்சிலிர்ப்பக்கண்ணிலானந்தவெள்ளமசரு

லப்போற்றி, மைதிகழுங்கறைமிடற்றாயடிமையைக்காத்தருள்வை
யெனவழுத்தும்போதி, னெய்திகழ்வேலவிழியொடுமவ்விலிங்கம
திறந்தோன்றினானிமலமூர்த்தி.

(இ - பு.) இவ்வாறு தேவதச்சனாலமைந்த திருக்கோயிலைக்கண்டு
பிரமன் மனமகிழ்ந்து சிவபிரானைவணங்கி கைகளைச்சிரமேற்கூப்பி தேகம
யிர்க்கூச்செறிய கண்களினானந்தவெள்ளம் பொழியத்துதித்து கருநிறம் பிர
காசிக்கும் விடமணிந்தகண்டத்தையுடையவரே அடியேனைக்காத்தருள
வேண்டுமென்று துதிக்கும்போது நெய்பூசியுள்ள வேல்போலுங்கண்களு
டைய உமாதேவியாரோடும் சிவபிரான் அச்சிவலிங்கத்திலிருந்து தோன்
றினார். எ-று. (௨௯)

பொன்றிகழ்செஞ்சடையண்ணன்மலரவன்றன்முகநோக்கிப்பு
தல்விதன்னை, யுணர்தனையனைத்தினிலவிழைவாறுகூடுபவநதொலைத்த
னைநின்னுதவியாற்றி, யென்றுமவியப்பொடுமிருந்திநின்னுலகிலெ
னவுரைத்தேயிலிங்கத்துள்ளார், பொன்றனையாமலரவனுமுளமு
வந்துபரவசனாயுருகிநிற்க.

(இ - பு.) பொன்போல்விளங்கும் சிவந்தசடையையுடைய சிவபி
ரான் கமலவாசியாகிய பிரமன்முகத்தைப்பார்த்துப் புத்திரியை நின்மன
தில் விழைந்தகாதலாற்சேர்ந்த தோடத்தை நிவர்த்தித்தனம் உனதுசிருட்டி
கருந்தொழிலை இயற்றி எந்நாளும் நினதுசத்திய லோகத்தில் மகிழ்வுடனிரு
க்கக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளி மறைந்தாகிய அப்பிரமனும் மன
ங்களிப்புற்றுத்திருமுன் ஆனந்தபரவசனாய்த் துதித்துக்கொண்டிருக்க அச்
சிவலிங்கத்திற்கரந்தனர். எ-று. ஏ-அசை. (௩௦)

அக்காலைமணிமாடகூடகோபுரமாதியவனிதன்னில், லெக்காலு
நிகழ்தரவோர்பதியாற்றிப்பெருநகரென்றிட்டுநாம, மைக்காலன்
விழவுதைத்தாற்குயர்தடமுநதனபெயராலவகுத்துப்போற்றிப்பு
க்கான்றன்மனோவதியிற்பொறிவரிவண்டார்கமலப்பேதனனே.

(இ - பு.) புள்ளிகளையும் வரிகளையுமுடைய வண்டுகள்வசிக்குந் தாம
ரையாசனனாகியபிரமன் அத்தருணத்து அழகியமாடகூடங்கள் கோபுரங்
கள் முதலியன நிலவுலகத்தில் எக்காலமும் விளங்கும்படி ஓர்நகரமுண
டாக்கி அதற்குப் பெருநகரென்றுபெயரிட்டு கரியநிறமுடைய இயமன்விழ
வுதைத்த சிவபிரானுக்கு உயர்வாகியதடாகமும் பிரமதீர்த்தம்என்று உண
டாக்கிச்சிவபிரானைப் பூசித்துத்தனது சத்தியலோகத்திற் சென்றான்.
எ-று. ஏ-அசை. (௩௧)

தரைமீதிலயனமைத்துத்தகவில்வழிப்பட்டமையாற்
பிரமேசனெனவந்தப்பிஞ்ஞகனையுரைப்பர்களா
லுரைமேவுமப்பரனையுளத்தினில்வைத்தவர்தொழுதோர்
விரைமேவுகற்பகத்தாவேந்தாகிவாழ்ந்திடுவார்.

(இ - பு.) இந்நிலவுலகத்தின்கண் பிரமனுல்பிரதிட்டைசெய்து அன்புடன் பூசித்தகாரணத்தால் அச்சிவலிங்கப்பெருமானை பிரமேசரென்று கூறுவர் இவ்வாறுகூறப்படும் அச்சிவபிரானை மனதிற்றியானித்தவர்கள் வணங்கினவர்கள் வாசனைகமழும் கற்பகமலர்மாலையையணிந்த இந்திரபதவியடைந்து தேவலோகத்தில் வாழ்வார்கள். எ-று. ஆல்-அசை. (௪௨)

அப்பதிக்குமேற்காகவரைக்குரோசத்துள்ளிற்
செப்பரியசகடவியத்திறன்முனிவோரிலிங்கமதை
யொப்பரியமணலிலமைத்துக்கந்நிறையைப்பூசித்தே
துப்புறழ்செஞ்சடையவனுக்கோர்வாவிதொட்டனனால்.

(இ - பு.) அப்பெருநகருக்குமேற்குத்திசையில் அரைக்குரோசதூரத்தில் சகடவியன் என்கிறபெயருள்ள தவவலிமிக்கமுனிவர் ஒப்புகூறுதற்கரியமணலால் ஒரிலிங்கம்பிரதிட்டைசெய்து அச்சிவபிரானைமெய்யன்புடன் வழிபட்டுப்பவளம்போலுமசிவந்த சடையையுடைய அச்சிவபிரானுக்கு ஒருதடாகம் உண்டாக்கினார். எ-று. ஏ-ஆல்-அசை. (௪௩)

அத்தடத்தையிளநீரென்பரமகிழ்ந்தார்களையா
லெத்தலமும்புகழிளநீர்க்குண்டமெனவிசைப்பரான்
மைத்தகருவிளையலர்வாவிதனிற்படிந்தரனைச்
சித்தமுறப்பணிந்தவர்கள்வினைப்பிணியவந்தொலைப்பார்.

(இ - பு) அந்தத்தடாகத் தீர்த்தத்தை இளநீரைப்போலெண்ணித் தேவர்கள மனமகிழ்ந்து மூழ்குவதால் எவ்வுலகமும்புகழும் இளநீர்க்குளமென்று அதற்குப்பெயர்கூறுவர் கருநிறம்பொருந்திய காக்கட்டானமலர்கள்மலரும் அத்தடாகத்திலநீராடி அச்சிவபிரானை மனமுருகித்தொழுதவர்கள் தீவினையாலவிளைந்த தோடத்தை நிவர்த்திசெய்துகொள்வார்கள். எ-று. ஆல்-அசை. (௪௪)

ஆங்கதற்குவாயுதிசையதனிலயிராவதமுன்
னோங்குமுயர்சிவலிங்கமொன்றமைத்துப்பூசித்துத்
தேங்கமழுங்கற்பகத்தார்த்தேவனுக்காதியிமான
பாங்கிதனில்லனகரையத்திபெனப்பசாவரென்றான்.

(இ - பு.) அவ்விடத்து அதற்கு வாயுதிக்கில வெள்ளையானைமுன்னொருகாலத்தில் உயர்வமைந்த சிவலிங்கமொன்றை பிரதிட்டைசெய்து பூசித்துவாசனைவீசும் கற்பகமலர்மாலையையுடைய இந்திரனுக்குவாகனமாயினது அக்காரணத்தால்அந்நகரத்தைக்குஅத்திநகரமென்றுகூறுவார்களென்று சூதபுராணிகர் நைமிசாரணியமுனிவர்களுக்குரைத்தருளினர். எ-று.

பிரமன்சாபந்தீர்ந்தசருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ... ௩௪௧.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சந்திரன்பேறுபெற்ற சருக்கம்.

மறையோதுமரன்பெருமையாரவனிவ்வாறுரைப்ப
நறையோர்ந்தமனப்புரவனைமிசாரணியத்து
றுறையோதுமுனிவர்கள்கேட்டோர்முயந்துமதிமுன்றன்
குறையோதிப்பூசித்தகொள்கையுரைத்திடுகெனலும்.

(இ-ள்) இவ்வாறு பிரமன்பாவநீங்கிய சரித்தத்தால் தேவர்களுக்கு வேதமோதுவித்த வேதபுரீசரது புகழைச் சூதபுராணிகர்கூறத்தேனனைத்து கடல்போற் பிரவாகிக்கும் நைமிசவனத்திலுள்ள சிறந்த யாவராலும் உயர்வாகக்கூறத்தக்க முனிவர்கள்கேட்டுமனமகிழ்ந்து சந்திரன் முன்னொருகாலத்தில் தனதுகுறையை அவ்வேதபுரீசரிடத்திற்றீர வழிபட்டசரித்தத்தை உரைத்தருளவேண்டுமென்றுகேட்க. எ-று. (௧)

உள்ளபுவனத்திலெவருக்குமுயர்த்திடுவானசந்திரன்முன்
றெள்ளருந்தன்னாசிரியன்றேவியின்வனப்பினுமையினால
தள்ளருமுட்காதலுறத்தழுவிமகிழ்ந்தனனதனால
விள்ளருமவெம்பவமொருங்குற்றவிகமுண்டாயதுவெண்மதிக்க

(இ-ள்) சூதபுராணிகர் மனமுவந்து இவை கூறுகின்றார் சந்திரனானவன் முன்னொருகாலத்தில் இத்தகைமையையுடையவரென்று யாவராலுந்தெளிந்தறிதற்கரியவராகிய பிரகற்பதி என்னுந்தனதாசிரியரது பத்தினியை வலுவில் நீக்கக்கூடாததனது மனதிலுதித்த பேராவலுடன்புணர்ந்து களித்தனன் அக்காரணத்தால் எவராலும் சொல்லமுடியாத கொடியதோடம் தனக்குச்சம்பவித்ததை அந்தச்சந்திரன் அறிந்து. எ-று. (௨)

குருமனைவிகொங்கைகளைங்கொண்டபயந்திருவகை
யொருவினையுமிலைவேலென்றுணர்ந்துசிந்தைபலந்தி
னரியவறன்கடையெவையுமழித்துநலமருள்புரியுஞ்
சுருதிபுரியெனநினைந்துதுன்னினவந்துற்றனனால.

(இ-ள்) ஆசிரியர் பத்தினியாரது தனத்தைத்தழுவி இன்பநுகர்ந்ததோடந்தீரும்படி வேறொருசெயலுமில்லையென்று அறிந்து அச்சந்திரன்

நிலவுலகத்தில் நீக்குதற்கருமையாகிய பாவங்கள் அனைத்தையும் ஒழித்து
வரமருள்வது மறைசைமாநகரந்தான் என்று நிச்சயித்து அதிவிரைவாக
அச்சுருதிபுரிக்கணவந்து சேர்ந்தான். எ-று. ஆல்-அசை.
இம்மூன்றுங்குளகம. (௩)

வந்தடைந்துவருநீத்தமலிந்தகுகநதிதோய்ந்து
சிந்தையரனமேலிருத்தித்திருநீற்றின்னொளிசாத்தி
யைந்தெழுத்தினமுதருந்தியாலயத்தினுட்புகுந்து
முந்துமறைவானவர்க்குமொழிந்தமுதற்றனைத்தொழுதான்.

(இ-பு.) சந்திரன் அவ்வாறு சுருதிபுரிக்குவந்துசேர்ந்து பிரவாக
மாகவரும் நீர்மிகுந்த கநநதியில்நீராடி மனதைச்சிவனபாற்செலுத்தித்
திருவெண்ணீற்றின் பிரகாசத்தைத்தரித்துத் திருவைந்தெழுத்தாகிய அமிர்
தத்தைப்புசித்துத திருக்கோயிலுட்சென்று முன்பட்டு வேதத்தைத்தேவர்
களுக்கோதுவித்த வேதபுரீசரை வணங்கினான். எ-று. (௪)

பங்கயமென்முதலாயபண்ணவருக்கருமருந்தைக்
கங்கைபொலன்வேணியின்மேற்கவின்காட்டுங்கண்ணுதலைச்
செங்கைமலர்கொடுபூசைசெய்தனன்வானமிர்தங்கொண்
டங்கவனுக்கபிடேகமன்புடனேமிகப்புரிந்து.

(இ-பு.) பிரமன்முதலிய தேவர்களுக்கு அரியசஞ்சீவியைப்போன்
றவரும் அழகிய சடாமகுடத்தின்மீது கங்காதேவி அழகுடன்விளங்கும்
நெற்றிக்கண்ணுடையவருமாகிய அவ்வேதபுரீசரை தேவாமிர்தத்தைக்கொ
ண்டு மிக்கமெய்யன்புடனே அபிடேகித்துச்சிவந்ததனது கரங்களில் மலர்
களைக்கொண்டு பூசித்தான். எ-று. (௫)
வானமிர்தங்கொண்டு என்பதற்கு காமதேனுவின் பாலைக்கொண்டு என்
றுரைப்பினும் அமையும்.

அம்புலிவானமிர்தசலவபிடேகஞ்செய்திடலு
மெம்பெருமானுளமகிழ்வுற்றேறேறிமானேந்தி
வெம்பணிமுந்நூன்மார்பின்மிசையொளிரவிமயவரைக்
கொம்பனையையோர்புறமுங்கொண்டுமதிக்கெதிருற்றான்.

(இ-பு.) சந்திரன் இவ்வாறு அமிர்தசலத்தினால் அபிடேகித்தவுடன்
எமது பிரானாகிய வேதபுரீசர் திருவுளங்களித்து விடைமீதூர்ந்தும் மா
னைத்திருக்கரத்திலேந்தியும் கொடியசர்ப்பத்தாலாகிய முப்புரிநூல் திருமார்
பில்விளங்க இமயவரையரையன்புத்திரியாகிய இளமுலைநாயகியாரை ஒரு
பக்கத்தில் வைத்துக்கொண்டு சந்திரனுக்குக்காட்சிகொடுத்தருளினார்.

கண்டுமதிகளித்திருக்கைகவின்முடிமேலுறக்கூப்பிப
பண்டுமறைவானவர்க்குப்பகர்ந்தருளுந்தனிமுதல்வ

விண்டுமலரவனறியாவேதாந்தத்துட்பொருளே துதித்தான்.
தொண்டனேனைக்கொண்டருள்பாவந்தொலைத்தருளென்றேத்து

(இ-பு) இவ்வாறுகாட்சிகொடுத்ததைச்சந்திரன்கண்டு மனமகிழ்ந்து தனதிரண்டுகரங்களையும் அழகியசிரசினமேலேறக்குவித்து முன்னாளில் வேதத்தைத் தேவர்களுக்கோதுவித்தருளிய ஒப்பற்ற முதல்வரே திருமால் பிரமன் இருவரும் அறியாத மறைமுடிவின் உட்பொருளாயவிளங்குங்கடவுளே என்னை அடிமைகொண்டு எனக்குநேர்ந்த நீக்குதற்கரியபாவங்களை ஒழித்தருளவேண்டுமென்று தோத்திரஞ்செய்தான். எ-று. (எ)

துதித்தமதிமேலன்புநோன்றிமலர்வாயமலர்ந்து
கதித்தவிடையூர்தியிறைகழறுகின்றனகாமத்தான்
மதித்தகுருமனைவிதனைமணந்தபவந்தொலைத்தனநீ
யுதித்தொளிருமுடுபதியாயுறைந்திருநாணெடிதென்றான்.

(இ-பு) இவ்வாறு தோத்திரஞ்செய்த சந்திரன்மீது திருவருள்கூர்ந்து தமதுதாமரைமலர்போலும் திருவாய்மலர்ந்து பெரிய இடபவாகனராகியவேதபுரீசர்கட்டளையிடுகின்றார் காமத்தினாலேயாவருக்குமேலாக மதித்த உன்தாசிரியனது பத்தினியைப்புணர்ந்த தோடத்தை நிவர்த்தித்தோம் இனி நீ ஆகாயத்தின்கண் உதித்துப்பிரகாசிக்கும் நட்சத்திரங்களுக்கெல்லாந்தலைவனாய் நெடுங்காலம் வசித்திருக்கக்கடவையென்றார். எ-று.

திங்கடனக்கிவ்வாறுசெப்பியந்தவிலிங்கத்திற
சங்கரனுமகரந்தனன்பின்றாரகைக்குநாயகனாய்க்
கங்குலினீடொளியாகிக்காசினியேத்திடவானிற
றுங்கமுடனமேருவினைச்சூழ்கின்றானின்னும்.

(இ-பு.) சந்திரனுக்கிவ்வாறு கட்டளையிட்டுச்சிவபிரான் அவ்விலிங்கத்தில் மறைந்தருளினார் பிறகுநட்சத்திரங்களுக்குத் தலைவனாய் இரவினுக்குக்கடவுளாகி நிலவுலகத்தோர்தொழும்படி ஆகாயத்தின்கண் பரிசுத்தத்தோடு மேருமலையைத்தினந்தோறும் தவறாமல் இன்னும் வலம்வருகின்றான். எ-று. (கூ)

சீதமதியிப்பரிசுசிறந்துயர்நல்வரம்பெற்று
வேதமணிநகர்க்குத்தென்மேற்றிசையிலெய்தியவண்
டீதறுமோர்சிவலிங்கப்பிரதிட்டைசெய்தமிர்தா
லேதமறும்பூசனைசெய்தின்பமுற்றானெனவுரைத்தான்.

(இ-பு.) குளிர்ந்தகிரணங்களையுடைய சந்திரன் இவ்வாறு சிறப்படைந்துயர்வாகிய நல்லவரத்தைப்பெற்றுக்கொண்டு அழகிய அவ்வேதபுரிக்குத்தென்மேற்குத்திக்கிற்சென்று அவ்விடத்துக்குற்றமற்ற ஓர்சிவலிங்கப்பெருமானைப் பிரதிட்டைசெய்து தேவாமிர்தத்தாலவிதிதவறாதவழிபாடியற்றி இன்பமடைந்தானென்று சூதபுராணிகர் நைமிசாரணியமுனிவர்களுக்குக்கூறினார். எ-று. (௰)

சந்திரன்பேறுபெற்றசருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ... ருடுக.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மன்மததகனச் சருக்கம்.

ஓதுகின்றசூதர்சொல்லுணர்ந்துமாதவத்துளோர்
கோதில்சிந்தையன்புகூர்ந்துகூறிறைகைகூப்பியே
மாதருக்குண்முதன்மையாயவடிவின்மிக்கவிரதியுந்
தீதில்பூசைசெய்தவாறுசெப்புகென்னவோதுவான்.

(இ-ள்.) இவ்வாறு சந்திரனபாவந்தீர்ந்த சரிதையைக்கூறிமுடித்த சூதபுராணிகர் வார்த்தையைக்கேட்டு தவசிரேட்டராகிய நைமிசாரணிய முனிவர்கள் குற்றமற்றமதியில் அன்புமீதூர்ந்து கைகளைச்சிரமேற்கூப்பிச் சொல்லுகின்றார்கள் தேவமகளிர்களுக்குள் முதன்மையடைந்த அழகுசிறந்த இரதிதேவியும் விதிதவறாத வழிபாடுசெய்த சரித்திரத்தைக்கூறவேண்டுமென்றுகேட்கச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினார். எ-று. (க)

கருதினோர்கைவல்லியங்கலக்குமாயிரங்கதிர்ப்
பருதிக்கேத்திரப்பதிக்கோர்பாங்கர்வெப்பங்கனற்பொருங்
குருதிநேத்திரச்சமன்றிசைக்கணோர்குரோசமே
பொருவதற்கொல்கோவலின்புரமுடைத்ததனிலே.

(இ-ள்.) ஒருபோதுநினைத்தவர்களும் முத்தியடையத்தக்க ஆயிரங்கிரணங்களையுடைய பாற்கரக்ஷேத்திரமென்னும்பெயருடைய சுருதிபுரத்துக்கு ஓர்பக்கத்தில் கொடிய அக்கினியையொத்த சிவந்தவிழிகளையுடைய இயமதிசையில் ஒருகுரோசதூரத்தில் மன்மதனையெரித்த கோவலூரென்னும் நகரமுண்டு அந்நகரத்தில். எ-று. ஏ-அசை. (உ)

பண்டுவெள்ளிவெற்பினிற்பராபரன்றவத்திருக்
கொண்டிருந்தபோதனங்கன்குயில்கள்காளமூதவே
வண்டுகிண்டுமலரிணைந்துவாளிகொண்டுவயமிகுத்
தெண்டிசாமுகந்திடுக்கவெந்தைமுன்னர்வந்தனன்.

(இ-ள்.) முன்னாளில் திருக்கயிலைமலையில் வீற்றிருக்கும் சிவபிரான் தவவடிவங்கொண்டிருந்தகாலத்து மன்மதனென்பவன் குயில்கள்காகளமூத வண்டுகள் ஊதும் ஐவகைமலர்களாகிய பஞ்சபாணங்களைக்கொண்டு வலிமிகுத்து எட்டுதிக்குகளும் திடுக்கிடும்படி எமது தந்தையாராகிய சிவபிரானுக்கு எதிரில்வந்தான். எ-று. ஏ அசை. இவ்விரண்டுங்குளகம் (ங)

வந்தரன்றவத்திருந்தவண்மைநோக்கியாகுலஞ்
சிந்தைகொண்டுதேறிவெய்யசிலைவளைத்துமதனவே
ளந்தரஞ்சுலாயபுள்ளலம்வரச்சிலகணைகடூய்ப்
பந்தரிட்டுரப்பியெந்தைபாலடாப்பவெண்ணினான்.

(இ-ள்.) மன்மதன் இவ்வாறு எதிரில்வந்து சிவபிரான் யோகத்திலிருந்ததன்மையைப்பார்த்து மனதினிடத்துக்கிலேசங்கொண்டு பிறகுதேறிக்கொடியகருப்புவில்லைவளைத்து நாணேற்றிஆகாயத்திற் சுழலும்பறவைகள்வருந்தச் சிலகணைகளைத்தூவிச் சரக்கூடங்கட்டி அட்டகாசஞ்செய்து எமதுதந்தையாராகிய சிவபிரானிடத்து எதிர்க்கநினைந்தான். எ-று. (௪)

ஈசனிருந்தியோகமுற்றகானமெங்கணும
வாசமாரவசந்தகாலமாக்கிமாரனத்தன்மேல்
வீசுமாமலர்க்கையிற்சரங்கள்கொண்டுவிடுதலு
மாசறுத்தவெந்தைகண்டிடாதசெய்கின்றவினையெனு.

(இ-ள்.) சிவபிரான் வீற்றிருந்த யோகம்புரிந்தவனமுழுதும் வாசனைகமழும் வசந்தகாலமாகச்செய்து மன்மதனானவன் அச்சிவபிரான்மீது வீசத்தக்க புட்பபாணங்களைத் தனது கையினால் எடுத்துப்பிரயோகிக்கக் குற்றமற்ற எமது தந்தையாராகிய சிவபிரான் நோக்கி இதுயாதுசெய்கின்ற தொழில் என்று. எ-று. (௫)

நெஞ்சிலேநினைந்துகாணிமலனுக்குமேலையிற்
செஞ்சிலைக்கரும்புகொண்டுசேர்ந்துமாரனிற்பவு
னஞ்சைநற்களத்திலேவைத்தநாதனும்பிரந்திவன
வஞ்சனைக்குளம்வெகுண்டுவாழ்வதெங்ஙனிவனென.

(இ-ள்.) இவ்வாறுசிவபிரான் திருவுள்ளத்திலெண்ணி அவனைக்காண வேண்டுமென்று ஞானநோக்கால் நோக்குஞ்சமயத்து சிவந்தவில்லாகிய கரும்பைக்கொண்டு மன்மதன் அச்சிவபிரானிடத்தடைந்து நிற்கையினால் ஆலாகலத்தைத் திருமிடற்றிலடக்கிய சிவபிரான் உணர்ந்து அம்மன்மதனது கபடத்துக்காகத்திருவுள்ளஞ்சினந்து இனி இவன் வாழ்வதெப்படி யென்று. எ-று. (௬)

அத்தனார்தனெற்றிப்பிறக்கணான்முனிந்துநோக்கலுஞ்
சித்தசன்றனுருவம்வெந்துதீய்ந்துசாம்பராயினா
னித்தனுற்றகோபமாறவினையுந்தேவர்வேண்டினா
ரைத்தகேதமெம்பிரான்மனத்திலாறினானரோ

(இ-ள்.) சிவபிரான்தமது நெற்றிக்கண்ணால் சினந்துபார்த்தவுடன் மன்மதன்தனது உடலம்வெந்துகரிந்து சாம்பராய்ப்போனான் அச்சிவபிரானுக்குற்ற சினந்தணியும்படி எதிரில்நின்று தேவர்களெல்லாம் வேண்டித்

கொண்டார்கள் எமதிறைவராகிய சிவபிரான் திருவுளத்தில்விளைந்தகோபத்தைததணித்துககொண்டார. எ-று. அரோ-அசை. இம்மூன்றுங்குளகம்.

அந்தவேலையிரதிகாந்தனுகம்வெந்தவாறுயிந
திந்துவன்னமுகமூலாந்திருஙகணீர்ததுமபவே
கந்துகத்தனைததிரண்டுகைபினுலுமோதிமெய
வந்துமுக்கணெந்தைபாதமலரில்வீழ்ந்தரற்றினள.

(இ - பு) அததருணத்து இரதிதேவியானவள தனது நாயகனுகிய மன்மதனது உடலமவெந்ததையுணர்ந்து சந்திரன்போன்ற முகமுமலாடி விசாலமாகிய கண்களினின்றும நீரததும்பும்படி பந்துபோல்திரணடிருக்கும் இரணடு தனஙகளிலும இரண்டுகைகளாலும மோதிகொணடுவந்து திரிநேத்திரங்களையுடைய எமது தநதையாராகிய சிவபிரானது தாமரை மலாபோன்ற திருவடிகளில பணிந்து அழுதாள எ-று. (அ)

பணணிசைந்தகுதலையின்சொற்பசியகிளளையொன்றுவீழ்ந
தண்மெலிந்துபதைபதைததுழன்றுதேயுமாறுபோற்
பெண்ணருஙகலமபதைதது்பெரிதுநொநதுபொருமிமெய்
தண்ணனுவெழுநதவ்வெநதைதூயதாளிறைஞ்சியே.

(இ - பு.) பணமபால இசைகரும் மழலையாகிய இனியசொற்கள் பயிற்றும் பசசைககிளியொன்று விழுநது மணமெலிந்து பதைபதைததுத் துககிததுவருநதுவதுபோலபபெணகளுககருஙகலமான ஆபரணமபோன்ற இரதிதேவியானவள் மிகவுமவருநதி அழுது அதிசீக்கிரமாக அவ்விடததிருநதுமபுறப்பட்டு அச்சிவபிரானது தூய்மையான திருவடிகளை வணஙகி. எ-று. ஏ-இரணடும்-அசை. (கூ)

வேதமாகிவேதமோதுமவெளியுமாகியொளியுமா
யாதியாயனுதியாகியபபுறததுமொப்பிலாச
சோதியாய்சசுடருமாகிததோறறமாகியிருவகைப்
பேதமாகிநின்றஞானபபிரணவததினுருவமே.

(இ - பு.) வேதசொரூபமாகியும அவ்வேதங்களிற்கூறும் ஞானவொளியாகியும விளககமாகியும் மூலகாரணமாகியும் ஆதியல்லாததாகியும் இவ்விரண்டுககும அபபுறப்பட்டதாகியும் ஒப்பற்ற சோதிசொரூபமாகியும் அச்சோதியினிடததுணடாகும சுடருருவமாயும் ஆன்மவர்க்கங்களாயும் அவ்வான்மவாககஙகளின அசரசரமாகிய இரணடுவிதபேதமாகியும் விளஙகுகின்ற மெய்ஞ்ஞானமயமான பிரணவத்தின் திருவுருவமே. எ-று. (கo)

அறிவிலாதசிறியர்தீமையார்பொறுப்பர்நீயலான்
மறியுலாவுபாணியுள்ளமறம்விடுததின்னருளினல்
வெறியுலாவுமதனியற்றும்வினைபொறுத்தென்கநதரஞ்
செறியுமாநல்லரியதாலிதேவநீதந்தருளெனு,

(இ - பு.) புத்தியற்ற சிறியோர்பிழையை நீயல்லாமல் யாரபொறுப் பவர்கள் மான்கன்றுலாவுங் கரதலமுடைய சிவபிரானே திருவுள்ளத்திலு தித்த சினந்தணிந்து இனியகிருபையினால் பயித்தியங்கொண்ட மன்ம தன்செய்த தீங்கைப்பொறுத்து எனது கழுத்திலே மங்கிலியம் விளங்கத்த க்கதாகிய வரத்தை நீர் தந்தருளவேண்டுமென்று. எ-று. (கக)

தானணிந்தகோசிகத்தலைப்பையேற்றிரக்கலு
மானணிந்தவெந்தையுண்மகிழ்ந்திலிங்கநீயமைத்
தூனமின்றிவழிபடிலுவந்துநினதுளப்படிப
பூநயந்தவாளியைப்பொருந்திவாழ்வையென்றனன்.

(இ - ல.) இரதிதேவி தரித்திருந்த கோசிகப்பட்டினாலாகிய ஆடை முன்றானையைக் கையிற்பிடித்துக்கொண்டு மங்கிலியப்பிச்சைகேட்க மா னைத்தரித்த எமது தந்தையாராகிய சிவபிரான் திருவுளமகிழ்ந்து நீ ஓர் சிவலிங்கப்பிரதிட்டைசெய்து விதிதவறாமல பூசிக்கில உன்கருத்தின்படி புட்பபாணங்களையுடைய மன்மதனைச்சேர்ந்து வாழ்வாயென்று திருவாய் மலர்ந்தருளினார். எ-று. இந்நான்குங்குளகம். (கஉ)

என்றிலிங்கமாய்ப்பரனிலங்கிடக்களித்துமோ
நின்றுபூசையிரதிவேதநெறியிலாகப்படி
கொன்றைவேணியன்பதங்குலாவியேத்திநிற்கலு
மன்றுளாடிமனமகிழ்ந்துவானுளோர்கள்சூழவே.

(இ - பு.) இவ்வாறு திருவாய்மலர்ந்தருளிச் சிவபிரான் இலிங்கவடி வமாய்ப்பிரகாசிக்க இரதிதேவிமனங்களித்து எதிரில்நின்று ஒப்பற்ற வே தாகமப்படி கொன்றைமலரைத்தரித்த சடாமகுடத்தையுடைய சிவபிரா னது திருவடிகளைப்பூசித்து மகிழ்ந்து துதித்துநிற்கப் பொன்னம்பலத்தில் ஆனந்ததிருநடம்புரியும அச்சிவபிரான் திருவுள்ளமுவந்து தேவர்கள்புடை சூழ்ந்துவர, எ-று. ஏ-அசை. (க௩)

வேறு.

இந்தவகைப்பூசைகளிரதியியற்றமறைசையெம்பெருமான்
சிந்தையதனிலருள்பெருகித்திகழ்மானமழுக்கைத்தலத்தேந்தி
யந்திமதியுநதியுமிளவாருஞ்சடிலத்தணிந்தெழிலா
ருந்துவிடைமேவிளமுலையாளொருபாதியின்மேனியுமாகி.

(இ - பு) இவ்விதமாக இரதிதேவி அனேகநாளபூசிக்க வேதபரீசர் திருவுள்ளத்திற் கருணைகூர்ந்துவிளங்கும் மானையும மழுவையும் திருக்கர ங்களிற்றரித்துக்கொண்டு மூன்றாம்பிறையுங்கங்கையும் இளமையாகிய ஆத் திமலரும்சடையிற் சூடிக்கொண்டு அழகமைந்த இடபவாகனத்தின்மீது இளமுலைநாயகியார் இடதுபக்கத்திருக்கும்திருமேனியுடன், எ-று. (கச)

மாலுமயனுமுனிவர்களும்வானோர்பிறரும்புடைசூழப்
பாலுநறையுங்துவர்த்தமொழிப்பாவையிரதிமுன்பெய்தி
வேலுமலருநிகர்நெடுங்கண்மின்னேயுன்பூசனைக்குவந்தே
மாலுமலருமுறைந்திடுவோர்க்கரியவின்பமுனக்களிப்பேம.

(இ - பு.) திருமாலும் பிரமனும் முனிவர்களும மறறையரும் புடைசூழ்ந்துவர பசும்பாலும நெயயும் துவாககசசெய்யும வசனஙகளையுடைய பதுமைபோன்ற இரதிதேவிககு எதிரில்வந்து வேலாயுதத்தையும நீலோற் பலமலரையுமொத்த நீண்டகணகளையுடையபெண்ணே யுனதுவழிபாட் டைமெச்சினோம் ஆலிலையிலும தாமரைமலரிலும் வசிககின்ற அவவிருவர் களுக்கும் கிடைத்தற்கரிய இன்பததை உனககுககொடுப்போம். எ-று.

வருநதியெனை நீபூசித்தவண்மையதனுன்மதனுனுருப [யா
பொருந்தியுனைசசேர்நதிடவுமறறைபபுவனத தெவர்க்குமுருவின்
யிருநதுமவனசேவகம்புரியவிசைநதவரநதநதனமெனன்
வருந்துமமுதமொழியிரதிககணிசோமறைசைககோனுரைத்தான்

(இ - பு.) திரிகரணசுததியாய முயற்சித்து என்னை வழிபாடுசெய்த தன்மையினுல் மன்மதன் உருவமுறறுனனைசசேரவும மறறஉலகத்துளள யாவர்க்கும் உருவிலலாதவனுகவும இருந்து அவனதுதொழிலே முன்போல வே புரியுமபடி வரஙகொடுததோமெனறு தேவாகளுண்ணும் அமுததகதை ப்போன்ற மொழியையுடைய இரதிதேவிககு அழகிய சுருதிபுரீசா திருவாய் மலாந்தருளினுர. எ-று. (கசு)

இந்தவரமபெற்றினிதினுவநெரிநதேயழிநதோனுருவாகி [ள்
வந்தான்மகிணுடனிரதி மறைசைபபெருமான்றனைத்தொழுதா
கந்தமலரோன்முதலாயகடவுள்பலருமவியபபெய்திச
சிநதைதனிலரனமகிமையதனை பபலகாறசிநதிததாா.

(இ - பு.) இநதவரத்தைப் பெறறுக்கொணடு மனஙகளித்து சிவபி ரான் நுதற்கண்ணுலெரிநதழிநத மனமதனுருவடைந்து வந்தனன் அம்ம ன்மதனுடன இரதிதேவியானவள வேதபுரீசரைவணங்கினள் வாசனைதங் கிய கமலவாசனுகிய பிரமன்முதலிய தேவாகள்பலரும் சந்தோஷித்துத்தம் முளளததில் அச்சிவபிரான்மகிமையைப் பலகாலும் சிந்தித்துக்கொணடிரு ந்தார. எ-று. (கஎ)

தென்றறேருமதிக்குடையுந்திகழுமகரகேதனமும்
வென்றிககரும்பிலைநெடுஞ்சிலையும விரைப்பூஙகணையுங்கொண்டுதனு

மன்றற்குழலாளிரதியுடன்மதனன்விடைகொண்டெயதினொற்
குன்றகருணிவிலலரனுமநதக்கோவூராததிதனிலடைந்தான்.

(இ - ぃ.) தென்றலாகிய இரதமும் சநதிரனாகிய குடையும் விளங்கும்மீனமாகியகொடியும் வெற்றிபுரியநரககை கரும்பாகிய நீண்ட வில்லும் வாசனைகமழும மலராகியபாணஙகளும எடுததுககொணடுநறுமணநதஙகிய கூந்தலையுடைய இரதிதேவியோடு மன்மதன் சிவபிரானிடத்து விடைபெற்றுககொண்டு தனபதிகருசசெனறுன மேருவாகிய வளைந்தவிலலையுடைய சிவபிரானுமஙதச சிவலிஙகததிறகரந்தனர எ-று ஆல்-அசை. (கஅ)

பாவையிரதிபூசனைகொளபரனையெவருங்கயிலாய
தேவனெனவியுரைகதிடுவாரசீரரந்தபபெருமபதியை
மூவரயநுதறகணனுன்முரணமெய்மமதனையழிததகனற்
கோவலினமாபுரமென்றுகுறிப்பாருலகிலவடசொல்லால்.

(இ - ぃ.) பொறபதுமைபோன்ற இரதிதேவியின் பூசையையேற்றுககொணட அசசிவலிஙகப்பெருமானையாவரும கையிலாயநாதா என்று கூறுவாரகள் சிறப்பமைநத அநதபபெரியதலததை திருமூர்த்திசொருபமாய்விளஙகுஞ்சிவபிரான் நெறறிககணணுல நெருப்பிறழந்தமன்மதனையெரித்தகாரணததினுல் வடமொழியில் கோவலூரென்று கூறுவாரகள்.

பொன்னாதிதலைபபுணாமுலையாளபூவையிரதிபூசனைசெய்
யெனனுயகனையருசசிததேயெத்திதொழுதோரிடையுற்ற
துன்னூாகாலக்கூறறினையுநதொலைநதுநதுயர்நீர்ந்திநிலத்தின்
மன்னுயவாழ்வரெனசசூதன்வனவாசிகளுக்குரைத்தனனுல்.

(இ - ぃ.) அழகிய தேமல்பொருந்திய தனங்களையுடைய நாகணவாய்ப்புட்போலுங்குரல்வாய்ந்த இரதிதேவியானவள்பூசித்த எனது இறைவராகிய சிவபிரானைப்பூசித்துததுதிதது வணங்கினவர்கள இடையில் நேரிட்ட பகைவர்களது துன்பததையும காலனென்னும இயமனுல்வினையும் துன்பததையும்தொலைதது மற்றைத்துன்பஙகளும்நீஙகி இநநிலவுலகத்தில் அரசராய்வாழ்வார்களென்று சூதமுனிவா நைமிசாரணியமுனிவர்களுக்குரைத்தருளினர. எ-று. ஆல்-அசை. (உ0)

மன்மததகனச்சருககம் முற்றிறறு.

ஆ திருவிருததம .. ருகூ.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# அருணன்பாவந்தீர்ந்த சருக்கம்.

தண்டலில்சவுனகாதியர்சூதன்றாளிணைதலைமிசைத்தாங்கி, யண்டர் நாயகன்றன்சரிதைகேட்டுள்ளமானந்தபரவசமாயினம, பண்டை நாளருணன்பவமவண்டொலைத்த பரிசெமக்குரைத்திவண்டியிரு முண்டகாதனனோமாத்தியேயென்னமுகமலர்ந்திவையுரைத்தன னால்.

(இ-பு) குற்றமற்றசவுனகாதிமுனிவர்கள் சூதமாமுனிவர் இரண்டு திருவடிகளையுஞ்சிரசிற்றாங்கி வேதபுரீசர் மன்மதனைச்செய்த சரித்திரங் கேட்டுள்ளதில் பேரானந்தமுற்றோம் முற்காலத்து அருணன்தனது பாவம் அச்சுருதிபுரத்தில்தீர்த்துக்கொண்டசரிதையை எமக்குரைத்தருளவே ண்டும் வண்டுகளொலிக்குங் கமலத்தை ஆசனமாகவுடையபிரமனைப்போ ன்ற தவசிரேட்டரேயென்றுதுதிக்க சூதபுராணிகர் முகமலர்ச்சியுடன் இவ்வாறுகூறத்தொடங்கினார். எ-று. ஆல்-அசை. (௧)

காயிருங்கனலகண்மூன்றினுளுள்ளக்கருதலெலாமுடிக்குமாதவ த்தீ, ராயிரங்கதிரோனொருருட்டேர்மேலருணனேழ்பரியினைத்தூ ரப்ப, மாயிருஞாலப்பரப்பொருபொழுதில்வலமவருபவன்முனொ ர்தினத்தி, லேயிருவிசும்பினிமையவருலகத்தருகினிலெய்திடுமெ ல்லை.

(இ-பு) வெம்மைதங்கிய ஆகவனீயம் காருகபத்தியம் தக்கணாக் கினி என்னும் மூன்றுபெரிய அக்கினிகளால் மனதின்கண் நினைத்தவண் ணம சகலகாரியங்களையும் முடித்துவருகின்ற மகாதவத்தையுடையவர்க ளே ஆயிரங்கிரணங்களையுடைய சூரியன் ஒற்றைச்சக்கரமுள்ள இரதத்தின் மீது அருணனென்னுஞ்சாரதி ஏழ்பரியைத்தூண்ட மிகப்பெரிய இந்நிலவுலக முழுதும் ஒருதினத்தில் சுற்றிவருகின்றவனாய் முன்னொருநாளில் அகன்ற ஆகாசத்தினிடத்துள்ள தேவலோகத்திற்கு சமீபத்தில் சேர்ந்தகாலத்தில் எ-று. (௨)

ஐயிருநூற்றுக்கண்ணனெண்மடங்காலதனமீதினிலமர்ந்து
பையரவல்குலரம்பையர்கோடிபரதநாட்டியத்தொழில்புரியச்

செய்யிருபத்தானங்களையறிவீணைதெரிந்திசைவயிரியர்பாடக் [ன்.
கையினுற்றுளமத்தளமிசைப்பக்கதனை வேந்தினிது பார்த்திருந்தா

(இ-பு.) ஆயிரங்கண்களையுடையவனாகிய ஒள்ளிய சிங்காதனத்தின் மீதில்வீற்றிருந்து சாய்ப்பப்பட்டபோதும் நிதம்பமுள்ள அரம்பையர்கள் பரதநாட்டியஞ்செய்ய அமைக்கப்பட்ட மிதனம கின்னரி வீணை இவைகளை மீட்டிப்பாட்டுக்கள் பாடிக்கொண்டிருக்க நட்டுவாங்கங்களினால் தாளமும் மத்தளமுங்கொட்ட இவைகளை இந்திரன் இனிமையாகப்பார்த்துக் கொண்டிருந்தான், எ-று இவ்விரண்டுங்குளகம். (௯)

அந்தநாட்டியத்தினாடலுமிசையுமருணனுக்கிருசெவிபுகுதச் சிந்தையுமதன்மேலாகிப்போய்நெஞ்சந்திகைத்துளமவாடிமெய்சோர்ந்து, வந்துதைத்தொழிலு மறந்தனனிருந்தானெண் கதிர்ப்பரிதியு நோக்கி, யிந்தவுன்மயக்கமெய்தியதென்கொலியம்பெனமறவனிசைப்பான.

(இ-பு.) அந்நாட்டியத்தின்சத்தமும் பாட்டின் இசையும் அருணனுக்கு இரண்டுசெவிகளிலும் புகுந்தவுடன் அதன்மேற்கருத்துசென்றபடியால் சித்தமயங்கி மனம்வாடி உடலம்சோர்வடைந்து இரதத்தைச் செலுத்துகின்றதனது தொழிலையும் மறந்தவனாயிருந்தான் ஒள்ளியகிரணங்களையுடைய சூரியன் அவனைப்பார்த்து இவ்விதமனமயக்கம் வந்ததற்கென்னகாரணம்சொல்லென்றுகேட்க அருணன்சொல்லுகின்றான் எ-று.

வசிரபாணியவையினிலரம்பைமாதர்மாநடனங்கள்புரியுஞ, செச்சையிலொலியுந் திகழ்மணி வீணைத்தெள்ளுகைப்பாடலுங்கேட்டே,யிச்செயலுற்றதென்மனவவண்சென்றின்புறநோக்கினாலலதுதச்சவட்டளர்வுதவிர்ந்திடாதெனறான்றபனனுஞ்செலவிடைதந்தான.

(இ-பு.) இந்திரன்சபையில் அரம்பையர்கள் நடனங்கள்செய்கின்றசிலம்பினோசையும் விளங்குகின்ற அழகிய வீணையைகையினால் மீட்டிப்பாடுகின்ற பாடலையும்கேட்டு எனதுமனம் இவ்வாறு மயங்கியிருக்கின்றது அவ்விடத்திற்குப்போய் இன்படையும்படி அதுகளைப்பார்த்தாலல்லது என்னிடத்துண்டாகிய மனக்கலக்கம் நீங்காதென்றுகூறினன் அவ்வாறே போகும்படி சூரியனும் விடைகொடுத்தனுப்பினன். எ-று. ஏ-அசை.

பருதிபால்விடைகொண்டருணனுமமரர்பதியிலிந்திரனவைபடர்ந்து, கருதியோர் மாதினுருவெடுத்தவர்பாற கலந்துநாட்டியங்காணுக்குறலு, மரிதினிலரம்பைமாதரின் மிக்கவழகுவாய்ந்திடுதலாலவளை,மருமலர்த்தாமத்திந்திரனோக்கிமனத்தினின்மையலாய்க்கொண்டான்.

(இ-பு.) இவ்வாறு சூரியனிடத்துவிடைபெற்றுக்கொண்டு அருண னும் தேவலோகத்தில் இந்திரன் சபையையடைந்து பலவாறுயோசித்து ஓர் பெண்ணுருவெடுத்து அவ்வரம்பைமாதர்களுடன்கலந்து நாட்டியங்களை ப்பார்த்திருக்கும்போது அவ்வரம்பைமாதர்களைப்பார்க்கிலும் அருமையான அழகுவாய்ந்திருப்பதால் அவளை வாசனைநிறைந்த கற்பகமலர்மாலைதரித்தி ருக்கும் இந்திரன்பார்த்து தனமனதிற்காமநோயுற்றான். எ-று. (சு)

அஞ்சனவிழியாராடலைநோக்கானளிநரம்பியாழிசைகேளான மிஞ்சியமயலான்மேனிநொந்துள்ளம்வெதும்பினன்விரகமாற்றில னாய், வஞ்சியினுருவாமருணனுடன்கோபமணியறைபுகுந்தமளியி ன்மேற், கொஞ்சியன்பெய்திக்கூடியேயகத்திற்கொண்டிடுமவிரக நோய்தீர்ந்தான்.

(இ-பு.) மைதீட்டிய கண்களையுடைய அரம்பையர்களது நாட்டிய த்தைப்பாராமலும் அழகிய நரம்புகளினாலமைந்தயாழின் இசையைக்கே ளாமலும்அதிகரித்தகாமமயக்கத்தால உடலமவருந்தி மனவெந்து அக்காம நோயைச் சகிக்காதவனாய் வல்லிசாதகசோதிபோன்றுருவமைந்த அவ்வரு ணனுடன் அவ்விடத்துள்ள ஒரு மணிகளிழைத்தஅறையிற்புகுந்து பஞ்ச ணையின்மீது அவனுடன் கொஞ்சிப்பேசிஅன்புடன் சேர்ந்துதன்மனதில் உதித்த காமநோயைத் தணித்துக்கொண்டான். எ-று. (எ)

தருக்கிறையுடனேகூடலும்வாலிதானுதித்தனனதுநோக்கிக் கரு க்குறுமனனாயருணனுந்தனதுகவினுருவெடுத்தவணகனமேற, யரு க்கன்மாடணுகியமராகோன்முனைபரிசைவயாய்ச் சென்றதுமவன் கண், டுருக்கமாயனைத்தேயுகந்ததுபவாலியுதித்ததுந்தெரிந்திடவு ரைத்தான்.

(இ-பு.) இவ்வாறுதேவேந்திரனுடன் சேர்ந்தவுடன் வாலியுதித் தான் அதைக்கண்டு அருணனும் மனந்திகைத்தவனாய்த்தனது அழகிய சுய உருவத்தை எடுத்துக்கொண்டு அவ்விடத்தைவிட்டுநீங்கிச் சூரியனிடத்த டைந்து இந்திரன்சபையில் பெண்ணுருவெடுத்துப்போனதும் அவ்விந்தி ரன்பார்த்துச்சேர்ந்து இன்பம் அனுபவித்ததும் உடனேவாலி உற்பத்தியா னதும் தெளிவாகக்கூறினான். எ-று. (அ)

உரைத்தலுங்கதிரோனுளம்வியப்பெய்தியுயரெழிலருணனைநோ க்கி, வரைத்தடம்புயத்துவானவேந்துன்பாலமாலுறநீயெடுத்தெ ய்து, நிரைத்தபொன்னுருவங்காட்டுதியென்றுநிகழ்த்தலுமவ்வுரு காட்ட, மரைத்தனிமலர்க்குநன்பனுநோக்கிமையலுற்றாய்கொண் டனன்பாதோ.

(இ - பு.) இவவாறு அருணன்கூறியவுடன் சூரியன் மனதின்கண் ஆச்சரியமடைந்து மிகக அழகுள்ள அருணனைப்பாாத்து மலைபோலும் விசாலமான புயங்களையுடைய இந்திரன் உன்னிடத்துமயங்கும்படி நீ எடுத்துச்சென்ற வரிசையாக அமைந்த அழகிய உருவததைக்காட்டுவாயென்று கூற அவன் அந்தபபடி அவ்வுருவெடுததுக்காட்ட ஒப்பற்ற அரவிந்தநண்பனாகிய சூரியனுங்கணடு காமநோயுறருன. எ - று. மாது-ஓ-அசை. (௯)

ஆசைநோய்நெஞசத் தாறறலனாகியருககனுமருணனையணைநதான்
நேசமுற்றணைநதபோது சுக்கிரீவனிகரறுவலுமைபிறபிறந்தான்
மாசறுமனநதுபபாகனுநோக்கிவசைநப க்கெய்தியதென்ன
வேசுறுமுருவமகனறு நதன னுருவாயிரவிதாடொழு திவையியம்பும

(இ - பு.) காமநோயை மனதிற்பொறுககாதவனாய்ச்சூரியனும் அருணனைச்சோந்தான் அப்படி விருபபுடன் சோநதபோது சுககிரீவன் என்பவன் ஒபபறறவலலமையுடன் உறபவித்தான் குற்றமற்றமனததையுடைய அருணன்பார்த்து நமக்குவசைநோந்ததென்று யாவராலுமம இகழப்படும் அபபெண்ணுருவையொழித்து தன்னுருவெடுததுக்கொணடு சூரியன்பாதங்களைவணஙகி இவவாறு கூறுகின்றான். எ-று. (௧௦)

உலகிலபூதஙகளிருவினைபபயனுமுணாநதிடுங்கடவுணீநின்பொ
னலகில்பூஙகமலததாளிணைக்குரியவடிமைநானாதலாலுன்னை
விலகிவாளெரிக்குமவசசிராயுதனபானமேவியானசெயததீவினையு
நலமிலாவினையுன்பாறபுரிநததுவுநனகுறவருள்புரிகென்றான்.

(இ-பு) இநநிலவுலகின்கணுளள ஆனமாக்களது நல்வினைதீவினையாகிய இரணடு வினைகளின்பயனையும அறிநதிருககுஙகடவுள நீ அளவறற அழகுவாயநத தாமரைமலாபோனறநினது இரணடு பாதங்களுககுரித்தான அடியேன்நான் ஆகையால் உன்னைவிட்டுநீஙகி ஒளிவீசும வசசிராயுததைத்தாஙகிய இநதிரனிடத்தடைநது யானசெய்த தீவினையும் நன்மையில்லாதசெய்கையாக உன்னிடததிறசெயததும் நனமையாகும்படி உரைததருளவேணடுமென்றான் எ-று. (௧௧)

இவ்வகையிரதச்சூதனுங்கேழபபவிரவியுங்கருணைபாலுரைப்பான்
கௌவையங்கடலசூழ்மாநிலததுயர்ந்த கயிலையஙகிரியினையனைய
செவ்வியசுருதிபுரியெனவுரைக்குஞ்சீருறுதலமுளததனி [னம்
லௌவியமறுககுமததனைத்தொழுதே யானகதியடைநதனன்முன்.

(இ - பு,) இவ்வணணம் இரதசாரதியாகிய அருணன்கேழ்கக்ச் சூரியன் கிருபையாற்கூறுகின்றான் ஒலிக்கும அழகிய கடலசூழ்நத இநநிலவுலகததில்உயர்ந்ததிருககயிலைக்கொததுச்செமமைவாயநதசுருதிபுரியென்று யாவரும் எடுத்துக்கூறும் சிறப்புள்ள சிவதலமொன்றுணடு அத்தலத்தில்

குற்றங்களை நீக்கிக்காக்கும் வேதபுரீசரைத்தொழுதுதான் நான்முன்புல்ல வாழ்வடைந்தனன். எ-று. (கஉ)

ஆதலானீயுமத்தலமெய்தியருமறைவடிவதாய்நின்ற
பூதநாயகனைப்பூசனைபுரிந்துன்புன்மையைமாற்றியேபிறந்தச்
சூதனுமெனப்பாலவருகியென்றனனருணசூரியவிரதியுயுரைப்பக்
கோதிலாமனத்தானருணனுங்கேட்டுக்குறைவறமகிழ்ச்சிகொண்
டனனால.

(இ-பு) ஆகையினால்நீயும் அந்தச்சுருதிபுரியையடைந்து அங்குஆரிய வேதசொரூபியாய் வீற்றிருக்கும் சிவபிரானைப்பூசித்து உனது குற்றங்களை ஒழித்துக்கொண்டு திரும்ப இரதசாரதியாய் என்னிடத்து வரக்கடவாயென்று சூரியன்கூறக்குற்றமற்ற மனமுடைய அருணன்கேட்டு நீங்காதபெருமகிழ்ச்சியுற்றனன். எ-று ஆல அசை (கங)

ஆங்கவனிடைகொண்டாரணபுரத்திலருணன் வந்தடைந்துள
மகிழ்ந்து, தேங்கமழ்சலத்திறைபினைச்செயிர்தந்தசேயநதிநீர்கு
டைந்தெழுந்து, வீங்கவிர்புயத்தானைபெயவெலாஞ்சிறப்பவெண்ணி
றுபூதியுமபூசிப்பாங்குறுஞ்சிகரக்கோயிலுட்புகுந்துபராபரமூர்த்
தியைக்கண்டான்.

(இ-பு.) அவ்விடத்துச்சூரியனது அனுமதிபெற்றுக்கொண்டு அருணன் சுருதிபுரியில்வந்துசேர்ந்து மனமகிழ்ந்து வாசனைகமழும் தாமரை மலரில்வசிக்கும் பிரமனைத்தந்த முருகக்கடவுளால் உண்டாகிய சேயாற்றின் நீரில்முழுகிஎழுந்து அழகிய பருத்தபுயங்களையுடைய அருணன் தனது சரீரமுழுதும் விளங்கும்படி திருவெண்ணீறணிந்து பக்கத்துள்ள சிகரங்களோடுகூடிய திருக்கோயிலுட்சென்று பராசத்திக்குப்பரனாகிய வேதபுரீசரைத்தரிசித்தான் எ-று. (கச)

சூழ்ந்தனனறுதித்தானன்றெழுந்தனன் பலகாற்றூயதண்புனலலா
கொண்டு, வாழ்ந்திடுமரனைப்பூசனைபுரிந்தானவழுத்தினன்றொழுதந்
ரநதாண்பேற, றாழ்ந்தனனுருகிநின்றடங்கணுனந்தத்தண்புனல்சொ
ரிந்திடநின்று, ஆழ்ந்தனனபவத்திலையகாத்துன்றனருட்கரைசேர
த்ததியென்றான்.

(இ-பு.) வலம்வந்து துதித்துவணங்கினான் அளவிறந்தவிசை பரிசுத்தமாகிய குளிர்ந்தநீரையும் மலரையுங்கொண்டு அங்குவீற்றிருக்கும் அவ்வேதபுரீசரைப்பூசித்தான் மற்றும் அனேகந்துதிகளைக்கூறி அவரது திருவடிகளின்மீது வணங்கினான் பிறகுஎழுந்து தனது அகன்ற இரண்டு கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சொரியநின்றான் ஐயனேயான் பவக்கடலில்வீழ்ந்தேன் என்னை இரட்சித்து உனது திருவருளென்னுங்கரையிற் சேர்க்கவேண்டும் என்று குறையிரந்தனன். எ-று. (கரு)

கான்றதிபயந்தேங்காய்ப்புனல்முதிர்செங்கரும்பினல்விரதமு முதலாய்,யான்றவைபலவாயரற்கபிடேகமாட்டித்தண்டேய்வையு மணிந்தே, யீன்றபன்மலாகூவிளவகைசாத்தியிணையிலகாழகங்கல ன்புனைந்து, சான்றவாதூதிக்கத்தீபதூபாதிநந்தருச்சனைபுரிந்தனனே.

(இ - பு) வாசனைவீசும் தயிர், பால், இளநீர், முதிர்ந்த செங்கரும் பின்சாறுமுதலான விசேஷமான பலவற்றையும் அச்சிவலிங்கப்பிரானுக்குத் திருமஞ்சனமாட்டி குளிர்ந்தசலவைச்சாந்தையுந்தரித்து நந்தவனத்தில மலர்ந்தபலமலர்களுடன் அதிகருவிலவம மகாவிலவம கற்பூரவிலவமுதலிய வில்வவகையும் அருச்சித்து ஒப்பற்றமயிரங்களால் ஆகிய ஆபரணங் களைப்பூட்டிப் பெரியோர்கள்யாவரும் துதிக்கும்படி தூபதீபமுதலிய சோடச உபசாரங்களைச்செய்து பூசித்தான் எ-று எ-இரண்டும்-அசை. இவ்விரண்டுங்குளகம். (கக)

அரமபைமாவருக்கைதாழைபினகனியுமதிரசவருக்கம்பாலனமும, வரமபறபபடைத்துமற்றுபசாரவகையெலாமபுரிந்துகைகுவித்துச், சிரமிசைச்சேர்த்தியத்தனைப்போற்றி தேவாகடேவனே போற்றி,சிரம்புபலவுயிராய்நின்றவபோற்றிநித்தனேநினமலபோற்றி.

(இ - பு.) வாழைப்பழம, மாம்பழம், பலாப்பழம, தேங்காய், அதிரசவர்க்கங்கள், பாற்சோறு, இவைகளெல்லாம் அளவில்லாமற்படைத்து மற்றுள்ள அனேகவித உபசாரவகைகளெல்லாமசெய்து இரண்டுகைகளைக் குவித்துச்சிரசின்மீது வைத்துக்கொண்டு கடவுளைவந்தனம் தேவர்களுக் கெல்லாம இறைவராகிய மகாதேவவந்தனம் இந்நிலவுலகின்கண் நிறைந் துள்ளபல ஆன்மகோடிகளாய் நின்றருள்பவரேவந்தனம் நித்தியசொரு பரே மலரகிதரேவந்தனம். எ-று. (௨௦)

என்றுபலவகையாய்த்தோத்திரமிகவுமியம்பியெயிணையடிதொழுதா, ஒன்றலபலநாளிவ்வகைபூசையுஞற்றியபோதரனமகிழ்ந்து, பொன்றிகழ்மேனி யுமையொருபுறமும புனைமதிச்சடையும பொறகொன்றை, மன்றலந்தொடையுமான்மழுககரமழகிடையூர்தியுமானன்.

(இ - பு.) என்று பலவகையாய்த்தோத்திரங்கள் அனேகங்கூறி அவரது இரண்டுதிருவடிகளையும் வணங்கினன் இவ்வாறு ஒருநாளல்ல பல நாளும்பூசித்தகாலத்துச் சிவபிரான் திருவுளமகிழ்கூர்ந்து பொன்போல் விளங்குந்திருமேனியினிடத்தில் உமாதேவியொருபாகமாகவும்அலங்கரித்த இளம்பிறைவாழும் சடையுடனும் அழகமைந்த கொன்றைமலராகிய வாச

னைகமழும் சிறந்தமாலையுடனும் மான்மழுதரித்ததிருக்கரங்களுடனும் இளமைதங்கிய இடபவாகனத்தையுடையவருமாகத் தோன்றினார். எ-று.

மணிவிடைமீதின்மறைபுகழ்பெருமான்வந்தெழிலருணன்முன்
றோன்றித், துணிபொடுநீசெய்பூசனைக்குகந்தோந்தொலைந்தனப
வமெலாமினிநீ, பணிகிளர்ரவிபாலடைந்திரதத்துச்சாரதியமதியென்
றறைந்து, தணிவுறுமிலிங்கமதனிடைமறைந்தானப்பனைப்பாலரு
ணனுஞ்சார்ந்தான்.

(இ - ள்) அழகிய இடபவாகனத்தின்மீது வேதங்கள் துதிக்கும் சிவபிரான் எழுந்தருளிவந்த வடிவமாக அருணனுக்குக்காட்டிக்கொடுத்து மனோதிடத்துடன் நீசெய்தபூசைக்கு மகிழ்ந்தோம் அன்றியும் உன் துர்வினைகளெல்லாம் விட்டொழிந்தன இனிமேல் நீ ஒளிவிளங்கும் சூரியனிடத்தடைந்து இரதசாரதியாய் அமர்ந்திருக்கக்கடவையென்று திருவாய்மலர்ந்து சாக்ஷாத்ரூபமாகிய சிவலிங்கத்திற்கரந்தருளினார் அருணனும் சூரியனிடத்திற்சேர்ந்தான். எ-று. (உஉ)

அருணனுரைமைத்தவனிநகரத்தையருணவாரணியமென்றுரைப்
பார், தெருளுறுமுள்ளத்தனையவன் பூசைசெய்தலாலருணநாயக
னென், றிருளறுமுளத்தீரியாவருமபுகலவவ்வெந்தையைப்பூசனைபு
ரிந்தினர், மருளறுத்துற்றபவந்தொலைத்துயர்ந்தவாழ்வுபெற்றோங்
குவரெனன்றான்.

(இ - ள்) அருணனாலேற்பட்டதாகிய அழகியநகரத்தைச் செங்காடென்று கூறுவார்கள் தெளிந்தசித்தத்தையுடைய அந்த அருணனால் பூசித்த காரணத்தால் அருணநாயகன் என்றியாவருங்கூறும் அச்சிவலிங்கப்பெருமானை மறுக்கமற்றமனமுடைய சவுனகாதிமுனிவர்களே யாரேனும் பூசித்தால் தாங்களுள்ளத்திலுள்ள அஞ்ஞானநீங்கி அதனாலிளைந்த தீவினைகள்நீங்கிமேலான பேரின்பவாழ்வுபெற்றோங்குவரென்று சூதபுராணிகர் கூறினார். எ-று. (உ௩)

அருணன்பாவந்தீர்ந்தசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் . கூ௦௨.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இந்திரன்சாபந்தீர்ந்த சருக்கம்.

——— * ———

களங்கமிலாவுள்ளச் சூதமாமுனிவராயுகமுறுகளும
வளமிகு நைமிசாரணியத்தா தவருமகிழ்ந்தோங்கி
விளங்குகற்பகநாட்டிறைவன் வெவ்வியசாபந்தீர்ந்த
வுளங்களிப்புற்றவையுரைத்தியெனச்சூதனுரைக்கின்றான்.

(இ - பு.) புனிதமானமனமுடைய சூதமகாமுனிவ இவ்வண்ணம் அருணைப்பாவந்தீர்ந்த சரிதையைக் கூறிமுடித்தவுடன் வளப்பமிக்க நைமிசாரணியமுனிவர்கள் மனமகிழ்ச்சி அதிசயித்து விளக்கமாகிய கற்பகதருவிருக்கும் விண்ணுலகத்தரசனாகிய இந்திரன்கொடிய சாபந்தீர்ந்து தனதுள்ளத் திருக்களிப்படைந்தசரிதையை உரைத்தருளவேண்டும் என்று குறையிரக்கச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர். எ-று. (௧)

வானவர்நாயகனொருநாண்மண்ணுலகினவனத்தெய்திக்
கானமார்பூஞ்சோலையினவாய்க்களித்தமாகோதமன்மனைநற்
பாலனஞ்சொலகலிகைபால்பணைபுணர்ந்துகாமுகனாய்த்
தேனலருமபூங்கணையாற்சிந்தையுழன்றனனமாதோ

(இ - பு.) தேவர்களுக்குத்தலைவனாகிய இந்திரன் ஒருதினத்தில் இந்நிலவுலகத்தில் உள்ள ஒருகாட்டில் அடைந்து தேன்றுளிக்கும் மலர்ச்சோலையினிடத்துக்களித்துவசிக்கும் கௌதமருடைய பத்தினியாகிய பால்போல் இனிக்கும் சொற்களையுடைய அகலிகையின் உருவலட்சணத்தின் தன்மைபற்றி காமமயக்கங்கொண்டவனாய் மன்மதனுடைய வாசனைமிக்க மலரம்புகளால் சிந்தைகலங்கினன். எ-று. மாது-ஓ-அசை. (௨)

விரகமுறுமனனாகிவிளைவதுமேலறிகிலனாய்
இரவினடுநேரத்திலெழுந்தொருவாரணம்போலக்
குரலுறக்கூவலுங்கேட்டுக்கோதமனும்விடிந்ததெனத்
திரமுறசிந்தையுணினைந்துசெய்கடன்றீர்த்திடச்சென்றான்

(இ-பு.) காமவிகாரமுள்ளமனமுடையவனாய் மேல்விளையுங்கெடுதியையுணராமல் இராத்திரியின்நடுநேரத்தில் புறப்பட்டுப்போய் ஒருசேவலை

போலக்குரல்காட்டிக்கூவ அதைக்கேட்டுக்கௌதமர் பொழுதுவிடிந்த தென்றுநிச்சயமாகமனதிலெண்ணி நித்தியகருமங்களைமுடிக்க நதிதீரத்துக்குப்போனார். எ-று　　(௩)

மாமுனிபோதலுமமரர்கோனவனைப்போலுருத்தாங்கிக்
காமுகனுமகலிகையாய்க்கலந்திடும்போதருந்தவர்தாம்
நீண்முழுநீரெழுந்திலையிரவுவிடிந்ததுபோல
நாமுறச்செய்தமாயநாயகனெனத்தெளிந்து.

(இ-பு.) கௌதமர் நதிதீரத்துக்குப் போனவுடன் அவரைப்போல உருவமெடுத்துக்கொண்டு காமமுடைய இந்திரனும் அகலிகையென்னும் அம்முனிபத்தினியுடன் புணர்ந்தபோது அக்கௌதமமுனிவர் மேன்மையமைந்த நதி இன்னும் எழுந்திருக்கவில்லை இன்றிரவுவிடிந்ததுபோன்று நாமெண்ணச்செய்தது தேவர்களுக்கதிபனாகிய இந்திரனே என்று அறிந்துகொண்டு. எ-று　　(௪)

மீண்டொலையாச்சிரமமேவியவண்விளைந்தமைகண்
டீண்டுபுரிந்திடுந்தேவரிறைவநீபொறியோனியினை
வேண்டினையாதலினுனதுமேனியிலாயிரம்யோனி　[ன.
காண்டிடுமென்றருந்தவத்தோன்கூறினனவ்வகையடைந்தா

(இ-பு.) அதிசீக்கிரத்தில் திரும்பிவந்தனது ஆச்சிரமத்தையடைந்து அவ்விடத்து நடந்தவைகளைப்பார்த்து இவ்விடத்து இத்தகைய தீயகாரியத்தைப்புரியும் தேவர்தலைவனாகிய இந்திரனே நீ ஒரு யோனியைவிரும்பினையாதலால் உன் உடம்பில் ஆயிரம்யோனிகள் காணக்கடவது என்று பெரியதவத்தையுடைய கௌதமர் சபித்தனர் அவ்வாறே ஆயிரம்யோனிகளும் தன் உடம்பிற்பொருந்தப்பெற்றுக்கொண்டான். எ-று.　　(௫)

வேறு.

ஆகமேலெங்குமியோனியாயுறவெளிகியந்தப்
பாகசாதனனோர்கஞ்சப்பணிமலர்த்தாட்புகுந்த
னேகநாளிருப்பவானோர்தேடியாங்கறிந்துநோக்கித்
தேகமேன்மலிந்ததீமைதீரவதெவ்வாறென்றோரா.

(இ-பு.) இவ்வாறு தன்மேனியெங்கும் யோனியாய்விட்டதனால் நாணமுற்று அந்த இந்திரன் ஒருதாமரைமலரின் நாளத்திற்புகுந்து அநேகநாளிருக்கத்தேவர்களெல்லாம் எங்குந்தேடிக்காணாமல் பிறகு தாமரை நாளத்தில் இருப்பதை அறிந்து அங்குவந்துபார்த்து அவனது உடல்நிறைந்திருக்கும் யோனிக்குறிகளை நீக்குவதெவ்விதமென்று சிந்தித்து. எ-று.

குருவுரைத்தனனிச்சாபக்கொடுமைதீர்ந்திடுமோபூமே
லருமறைபுகனறவீசனருள்பெறவேண்டுமென்றே

தருமுறைவண்ணமநதச்சதக்கிருதுவுமபார்மீதின்
மருமலர்ப்பொழில்சூழ்வேதமாநகா நண்ணிறசார்ந்தான்.

(இ - பு) இப்படியோசித்துககொணடிருக்குங்காலத்து பிரகற்பதிப கவான் இந்தச்சாபந்தீர்ந்திடும்படி நிலவுலகத்தின்கணுள்ள சருதிபுரியில எழுந்தருளியிருக்கும் தேவாகளுககுவேதமோதுவித்த வேதபுரீசா திருவருளைபபெறவேண்டும் என்றுகூறினா அந்தப்பிரகாரமே அவ்விந்திரன் நிலவுலகத்தில்வாசனைகமழும் மலாச்சோலைகள்சூழ்ந்த வேதபுரியிற்சோந்தான் எ-று. இவ்விரண்டுங்குளகம். (எ)

மனமொடுகாயமவாககுமூன்று மோாவழியதாககி
யினமணித்துறைகளோங்கும்பிரங்குகநதிநீா தோய்ந்து
புனைமணபபூதிபூசிபபொன்மதிற்கோயிலபோந்து
கனமணிப்பீடத்துற்றகடவுளைபபூசைசெயதான.

(இ - பு) மனவாககுகாயம என்னும திரிகரணங்களையும் ஒருவழிப் படுததிக்கூட்டமாகிய இரததினங்களிழைதத துறைகள்விளங்கும பெரிய சேயாற்றில்நீராடி வாசனைகமழும் திருவெணணீறு மேனியெங்கும்பூசி பொன்னாலமைத்தமதிலையுடைய திருக்கோயிலுட் பிரவேசிதது அவவிடத்து உயாந்த அழகியபீடத்தில் எழுந்தருளியிருககும வேதபுரீசரைபபூசித தான். எ-று. (அ)

இவ்வகைபலநாட்பூசையியற்றவும்பெருமானன்பா
லவ்வியந்திரபபக்கையினருணமுப முழுவுந்தாங்கிச
செவ்வியவிடைமேலாகிதரிசனங்கொடுப்பக்கண்டு
வெவ்வியசாபங்கொண்டவிண்ணிறைபணிந்துசொல்வான்.

(இ - பு.) இவவிதமாகப பலநாள் பூசிககவும் சிவபிரான்திருவருளால் இந்திரனதுபாவநதைநீககத் திருககரஙகளில மானுமமழுவும தரித்துக் கொணடு இடபமாகிய இடபவாகனததின்மீதெழுநதருளித தரிசனங்கொடுககப்பாாதது கொடியசாபம அடைநத இந்திரன் வணங்கிககூறுகின்றுன்

ஆண்டிடுமபரமனே நாயேனறிவிலாதியற்றுநதீமை
மாண்டிடசசெய்துஞானமாதவனுரைத்தசாப
மீண்டறநதீர்நதியென்றேயிறைஞ்சியேதுதிபபவீர
தாண்டவம்புரிநதவெந்தையன்பொடுமிதனைச்சாற்றும்.

(இ - பு) ஆன்மகோடிகளை ஆட்கொண்டருளும பரமனே நாயினுங்கீழ்ப்பட்டயான்நல்லறிவில்லாதுசெய்த தீமைநீருமபடிபுரிந்துமெய்ஞ்ஞானமடைந்த மகாதவசிரேட்டராகிய கௌதமாகூறிய சாபமானது இவ்விடததுநீங்கும்படி நீக்கவேணடுமென்று வணஙகித்துதிக்க வேதங்களுக்கு வீரதாண்டவங்காட்டிய எமதுதந்தையாராகிய வேதபுரீசா கிருபையோடும் இதனைத்திருவாய்மலர்ந்தருளுகின்றுா. எ-று. (க0)

தீர்ப்பதற்கரியசாபஞ்செறிந்தனையெனினுமுன்மெய்
பாப்பவாகங்களெல்லாங்கண்களாயிருந்திடப்பாலித்தோமால்
வாய்ப்பதிகொண்மங்கையிந்திராணிதன்மகிணனுமிந்தச்
சீர்ப்பதிக்குள்ளிலிங்கம்பதித்துப்பூசனைசெய்யென்றான்,

(இ-ள்) முற்றும் தீர்ப்பதற்கருமையான சாபத்தையடைந்தாய் ஆயினும் உன்னுடையதேகத்தை பாகங்களுக்கெல்லாம் கண்களாக வேயிருக்கவரந்தந்தோம் கச்சணிந்தனத்தினையுடைய இந்திராணிமணவாளனே இந்தச்சிறந்தஸ்தலத்திற்குள்ளே சிவலிங்கப்பெருமானைப் பிரதிட்டை செய்து பூசிக்கக்கடவாயென்று திருவாய்மலர்ந்தருளினார் எ-று.
ஆல்-அசை. (கக)

அப்பரிசுரைக்கச்சீரசந்நதியையேட்ந்துசேயாற்
றெப்பத்துவடபக்கலிங்கமொன்றமைத்துச்சித்தந்தந்து
மெய்ப்பெருந்தருநாட்டெய்திவிண்ணவர்க்கரசனானான்
செப்புமப்பரனையாருமிந்திரேசனென்பாரால்,

(இ-ள்) இவ்வாறு சொல்லக்கேட்ட ஸ்தலத்தில் கிழக்குத்திசையாய்ச் சென்று சேயாற்றுக்குவடக்கேயொன்கவுறு ஒரு சிவலிங்கப்பிரதிட்டை செய்து பூசித்துவணங்கி உன்னதமான பெரிய கற்பகவிருட்சம்விளங்கும் தேவலோகத்தையடைந்து மீளவாசவனுக்கிறையானான் இப்போதுமங்கிருக்கிற அச்சிவலிங்கப்பெருமானை இந்திரேசுரரென்று யாவரும் கூறுவார். எ-று,
ஆல்-அசை. (கஉ)

இன்னமுமொருக்காலந்தவிந்திரன்பிரமகத்தி
துன்னியாங்கடைந்தேவேறயின்பேறுமைபாகனையாராதித்
தின்னபாரமரர்நாட்டையெய்தியதுவுதுங்கேண்மின்
பன்னுதுமென்றுசூதமாமுனிபகருகின்றான்.

(இ-ள்) இன்னமும் ஒருகாலத்தில் அந்த இந்திரன் பிரமகத்திதோஷமெய்தி அச்சுருதிபுரிக்குவந்து மலையரையன்புத்திரியாகிய உமாதேவியின்பாகரான அவ்வேதபுரீசரைப்பூசித்து அத்தோஷநீங்கித் தேவலோகத்தையடைந்ததனை அதையுங்கேளுங்கள் சொல்லுகின்றோமென்று சூதமாமுனிவர் திரும்பவுங்கூறினார். எ-று. (கங)

வேறு.

ஆதியானகிருதயுகத்தினிலமாகோரொருநாளவைதன்னின்மேல
சோதியானவரியணைமீதினிறசுராகனேயதுவிருந்தாவிதழ் (க்
மாதராராடனங்கள்புரிந்திடமனமுங்கண்ணுமதனிடைபாய்ந்திட
காதலாற்கழியுண்மயக்கெய்தவேகண்டிருந்தான்காணுமவ்வேலை
யில.

(இ-பு.) முதல்யுகமாகிய கிரேதாயுகத்தில் இந்திரன் ஒருநாள் தனது சபையினிடத்துச்சோதியுருவாய்விளங்கும் சிங்காதனத்தின்மீது தேவர்களெல்லாம்வணங்க வீற்றிருந்து பவளம்போலும் அதரங்களையுடைய அரம்பையர்கள் பரதநாட்டியஞ்செய்யத்தனது மனமுங் கண்களும் அதனிடத்துச்செலுத்தி ஆசையுடன் கள்ளுண்டவன்போல மயக்கமுற்றுப்பார்த்திருந்தான் அப்படிகண்டுகொண்டிருக்குந்தருணத்தில். எ-று. (கச)

தனதுசொற்குருவாம்பிரகற்பதிதானுமங்குவந்துற்றிடுபோதினில், மனதுபற்றியமாதர்களாடன்மேலவைத்தகண்ணினைவாங்கிலன் வந்திடுங்கனைதயுற்றகுருவையுங்கண்டிலன்கையினாலுந்தொழுதிலன்காமநோய்,புனைந்துற்றவுளத்தினனாகியேபுங்கவற்கிறையுமிருந்தானரோ.

(இ-பு.) தன்னுடைய உயர்ந்தகுருவாகிய பிரகற்பதிபகவான் அவ்விடத்துவந்தசமயத்தில் அரம்பையர்கள் பரதநாட்டியத்தின்மேல் மனம் பதிந்தவனாய் அந்நாட்டியத்தை நோக்குதலிலேயே செலுத்தியிருந்த தன் இரண்டுகண்களையும் திருப்பாதவனாய் தன்முனதிரில்வந்த பெருமைமிகுந்த குருவையும்பாராதவனாய்க்கையினாலவணங்காதவனாய்க்காமநோய்பொருந்திய மனமுடையவனாகித் தேவேந்திரனிருந்தான். எ-று. அரோ-அசை.

வந்தநம்மையுபசரித்தானிலைவணங்கினானிலைமாமதமத்தனாய், மிந்தமன்வயினென்னமக்கென்றுபோய்நினைகியேமறைந்தான்றன் மகிமையாம், பந்தைமானுமுலையினராடலைப்பார்த்தொழிந்தபினவ்பண்ணவர்வேந்தனுஞ், சிந்தையுண்ணினைந்தகுருந்தனைச்சேர்ந்தநம்வயினென்றுசிந்தித்தனன்.

(இ-பு.) இங்குவந்தநம்மை உபசரிக்கவில்லை தொழவுமில்லை மிகுந்த அகங்காரத்தையுடையவனாகிய இந்த இந்திரனிடத்து நமக்கென்ன வேலையிருக்கிறதென்று பிரகற்பதிபகவான் அவ்விடம்விட்டுச்சென்று அவரதுமகிமையினால்மறைந்தனர் பந்துபோன்ற தனங்களையுடைய அரம்பைமாதர்கள் பரதநாட்டியத்தைப்பார்த்து நீங்கியபின்பு தேவேந்திரன் தன்மனதினுள் எண்ணிப்பார்த்து நம்மிடத்துக்குருவந்தனைசேர்த்ததென்று சிந்தித்தான். எ-று (கரு)

உள்ளத்தையன்வெறுப்புணர்ந்திந்திரனுருகிநெஞ்சமுறைகினறநாளினில, வெள்ளத்தாணையரச்கர்மிகவுமேவெகுண்டுவந்தமரேற்றிடுமெல்லையில், வளளத்தார்புருகூதனுடைந்துளமறுகிநொந்துமலரவன்பாற்சென்று, மெள்ளத்தான்றனெளிமையுநீயவர்வீரமும்வருதுன்பும்விளம்பினன்.

(இ-ள்) பிரகற்பதிபகவான் மனதில்வெறுப்படைந்திருப்பதை இந்திரனுணர்ந்து மனமுருகித் துக்கித்துக்கொண்டிருக்கும்நாளில் வெள்ளங்கணக்காகச்சேனைகளுடைய இராட்சதக்கூட்டம் மிகவும்கோபித்து யுத்தத்துக்குவந்தசமயத்து போகத்தினால் நிறைவடைந்த இந்திரன் நெஞ்சுகலங்கித்தளர்ந்துவருந்திப் பிரமனிடத்தடைந்து மெதுவாகத் தானேதனது பலவீனத்தையும் அரக்கர்களது பராக்கிரமத்தையும் அதனாலவிளையுந்துன்பத்தையும் கூறினான். எ-று, (௧௭)

கேட்டுநெஞ்சினிலோர்ந்துகிளிமொழிக்கிளவிநாயகன்கேளவனுமோதுவான், நாட்டுமுன்னைப்புகழுமுன்வலுமையுநலனுறுங்குலிசத் தினமகிமையுங், கூட்டுமுன்னைக்குருவுள்ளக்குறையினாற்குலைந்ததேதநற்குருவருளிலலையேல், மூட்டுதீயிலவிழுஞ்சருகாகுமேமுரணும்வாழ்வுமுழுதும்புகழுமே.

(இ-ள்) இவ்வாறு இந்திரன்கூறியதைக்கேட்டு கிளியைப்போலும் வசனிக்கும்வார்த்தையுடைய சரஸ்வதிபதியாகிய பிரமன் தன்மனதில யோசித்துக்கூறுகின்றான் உலகத்தில் நிலைநாட்டப்பெற்ற உனது கீர்த்தியும வல்லமையும நன்மையமைந்த வச்சிராயுதத்தின்மகிமையும் உனக்குநல்லறிவுணர்த்தியகுருவின் மனக்குறைவினால ஒழிந்ததேயன்றி மற்றொன்றாலல்ல ஒருவனுக்கு ஆசிரியனருளையில்லாவிடில அவனதுவல்லமையும்சகலவாழ்வும் எல்லாகீர்த்தியுமமூட்டி எரியப்பட்ட அக்கினியிலவிழுந்த சருகுக்கொப்பாகும். எ-று. ஏ-அசை. (௧௮)

ஆதலாற்குருவினமிக்கருமபொன்றுவதிலலையவ்வையனுஞ்சென்னுறான், வேதமேயுருவாநதுவட்டாவெனுமெய்த்தவத்தனொருவனுண்டன்னவனை, காதலனமிகுவிசுவரூபனுநகருணையானமிகுந்துண்டுகளிக்கவுந, தீதிலாவன்னமுமொண்சுராதெவிட்டவுண்ணவுமேசிரமூன்றுளான.

(இ-ள்) ஆதலின் எவர்க்கும் குருவில்லாமல் ஒருகாரியமுமமுடியாது அந்தப்பிரகற்பதிபகவானும் இனி உனக்கெதிர்ப்படார அதுவன்றி வேதமே ஒருருவெடுத்துவந்ததென்று சொல்லத்தக்கத்துவட்டா என்னும் பெயருள்ள ஒருதவசிரேட்டருளர் அவரதுபுத்திரர் விசுவரூபரெனனும் பெயருடையவர் அவர் அமுதத்தையும குற்றமற்ற அன்னத்தையும ஒள்ளியகள்ளைத்தெவிட்டும்படி உண்ணவும மூன்றுசிரமுள்ளவர் எ-று. ஏ-அசை. (௧௯)

அன்னவன்றனையேகுருவாயடைந்தவனியன்புபெறிலவ்வரக்கர்பேண், தன்னையுஞ்செயித்தேவிண்ணரசெனுந்தன்மைமேவுவையென்றயன்சாற்றலு, மின்னுபொன்முடிவானவர்வேந்தயவவேத

மாதவன்பாலடைந்தேத்தியே, மன்னுதனகுருவாகக்கொடுவந்து
மரையொண்பீடிகைவைத்துவணங்கினன.

(இ - பு.) அவ்விச்சுவரூபரையேகுருவாகக்கொண்டு அவருக்கு அன்புசெய்தொழுகப்பெற்றால் அவ்வரக்கர்களது யுத்தத்தையும் வெற்றிகொண்டு தேவர்களுக்கிறைவனென்னும் தன்மையையும் அடைவாயென்று பிரமன்கூற பிரகாசிக்கும்பொன்மயமான கிரீடத்தையுடைய தேவேந்திரன் அவ்விச்சுவரூபனிடத்தடைந்து தோத்திரஞ்செய்தபின்பு தனது ஆசிரியனாகக்கொண்டு அவரை அழைத்துவந்து பதுமாசனத்திலவைத்து வணங்கினன். எ-று. (௨௦)

மூன்றுமாமுகன்றானுங்கருணையானமுன்னிருந்தகுலிசந்தனைவா
ங்கியே, யானைநல்லசிலாக்கியந்திரத்தாலத்தருகுப்பிமையுண்டாக
கியே, சான்றவனைகொடுத்தேயுமைபகையெலாந்தவிர்த்தியெனறுரை
சாற்றலுமவாங்கியே, தோன்றலுமகிழ்ந்தெய்தியராக்கரைத்தொலை
த்துவாகையுஞ்சூடியேமீண்டனன

(இ - பு.) முச்சிரமுள்ள அவ்விச்சுவரூபர் கருணையினால இந்திரனிடத்துமுன்னமேயிருந்த வச்சிராயுதத்தைவாங்கி மிகமேலாசசிறந்தமந்திரபலத்தினால அதற்குமகிமையுண்டாக்கி அவ்விச்சுவரூபர் திரும்ப இந்திரனிடங்கொடுத்து இதைக்கொண்டு உனது பகைவரையெல்லாம் வெல்லுவாயென்றுகூற இந்திரனும் அதைப்பெற்றுக்கொண்டு மகிழ்ச்சியுடன் அடைந்து அவ்வரக்கர்களையெல்லாங்கொன்று வெற்றிமாலைதரித்துக் கொண்டு திரும்பினன். எ-று ஏ-நான்கும்-அசை. (௨௧)

வந்துமிக்கநற்போகந்துய்த்தேமகிழ்வாசவன்றனகுருவைவண
ங்கியே; யெந்தைநீயெனபகைஞர்களினமுமிருக்கின்றோர்குல
நாசமதெய்தவே, செந்தீவேள்விமுடித்தருளென்றலுஞ்செனனி.
மூன்றவனவ்வகைசெய்புழி, யந்தவராக்கத்தாயாருந்தமமாதுலாசகா
ளைகால்வழியாதலிலன்புறவே.

(இ - பு.) இந்திரப்பட்டத்துக்குவந்து மிகுந்ததேவபோகங்களைநுகர்ந்து மகிழ்ந்திருக்கும இந்திரன் தனது நவீனகுருவாகிய விச்சுவரூபரைத்தொழுது எனதுதந்தையே இன்னும் இருக்கின்ற எனதுபகைவர்களதுகுலநாசமாகும்படி அக்கினியாலாகியயாகம் ஒன்றுமுடிக்கவேண்டுமென்று வேண்ட முச்சிரமுள்ள அவ்விச்சுவரூபர் அவ்வாறு யாகஞ்செய்யுங்காலத்து அந்த அரக்கர்களெல்லாம் தனதுமாதுலன்வமிசமானபடியால் அவர்கள் மீது அன்புவைத்து. எ-று. ஏ-மூன்றும் அசை, (௨௨)

அச்சமின்றியவியனற்கீயும்வாயடவிராக்கதர்க்கெய்தவளித்தலும்
தச்சதிந்திரனுள்ளத்திவிச்செயறன்னையோர்ந்துதழுக்கணாகியே

விண்புகுகிளைகடம்மைக்குறைக்கினுமீட்டுமெய்த
கண்புறவுரைத்துநின்றநங்கையாகநினைசசொனனுன்.

(இ - பு.) தண்ணீரைக்கொண்டுகொண்டால அந்த இடம்தாழ்ந்திராமல் ஒரேமாதிரியான சமநிலையாய்நிற்கும்படிக்கூறி நீண்டமரங்களுக்கெல்லாம் ஆகாயத்தைநோக்கிச் செல்லுங்கிளைகளைவெட்டினுலும் திரும்பவளரும்படி யன்புடன்கூறி மிகுதியாயநின்ற மாதர்களுக்கு இவ்வாறுகூறினர்.

மாங்குயிற்குதலையினசொன்மாதாதமவயிற்றிலுற்ற
தீங்கறுகருப்பமுற்றிச்சேயினையீனுங்காறு
மோங்கியமகிணனினபமுவப்பவுமவருங்கடந்தா
ளுங்கவாமகிழ்ந்துசென்றுமரா கோனினிதுவாழ்ந்தான்.

(இ - பு) மாமரத்திலுள்ள குயிலைப்போன்று மழலையாகிய இனிய சொற்களையுடைய மாதர்கள் தமதுவயிற்றிற்பொருந்திய குற்றமற்றகருப்பம் வளர்ந்து மக்களைப்பெறும்வரையும காதல்மிகுந்தசமதுகணவர் இன்பத்தைநுகரவும்வரங்களைக்கொடுததார அவ்வரம்பெற்றுக்கொண்டு அவ்விடத்தை அவாமனமகிழ்ந்து சென்றார்கள தேவேந்திரனும் சுபாவப்படி வாழ்ந்திருந்தான். எ-று. (உ-அ)

இந்தவாறிருக்குமெலலையிறந்திடும்விசுவரூபன
றந்தைவெய்துயிர்த்துச்சீறித்தடவரைச்சாரறபோந்து
மந்திரநெறியாலவேளவிவளாததினனபருவுதீயில
வெந்திறலோடுமவந்தானவிருத்திராசுரனெனுமபோன்.

(இ - பு) இவ்வாறிருக்கும்போது முன்பு இந்திரனால் இறந்த விசுவரூபனதுபிதா பெருமூச்செறிந்து கோபித்து விசாலமாகிய மலைச்சாரலடைந்து மந்திரமுறைப்படி யாகஞ்செய்தான அந்தயாகத்தில விருத்திராசுரன் என்னும ஓர் அவுணன் மிகுந்தபராக்கிரமத்தோடும உதித்தான, எ-று.

அனையவன்றன்னைநோக்கியமராதிபனைவென்று
பின்னைநீமீளதியென்றுபெருந்தவமுனிவனகூறத்
தங்கிகரரக்காகோடிசதனிப்படைசூழவெய்திப [ன்.
பொன்னகரிறைவனோடுபோர்க்குப்புலோமசைகேள்வனோர்ந்தா

(இ - பு.) அவ்விருத்திராசுரனைப்பார்த்து நீபோய் தேவேந்திரனை வெற்றிகொண்டுவா என்று பெரியதவமுனிவராகிய துவட்டாகூற தமக்குத்தாமே ஒப்பாகிய கோடி அவுணசேனைகள் தன்னைப்புடைசூழச்சென்று தேவலோகத்தடைந்தான் இந்திராணிகணவனாகிய இந்திரனும்யுத்தத்திற்கு எதிர்த்தான் எ-று. (உகூ)

இருதிறத்தவருமவ்வமபோரேற்றிடுமெல்லைவானோர்
வெருவினருடைந்துபோனர்விருத்திராசுரன்மீது
தருவரசெதிர்த்துக்கையிறறரித்தவச்சிரத்தைவீச
வருவரைமாரபிற்றாக்கியழிந்ததுகுலிசமாதோ.

(இ-பு.) இவ்வண்ணம் அவுணசேனைகளும் அமரர்சேனைகளும் ஒன்றுகூடிக் கொடியயுத்தஞ்செய்யுங்காலத்துத் தேவர்கள்பாய்ந்து புறங்காட்டினார்கள் அந்தத்தருணத்தில் விருத்திராசுரன்மீது இந்திரனெதிர்த்துத்தனது வச்சிராயுதத்தைவீச அவ்வச்சிராயுதம் அவனுடையமலைபோலும் மார்பிற்பட்டு அழிந்தது. எ-று. மாது-ஓ-அசை. (௯௰)

வச்சிரமழிந்தசெல்லைவானவேந்தசுரன்விட்ட
முச்சிரச்சூலத்தாலேமுரணழிந்தோடிச்சென்று
நச்சமெய்ப்படைகளோடுந்தாமரைக்கிழவன்பாற்சென்
றிச்செயலனைத்துஞ்சொற்றிருவருமரிபாற்சென்றார்.

(இ-பு.) வச்சிராயுதம் பாழாயானசமயத்து இந்திரன் அவ்விருத்திராசுரனால்விடப்பட்ட மூன்றுதலைகளையுடைய சூலாயுதத்தாலே தனது வலியொடுங்கிப்புறங்காட்டியோடித் தனதுசரீரத்திலபாய்ந்திருக்கும் அஸ்திரங்களுடனே பிரமனிடத்தடைந்து இந்தச்செய்தி முழுமையுங்கூறினான் பிறகு இருவரும் ஒன்றுசேர்ந்து திருமாலிடம்போனார்கள். எ-று, (௯௧)

மாயவன்பாற்சென்றிந்தவாறெலாமுரைப்பக்கேட்டே
யாயவனிதனைச்சொன்னானமுதமுன்கடையுநாளிற்
சேயவானவர்கள்கையிற்செறிந்தநற்படைகளெல்லாந்
தூயனாந்ததீசியென்னுந்துகளின்மாதவன்பால்வைத்தார்.

(இ-பு.) திருமாலிடத்தடைந்து இவ்வாறுமுழுமையுங்கூறக்கேட்டு அத்திருமால் இவ்வாறு கூறினார் முன்னம் திருப்பாற்கடலில் அமுதங்கடைந்தகாலத்து செம்மையமைந்த தேவர்கள்கையிலிருந்த உயர்ந்தபடைகளெல்லாவற்றையும் ததீசி என்னும் பரிசுத்தராகிய குற்றமற்றபெரிய தவசிரேட்டரிடத்தில் கொடுத்துவைத்தார்கள். எ-று. (௯௨)

அன்னவன்விழுங்கியந்தவரும்படைக்கலங்களெல்லாந்
தன்னியன்முதுகெனும்பினுடனுறத்தாங்கிக்கொண்டான்
பன்னுமத்தூயோன்பாற்போய்ப்ப[illegible]வெள்ளத்திவாங்கி
மின்னுநற்குலிசமாச்செய்ததுகொண்டுவிறல்கொள்ளென்றான்.

(இ-பு.) அத்ததீசிமுனிவர் அந்தப்படைகளெல்லாவற்றையும்விழுங்கித்தன்னுடைய இயல்பான முதுகந்தண்டெலும்பினுடன் பொருத்தித் தாங்கிக்கொண்டிருக்கின்றார் ஆகையால் நான்கூறிய அம்முனிவரிடத்திற்சென்று பெருத்தவெண்மையான அம்முதுகெலும்பை வாங்கிக்கொண்டு பிரகாசிக்கும் வச்சிராயுதமாக்கி அதனால்வெற்றியடைவாயென்று கூறினான் எ-று. இவ்விரண்டுங்குளகம். (௯௩)

ஓங்கியகருணைச்செங்கண்மாலிவையுரைப்பக்கேட்டே
யாங்கவர்முனிவன்பாற்சென்றடிமலர்தொழுதுபோற்றித்
தாங்களவந்தாற்றவாறுசாற்றலுந்தவந்தானெய்ந்து
தீங்கறுவேள்விமுற்றிச்செறிசடமதனைவீழ்த்தான்

(இ - பு.) மிகுந்தகருணையையுடைய திருமால் இவ்வாறுகூறக்கேட்டுப்பிரமன் இந்திரன் ஆகிய அவ்விருவரும் அந்ததீசியிடத்தடைந்து அவரதுபாத தாமரையைவணங்கி துதித்துத்தாங்கள் வந்தசெய்தியைக்கூற அத்ததீசிமுனிவரும் உடனேமனமிசைந்து குற்றமற்ற ஒருயாகஞ்செய்துமுடித்து தமதுசரீரத்தினை அங்குவீழ்த்தினார். எ-று (௩௪)

ஆக்கையைவீழ்த்துஞானத்தருந்தவன்கயிலைசேர்ந்தான்
றாக்கியவ்வுடலைககீண்டுதோன்றுயவெள்ளென்புகொண்டு
காக்கவெண்குலிசமாக்கிக்கைக்கொடுக்கனவேந்தன
ருக்கினரக்கன்மீதுதரித்திலனோடலுற்றான்.

(இ-பு.) அவ்வாறுயாக்கையைவீழ்த்தி மெய்ஞ்ஞானமுடைய அருந்தவராகிய ததீசிமுனிவர் திருக்கயிலையை அடைந்தார் பிறகு அவ்வுடலைத் தூக்கிக்கீறியதனுள் வெளிப்பட்ட முதுகெலும்பைவச்சிராயுதமாக்கிக்கொண்டு கையிலேந்தி இந்திரன் அவ்விருத்திராசுரன்மீது தாக்கினான் அவ்வசுரன் பொறுக்கமாட்டாமல் ஓடத்தலைப்பட்டான் எ-று. (௩௫)

அரக்கனுமஞ்சியோடியாழியுட்புகுந்தானவானம்
புரக்குமவேந்தெங்குந்தேடிப்புணரிபுக்கினனென்றோர்ந்து
சிரக்குவைக்கமலயோனியுடனுறச்செய்கைசெப்பக்
கரக்கும்வன்கணனைக்காண்டிகலசமாமுனியாலென்றான.

(இ - பு) அவ்விருத்திராசுரனும்பயந்து ஓடி கடலினுள்ளேபுகுந்துகொண்டான் தேவலோகத்தையாளும் இந்திரன் எங்குந்தேடிக்கடலுட்புகுந்தானென்றுணர்ந்து நான்குசிரங்களையுடைய பிரமனிடத்து நடந்த விர்த்தாந்தங்கூற அவ்வாறு ஒளித்துக்கொண்டகபடனை அகத்தியமுனிவரால் தெரிந்துகொள் என்று கூறினன். எ-று. (௩௬)

பங்கயாதனன்சொல்வண்ணமபண்ணவர்பெருமானெய்தித்
தங்கியகும்பயோனிதனக்கிதுதெரியச்சொன்னா
னங்கவன்கருணையாகியாழிநீரதனையெல்லாஞ்
செங்கையிற்கொண்டேயுண்டானறியனைத்தெரியக்கண்டான்

(இ - பு) பிரமன்கூறியவாறு இந்திரன்சென்று புகழ்தங்கிய அகஸ்தியமுனிவருக்கு இச்செய்திகளைத்தெரியக் கூறினன் அவர்கிருபையுடையவராகி கடல்நீர்முழுமையும் தமதுசிவந்தகரத்தால மொண்டுஉளுந்தளவாகத்திரட்டிக் குடித்தார் உடனே அவ்விருத்திராசுரனைப்பார்த்தார்.

இந்திரனவிரைவிற்சென்றேயிருங்கரக்குலிசத்தாலே
வெந்தொழிலரக்கன்சென்னிவீழ்த்தினான்வீழ்த்தபின்னைச்
சிந்துவைக்கும்பயோனிசெறிந்தகோசத்தாலவிட்டான்
வந்ததுகடன்முன்போலயனானுலகந்தனைச்சூழ்.

யாருமாமுகத்தன்றந்தவருணைதிரிந்தோய்ந்து
நீறும்மேனிபூசிநெஞ்சிலைந்தெழுத்தையுன்னி.

(இ-பு) வேறு எந்தக்காரணத்தாலும் இந்தத்தீவினையாகியபாவம் நீங்காதென்றுநோந்த மனமுடையவனாகிவிளங்கும் மதில்சூழ்ந்த சுருதிபுரியைச்சேர்ந்து முருகக்கடவுளால் உண்டாக்கப்பட்ட அருமையமான குளத்தியில்நீராடித் திருவெண்ணீற்றை உடன்முழுதும்பூசி மனதின்கட்டத்துத் திருவைந்தெழுத்தையும் தியானித்து. எ-று. (சஉ)

இளமுலையாகன்பொற்றுளிணைமலரடியைப்பூசை
வளமுறச்செய்துவேதமந்திரங்களாலன்பா
லளவறுதுதிகள்செய்தேயடிதொழுதேத்துநாளிற்
களமுறும்விடத்தோனுள்ளக்கருத்தினிலனைபுதோய்ந்தான.

(இ-பு,) இளமுலைநாயகியாரை ஒருபாகத்துடைய வேதபுரீசரது இரண்டுபாதங்களாகிய பொற்றாமரைகளையும் ஆகமவிதிப்படிவளப்பம்பொருந்தப்பூசித்து வேதமந்திரங்களைக்கொண்டு மெய்யன்போடு அளவற்றதோத்திரங்களசெய்துவழிபட்டுவருகின்றநாளையில கண்டத்தில விடத்தைத்தரித்த சிவபிரான்தமது திருவுள்ளத்துக்கருணைகூர்ந்தார், எ-று. இவ்விரண்டுங்குளகம. (சங)

அகத்தியமுனிசெய்பூசைக்காரணமுரைத்தவெந்தை
மிகத்தன துள்ளத்தனபுமேவிவெள்விடைமேலாகி
மகத்துவத்தமரர்சூழவந்துமாதவத்திலிந்த
சகத்தினிற்பெருமைபூண்டதமிழ்முனிமுனபுநின்று.

(இ-பு.) அகத்தியமுனிவர்செய்த பூசைக்கு வேதங்களுரைத்தருளிய எமது தந்தையாராகிய வேதபுரீசர் மிகவும் தமதுதிருவுள்ளத்திற் கருணைகூர்ந்து வெண்மையான இடபவாகனத்தின்மீதூர்ந்து மகிமையுடன் தேவர்கள்புடைசூழும்படிவந்து பெரியதவத்தில இந்நிலவுலகத்தில் பெருமையடைந்த அகத்தியமுனிவருக்கு எதிரிலநின்று. எ-று. (சச)

அருந்தவத்தவரைவானத்தமரரைநோக்கியிந்த
பெருந்தவத்தவன்கோசத்தாறபெய்ததிக்கடலேயேனும்
வருந்திகழ்மாதமைந்துபருவத்தும்வருடத்தெய்தும்
பொருந்துபுண்ணியநாளகட்டன்னிணுயபுனிதமாமால.

(இ-பு.) அங்குள்ள அரியதவசிகளையும் தேவலோகவாசிகளாகிய விண்ணவரையும் பார்த்து இவ்வகத்தியர்தமது கோசத்தினால்விட்டது இச்சடல்நீராயினும் மாதங்கள்தோறும் விளங்கிவருகின்ற பஞ்ச பருவம் வருடந்தொறும்வருகின்ற புண்ணியதினங்கள் இவ்வகைய நாட்களில் இத்தீர்த்தம் புண்ணியதீர்த்தமாயிருக்கக்கடவது, எ-று. நூல்-அசை. (சரு)

பண்டுவாரிதியிற்றோய்ந்தோர்க்கெய்துநற்பலத்துமேலா
யுண்டுநான்முறைத்தநாளிலொலிகடற்படிந்தோரியார்க்கு
மண்டாகாளேழெனறோதுமாழியும்புனிதமென்றான்
றொண்டரானவர்கட்கெய்துந் துயர்தவிர்த்தருளுந்தூயோன்.

(இ-பு) இதற்குமுன்பு கடல்நீராடினோர்க்குக்கிடைக்கும் பலனில் மேம்பட்டபலன் நாமஉரைத்தநாட்களில் சத்திக்கும் இக்கடல்நீர் ஆடினார்க்குண்டு தேவர்களே இந்தச்சத்தசமுத்திரமும் பரிசுத்தமானதே யென்று திருவாய்மலர்ந்தருளினார் யாரெனில் அடியார்கட்கடைந்ததுன்பத்தைத்தவிர்த்தாட்கொள்ளும் தூயராகிய சிவபிரான். எ-று. (௪௬)

ஒப்பருமிந்தநல்லவுயர்வரமருளிவேதஞ்
செப்பியவெங்கோனந்தச்சிவலிங்கந்தனிற்சேர்ந்தான்
தப்பிலாமாதவத்துத்தூயதமிழ்முனிபின்னுஞ்சென்றே
யப்பெருந்தலத்திற்றானோரரன்பிரதிட்டைசெய்தான்.

(இ-பு.) ஒப்புக்கூறுதற்கரிய இவ்வாறான மிகவுயர்ந்த வரங்கொடுத்துவேதமோதியருளிய எமதிறைவராகிய வேதபுரீசர் அச்சிவலிங்கத்தில் கரந்தருளினார் தப்பில்லாத மகாதவத்தையுடைய தூயராகிய அகத்தியமுனிவர் மறுபடிசென்று அத்திவ்வியதலத்தில் தாமே ஓர் சிவலிங்கப்பெருமானைப் பிரதிட்டைசெய்தார். எ-று. (௪௭

வருகுநதிக்குத்தென்பான்மறைசைமாநகர்க்குமேல்பால்
பொருவொருகுரோசதூரம்போந்துவண்டேய்நீராடித்
தருமலரிலிங்கமொன்றுதாபித்தாகமநூல்வண்மை
பெருமையாற்பூசைசெய்துபேசுபல்லாண்டங்குற்றான்.

(இ-பு.) பிரவாகித்துவரும் நதிக்குத்தெற்குப்பக்கமாகவும் அச்சுருதிபுரிக்கு மேற்குப்பக்கமாகவும் உள்ள ஒருகுரோசதூரம்போய் அவ்விடத்தில் பரிசுத்தநீரில்மூழ்கி புஷ்பத்தினால் ஓர் சிவலிங்கத்தைத்தாபித்து ஆகமவிதிப்படி சிறப்பாகப்பூசித்து சொல்லுகின்ற பலவருஷம் அங்கிருந்தார். எ-று. (௪௮)

இந்திரன்சாபந்தீர்ந்தசருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ... ௧௫௦.

———o———



௧

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இராகவன்பாவந்தீர்ந்த சருக்கம்.

———(*)———

அளவிலகருணைசசூதனிவையுரைதநைமிசாரணியா
புளகமுறுமேனியராகிமீட்டுந்துதிப்புசலஙகளுரா
களபமணிமெனமுலைசசனகிசனாவனமனறனைசககணனுதலை
வளமையுமபூசனைபுரிநதவெனாமுனைனமவழஙகினையால

(இ-ள்) அளவற்ற கருணையையுடைய சூதமாமுனிவர் இவ்வாறு இந்திரனைப்பாவந்தீர்த்த சரித்திரத்தைக்கூறிமுடிக்க நைமிசாரணியமுனிவர்கள் புளகாங்கிதராய்மீளவும் சூதபுராணிகரைத்தோத்திரஞ்செய்து சொல்லுகின்றார் கலைவல்லபச்சனகன்தம்மெல்லியதனபாரங்களையுடையசானகிமணாளராகிய இராமமூர்த்தி சுராதிபுரியிலவீற்றிருக்கும் வேதபுரீசரை வளப்பம்பொருந்த வேதாகமவிதிப்படி பூசித்தார் என்று முனைப்புத்திருவாய்மலர்ந்தீர். எ-று. ஆல்-அசை (க)

அவனஞ்செய்த்தககருமமெனசொலராகசருபாமனைபுசனற
சிவனபஙகயததாடனிறபூசைசெயதுகேனகொலசெபபுகெனத்
தவனறகுசூதமுனிமகிழநதுகணடாமயாபொனமுகமலாப
பவமறவிடசசொறறவனாெருபூதபணபுகேளிரெனபபகாநதான்

(இ-ள்) அந்த இராமமூர்த்தி அவ்வேதபுரிக்கு வரவேண்டியகாரணமென்ன தேவர்களுக்கு அரியபெருமையமைந்த வேதங்களைப்போதித்த அவ்வேதபுரீசர் திருவடித்தாமரைகளிற் பூசைசெய்தகாரணமென்ன சொல்லவேண்டுமென்றுகேட்கத் தவவலிமைபெற்ற நல்ல சூதமகாமுனிவர் மனமகிழ்ந்து குளிர்ந்ததாமரைமலர்போன்ற முகமலர்ச்சியுடன் முன்புசொன்ன அவ்விராமமூர்த்தி தமது பாவந்தீரும்படிப்பூசித்த சரிதையைக்கேளுங்களென்று இவ்வாறு சொல்லத்தொடங்கினார். எ-று. (உ)

அணியாரயோத்திபுரிவேந்தனரசாபணியுந்தயரதனுந
திணியாரதிண்டோளவனபுகலவனசிறநதபுகழாரசிராமன் [ம
மணியாரகொஙகைச்சிறறவைசொனமதிததுததனதுமனைவியொடு
பணியாரபணியுமிளவலொடும்படர்ந்தேகானிறபபினுளில.

(இ-ள்) அழகமைந்த அயோத்திபுரிக்கரசனும் மற்ற அரசர்கள் இறைசெலுத்தி வணங்குகின்றவனும் வல்லமைபொருந்திய திண்ணியதோ

ள்களுடையவனுமாகிய தசரதனுடைய புத்திரராகிய மேலானபுகழையு டைய இராமர் மணிமாலைகள்தரித்த தனங்களையுடைய சிறியதாயார்சொ ன்னசொல்லையே வேதவாக்கியமாகமதித்து தம்மனைவியோடும் சத்துரு க்கனனைவரும் பணியப்பட்ட தமது தம்பியுடனுங்காட்டிற்சென்று சஞ்சரி க்கும் நாட்களில் எ-று. (௩)

தலையீரைந்துநாலைந்துதடந்தோளுமலையுமுளவரக்கன்
றொலையாவஞ்சனையாலேசோரத்தொழிலாற்சீதைதனைக்கொடுபோ
யலையாரிலங்கைசேர்த்தலுமரிவைதனைத்தேடினராகி
யுலையாமனத்தோடிளவலொடொருங்குதேடிக்கலங்கினராய்.

(இ-ள்.) பத்துத்தலைகளும் இருபது பெருத்ததோள்களாகிய மலை களையுமுடைய அரக்கனாகிய அதிபாதகனான இராவணன் கள்ளத்தன மாய்ச் சீதையைக்கொண்டுபோய் கடல்சூழ்ந்த இலங்கையில் அடைத்தலும் இராமலட்சுமணர் அச்சீதையைத்தேடினவர்களாய் அலைகின்றமனதுடன் வருந்திக்காடெங்கணுந்தேடிச் சோர்ந்தவர்களாய எ-று. (௪)

அடலார்சுக்கிரீவனைநண்பாக்கியவன்முன்னவனாவாலி (போய்ப்
புடனேபோர்செய்வலியிலனொளித்திங்கிருந்தேயொருக்கணை
படவேபெய்துவாலிதனைப்படுத்தானத்தப்பாவம்பயிலக்
கடலையடைத்துப்போயிலங்கைக்காவலனையுமுயிர்போக்கி.

(இ-ள்.) வன்மைமிக்கச் சுக்கிரீவனைச்சினேகங்கொண்டு அவனுடன் பிறந்த தமையனாகிய வாலியோடுயுத்தஞ்செய்து பெரியவுடைய வன்மை யில்லாதவராய் ஒளித்திருந்து ஒருகணை அவன்மேற்படும்படியெய்து அவ் வாலியைக்கொன்றார் அப்பாவம் சம்பவிக்க அத்துடன்கடலில் அணைக் கட்டி இலங்கைக்குப்போய் இராவணனையுங்கொன்று. எ-று. (௫)

சீதைதனைக்கொண்டவண்மீண்டுசிறந்தவயோத்திக்கேகின்ற
போதில்வாலிதனைக்கொன்றபுரையான்முன்னம்புணர்பாவந்
தீதுபுரியவிதற்கேதுசெய்வோமெனவேசிந்திப்ப
நாதனதுயமுயிர்த்தசம்புநாதனிதனைநவிற்றுவனால்.

(இ-ள்.) சீதையை இட்டுக்கொண்டு அவ்விடத்தினின்றுந் திரும் பிச்சிறப்புமைந்த அயோத்திபுரிக்குப் போகின்றபோது வாலியைக்கொலை செய்தகுற்றத்தால் முன்னமேநேர்ந்த பாவமானது பலவிததீமைகளைச் செய்துகொண்டிருக்க இத்தீங்குநீங்க யாதுபுரிவோம் என்றுசிந்தித்துக் கொண்டிருக்க அவ்வாறு இராமர் துயருறுநிலையுணர்ந்த சாம்புவந்தர் இவ்வாறுகூறுகின்றார். எ-று. ஆல்-அசை. இந்நான்குங்குளகம்.

மன்னேயுனைச்சூழ்பவந்தீருமவகையொன்றுள்ளதியானினைந்தே
தென்னேயென்னிற்பொன்மகிழுமிராமியுறுகோபுரநிலையு

தண்ணீர்பெருகுநதியருகுநாகருரகர்நவில்குரலுந்
தன்னேரின்மாதவர்வேள்வித்தனலுந்தெரிவதுகாண்டி.

(இ-பு) இராமமூர்த்தியே உம்மைச்சூழ்ந்த பாலந்தீருமவகையோனிருக்கின்றது அதனையான் இப்போதுநினைந்தனன் அதுஎன்னவெனில் பொன்னாலாகியமதிலும் சூரியமண்டலமளவும் ஓங்கிய கோபுரங்களும் நல்லதீரானது பெருகுகின்ற சுகநதிதீரமும தேவலோகத்தாரும் நாகலோகத்தாரும வசனிக்கின்ற நாதவோசையும் தமக்கோர் ஒப்பில்லாத மறையவர்கள் வேள்விவளர்க்கும் ஓமாக்கினியும் அதோதெரிகின்றதுபாராய்.

அந்தத்தலமவானவாதிசனரியமறையோதியதலமா
முந்தக்கமலத்தயனைந்துமுடியோடிருந்துபூசித்தான
வந்தகருமான்மாதங்கவடிவாயிருந்துமருச்சித்தான
கந்தமலர்க்கற்பகவேந்தனகண்டிரண்டுளனைக்கைதொழுதான்.

(இ-பு) அந்தத்தலத்தில தேவர்களுக்குச்சிவபிரான் வேதமோதுவித்தது பிரமன் ஐந்துமுகங்களுடனிருந்தபோது சிவபிரானை வழிபட்டனன் திருமால் பெருமையமைந்த தங்கநிறமாயிருந்தபோது வழிபட்டனர் வாசனைகமழும மலர்களையுடைய சற்பகதருவுக்கிறைவனாகிய இந்திரன் இரண்டு கண்களுடன் இருந்தபோது பூசித்தனன். எ-று, (அ)

வளர்தலழிதல்கறையில்லாமதியுஞ்சிலநாளபூசித்தான்
றளர்விலிரவிநெடுங்காலந்தலத்துண்மருவியருச்சித்துக
கிளர்மின்கிரணவொளிபெறறுக்கேழார்மணித்தேர்த்தாமகிழா
வளவிறினகரனெனுநுவுமவனையானறிவேன்.

(இ-பு.) சந்திரன் கலைகள்வளர்தல்குறைதல் களங்கமுடைமை இதுகளெல்லாம் இல்லாதிருந்தகாலத்தில் சிலநாள அத்தலத்தில் பூசித்திருந்தனன் குறைவில்லாத சூரியன்அநேககாலம அத்தலத்திறவசித்துவேதபுரீசரைப்பூசித்துமிகவும் விளக்கமானகிரணங்களாகிய ஒளியைப்பெற்றுக்கொண்டு வயிரமுள்ள இரத்தினங்களழுத்திய தேர்பெற்றுமகிழ்ந்து அவனை பெருமைக்கோரளவிலலாத தினகரனென்னும் பெயரும் வகித்ததும் நான் அறிவேன். எ-று (௯)

பாரின்மாதுத்தரியமபோற்பாநதுவருமச்சேயாற்றின
தீரத்திருக்குஞ்சுருதிபுரிசேர்நதுசிவனைத்தெரிசித்தார்
சேரும்பவங்களகடைகாலிறசெறியும்பூளைமலராகும்
வீரவதற்குநிகர்தலங்கள்வேறுபுவியில்யான்காணேன்,

(இ-பு.) பூதேவியின் உத்தரியமபோல் பரவிவருகின்ற சேயாற்றின்கரையிலுள்ள அச்சுருதியுரியை அடைந்து வேதபுரீசரைத்தரிசித்தவர்கள் பாவங்களெல்லாம் ஊழிக்காலத்துதிக்கும் சண்டமாருதகாற்றிற்சேர்

ந்த பூக்களைப்பூக்கள்போலாம சுத்தவீரராகிய இராமமூர்த்தியே அச்சுருதிபுரி க்கு ஒப்பானதலங்கள்வேறே இந்த உலகத்தில்யான் கண்டதில்லை. எ-று.

வேறு.

அதிறுறுபெருமை முற்றுமறைந்திடு னூழிசெல்லு
மதியுறுமிராமவாகுசுவைவிங்கியபாபத்தைப்போற்றி
யெதிருறுபவந்தனைநீக்கியேகுதலகருமமாகுங்
கதிர்மணிவண்ணனென்றனாகாலங்கள்பலவுங்கண்டான்

(இ-பு.) அத்தலத்துள்ள பெருமைமுழுதும சொல்லவேண்டுமோ ஊழிகாலஞ்செல்லும் நட்பபுத்தியமைந்தஇராமமூர்த்தியே ஒளிவிளங்கும் நீலமணிபோலும நிறமுடையவரே அத்தலத்திலடைந்து அவ்வேத புரீசரைப்பூசித்து உனக்குநேர்ந்தபாவத்தைநிவாரணஞ்செய்துக்கொண்டு போகுதல்கடனென்ற என்று அனேககர்பகாலங்களைகண்டோர்த்த சாம்பு வந்தா கூறினா. எ-று. இவ்வைந்துங்குளகம். (கக)

சாம்புவனுரைப்பவுள்ளசச்சுருசலமறுத்திராமன்
பூம்பொலறுவிமானமூர்ந்துபோந்தவணிறங்கியந்தக்
காம்புறழ்தோளிபங்கனகழலிணைபூசைசெய்தே
யாம்பலம்பொதுவாயாலன்புறத்துதிசெய்தானே,

(இ-பு) சாம்புவான் இவ்வாறுரைக்க இராமர் தம் மனதிலுள்ள துயரம்நீங்கிப் புஷ்பகவிமானமீதாரோகணித்துச்சென்று அச்சுருதிபுரியிலி றங்கி அவ்விடத்தெழுந்தருளியிருக்கும் மூங்கில்போலும தோள்களையு டைய இளமுலைநாயகியாரபாகராகிய வேதபுரீசர்திருவடிகளிரணடையும் வழிபட்டுச்செவ்வாம்பல் மலர்போலும் தமதுவாயால்மெய்யன்போடு துதி செய்தார் எ-று. மாது ஓ அசை. (கஉ)

அன்புடன்றுதித்துப்போற்றவரனமிக்ககருணையாகி
மின்பிறழ்மேனியோடுமவிளங்குமான் மழுவினோடு
மென்புறுமாலையோடுமென்னையாளுடையவையன்
முன்புறநின்றான்கண்டான்மூரிவிற்றடக்கைவள்ளல்,

( இ-பு. ) இவ்வாறுமெய்யன்போடுதுதித்துப்பூசிக்கச்சிவபிரான் மிகவுங்கருணைகூர்ந்து ஒளிவிளங்கும் திருமேனியுடனும விளக்கமான மான்மழுவோடும் எலும்புமாலையோடும்என்னை யாளாகவுடைய அவ்வேத புரீசர் இராமமூர்த்திக்கு முன்பாகநின்றார் விசாலமான கையினிடத்து விற்பிடித்திருக்கும்இராமமூர்த்தியும் பார்த்தார். எ-று. (கங)

கண்டுமையனுள்ளக்களிப்பினூற்றுதிசெய்தேத்த
வொண்டொடிபாகனன்பாலுரைத்தனனிராமநீமுன்

றிண்டிறல்வாலிதன்னைத்திரண்டெழுந்தருவின்பக்கத்
தொண்டியேயெய்தபாவமொழிந்ததனமினியுறாதால்

(இ-பு) இவ்வாறுவரக்கண்ட இராமமூர்த்தி மனக்களிப்பினால் தோத்திரஞ்செய்துவணங்க இளமுலைநாயகியார் பாகராகிய வேதபுரீசர் அன்புடன் கூறுகின்றார் இராமனே நீமுன்பு திண்ணியவன்மையுள்ளவாலியைப்பருத்துததழைத்திருக்கும மாமரத்தின்பக்கத்தில் மறைந்திருந்துபாணந்தேட்டபாவத்தை நிவர்த்தித்தோம்இனி யுன்னையடையாது. எ-று. ஆல்-அசை. (கச)

ஐயவித்தலத்தினீயோரரன்பிரதிட்டைசெய்தே
தூய்யபூசனைமுடித்துன்றொன்னகர்போதியென்ன
மெய்யுரையிராமன்மீண்டுவெங்கனற்றிசையைநோக்கி
யையமில்குரோசதூரமாற்றின்றென்கரையிற்சென்றான்

(இ-பு.) இராமனே இத்தத்தலத்தில் நீ ஒரு சிவலிங்கப்பிரதிட்டைசெய்து தூய்மையாகவழிபட்டுப்பிறகு உனது சுயதேசத்துக்குப்போவாயென்று கட்டளையிட உண்மையானவசனத்தையுடைய இராமமூர்த்தி அவ்வாறேவிடைபெற்றுத்திரும்பி அக்கினிமூலையாக ஒருகுரோசவழியில் அங்குள்ளசேயாற்றிற்குத் தென்கரையிற்போய். எ-று ஏ-அசை. (கரு)

வளம்பெறுமிடமிதென்னமகிழ்வினோரிலிங்கம்வைத்து
விளம்புமாகமநூல்வண்ணமவிமலனைப்பூசைசெய்தே
யுளம்பெருமகிழ்ச்சிபொங்கவொளிர்விமானத்தினேறித்
தளம்பலசூழவையன்சார்ந்தனனயோத்திமாதோ,

(இ-பு) இதுதான் வளம்பொருந்தியதானமென்று அவ்விடத்து மனமகிழ்ச்சியுடன் ஒருசிவலிங்கத்தைப் பிரதிட்டைசெய்து ஆகமங்களிற்கூறும் முறைப்படி அச்சிவலிங்கப்பெருமானைப்பூசித்தது தமதுள்ளத்திற்பேரானந்தம மீக்கூர விளக்கமமைந்த விமானத்தின்மீதாரோகணித்துப்பலசேனைகள் தம்மைச்சூழ்ந்துவர அயோத்திமாநகரத்தையடைந்தனர். எ-று. மாது-ஓ-அசை. இவ்விரண்டுங்குளகம். (கசு)

அன்னவனமைத்துப்பூசையளித்திடும்பரற்குநாமம்
பன்னுவாரிராமலிங்கமென்னவேபாரினுள்ளோ
முன்னியவ்வரனைப்பூசைமுற்றினோர்தொழுதோர்பார்மேல்
மன்னவராகியூழின்வலிதொலைந்திருப்பர்மாதோ,

(இ-பு.) அவ்விராமரால் பிரதிட்டைசெய்துபூசித்த சிவலிங்கப்பெருமானுக்கு இராமலிங்கமென்று பெயர்கூறுவார்கள் இந்நிலவுலகத்தின்கண் அன்புடன்தியானித்து அச்சிவபிரானைப்பூசித்தோரும் வணங்கினோரும் உலகத்தை அரசாளும் மன்னவராகவிருந்து தமது ஊழ்வலியைத் தொலைப்பார்கள். எ-று. மாது-ஓ-அசை. (கஎ)

இந்தவீசனுககுமேல்பாலனுமனுக்கெதிரேதோன்றுஞ்
சுத்தரலிங்கமொன்றுண்டதனையேதுதித்துப்போற்றி
வந்தனை புரிந்தபோக்குவாழ்வுமேன்மேலுமோங்கு
மந்தநாயகனையாருமனுமந்தவீசனென்பார்

(இ-ள்) இப்போதுகூறிய இச்சிவலிங்கப்பிரானுக்கு மேற்குப்பக்கத்திலஅனுமந்தருக்கு எதிரிறபிரசன்னமான அழகமைந்த சிவலிங்கம்ஒன்றுண்டு அதனைத்தோத்திரஞ்செய்து பூசித்துவணங்கினவர்களுக்கு சமபத்துமேன்மேலும அதிகரிக்கும் அச்சிவலிங்கப்பெருமானை அநுமந்தேசா என்று அறிஞா கூறுவா. எ-று. (கஅ)

நன்றுறுமனுமனபூசை நடத்தியவீசனுக்குத்
தென்றிசையதிற்குரோசமிரண்டுறிறதெளிந்தஞானப்
பொன்றிகழ்கும்பயோனிபூசைமுன்புரிந்தவெங்கண
மன்றுளாடி மையர்சசித்துவாழ்த்தினன்கவிமன்னென்றான்.

(இ-ள்) நன்மையமைந்த அனுமந்தன்பூசித்த சிவலிங்கப்பெருமானுக்குத் தெற்குப்பக்கமாய இரண்டுகுரோசதூரம்போனால் அங்குதெளிவாகிய ஞானத்தையுடைய பொன்போலும விளங்கும கலசத்திலுதித்த அகத்தியமுனிவரால் முன்புபூசித்த சிவலிங்கப்பெருமானைச் சுக்கரீவன் பூசித்துத்தோத்திரஞ்செய்தானென்று சூதாகூறினா. எ-று. (கக)

இராகவன்பாவந்தீர்ந்தசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் . . ௬௬௬.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பராசரர்வேள்விச்சருக்கம்,

(*)

சாந்ததவசீலனிதுசாற்றிடலுமைமிசாரணியத்துள்ளோர், சேர்ந்தமகிழ்மனத்தினராய்ச்செபபியபுண்ணியன்சரணஞ்சென்னிசேர்த்திக், காந்திமதிதவழ்வேணிக்கண்ணுதல்வானவாக்குமறைகழறுங்கஞ்சப், பூந்தவிசினயனமாலும் பூமுடிசேவடியறியாபபுனிதன்றன்னை.

(இ-பு.) சாந்தகுணமுடைய தவசிரேஷ்டரான சூதபுராணிகர் இவ்வாறு இராமர் பாவந்தீர்ந்த சரிதையைக்கூறிமுடித்தவுடன் நைமிசாரணியமுனிவர்கள் களிப்படைந்த மனமுடையவராய்த் தமக்குக்கூறிய அச்சூதபுராணிகர் திருவடிகளைச்சிரசிற்சூடிக் கொண்டு பிரகாசத்தை யுடைய சந்திரனைச்சடையிற் றரித்திருக்கும் நெற்றிக்கண்ணையுடைய சிவபிரானை தேவர்களுக்கு வேதமோதுவித்த தாமரையாசனத்தில் வீற்றிருக்கும் பிரமனுந் திருமாலும் அழகியதிருமுடியையும் சிவந்தபாதங்களையும் அறியப் படாதவராயுமுள்ள பரிசுத்தனை

வழுத்துமுயர்மாதவமோர்வடிவாகிப்பரனைத்தன்வடித்துஞானம
பழுத்தபராசரனெனுமோர்பண்ணவன பண்டருச்சித்துப் பயின்ற
பாவ, மொழித்தவன்வேள்வியுமுடித்தேயுயர்ந்தகதியுற்றனனென
றுரைத்தீர்ந்த, விழுப்பமுறுங்கதையெமக்குவிரித்துரைத்தியெனச்
சூதன்விளம்புகின்றான்.

(இ-பு.) வழிபாடுசெய்யும்மேலானபெரியதவமே ஒருவடிவமாகிவே தங்களைமுழுதும் உணர்ந்து மெய்ஞ்ஞானங்கைவல்லியமாகிய பராசரனென்னும் ஒருமுனிவர் முற்காலத்து அச்சுருதிபுரியிற்பூசித்துத் தமக்குமுன்னமேநேர்ந்தபாவத்தை நிவர்த்தித்துப்பின்னும் அவ்வேயாகமும் நிறைவேற்றி உயர்ந்தபதவியையடைந்தனரென்று முன்புகூறினீர்அந்தமகிமையுள்ளசரிதையை எங்களுக்கு விரிவாகக்கூறவேண்டுமென்றுகேட்டவுடன் சூதபுராணிகர்சொல்லத்தொடங்கினார். எ-று. இயவிரண்டுங்குளகம். (உ)

பண்டாதிநாட்கங்கைபயில்காசித்தலத்திறவப்பண்ணோரியாருந்
தண்டார்பங்கயத்துறைசூழ்சாமையிதீரத்தரியதவஞ்செய்நாளி
லுண்டாருங்கடுமிடற்றெம்முயர்கயிலையண்ணனமிகவுள்ளத்தன்பு
கொண்டாருந்தலங்கணலங்கோதுமாதவர்கூறிக்கொள்ளுமெல்லை

(இ-பு) பழமையாகிய முற்காலத்தில் கங்கையாறுபிரவாகிக்குங் காசிக்ஷேத்திரத்தில் தவசிகள்யாவரும் நாளத்தையுடைய தாமரைகள் பூத்த துறைகள்சூழ்ந்த அக்கங்கைநதிக்கரையில அருமையானதவம்புரிந்து கொண்டிருக்குமநாளில ஒருநாள் அம்மாதவர்களெல்லாம் ஒருங்குகூடி ஆலத்தை யுண்டருளிய திருமிடற்றை யுடைய திருக்கயிலாயபதியாகிய சிவபிரான்மிகவும மனவிருப்புடன் வீற்றிருக்குஞ் சிவதலங்களின் பெருமையைக் கூறிக்கொண்டிருக்கும்போது. எ-று. (ங)

பசர்தமிழ்மாதவனுயர்ந்தபராசரன்றன்முகநோக்கிப்பகருகின்று
னிக்கிரில்பருப்பதத்தினிலுநெடுமகிமையுறவிளங்கினைக்கும்போ
தே, புகரிலபலனறரும் பெரியபுனிதமிகுமெழிற் சுருதிபுரமென்
றோதுஞ், சிகரிமுகிற்றுயிலரங்கச்சீர்காட்டுமொருதலமிச்செகத்து
ளாமால்.

(இ-பு.) யாவரும் துதிக்கும் அகத்தியமுனிவர் பராசரமுனிவரைப் பார்த்துக் கூறுகின்றார் ஒப்பற்ற திருக்கயிலையினும் மிக்கமகிமையுடன் விளக்கமுற்று நினைக்கின்றபொழுதே பழுதற்றபயனைத்தரத்தக்க மிகத்தூய்மையான அழகுள்ள சுருதிபுரமென்று சொல்லும் கோபுரங்கள் மேகங்கள் நித்திரைகொள்ளும் அறையென்றுவமானிக்கத்தக்க சிறப்புடன் ஒரு தலம் இந்நிலவுலகத்தினகண்ணுள்ளது. எ-று. (௪)

செங்கதிராதியிற்பூசைசெய்தொருவுலகினுக்குந்தேவனானா
னங்கவனாலமைவுற்ற தாதலினாலத்தலத்தையவனியாவும்
பங்கயமாமலர்த்தடஞ்சூழ்பாற்கரக்ஷேத்திரமெனவும்பகருகிற்பார்
மங்கலமாரப்புரியின்மகிமைதனையெவராலும்வழுத்தலாமோ.

(இ-பு.) சூரியனானவன் ஆதிகாலத்திற் பூசித்து எந்த உலகத்திற்குந் தானொருவனாகவே விளங்கினான் அவனால் முதலிற் பூசித்தகாரணத்தால் அந்தத்தலத்தை உலகத்தாரெல்லாம் தாமரைமலர்கள் நிறைந்த தடாகங்கள் சூழ்ந்த பாஸ்கரக்ஷேத்திரம் என்றும் கூறுவார்கள் மங்கலங்கள் நிறைந்துள்ள அந்தச்சுருதிபுரியின் மகிமையை இவ்வளவென்று யாவராலும் புகலமுடியாது எ-று. (௫)

அத்தலமல்லாலிந்தவவனியின்கண்பலவுளகடிபிலருளுநல்ல
மெய்த்தலம்வேறில்லையெனவிளங்குதமிழ்முனியுரைப்பவிரிந்த
கேள்வி, நித்தனருமபராசரனிகரறுமாதவன்கேட்டுநெஞ்சத்து
ள்ளே, வைத்தநெடுங்காதலனாய்வழிக்கொண்டானத்தலத்திலவா
சஞ்செய்ய.

(இ-பு.) அந்தச்சுருதிபுரியல்லது இந்நிலவுலகின்கண் விரைவிற்பயன்கொடுக்கத்தக்க நன்மையுள்ள உண்மையான சிவதலம் வேறுகிடையாதென்று அறிவுவிளங்கிய அகத்தியமுனியார்கூற விசாலித்தகேள்வியினையுடைய அழிவில்லாத அரியபராசரராகிய ஒப்பற்ற மாதவர்கேட்டுத் தம் மனத்தின்கண் உதித்த பேராவுடையவராய் அந்தத்தலத்திலதானேவசிக்கவேண்டிப்போந்தனர். எ-று. (௬)

காசிதனிலிருந்தவனுங்காதலித்தெய்தினனென்னக்கழறிலந்த
வேசிறப்பெருமைதனை யெவ்வளவென் றுரைத்திடலாமிமை
யோரேத்து, மாசிறவத்தயனுமங்குமறைசொற்றமூர்த்திதனைமன
த்துளேத்தி, யாசறுதன்னடியரொடுமன்பொடுஞ்சென்றேயமுனை
யாற்றையுற்றான்.

(இ-பு.) நைமிசாரணிய முனிவர்களே காசிக்ஷேத்திரத்திலிருந்தபராசரரும் இத்தலத்தைத் தரிசிக்க விரும்பிவந்தாரென்றால் அவ்வாறானகுற்றமற்ற சுருதிபுர மகிமையை எவ்வளவென்றுகூறலாம் தேவர்கள் துதிக்கும் பழுதற்ற அத்தலத்தில் பிரமதேவனை யொத்த அப்பராசர முனிவரும் வேத

மோதுவித்த அவ்வேதபுரீசரை மனதிற்றியானித்து தவறுதலில்லாத தமது அடியார்களுடனும் மெய்யன்புடனுஞ்சென்று யமுனாநதியைச்சேர்ந்தார். எ-று. (எ)

வேறு.

இரைத்துப்புரட்டுமலையலைப்பவிடங்கராதியருக்குகள
விரைத்தண்ணகிலாதியதருக்கள்வேரோடுருட்டிவேகமுற
நுரைத்தபிடவமிருமருங்குநவலவெண்பலைபோலொளிகாட்டி
நிரைத்தேயமுனையாற்றில்வருநீத்தப்பெருமைதனைக்கண்டான.

(இ-ள்) சத்தித்துப்புரப்பட்டு மலைகளை அலைத்துக்கொண்டு முதலைகள் முதலானதுகளைக் கரைகளில் ஒதுக்க வாசனையுங்குளிர்ச்சியும்பொருந்திய அகிலமுதலியவிருட்சங்களை வேரோடு நடத்திவேகத்தோடுஞ்செல்ல அப்படி நுரைகள் இரண்டுபக்கத்தும் யாவராலும்புகழும் வெள்ளிமலை போலப்பிரகாசித்து வரிசைவரிசையாக அயமுனையாற்றில்வருகின்ற வெள்ளத்தின்பிரவாகத்தைக் கண்டார். எ-று. (அ)

வெள்ளப்பெருக்கதனை நோக்கிமேவற்கரிதென்றருந்தவத்தோ
னுள்ளக்கவலைகொளவலையர்டாமன்விடாதனெனும்பெயரா
னுளப்பரிவினுதவுசுதையொளிமினமச்சகந்தியெனுங்
கிள்ளைக்குதலைமொழியாளைக்கிட்டைத்துநாவாய்விடுகென்றான்.

(இ-ள்) அப்படிவந்தவெள்ளப்பெருக்கைக்கண்டு இதைக்கடந்து செல்லுதல் அரிதென்று அரியதவத்தையுடையபராசரமாமுனிவருத்தத்துக்கொண்டு வலையர்களுக்கரசனான விடாதனென்னும்பெயருடையவன் மனவிருப்புடன் பெற்றெடுத்த பெண்ணாகியமிகப்பிரகாசமுடையமச்சகந்தியென்னும்பெயருடைய கிளிபோலும் குதலையாகிய வசனமுள்ளவளைக்கண்டு இவ்வாற்றைக்கடக்கப்பட்டுக்குவிடு என்று சொன்னார். எ-று. (௯)

சொன்னமுனிவன்றொழுதுதுறைபோனறனைவங்கத்தேற்றி
மின்னுமருங்குன்மயிலவிடுப்போமெல்லையருந்தவத்தோன்
பன்னுங்குயின்மென்குதலைமொழிபாவைநலமுற்றுநோக்கிக்
கன்னற்சிலையோன்கணைவயத்தாய்க்காதற்பெருநோய்கருத்துற்றான்.

(இ-ள்) அவ்வாறுகூறிய பராசரமுனிவரது திருவடிகளை அம்மச்சகந்திதொழுது அப்பராசரரை மரக்கலத்திலேற்றிக்கொண்டு மின்னலைப்போலும்விளங்கும் நுண்ணிய இடையையும் மயில்போன்ற சாயலையுமுடைய அம்மச்சகந்தி அக்கரையிற்கொண்டு விடுக்கப்போம்போது அப்பராசரமுனிவர் யாவருங்கூறும் குயிலினதுமிருதுவான குதலைவார்த்தையையுடைய பதுமையைப்போன்ற அவளது எழினலமுழுதும் பார்த்துக் கரும்புவில்லையுடையமன்மதனது பாணங்களின்வசத்தராய்க்காமமாகிய ஓர் பெரியநோயைத்தன்மனதில் அடைந்தார். எ-று. (௧௦)

செய்யவமுதேயெம்மாற்றந்திருக்காதமைதியெனவுரைத்தான்
றையன்மனமுமிசைந்தாளத்தவத்தோனவளை ததழுவினனலை.

(இ-பு.) உனது சரீரததிற்பற்றிநாறும் மீனூற்றமபோய் நல்லவாசனையே பரிமளிக்கும் உலகமுழுதும் ஒரு குடைககீழ் ஆளுர அரசனது மெல்லிய தோளகளைச் சோநது வாழ்வாய் செபபமாகிய அமுதம்போன்றவளே எமது சொல்லைத்தடுககாது சம்மதிப்பாய் என்று கூறின அமமச்சகந்தியும் மனம ஒருமிததாளஇடனே அபபராசரா அவளை புணாந்தனர் எ-று ஆல்-அசை. (கச)

உலகம்புகழ்மாதவனசேர்ந்சாறெலலைவியாநனுதித்தனன்பின்
னலகில்யமுனாநதிகடநதேயளிர்நமகளினுடனேகி
யிலகுமணிமேடைகளோங்கியெழிலாரகருதிபுரதசெய்தி
விலகிமிளிருமணிசிகரமிலவபொறகோயிறனைசசோநதான்.

(இ-பு.) உலகமெங்கும் புகழபபட்ட பராசரமுனிவா அம்மச்சகந்தியைச்சோந்தார் சோநதவுடன் வியாசா பிறநதார பிறகு அளவிறந்த விஸ்திரணமான யமுனாநதியைக்கடநது தான் பெறறெடுதத அவ்வியாசருடன் போய் விளங்குமஇரத்தினங்களழுததிய மாடங்களவானளவயாந்துஅழகமையப்பெற்றுள்ள சுருதியுரியையடைந்து இருளையோடடைப் பிரகாசிக்குமஇரததினகசிதமான கோபுரஙகள் விளங்கும பொன்மயமான திருககோயிலுட்சென்றாா. எ-று. (கரு)

தேவர்தேவன்றனைதலைநாமுநதொசெப்புபாகமபடியே
யாவர்புரிவரிப்பூசையென்றையமரநிசயிபப
மூவர்முதலவறகினியனவயான்முனிவாமுதலவனருச்சிததுக்
கூவுமறையாற்பலதுதித்தான்கொனறைமுடியோனினிதுவநதான்.

(இ - பு.) தேவாகளுககுததேவனுகிய வேதபுரீசனைத்தொழுது அவரால் அருளிசசெய்யப்பட்ட ஆகமவிதிபபடி இவ்விதபூசனை யார்புரியவல்வரெனறு தேவாகளெலலாம் அதிசயிக்கததசகதாக திரிமூர்த்திகளில் முததன்மைபெற்றுள்ள அச்சிவபிரானுக்கு இனிமையானவைகளால் முனிவர்களுக்குள்தலைமைபெற்ற அப்பராசரமுனிவாபூசிததுககோஷிககும வேதங்களாற்பலவாறுதோததிரஞ்செய்தார்அதற்குக்கொன்றைப்பூமாலையைத்தரித்த சடைமுடியையுடைய அவ்வேதபுரீசா கருணைகூாந்தார். எ-று.

உளமுவந்துமாதவனையுனக்கென்வரம்வேண்டுவதென்று
வள்ளலவினவஞானிமனமகிழ்ந்தேயிதனைவழங்கினையேயக்
கள்ளமதனன்கணையாலென்கருத்துமழிந்துகாதலித்துப்
புள்ளைப்பழிக்குமொழிவலையாபுதல்வியைச்சேர்ந்தவமுற்றேன்.

(இ-பு) மனக்களிபபுறறு அவ்வேதபுரீசர் பராசரமுனிவரைஉனக்கென்னவரம்வேண்டியதென்றுகேட்க அப்பராசரமுனிவர் மனமகிழ்ந்து இவ்வாறுகூறினர் சரீரமில்லாதிருந்தும் உள்ளவன்போல்நடிக்கும் மன்மதனதுமலர்ப்பாணத்தால்என்மனதுந்தமொறிபபெருவிருப்புடன் கிளியையும்பழிக்குமவசனததையுடையவலையர்புத்திரியாகிய மச்சகந்தியைப் புணர்ந்துபாவமுறறேன். எ-று, (கள)

தொடார்ந்தபாவந்தனை நீக்கிததூயோனாக்கியெனையாள்வாய்
மடந்தைபாகநதெமமானேயெனமாதவநதோனவ்மூத்திடலும்
விடந்தங்கியகநதரநதெநநோன்வேதமுனிவனமுகநோக்கிக்
கடந்ததவத்தோயுனபவநீங்கடகுமாறுகேளென்றான்.

(இ - பு.) அவ்வாறு என்னைததொடார்ந்த அநதபாவத்தைநீக்கிப் பரிசுத்தனாக்கி எனையாட்கொள்ளவேண்டும்இளமுலைநாயகியாரபாகராகிய வேதபுரீசரே என்றுபராசரமுனிவா தோநதிரிக்கவும்ஆலாகலந்தங்கிய கண்டத்தையுடைய எமதிறைவராகிய சிவபிரான் மறைமுனிவராகிய அப்பராசராதிருமுகத்தைபபாாதது மிகச்சிறந்ததவத்தையுடைய பராசரனே உனது பாவததினின்றும் நீ நீங்குமவழியைக்கேளென்றா, எ-று. (கஅ)

வேறு.

பேசுமந்திரங்கடமமிறபிரணவமபோலுமிநதக்
காசினிதலங்கட்கெலலாங்கதிததவிறதலத்தினீயோ
ரீசனைநிருமிததாகமறநிணுமிசைததவணா
மாசறபபுரிதிபேலுன்னறன்கடையகலுமென்றான்.

(இ - பு.) யாவராலுமபுகழ்நது பேசப்பட்ட மந்திரங்களிலெல்லாம் பிரணவம எப்படிமுதன்மைபெறறுளளதோஅதுபோல இநநிலவுலகத்துள்ள சிவதலஙகளுக்கெல்லாம மேலானமுதன்மைபெறற இசசுருதிபுரியின்கண் நீ ஒருசிவலிஙகப்பெருமானைப் பிரதிட்டைசெய்து ஆகமத்திறகூறிய விதிப்படி குற்றமறப்பூசித்தால் உன்பாவம் நீஙகுமென்று திருவாய்மலர்ந்தருளினா எ-று. (ககூ)

ஐயரிபரநதுமைதோய்நதயிலெனப்பிறழுமொண்கட்
டையலோர்பாகங்கொண்டதறபரனிவ்வாறோதத் [கைசெ
துய்யமெய்றதவததோன்சென்றுசொற்றமிழ்முனிமுன்பூ
செய்நகரதற்குததென்மேறறிசையரைக்குரோசபேவி.

(இ - பு.) அழகிய செவ்வரிபரந்துமைதோய்ந்து வேல்போலப்புரளும் ஒள்ளியகிரணங்களையுடைய இளமுலைநாயகியாரைத் தமதிடப்பாகத்திற்கொண்டருளிய அவ்வேதபுரீசர் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளத் தூய்,

மையமைந்த உண்மைத்தவத்தினராகிய அப்பராசரமுனிவர்சென்றுயாவ
ருந்துதிக்கும் அகத்தியமுனிவர் முன்பூசித்த ஸ்தானத்திற்குத் தென்மேற்
குத்திசையில் அரைக்குரோசதூரம்போய். எ-று. (உ0)

ஆங்கொராலயமதாக்கியணிசிவமூர்த்திதன்னைப்
பாங்குறவமைத்துஞானப்பராசரன்பூசைசெய்தே
யோங்குமெய்ச்சுருதிபாடியுள்ளநெக்குருகியன்பு
தேங்கியமனத்தனாகத்தினந்தினந்துதிக்குநாளில்.

(இ-பு) அவ்விடத்து ஒரு ஆலயங்கட்டுவித்து அழகிய ஓர் சிவலி
ங்கப்பெருமானைப் பொருத்தமாகப்பிரதிட்டைசெய்து ஞானம விளங்கிய
அப்பராசரமுனிவர்பூசித்துப் புகழோங்கிய உண்மையான வேதவாக்கியங்
களாற்றுதித்து மனம்நெக்குவிட்டுருகி மெய்யன்புமேலிட்ட மனமுடைய
வராகத்தினந்தோறும் இவ்வாறுதுதித்துக்கொண்டு வருகின்றநாளில் எ-று

முன்னுபநிடதமோதுமூர்த்தியன்பெயதிமார்பிற
றன்னுபவீதமென்னத்தரித்தவெம்பணிகுலாவ
மன்னுபங்கயக்கையேந்துமானமழுவொளிரவெள்ளை
மின்னெழினந்திமீதுவிளங்கினன்றவத்தோன்கண்டான்.

(இ-பு.) முற்காலத்து உபநிடதங்களைத் திருவாய்மலர்ந்தருளிய வேத
புரீசர் திருவுள்ளத்திற்கருணைகூர்ந்து திருமார்பினிடத்துத்தன் முப்புரிநூ
லாகத்தரித்திருக்கும் கொடியசர்ப்பங்களவிளங்க நிலைபெற்ற தமது திருக்
கரங்களில் தரித்திருக்கும் மானும்மழுவும் ஒளிசெய்ய வெண்ணிறமுடைய
காந்திவீசும அழகிய நந்திவிடையின்மீது காட்சிதந்தருளினர் பராசரமுனி
வர் தரிசித்தார். எ-று. (உஉ)

பன்முறைதொழுதுவாயாற்பலபலதுதித்துப்போற்ற
முன்மறைபுகன்றவெங்கோன்மொழிகுவான்முனியேநான்முன்
சொன்முறைபுரிந்தாயுன்னைத்தொடர்ந்தவெம்பவங்கமரந்
தொன்முறைவேள்விநீயித்தூயிடத்தியற்றுகென்றான்.

(இ-பு.) தரிசித்தவுடன் பலமுறைவணங்கி வாயினாற்பலபல துதி
களைக்கூறியேத்தினவுடன் முன்புவேதங்களையோதிய எமதிறைவராகிய
வேதபுரீசர் கூறுவார் பராசரமுனிவனே நாம்முன்புகட்டளை யிட்டபடி
செய்தனை உன்னைப்பற்றிய கொடியபாவங்கள் தீரப்பழயவழக்கப்படி ஒரு
யாகம் இப்பரிசுத்தஸ்தானத்திற் செய்யென்று திருவாய் மலர்ந்தருளினர்.
எ-று. (உ௩)

அத்தனீதிசைத்துப்பின்னையாயலிங்கத்துளானார்
மெய்த்தவன்மகிழ்ந்தேயீசன்விளம்பியவேள்விமுற்ற
வைத்தசிந்தையனாயீட்டிச்சாலையுமவகுத்துநல்ல
[illegible] கண்ட [illegible] வைத்து.

(இ - பு.) வேதபுரீசர் இவ்வாறு திருவாய்மலர்ந்து பிறகு அச்சிவலிங்கத்துக்கரந்தருளினர் பராசரமுனிவர் மனமகிழ்ந்து அவ்வேதபுரீசர் கட்டளையிட்டருளிய யாகத்தைமுடிக்க எண்ணிய மனமுடையவராய் அதற்கு வேண்டியவஸ்துக்களைச்சேகரித்து யாகசாலையும் அமைத்து நல்லதாகவொருங்கியிருக்கும் யாகவேதிகைகளையும யாககுண்டங்களையும் அதற்குமுன்னுக ஏற்படுத்தி, எ-று. (உச)

குசைசமித்தாதியாயகூறுபகரணமெல்லா
மிசையுறக்கொண்டுநல்லாவிழுதினுலியற்றுமெல்லை
வசையறுமிமையோர்வேந்தன்மனதநொருபயமுண்டாகி
நசையுறுமகத்தோனபொனனினைகிதநாள்பணிந்துசொல் [வான்

(இ - பு) தருப்பை சமித்து முதலியயாகத்திற்குவேண்டியதென்று சொல்லும் உபகரணங்கள் எல்லாவற்றையும் இசைவாக அமைத்துக்கொண்டு நல்லபசுவின் நெய்யினுலே யாகஞ்செய்யுந்தருணத்திலபழிபபற்றதேவாகளுக்கரசனுகிய இந்திரன் தன்மனதில ஒருவிதபயங்கொண்டு அதனுறசங்கடப்படும் மனமுடையவனுகி அவ்விந்திரன் பிறகற்பதிபகவான்தாமரைமலாபோன்ற பாதங்களை வணங்கிககூறுகின்றான். எ-று. இவ்விரண்டுகுளகம். (உரு)

ஐயகாரணமொன்றினறியசத்திலெய்கச்சமெய்தி
னையுமாறென்கொலீதுநவிலுதியெனலுமந்த
மெய்யனீதுரைப்பான்பூமேலவேதமாபுரததில்ஞானச்
செயதவப்பராசரப்பேரதத்திருமுனிமகஞ்செய்கின்றான்.

(இ - பு,) எனதையரே யாதொருகாரணமுமில்லாமல் எனக்குமனத்திற்பயமுண்டாகி அதனுல்அமமனம்வருந்துகின்ற தென்ன இதனைத் திருவாய்மலாந்தருளவேண்டுமென்றுகேட்க அந்தப்பிரகஸ்பதிபகவான் இவ்வாறுகூறுகின்றார்நிலவுலகத்திலுள்ள வேதபுரியில் ஞானமும் விளங்கிய தபோதனராகிய பராசரமுனிவர் என்னும் பெயருடையவர் யாகஞ்செய்கின்றார், எ-று. (உசு)

அன்னவேள்வியுமுண்செல்வமடைவதற்கியற்றலென்று
பொன்னவனுரைப்பக்கேட்டுப்புலோமசைகாந்தன்சீறி
மன்னுதன்படர்களானவஞ்சராக்கதரைமேவக்
கொன்னவிலரக்கருற்றுக்குலைத்தனர்மகத்தைமாதோ

(இ - பு.) அவ்வாறியற்றும் யாகமும் உனது செல்வ மடையவேண்டிச்செய்வது என்று பிரகற்பதிகூறக்கேட்டுப் புலோமசைகணவனுகிய இந்திரன்கோபங்கொண்டு நிலைபெறறதனது சேவகாகளாகியகபடம் நிறைந்த அரக்கர்களை ஏவ வல்லமைமிக்க அவ்வரக்கர்கள்அவ்வாறேபோய்அந்த யாகத்தையழித்துவிட்டார்கள், எ-று- (உஎ)

செம்புனற்சொரிந்துமோமத்தீயினிறசிறுநீர்பெய்து
மென்புகளிறைத்துங்கல்லோடெரிமழையாகப்பெய்தும்
வம்புகளிய்ற்றிசசெய்தமகத்தினையழித்தார்சூழ்ந்தே
யன்புறுமுனிவரெல்லாமஞ்சினரகன்றுபோனார்.

(இ - பு.) அந்தயாகத்தியில் இரத்தத்தை ஊற்றியும் சிறுநீர்பெய்தும் எலும்புகளைக்கொட்டியும் கல்லுடன் அக்கினிமழையாகப்பெய்தும் இவ்விதமானவம்புகள்செய்து அப்பராசரமுனிவர்செய்திருந்த யாகத்தை அழித்தார்கள் அப்போது அங்குசூழ்ந்திருந்த அன்புநிறைந்த முனிவர்களெல்லாம் அச்சங்கொண்டு நீங்கிவிட்டார்கள். எ-று. ஏ-அசை. (உஅ)

இயற்றியவேள்விமுற்றலின்றியங்கழியநோக்கி
நயந்ததவப்பராசரன்றனன்மனங்கொதிகதுநதிய
வயத்திராக்கதர்கண்முற்றும்வளாகருவேலகளாயு
முயாத்தெழுபனைகளாயுமுறைநதிடசசாபநதநதான்.

(இ - பு) நன்மைமிக்க அப்பராசரமுனிவர்செய்தயாகம் முடிவுபெறாது அவ்விடத்து அழிந்ததுகண்டு சாந்தமாகிய அவர்மனங்கொதிப்படைந்து தீச்செய்கையுடைய அவ்வரக்கர்களெல்லாம் வளர்ந்திருக்கும் கருவேலமரங்களாகவும் உயர்ந்தோங்கும் பனைமரங்களாகவும்நிற்கும்படி சபித்தார். எ-று. (உகூ)

சீறியமுனிவன்சாபஞ்செபபலுமரக்கரஞ்சி
தேறியதவததோன்றன்பாற்சோர்ந்தடிமலரில்வீழ்ந்து
கூறினரிதனைஞானக்கோலமாதவனேயாங்க
ளேறியமமதையால்வந்தியற்றினோமில்லையைய்யா.

(இ - பு.) கோபித்த அப்பராசரமுனிவர் இவ்வாறானசாபத்தைக்கூறலும் அவ்வரக்கர்கள்பயந்து அனேகதவங்களைச்செய்து கைவல்லியமடைந்த அப்பராசரமுனிவரிடத்தடைந்து அவரது திருவடித்தாமரைகளில்விழுந்து இவ்வாறுசொன்னார்கள் ஞானசொரூபமுள்ள தபோதனராகிய எமதய்யனே நாங்களெங்களுக்குள்ளுண்டாகிய அகங்காரத்தால்வந்து யாகத்தையழிவுசெய்யவில்லை. எ-று. (௩0)

எம்மையாளமரர்கோமானேவலாலடுத்தோமென்னச்
செமமையாலுரைப்பக்கேட்டுச்சீருறுமுனியுமிநத
வெம்மையார்தம்மால்வந்தவினையல்வென்றுகோர்நதே
யும்மையாமுரைத்தசாபமொழியுமாகேண்மினென்றான்.

(இ - பு.) எங்களையாளாகவுடைய இந்திரன் ஏவலினால்வந்தோமென்று செவ்வையாகச்சொல்லக்கேட்டுச் சிறப்படைந்த பராசரமுனிவரும் இக்கொடியவர்களால்நேர்ந்தகெடுதியல்ல என்று உணர்ந்துயாமுரைத்தசாபம் உம்மைவிட்டு நீங்கும்வழியைக்கேளுங்களென்று சொல்லுகின்றார்.

சூரழித்தமரர் துன்பந்தொடைத்ததொன்றுனிற்றுட்ட
ரூரழித்தவன்சேயிந்தவுலகிலந்தணனுவந்து
பாரழித்தெங்குந்தாமாய்ப்படர்ந்தசாக்கியரையெல்லாம்
வேரழித்தரியசைவம்விறல்விண்டெய்துமாதோ.

(இ-பு) சூராகளை அழித்தது தேவர்கள் துன்பத்தையொழித்தருளிய முற்காலத்து திரிபுராதிகளது முப்புரங்களையும் அழித்தசிவபிரான் புதல்வராகிய முருகக்கடவுள் இந்நிலவுலகத்தில் சம்பந்தமூர்த்தி யென்னும் மறையவராகததோன்றி உலகத்தையழித்து எங்செங்கும் தாமாகவே பரவியிருக்கும் சமணாகளையெல்லாம வேரோடழித்து அருமையான சைவ சமயம விளங்கும்படி இவ்விடத்தடைவார். எ-று. மாதூ-ஓ-அசை.

செப்புமப்புனிதன்வாந்து தெரிசனங்கொடுத்தபோதே
யிப்பெருஞ்சாபநீங்குமெனத்தவனுரைத்தப்பின்னை
யொப்பருஞ்சிவனைப்பூசையுஞற்றியபலத்திறுலே
யப்பெருமவேள்விமுற்றியதில்வருபலனைபபெற்றுன்.

(இ - பு.) யாமகூறிய அந்தப்பரிசுத்தாயவந்து காட்சிகொடுத்தமாத்திரத்தே இந்தப்பெரியசாபமநீங்கும் என்று பராசராகூறிப்பிறகு ஒப்புக்கூறுதற்கரிய அவ்வேதபுரீசரைப்பூசித்த பலத்தினுல் அந்தப்பெரியயாகத்தைமுடித்து அதனுலுணடாகியபயனை அடைந்தாா. எ-று. (௩௩)

பின்னுமவ்விடத்தேயிட்டிபெரிதியறறியும் வேதத்தைப்
பன்னுமெங்கோனைப்பூசைபரிவுடனபுரிந்தும்ஞானந
துன்னியமுனிவன்சீவன்முத்தனுய்த்தூய்மைமேவி
மன்னுவெண்கயிலேதன்னில்வாழ்கின்றுன்மாண்புளானுய்.

(இ-பு.) மீணடும் அவ்விடத்திலேயே பலவகை யாகங்களைச் செய்தும் வேதங்களை தேவாகளுக கோதுவித்தருளிய எமதிறைவராகிய வேதபுரீசரை மெய்யன்புடன் பூசித்தும் ஞானமவிளங்கிய அப்பராசர முனிவர் சீவன்முத்தராயப் பரிசுத்தமடைந்து நிலேபெறுடைய வெள்ளிய திருக்கயிலேயில் புகழுடையவராய்வாழந்திருககின்றனர். எ-று. (௩௪)

அன்னவனிலயஞ்செய்தவரன்றனைபபராசரேச
ரென்னவும்புகல்வாரந்தவீசனைப்பூசைசெய்தோர்
பன்னியேதுதித்தோர்யாருமபராசரன்றன்னைப்போல
நன்னெறிபெறுவரென்னநவின்றனன்பின்னுமாதோ,

(இ-பு,) அப்பராசரர் பிரதிட்டைசெய்த சிவலிங்கப் பெருமானைப் பராசரேசரென்றுங் கூறுவார்கள் அச்சிவலிங்கப்பெருமானைப் பூசித்தவர்கள் அவரது புகழைக்கூறித் தோத்திரஞ் செய்தவர்கள் ஆகிய இவர்களெல்லாம் அப்பராசரரைப்போல நன்மார்க்கமடைவார்கள் என்று பின்னுங்கூறுகின்றுர் சூதபுராணிகா எ-று. மாதூ-ஓ-அசை. (௩௫)

ஓதுமப்பரனுக்கிப்பாலுறறதெக்கணக்குரோசம்
பாதியிலிமையோாகெட்டாப்பண்ணவனுளனாநத
நாதனூர்வநதவாறுநவிற்றுவன்கேண்மின்ஞானக்
கோதின்மாதவத்தீரென்றுசூதனுஙகூறலுற்றான.

(இ-பு) யாம்கூறிய அப்பராசரேசருக்கு இப்பால் இருக்கும் தெற்குபக்கத்தில் அரைக் குரோசவழி தூரத்தில் தேவர்களுங் காணப்படாத ஒரு சிவலிஙகமூர்த்தமஉணடு அச்சிவலிஙக மூாததம் வந்த சரிதையைக் கூறுகின்றேன் கேளுங்கள் ஞானமிகுந்த குற்றமற்றதபோதனாகளாகிய நைமிசாரணியமுனிவாகளே என்று சூதபுராணிகா சொல்லத் தொடஙகினார். எ-று. (ருசு)

வேறு.

ஆதிகாலந்தனின்மூன்றவுணர்களுணடாஙகவாபூவதனிலுள்ள
சோதிநாயகன்றலங்கடோறுமடைநதுயா மகிமைசோதிததெய்து
ம்' போதிலாரணபுாதநிறபோநதரனைத்தொழுதவணிறபொருநதி
யிநதக, கோதிலாததலமொல்லைகொடுபபதுநறபலமெனனக்குறி
க்கொண்டாரால்.

(இ-பு) ஆதிகாலத்தில மூன்று இராசகதாகள் இருந்தார்கள் அவர்கள் நிலஉலகத்தினசணுள்ள சோதிசொரூபராகிய சிவபிரான் வீற்றிருககுந்தலங்கள்தோறும்போய் அவ்வவ்விடஙகளிலுள்ள உயாவானமகிமைகளையெல்லாம் சோதித்துக்கொணடுவருமபோது வேதபுரியிறசென்று வேதபுரீசரைவணஙகி அஙகுதானே வசிதது இநதகுற்றமற்றசிவதலம் ஒன்றுதான் நன்மையான பலன்களையெல்லாம் விரும்பினவாகளுக்கு விரைவிற்கொடுக்கவல்லது என்று குறிப்பாலுணாநதாாகள். எ-று. ஆல்-அசை.

உய்யவருடருமிநதவுயா தலமென்றோாநது குகனீனறுமூழ்கிதை
தையலொருபாகன்மலர்ததாளருச்சிததேத்திடவுநதயவுகூர்ந்து
துய்யவிடையேறிமுனந தோனறியே மூவருக்குஞ்சொல்லுமுன்
னோ,னியமுனமமரரைநீர்நலிததிட்டபாவமதனுனன்ணிறறுபால்

(இ-பு) சீவாகள் உயயும்வணணம் திருவருள்கொடுககும் இநத உயர்ந்ததலமென்றுணாந்து குகந்தியில்நீராடி இளமுலைநாயகியாரை இடதுபாகததிலுடைய வேதபுரீசரது தாமரைமலர்போன்ற திருவடிகளைப்பூசித்துவணஙகினவுடன் அவவேதபுரீசாகருணைகூாந்து தூயமையான இடபவாகனமூர்ந்து அவாககெதிரில் காட்சிகொடுத்து அம்மூவருககும் திருவாய்மலர்ந்தருளுகின்றார் முன்புதேவாகளைவருத்தும்படி துன்பபபடுத்தினீர் அதனாற்பாவமநோந்தது. எ-று. ஆல்-அசை. (ருஅ)

கழறுமறன்கடைகழியக்கருத்துறுகாமியமடையக்கருத்தொன்
றுகில்;நிழலுறுமாலயஞ்சமைத்துநிகரில்சிவபிரதிட்டைநீவிர்செய்

து, தொழுதிரெனப்பணித்திடலுந்தொலைவிலடன்மூவருமுன்றுதி
த்துச்சென்றே, வழிவிலமமூவரிலொருவன்மாமணிப் பொன்மாந
கரம்வகுத்தான்மன்னோ.

(இ - ள்) சொல்லப்படும் நமதுபாவமகழியவும்இட்டகாமியம் சித்திக்கவுங் கருத்துடையவர்களாய் நீசசனநிழலவாயாத ஒரு ஆலயமபுதுக்கி அதனுள்நிகரற்ற சிவலிங்கப்பிரதிட்டைசெய்து வணங்கக்கடவீர்கள் என்று கட்டளையிடவும அழியாதவன்மையையுடைய அமமூவரும அவவேதபுரீசரைத்துதித்துப்போய்த்தவறற்ற அவ்வழியிலமமூவரிலொருவன்மகத்தான் இரத்தினங்களழுத்திய அழகிய ஒருநகரத்தையமைத்தனன். எ-று. மன - ஓ-அசை. (௩௯)

பின்னொருவனிரசிதத்தாற்பெருநகரமியற்றினன்மற்பெருந்தோ
ண்மற்றோன், ஒன்னிருமபாலணிநகரநூசளறச் செய்தனிததன
னிற்தொலைவின்மூவா, சொன்னமுறைசிவலிங்கசொரூபமமைதத
ருச்சித்துத்தூயோராகிப், பொன்னுலகாதியிலுலகமபோந்துதிரிந
தியாவரினுமபுகழேழூண்டார்

(இ - ள்) மற்றொருவன் வெள்ளியினற்பெரியநகரம் அமைத்தான் மல்யுத்தம்புரியும் பெரியதோள்களையுடைய மற்றொருவன் நெருங்கிய இரும்பினால் அழகிய நகரத்தைக் குற்றமறச்செய்தான் இம்மூவர்களும யாம் சொல்லிவந்தமுறையே சிவலிங்கப்பெருமானையும அமைத்துப்பூசித்துப்பரிசுத்தராகிய தேவலோகம்முதலிய எவ்வுலகத்துஞ் சென்றுச் சஞ்சரித்து எலலாரினும் கீர்த்தியடைந்தனர். எ-று. (௪0)

அடலாலும்புகழாலுமருளாலுந்தெருளாலுமணிக்கவெள்ளக்
கடலாலுங்கவினாலுங்கலையாலுநிலையாலுங்கழறப்பொண்ணாது
இடையாதுமூவுலகிலெவருமெதிரிலலாமலினிதுவாழ்ந்து
மிடற்றுருமவிடந்தாதிவேதமுதலபாதமலாமேவினரால்.

(இ - ள்) வலலமையாலும பெருமையாலும் கருணையினாலும் தெளிவினாலும் அணிகமாகிய சேனாசமுத்திரத்தினாலும் அழகாலும் சாத்திரவுணர்ச்சியினாலும் நீதியததன்மையினாலும ஒப்புககூறுதற்கரியராய் யாவருக்கும தோலாது திரிலோகங்களினும் யாரும் எதிரில்லாமல இனிமையுடன்வாழ்ந்துவிடந்தங்குங்கண்டத்தையுடைய முதல்வராகியசிவபிரானை திருவடித்தாமரைமலரில் அடைந்தார்கள். எ-று. (௪௧)

முப்பொனலயமூன்றுமுடித்தவாபூசனைமுடித்தமூர்த்திதன்னை
யப்பொருட்டவர்திரிபுரேசரெனவறைநதிடுவரான்றசிறந்த [ர்க
செப்பொனதெவரானுஞ்சிவலிங்கந்தனைப்போற்றிதநெரிசித்தோ
ளொப்பொன்றுலரக்கரியவுயாவாழ்வுற்றந்தவீடடைவாரென்
[றான்

(இ-பு) செம்பொன் வெண்பொன் கரும்பொன் ஆகியமூன்றுபொன்னினாலும் கோயில்சமைத்துப்பூசித்த அச்சிவலிங்கப்பெருமானை அந்தத்தேவர்கள் திரிபுரேசர் என்று கூறுவார்கள் அச்சிவலிங்கப்பெருமானது நிறைந்தபுகழை யாவராலுஞ்சொல்லமுடியாது அச்சிவலிங்கத்தைத்துதித்துத்தரிசித்தவர்கள் ஒருவிதத்தாலும ஒப்புக்கூறுதற்கரிய உயர்ந்தவாழ்வையடைந்து முத்தியடைவார்களென்று சூதபுராணிகர் கூறினார். (௭௨)

பராசரர்வேள்விச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் .. ௭௧௧.



௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆலமுண்டசருக்கம்,

---

மாசிலருட்கடற்சூதனிவ்வாறுவருத்துரைப்ப
வாசறுநைமிசவனத்தோரதிசயித்துப்பின்னுமந்த
விசனாலவாயினுதித்திடா நருவெங்கடுவுண்ட
வீசன்புகழினையுரைத்தியெனச்சூதன்விளம்புவனால்.

(இ-பு) களங்கமற்ற கருணை சமுத்திரமாகிய சூதமுனிவரிவ்வண்ணம் பராசரர்வேள்விசெய்த சரிதையைச் சொல்லிமுடித்தவுடன் குற்றமற்ற நைமிசாரணிய முனிவர் அதிசயமடைந்து அவ்வேதபுரீசர் கடலினிடத்துதித்தகொடிதுபுரிந்த ஆலாகலத்தை அமுதுசெய்தமிக்க புகழ்விளங்கும் சரிதையைக்கூறவேண்டுமென்று குறையிரக்கச் சூதபுராணிகர்சொல்லுகின்றார்- எ-று. ஆல-அசை. (௧)

என்றுதவச்சூதனியைவியம்புகின்றான்முற்காலத்
தொன்றுபுகழ்வானவர்சென்றுயர்நிணிமந்தரமலையைத்
துன்றுவலிமத்தாகச்சுடர்விழிவாசுகியைநெடு
நன்றுவிசிக்கயிறாகவுறச்சூழ்ந்தேயமரர்.

(இ-பு.) இவ்வாறுதபோதனராகியசூதமுனிவர் இச்சரிதையைக்கூறுகின்றார் முற்காலத்திலே கீர்த்திபெற்ற தேவர்கள் ஒருங்குகூடிப் போய் மாச்சானபலம் பொருந்திய மந்தரகிரியை வன்மைமிக்கமத்தாகவும் பிர

காசிக்குங் கண்களையுடைய வாசுகியென்னும் பாம்பை நீண்டவசிக்கயி றாகவும் நடுவிலே சுற்றி அந்ததேவர்கள், எ-று. (உ)

இசையுறும்பயோததியினுண்ணாட்டிவாசுகியை
யேசறுவானவரியாருமிராக்கதருமவாறலையை
மசையுறுகைத்தலமபற்றிவலித்தயிர்தங்கடைந்திடுநாட்
டேசுறுதிண்டோள்வாலிசென்றிவர்கள்செயல்கண்டான்.

(இ-பு.) சத்தித்துக்கொண்டிருக்கும் பாற்கடலின் மத்தியில்மேற்ப டி மந்தரகிரியைநாட்டி குற்றமற்ற தேவாகளெல்லாரும் அரக்காகளும் வாசுகியாகிய கயிறறை மந்தரத்திற் சுற்றிக்களஙகமறறதமது கைகளிற்பி டித்துக்கொணடிழுத்து அமிர்தம் பெறவேண்டிக்கடைந்த காலத்துப்பி ரகாசம் பொருந்திய வலியதோள்களையுடையவாலிஎன்பவன்போய் இவ ாகள்செய்கையையபார்த்தான். எ-று. இவ்விரண்டுங் குளகம். (ங)

வலிக்கவலியிலராகிவானவர்மெய்நொநதுமனஞ்
சலிக்கினறசெயலறிநதுதாவுதிறற்கவிவேந்த
னுக்கும்பண்ணவாகடமையப்புறம்போமெனவகற்றிக்
கலிக்கின்றவாசுகிதன்கைப்பற்றியீர்த்தனனால்

(இ-பு.) அக்கயிற்றையிழுக்கச் சத்தியற்றவர்களாய் அத்தேவர்கள் சரீரம்வருந்திமனஞ் சலிகுந்தன்மையை உணர்ந்து தாவிச்செல்லும்வன் மையையுடைய குரக்கினத்திற் கரசனாகிய வாலியென்பவன் வெறுப்ப டையுந் தேவர்களையெல்லாம் நீங்கள் அப்பாற்போங்கள் என்று விலக்கி இரைத்துக் கொண்டிருக்கும் வாசுகி யென்னும் பெயருடைய பாம்பாகிய கயிற்றைததனது கையாற்பிடித்திழுததான. எ-று, ஆல்-அசை. (ச)

தானிழுக்கும்வலிக்கொப்பத்தயித்தியரீர்த்திலரென்னக்
கூனிருக்குங்கவிவேந்தன்குறித்தவரைப்புறததகற்றி
வானிருக்குமிடமொருகைவவ்விமணித்தலையொருகை
தானிருக்கத்தனிவாலிததிகடைவார்போற்கடைந்தான்,

(இ-பு) கூன்வளைந்த சரீரமுடைய குரங்குகளுக் கிறைவனாகிய அவ்வாலி தானிழுப்பதற்குச்சரியாய்இராக்கதர்களிழுக்கவில்லையென்றுஎண் ணி அவர்களையும புறம்பாகப்போகவிலக்கி அமிர்தமிருக்கும் இடமாகிய அவ்வாசுகியின்வாலை ஒருகையிற்பற்றி இரத்தினமிருக்குந்தலையை ஒருகை யிற்பற்றிக்கொண்டு அவ்வாலிஎன்பவன்தயிர்க்கடைவாரைப்போலக்கடை ந்தான். எ-று. (ரு)

வேகமிகவுறக்கடையும்வேலைநெடுவாசுகிதன்
னாகமிகமெலிவாகியக்கணங்கான்றிட்டவிட

மாகமுறவளர்ந்தோங்கிமலைமரன்முற்றவுமெரித்த
நாகரவுணர்களுமிடநாடிமெலிந்தோடினரால்.

(இ-பு.) இவ்வாறு அதிகவேகத்துடன் கடையுந்தருணத்து கிடை அவ்வாசுகியின் சரீரம்மிகவும்வருந்தி அந்தக்கணத்தில் உமிழ்ந்தவிஷமா னது ஆகாயமளாவவளர்ந்து அதிகரித்துமலைகளையும் மரங்களையும் முழுதும் எரித்துவிட்டது தேவர்களும் அரக்கர்களும் தாம் அவ்விஷத்திற்குத் தப்பி ப்பிழைக்கத்தக்க இடத்தைத்தேடி யோடினார்கள். எ-று. ஆல்-அசை.

நாவுளறிவாயுலர்ந்து நடுக்குற்றுமெய்தளர்ந்து
மேவுபுகலிடமிலராய்விரைவொடுவானவர்குழீஇப்
பூவுறையும்புங்கவன்பாற்போந்துவிளைந்தலைவபுகலத்
தேவர்படுந்துயர்நோக்கித்திசைமுகதனிவையுரைக்கும்

(இ-பு.) நாக்குளறவுமவாய்வுலரவுமநடுநடுங்கிசரீரம்சோர்ந்துஅடை க்கலம்புகத்தக்க இடமில்லாதவராய் அதிவிரைவில்தேவர்களெல்லாம்ஒரு ங்குசேர்ந்து தாமரைப்பூவில்வசிக்கும் பிரமனிடத்துச்சென்று நேர்ந்தவி பரீதங்களைக்கூற இவவாறு தேவாகள்படுகின்ற துன்பததைப்பார்த்து பிர மன் இவ்வாறுகூறுகின்றான். எ-று, (௬)

கடைந்துகடலமுதருந்தக்கருத்தாய்நீர்கண்ணுதல்பா
லடைந்தவனைப்பூசனைசெய்தருள்பெற்றீரிலையதனு
லிடைந்திரியவிடந்தோன்றியின்னலபுரிந்தனவென்றும்
படர்நதிடிநதன்னுல்வாராவினையொன்றுமிலைபார்க்கில்.

(இ-பு.) பாற்கடலைக்கடைந்து அவ்வமுதத்தைப்புசிக்கக் கருத்து கொண்டு நீங்கள் நெற்றிக்கண்ணையுடைய சிவபிரானையடைந்து அவரைப் பூசித்து அவர்திருவருளைடபெறவில்லை யாதலினுல் நீங்கள்மனம்நொந்து கெடும்படி ஆலாகலம் உதித்துக்கெடுதிவிளைத்தன எக்காலத்தும் யோசித் துப்பார்க்கையில் ஒவ்வொருவனுக்கும் தன்னுல் கேரிடாதவினை கிடை யாது. எ-று. (அ)

அயனீதுபுகன்றிடலுமமரர்தொழுதிறைஞ்சியினிச்
செயலேதுபுகறியெனச்செழுமலரோனிவையுரைப்பான்
சயமேவவிரைவில்வரந்தருமொருவர்க்கன்னமிடி
லயமேதப்பலனுதவுமரியதலமொன்றுளதால்.

(இ-பு) பிரமன் இவ்வாறு கூறிடக்கேட்ட தேவர்கள் மீட்டும் பிரமனை வணங்கித்துதித்து இனியாங்கள் செய்யவேண்டியகாரியமெது வோ அதனைக்கூறவேண்டுமென்றுகேட்கச் செழுமையான கமலவாசனு கிய பிரமனிவ்வாறு கூறுகின்றான் வெற்றியடையும்படி அதிசீக்கிரத்தில் வரங்கொடுப்பதும் ஒருவனுக்கு அன்னமிட்டாலும் அசுவமேதயாகப் பல

னைக்கொடுப்பதுமாகிய அருமையான சிவதலம் ஒன்றிருக்கின்றது. எ-று.
ஆல்-அசை. (௯)

கயிலையினுங்காசியினுங்கண்ணுதலுக்குகந்ததலம்
வெயிலவன்பூசனைபுரிந்துவேண்டியதுபெற்றதல
மயிலவனாலயமதிலுமணிநகருஞ்சமைத்ததலம்
பயிலுமாறுபநிடதம்பண்ணவருக்கோதுதலம்.

(இ-ப) அந்தச்சிவதலம் திருக்கயிலையைப் பார்க்கினும் வாரணாசியைப்பார்க்கினும் சிவபிரானுக்கு விருப்பமிக்கதலம் சூரியன்பூசித்துத்தனக்குவேண்டியவரங்களைப்பெற்றுக்கொண்டதலம் வேலவராகிய சுப்பிரமணியக்கடவுளால திருக்கோயிலும் மதிலும அழகியநகரமும் உண்டாக்கப்பட்டதலம் யாவரும்துதிக்கும் சிவபிரான்வேதங்களைத் தேவர்களுக்கோதுவித்ததலம். எ-று. (௧௦)

சுருதிபுரிதலமென்றுந்தூயதலமுளததனி
னிருதபுரத்தசுராகுலநீறாக்குமவேளளித்த
கருதியுரைதவர்களறன்கடைகழிக்கும்பெருநீத்தம்
வருநதியொன்றுளதநதமறைசையெனுந்தலதெய்தி.

(இ-ப) சுருதிபுரி என்னும் பெயருடையதாய்ப் பரிசுத்தமான தலமொன்றுண்டு அந்தலத்தில நிருதபுரத்தவசிக்கும அசுரர்குலத்தை நீறாக்கும் முருகக்கடவுளுண்டாக்கிய கிளைத்துத் தன்பெயரைச் சொன்னவர்களது பாவத்தைப்போக்கத்தக்க பெரியவெள்ளம் வருகின்ற குகநதியொன்றுண்டு அந்தச்சுருதிபுரமென்னும் தலத்தில் அடைந்து எ-று (௧௧)

விண்ணவருக்குபநிடதம்விளம்பியவெம்பெருமானைப்
பண்ணமைந்தமொழிக்கொருமெய்ப்பாகமளித்திடுமுதலாங்
கண்ணுதலைத்தொழுதேத்திககருத்தொன்றிவழிபட்டு
நண்ணும்விடத்தினைப்போக்கிநலமமிர்தைப்பெறுதிரென்றான்

(இ-பு.) தேவர்க்கு வேதோபநிடதமோதுவித்தருளிய எமதுபிரானாகிய வேதபுரீசரை பண்போலும் வசனங்களையுடைய இளமுலைநாயகியாருக்குஇடதுபாகங்கொடுத்தருளிய முதல்வரான சிவபிரானை வணங்கித்துதித்துமனமொருமித்துப்பூசித்து இப்போதுபாற்கடலிற்றோன்றிய ஆலாகலத்தைப்போக்கி அமிர்தத்தைப்பெறுவீர்களென்று கூறினன் எ-று.

வேறு.

தாமரைக்கிழவனீதுசாற்றலுமமரரெய்திப
பூமலர்ப்புறவஞ்சூழ்ந்தபுண்ணியமறைசைநண்ணிக்
காமனையெரித்தஞானக்கடவுடனிருந்தாள் போற்றிப்
பூமலர்நதிகொண்டுபூசனைமிகவுஞ்செய்தார்.

(இ-பு.) தாமரைமலர்வாசனுகிய பிரமன் இவ்வாறுகூறக்கேட்ட தேவர்கள்சென்று அழகிய புட்பங்கள்நிறைந்த மூலலிலஞ்சூழ்ந்த புண்ணியத்தலமாகிய சுருதிபுரியையடைந்து மன்மதனை எரித்தருளிய ஞானசொரூபராகிய வேதபுரீசரது திருவடிகளைவணங்கி மலர்ந்தபுட்பங்கள் முதலிய பூசாதிரவியங்களைக்கொண்டு மிகவும்பூசித்தார்கள். எ-று.

உலகமாயுலகிலுள்ளவுயிர்களாயுயிரினுள்ளத
திலகியவறிவாயெய்துமின்பமாயிவற்றுட்சேரா
வலகிலாவடிவாய்க்காண்போர்க்கதுவுமேயின்றிநின்ற
கலகிலாமுதலேகாக்குங்காலமீதெனத்துதித்தார்.

(இ-பு) உலகமாயும அவ்வுலகத்துள்ள ஆன்மாக்களாயும் அவ்வான்மாக்களின் மனதினிடத்துவிளங்கிய அறிவாகவும் அவ்வறிவினிடத்துண்டாகும் இன்பமாகவும் இவைகளிலெல்லாங்கலவாது அளவிறந்த வடிவங்களாகவும் தரிசிப்பவர்களுக்கு அவ்வடிவுமில்லாமலிருந்து எவற்றினும் கலகமாகில்லாத தனிமுதலாகிய சிவபிரானே எங்களை இரட்சிக்கவேண்டிய காலமிதுவேயென்று துதித்தார்கள். எ-று. (கச)

தொழுதுவிண்ணவரிவ்வண்ணஞ்சொல்லியேதுதிக்குமெல்லை
வழுவிலாரணத்தைமுன்னம்வகுத்திடும்பவளச்செவ்வாய்
முழுமுதல்கருணைபூத்துமுகமலர்ந்திமையோர்செய்கை
பழுதறுவண்ணமன்னோர்க்கின்னதுபகரலுற்றான்.

(இ-பு.) தேவர்கள்வணங்கி இவ்வண்ணங்குறையிரந்து தோத்திரஞ்செய்யும்போது குற்றமற்ற வேதத்தைமுன்னம ஓதுவித்தருளிய பவளம்போலும் சிவந்தவாயையுடைய அவ்வேதபுரீசர் திருவுளமிரங்கி முகமலர்ச்சியுடன் அவ்விண்ணவர் முயறசியாற்பழுதலாராதபடி அவர்களுக்கு இவ்வாறு திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (கரு)

வருங்கடுவிடத்துக்கஞ்சிமருந்தினைத்துறந்துவந்தீ
ரிருங்கதிப்பூசைசெய்தீரினியுமக்கிடாசெய்கின்ற
கருங்கடுவலியும்போக்கிகருதியசுதையுமீவேம்
விருப்பியிந்நிலத்திலிங்கமவேறுபூசியுநீரென்றான்.

(இ-பு,) பொங்கிவருங்கடிய ஆலாகலத்துக்குப்பயந்து அமிர்தத்தையுமவெறுத்து இவண்அடைந்தீர் அதுவுமல்லாமற் பெருந்தன்மையானவழிபாடும்புரிந்தீர் ஆகையால் இனிஉங்களுக்குத்துயர்செய்யும் கருநிறத்தையுடைய அவ்விடத்தின்வன்மையையும்போக்கி நீங்கள் வேண்டிய அமிர்தமும்கொடுப்போம் விருப்பத்துடன் இத்தலத்தில்வேறு ஒரு சிவலிங்கப்பிரதிட்டைசெய்து நீங்கள் பூசியுங்களென்று திருவாய்மலர்ந்தருளினார்.

வேறு.

எம்பிரானிஃதுரைத்தலுமிமையவரெய்தி
யன்பினாற்குடதிசையிலோர்யோசனையாற்றின்
வம்புலாமலர்ப்படப்பையார்வடகரையதனி
லும்பரார்மணிச்சிகரப்பொற்கோயிலுண்டாக்கி

(இ-ரு.) எமதுபிரானாகிய வேதபுரீசர் இவ்வாறுதிருவாய்மலரத் தேவர்கள் சென்று மெய்யன்பினால் மேற்குப்பக்கமாய் ஒரு யோசனை தூரத்தில் வாசனைகமழும் புட்பங்கள்நிறைந்த நந்தவனமுள்ள குசாநதிக்கு வடகரையிலே அதிக உன்னதமான இரத்தினங்களழுத்திய சிகரங்களோடுகூடிய அழகிய திருக்கோயிலமைத்து. எ-று. (௧௭)

உதிதபானுவினொளிர்சிவலிங்கமொன்றுநிறுவி
விதிதவாகமநூலவழிவிரைமலர்கொண்டு
கதிதபூசனைசெய்துபொய்கைமலர்குவித்துத்
துதித்துவாழ்த்தலுங்கோதைபாகனுக்கருள்சுரந்து.

(இ-ரு.) உதயமாகிய இளஞ்சூரியனைப்போலும் ஒளிவீசும் சிவலிங்கம் ஒன்று பிரதிட்டைசெய்து ஆகமங்களில்விதித்திருக்கும்பிரகாரம் வாசனைகமழும் மலர்களைக்கொண்டு பெருமையிற்சிறந்த வழிபாடுபுரிந்துஅழகியகைகளாகிய மலர்களைச்சிரமேற்குவித்துத் தோத்திரஞ்செய்து வாழ்த்தினவுடன் இளமுலைநாயகியார் மணாளராகிய வேதபுரீசருக்குக் கருணைசுரந்து. எ-று. (௧௮)

மானும்பாலமுமலர்க்கைத்தலத்திலங்கத்
தேனெண்கொன்றையுந்திங்கள்கங்கையுமுடிதிகழப்
பானனீற்றொளிமேனியும்பவளவெற்பென்ன
வானின்மீதுமைபாகனுமமரர்முன்னுற்றான்

(இ-ரு.) மான்கன்றும மழுவும் தாமரை மலர்போலும் திருக்கரங்களில் விளங்கத் தேன்தங்கிய ஒள்ளிய கொன்றைமலர்மாலையும் சந்திரனும் கங்கையும் திருமுடியில் விளங்கப்பால்போலும் வெள்ளிய திருநீற்றின் பிரகாசம் பொருந்திய திருமேனியும் பவளமலைபோல்விளங்க இடபவாகனத்தின்மீது உமாபதியாகியசிவபிரான் தேவர்க்கெதிரிற்காட்சிகொடுத்தருளினார். எ-று. இவ்விரண்டுங் குளகம். (௧௯)

கண்டவானவர்முடிமிசைக்கரதலங்கூப்பிப்
பண்டைநாளவனோதியமறையினைப்பகர்ந்து

தொண்டைவாய்மயில்பாகனைத்துதித்தனர்மிகவு
மண்டர்நாதனுமமரர்மேலன்புபூத்தருளி.

(இ-பு) அவ்வாறு வரக்கண்டதேவர்கள் சிரமேற்கரங்களைக் கூப்பி முற்காலத்திற்றங்களுக்கவர் ஓதுவித்தருளிய வேதத்தைக்கூறி ஆதொண்டைக்கனிபோலும் சிவந்த வாயையுடைய இளமுலைநாயகியார் பங்கராகிய வேதபுரீசரை மிகத்துதித்தார்கள் அச்சிவபிரானும் தேவர்கள்மீது கருணைபூத்து. எ-று. (௨0)

மண்ணும்வானமுமற்றுள திசைகளுநடுங்க
நண்ணுதீயமைநஞ்சினைமலாகையாலெடுத்துக்
கண்ணுதறறிருவாயினுலுண்டலுங்கறுத்தே
யெண்ணவிண்ணவர்நின்றதுகந்தரத்திலங்கி.

(இ-பு) மண்ணுலகமும் விண்ணுலகமும மற்றுமுள்ள திக்குகளெல்லாமும நடுங்குமபடிவந்த கொடிதானநஞ்சத்தை தாமரைமலர்போலும் தமது திருக்கரத்தாலெடுத்து நெற்றிக்கண்ணையுடைய அச்சிவபிரான் திருவாயால் உண்டவுடன் தேவர்களெல்லாம் மதிக்குமபடிஅவரது கண்டத்தில் கருநிறத்துடன் விளங்கித்தங்கிவிட்டது. எ-று. இவ்விரண்டுங் குளகம். (௨௧)

அல்லறந்துவந்நடற்றியகடுவையுமருந்தி
நல்லமென்கடலமுதமுநல்கியேயருளால்
வல்லவானவர்தங்களை வாழ்கெனவுரைததே
யெல்லையிற்றிகழிலிங்கத்துவெய்தினனிறைவன்.

(இ பு.) உலகத்தின்கணவந்து துயரங்கொடுத்து வருத்திய ஆலாகலத்தையும புசித்து நல்லமிருதுவாகிய அபபாற்கடலினிடத்திருந்த அமுதத்தையும் வருவித்துக்கொடுத்துக்கருணையினுல் வன்மைமிககதேவர்களை நோக்கி நீஙகள்வாழ்வீர்களாக என்று திருவாய்மலர்ந்து எமதிறைவராகிய சிவபிரான் அளவிறந்தமகிமையினையுடைய அச்சிவலிங்கத்திற் கரந்தருளினர் எ-று, (௨௨)

பணிகண்டிப்பரன்கடலிடைப்படிந்திடுபால
மணிகண்டத்திடைவைத்தனனுதலிலகங்கொள்
பிணிவிண்டோமெனவிண்ணவராத்தனர்பெரிது
மணிகண்டேசுரனெனும்பெயர்வைத்தனர்மாதோ.

(இ-பு.) சர்ப்பத்தை மாலையாகத்தரித்திருக்கும் சிவபிரான் திருப்பாற்கடலினிடத்துப் பரவியிருந்த ஆலாகலத்தைத் தமது அழகிய கண்டத்தினிடத்து வைத்தருளினமையால் நமது மனதின்கணிருந்த துயரம்

நீங்கினுமென்று தேவர்கள் மிகவும் ஆரவாரித்தவர்களாய் அச்சிவலிங்கப்பெருமானுக்கு மணிகண்டேசர் என்னுந்திருநாமஞ் சூட்டினார்கள் எ-று. மாது-ஓ-அசை. (உஎ)

உம்பர்க்காய்க்கடலுதித்தவெங்கடுவெடுத்துண்ட
வெம்பிரான்பதமிறைஞ்சியமாந்தர்களெவர்க்கு
வெம்பலர்விடத்தரவினற்பயமிலைவிரிந்த
வம்புலாமலாநைமிசவனதமாதவத்தீர்.

(இ-பு.) தேவர்களுக்காகப்பாற்கடலினிடத்துதித்த கொடிய ஆலாகலத்தை எடுத்து அமுதமாகக்கொண்டருளிய எமதிறைவராகிய அச்சிவலிங்கப்பெருமானது திருவடிகளைத்தொழுகின்றவர்களெல்லார்க்கும் பற்களிடத்துக்கொடியவிடம்பொருந்திய சர்ப்பங்களினுற் பயமில்லை மலர்ந்த வாசனைகமழும் புஷ்பங்கள்தங்கிய நைமிசாரணியத்திலுள்ள மகாதவசிகளே, எ-று. (உச)

அந்தவீசற்குக்கீட்டிசைக்குரோசமொன்றகன்றன்
முந்தைவேலவனபூசனைமுற்றியமுக்க
ணெந்தைபாங்குளனவன்றொழுதருச்சனையிபற்றிற்
சிந்தையின்புறவட்டமாசித்திபெறுபெறுவார்.

(இ-பு.) அச்சிவலிங்கப்பெருமானுக்கு கிழக்குதிசையில் ஒருகுரோசதூரஞ்சென்றால் முன்னாளில் முருகக்கடவுள்பூசித்த திரிநேத்திரங்களுள்ள எமது தந்தையாராகிய சிவலிங்கப்பெருமான் அவ்விடத்துள்ளார் அச்சிவலிங்கப்பெருமானைவணங்கிப்பூசித்தால்தங்கள்மனதின்கண் இன்பம்விளைய அட்டமாசித்தியைப்பெறுவார்கள். எ-று. (உரு)

ஆயநாதனைச்சத்திபுரீசனென்றறைவார்
தூயவத்தலமதறகுமூன்றம்புதூர
மேயகீட்டிசைவைப்பின்முன்வேலையினெழுந்த
தீயவெவ்விடமமரரைத்துரந்தவண்செறிந்த.

(இ-பு) அச்சிவலிங்கப்பெருமானைச் சத்திபுரீசரென்றுகூறுவார்கள் தூய்மையாகிய அவ்விடத்தினின்றும் மூன்றுஅம்போடும் தூரத்திலிருக்கும் கிழக்குதிசையாகிய இடத்தில் முன்பு பாற்கடலுண்டாகிய அக்கினி போன்ற கொடிய ஆலாகலம் தேவர்களைவிட்டு நீங்கி வசித்தது. எ-று.

அவ்விடத்தினையபின்றனமலனுமங்கத்
தெய்வகற்றலஞ்சிரிதென்றமரர்கள்செறியா

வுய்வகைக்கெழிலுயர்ந்திடுமிலிங்கமொன்றமைத்தே
சைவநூல்விதிப்படியரன்றனையருச்சித்தார்.

(இ-பு) அந்தஆலாகலத்தைச்சிவபிரான் அவ்விடத்திற் புசித்தமையால் அந்தத்தெய்வீகம்பொருந்திய இடம்சிறந்ததென்று தேவாகள சேர்ந்து தாங்கள் பிழைக்கும்படி அழகுமிக்க ஓர்சிவலிங்கப்பெருமானைப்பிரதிட்டைசெய்து ஆகமவிதிப்படி அச்சிவலிங்கப் பெருமானைப பூசித்தார. எ-று. (உ௮)

இந்தவாற்றினாற்பூசனைபுரிந்தனரிமையோ
ரந்தநாதனைக்கயிலைநாயகனெனவறைவார்
வந்தவெவ்விடம்யாவாக்குநன்மைசெய்வலனை
முந்துமப்பதிகடுவைநல்லூரெனமொழிவார்.

(இ-பு.) இவ்விதமாகத்தேவர்கள் பூசித்தாாகள் அச்சிவலிங்கப்பெருமானைக்கயிலாசநாயகரென்றுகூறுவாாகள் அந்தவூரில் விஷயம் நீங்கியாவர்க்கும் நன்மைவிளைந்தமையால் முற்பட்ட அந்தத்தலத்தைக் கடுவைநல்லூரென்று கூறுவார்கள் எ-று. (உ௯)

ஆயவைந்தெரிநாப்பணின்றருந்தவம்புரியுந்
தூயனுந்தவப்பராசரன்முதலியதுறந்தோர்
மேயவானவர்தத்தமபெயர்கொடுநிறுவ
மேயலிங்கமோர்கணக்கிலைவிளம்புதற்கென்றான்.

(இ-பு) இவ்வண்ணமாகப் பஞ்சாக்கினிமத்தியிலிருந்து அரியதவத்தைச்செய்யுந்தூயராகிய தவமுள்ள பராசரர்முதலியதுறவிகளஅன்புள்ள தேவர்கள் தங்கள்தங்கள் பெயரினாற்பிரதிட்டைசெய்த சிவலிங்கமூர்த்தங்களை விபரமாகச்சொல்லவேணடுமென்றால் கணக்கில்லையென்று சூதபுராணிகா நைமிசாரணியமுனிவாகளுக்குச் சொன்னார். எ-று. (௩௰)

ஆலமுண்டசருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம். ... ௭௪௦.

—— o ——



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கந்தருவன்சாபந்தீர்ந்தசருக்கம்.

---

இன்னமுமியம்பக்கேண்மினிமையவர்க்கினியவேதஞ்
சொன்னவாரணத்தோலபோர்த்தசோதியின்சரிதையென்ன
மன்னுமாதவத்துச்சூதனவனத்துறுமுனிவர்கேட்பப்
பன்னுவாரிமையோர்போற்றும்பரமனீசானதிக்கில.

(இ-பு) தேவர்களுக்குவேதம் ஓதுவித்தருளிய யானைத்தோலைப் போர்வையாகக்கொண்ட சோதிசொரூபரான அவ்வேதபுரீசரது சரிதங்களை இன்னுஞ்சொல்லுகின்றேன் கேளுங்களென்று நிலைபெற்ற மகாதவத்தையுடைய சூதபுராணிகர் நைமிசவனத்துமுனிவர்கள் கேட்கும்படி கூறுகின்றார் முன்னம ஆலாசலம் உண்டு தேவர்களால் போற்றப்படும் சிவலிங்கப்பெருமானுக்கு ஈசானதிக்கில். எ-று. (க)

மூன்றெனுங்கடிகைதன்னின்மூர்த்தியொன்றுளதுசொன்ன
வான்றனுபகன்றன்காதைவழங்குவன்கேண்மின்முன்னந்
தேன்றருமலரோன்வேதச்சீர்ப்பொருடன்னைப்பூசை
யேனறவைகொண்டுசெய்யுமெல்லையெந்நாளுநீங்கான்.

(இ-பு) மூன்றுநாழிகைதூரத்தில் ஓர்சிவலிங்கமூர்த்தம் உண்டு அப்படிப்பட்ட தேவர்நாயகரான அச்சிவலிங்கப்பெருமானது சரிதையைக்கூறுகிறேன்கேளுங்கள் முற்காலத்து தேன்றங்கிய தாமரைமலரில்வசிக்கும்பிரமன் வேதத்தின்பொருளாய் விளங்கும் சிவபிரானைப் பொருந்திய பூசாதிரவியங்களாற் பூசித்துவருங்காலத்தில் அப்பிரமனுக்கு அவனெதிரில் ஒரு நாளும் நீங்காதவனாயிருந்தான் எ-று (உ)

துந்துமியென்னுநாமத்தூயவன்றவத்தால்வல்லன்
கந்தருவரிலொருத்தன்கையினைமுகிழ்த்துநின்று
சந்ததமயன்செய்பூசைதன்னையேநோக்கிநிற்ப
னிந்தவாறிருக்குநாளிலியைந்ததோர்யவமவன்பால்.

(இ-பு.) கந்தருவர்களில் ஒருவனும் தவசிரேஷ்டனு மாகிய துந்துமியென்னும்பெயருடைய பரிசுத்தனொருவன் தன்கைகளைச்சிரமேற்கு

வித்து எதிரில் நின்று நாடோறும் அப்பிரமன்செய்யும் பூசையையேபார்த்துக்கொண்டிருப்பான் இப்படி யிருககுமநாளையில்அவனிடத்து ஓர் பாவம் சேர்ந்தது. எ-று. (௩)

பாரதிமகிணன்செய்யும்பார்வதிமகிணன்பூசைக்
கேரதாய்பருவார்மென்பூவினிதுவைத்திருப்பநோக்கிச்
சீரதாயிருந்தநெஞ்சந்திருக்கிதநுந்துமிபபேர்கொண்டோ
ஞரதன்றந்தைகாணுனென்றொருநறும்பூக்கொண்டான்.

(இ-பு.) சரஸ்வதிமணளனுகிய பிரமன் செய்கின்ற பார்வதிமணளராகிய சிவபிரான்பூஜைக்காக அழகையுந்ததாய் வாசனைபொருந்த மெல்லிய பூக்கள் இனிமையுடன் வைத்திருப்பதைப்பார்த்துச்செவ்வையாக இருந்தமனமானதுவேறுபட்டு துர்தமிஎன்னும்பெயர்கொண்ட அக்கந்தருவன் நாரதமுனிவர் பிதாவாகியபிரமன் பாராமென்று என்று அதில் ஒரு நல்ல பூவை எடுத்துக்கொண்டான, எ-று. (௪)

பூசனைக்கமைத்து வைததபூவின்மேலோர் பூவைக்கொண்டு
வாசனைகாணுவான்போலவைததுக்துண்டத்தின்மோந்தா
ஞசிலாக்கமலததண்ணலறிந்துகந்தருவவாவென்
றேசில்பூசனைக்குவைத்ததெடுத்தறிவிலிபோன்மோந்தாய்,

(இ-பு) பூசைக்காக அமைத்துவைத்தமலர்களில்ஒருமலரைஎடுத்துக்கொண்டு வாசனைபார்ப்பவனைபோல் மூக்கினிடத்தவைத்து மோர்ந்தான் குற்றமற்ற கமலவாசியாகிய பிரமன்உணர்ந்து கந்தருவனே வருவாயென்றழைத்து பழுதற்ற பூசைக்குவைத்ததையெடுத்து அறிவில்லாதவனைப்போலமோர்ந்தாய். எ-று. (௫)

வேறு

தீயதுதுயதுதேர்கிலாதுசெய்
தாயதனுற்புவியதனிற்கர்தப
மாயிழிமலங்கடின்னென்றுமாமலர்
நாயகன்சாபமுநகின்றிட்டானரோ

(இ-பு) தீமைநன்மை அறியாமல இப்படிப்பட்டகாரியஞ்செய்தாய் ஆகையால் நிலவுலகத்தில் கழுதையாய்ப்பிறந்து இழிவானமலங்களைதின்னக்கடவாய் என்று தாமரைமலர்வாசனுகிய பிரமன் சாபங்கூறினன். எ-று. அரோ-அசை. (௬)

திசைமுகன்சினத்தொடுஞ்செப்புசாபங்கேட்
டசையுறுந்துந்துமியல்லலுற்றன
னசையுறுபலமிதுவென்னநாடிகாப்
பசையறவுலர்ந்துமெய்பதைத்திதோதுவான்,

(இ-பு) பிரமன்கோபத்துடன்கூறிய சாபத்தைக்கேட்டு சிந்தைகலங்கிய துந்துமியென்னும் கந்தருவன் துன்பமுற்றனன் கொடியதாகியசாபம் இதுவென்று எண்ணி தனதுநாவினிடத்துச் சுறுநீரும் ஈரமில்லாதபடி உலர்ந்து சரீரம்நடுங்கி இவ்வாறு கூறுகின்றனன். எ-று. (எ)

மூவுலகிற்குமோர்மூர்த்தியாயருந்
தேவனீயறிவிலாசசிறியன்யானசெயும்
பாவமும்பொறுத்தெனைப்பரிந்துகாத்தரு
ளீவதுன்கடனெனவிறைஞ்சினனரோ.

(இ-பு) மூன்றுலகங்களுக்கும் ஒரேமூர்த்தியாயிருந்து சிருட்டித்தொழிலைப்புரியுந்தலைவராயுள்ளவா தேவரீர் ஆதலாலறிவில்லாதசிறியவனாகிய அடியேன்செய்த பாவத்தையும் மன்னித்து என்மீதுபரிவுவைத்துப் பாதுகாத்துக் கருணைகூர்வதும் தேவரீரதுகடமையென்று வணங்கினன் எ-று. அரோ-அசை. (அ)

கந்தருவன்றுதிகணக்கிலோதியே
வந்தனைசெய்தலுமகிழ்சுரந்தயன்
றுந்துமிதனையழைத்ததனைசசொற்றனன்
வந்திடுஞ்சாபமோாவழிவிலங்கவே.

(இ-பு) அக்கந்தருவன் இவ்வாறு அளவற்றதோத்திரங்களைக்கூறி வழிபாடுசெய்தவுடன் பிரமன்களிகூர்ந்து அக்கந்தருவனாகிய துந்துமியை அருகலழைத்துத் தனனால்நேர்ந்தசாபம் ஒருவிதமாய் நிவாரணமாகும்படி இவ்வாறுகூறினன. எ-று, ஏ-இரணடும்-அசை. (கூ)

இளநிலாவேணியர்க்கிசைந்தமெய்ப்பொருள்
களவுசெய்தவர்நிரயத்திற்கற்பமா
மளவில்காலங்கிடந்தாழ்தலலலது
வளமுறுங்கதிகடான்வருவதில்லையே.

(இ-பு) மூன்றாம்பிறையைத்தரித்த சடையையுடைய சிவபிரானுக்காக அமைத்துள்ள உண்மைப்பொருள்களைத் திருடினவர்கள் நரகத்தில்கற்பமென்றுகூறும் அளவற்றகாலம்விழுந்து அழுந்துவதல்லது வளப்பம்பொருந்திய பதவிகள்கிடைப்பதில்லை. எ-று. ஏ-அசை. (௧0)

ஆயினுமுன்பவங்களுமாறெரு
பாயமின்றுளததுபகர்வன்கேட்டியான்
மாயிருஞாலத்துமறைசையென்றொரு
தாயினுமினியதோர்தலமுண்டாமரோ.

(அ-பு.) ஆயினும் உனது பாவம்நீங்குமபடி ஒருஉபாயம் இவ்விடத் துன்டு அதனைககூறுகின்றேன்கேள் இந்த பெரியவிலவுலகத்து மறைசை என்றதன்னிடத்தடைந்தவரை ஒப்பற்றதாயைப்பார்க்கினும் இனிமையுடன்பாதுகாக்கும் ஒரு சிவதலமுணடு. எ-று. ஆல்-அரோ-அசை.

அத்தலத்தருமறையறைநதரா தனை
சித்தம்வைததருச்சனைசெய்தியேயெனின்
முததியுந்தரும்வினைமுழுதுமோய்ந்திடு
சுததனுமாவைநீதொடஙகெனறனரோ.

(இ-பு) அந்தச்சுருதிபுரியில் அரியவேதங்களைநதேவாகளுககோதுவித்தருளிய வேதபுரீசனை மனம்ஒருமைப்பாடுடன் பூசிப்பையேயாகில் முத்தியும்அருள்புரிவார் நீஇதுவரையிற்செய்தள்ள தீவினைகளெல்லாம்நீங்கிவிடும் பரிசுத்தனுவாய் ஆகையால் அவ்வாறுசெயயத தொடங்குவா யென்று பிரமன் கூறினன். எ-று. அரோ-அசை (கஉ)

மலராயனுரைதநிடுமாறுதுந்துமி
நிலமிசைமறைசையினிமலற்போற்றியே
தலமதின்முன்புகாஞ்சாறறுமெல்லைபி
லலகிலோரிலிங்கமுமாருசசிததானரோ

(இ - பு) தாமரைமலாவாசனுகிய பிரமன் கூறியவண்ணம் துந்துமி என்னும் அககந்தருவன் நிலவுலகததின்கணுள்ள சுருதிபுரியில் வீற்றிருக்கும் வேதபுரீசரை வந்துதுதித்து அச்சிவதலததில் முன்புயாம் கூறியுள்ள விடததில் ஒரு சிவலிஙகப்பிரதிட்டைசெய்து அளவற்ற வழிபாடுகள் புரிந்தான். எ-று. ஏ-அரோ-அசை. (கங)

பூசனைசெய்திடும்புண்ணியத்தினு
லீசனும்விடையின்மேலினிதுவநதன
ளுசறுதுந்துமியன்பினுற்றுதி
பேசினன்பலபலபிரமமாததியை.

(இ-பு) இவ்வாறு பூசிக்கின்றபுண்ணிய மேலீட்டினுல் சிவபிரானும் இடபாரூடராய் இனிமையுடன் காட்சிகொடுத்தருளினர் குற்றமற்ற துந்துமிபோன்பினுல் பரப்பிரமமாகிய அச்சிவபிரானை பலவிதமாகத்துதித்தனன். எ-று. (கச)

கந்தருவன்மிசைக்கருணையரலான்
முந்துறவினையயன்மொழிந்தசாபமு
மெநதனுக்கமைத்தபூவெடுத்துமோந்திட
வந்திடுமாவுமாற்றினுமென்றான்,

(இ-பு.) சிவபிரான் துந்துமியென்னும் அக்கந்தருவன்மீதுவைத்த கிருபையினால் முற்பட்டுப்பிரமன்உன்னைசபித்தசாபமும் எனதுபூசைக்காக வைத்திருந்த பூவை எடுத்ததனால் நேர்ந்தபாவமும் நீக்கினோமென்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (கரு)

மங்கைபாகனுமிதுவழங்கியக்குறி
துங்கமாமேனியிற்கரககத்துந்துமி
தங்களுறுமிடும்பவஞ்சாய்ந்ததீர்தலும்
பொங்கமோடுடம்பரிற்போயினனரோ.

(இ-பு) உமாதேவிபாகராகிய சிவபிரான் இவ்வாறுதிருவாய்மலர்ந்தருளி அச்சிவலிங்கத்தினது திருமேனியிற்கரந்தருளதுந்துமி என்பவன் தனக்குநேர்ந்தபாவம்போய்த் தான்புனிதனாக மகிழ்ச்சியுடன் பழயபடி ஆகாயத்திற்போனான். எ-று. அரோ-அசை. (கசா)

சுந்தரமலரினைச்சோரஞ்செய்தவன்
றந்ததாற்சோரனூரெனாமுஞ்சாற்றுவா
துந்துமியால்வந்தகோதைபாகனைக
கந்தருவேசனெனாவுரைக்கும்காசினி.

இ-பு.) அழகமைந்தபுட்பத்தைத்திருடினவனால் உண்டாக்கியகாரணத்தால் அந்தவூருக்குச் சோரனூரென்றுபெயர்கூறுவார்கள் துந்துமி என்னும் அகக்கந்தருவனால் பிரதிட்டைசெய்த சிவலிங்கப்பெருமானைக கந்தருவேசரென்று உலகத்தார் கூறுவார். எ-று. (கஎ)

இக்கதைதன்னையேயினிதுகேட்டவ
ரக்கமைமிடற்றனையடிபணிந்தவா
ரக்கனையருளினானெண்ணுபாவம்போய்ச்
சொக்கலோகத்தினிற்றுன்னுவாரரோ.

(இ-பு) இச்சரிதையை இன்புடன்கேட்டவர்களும் அச்சிவலிங்கப் பெருமானது அழகியதிருவடிகளைத்தொழுதவர்களும் சிவபிரான்திருவருளினால் தம்மையடைந்தபாவங்களெல்லாம்நீங்கி புனிதமான சொர்க்கலோகத்தையடைவார்கள். எ-று. அரோ-அசை. (கஅ)

வேறு.

நான்முகன்மதலைநாரதன்முன்னநானிலந்தனிலுயர்தலத்திற், சேர்ந்முகந்துதுஞ்செழுமலர்ச்சோலைசிறந்திடுமறைசையம்பதிபோந்

யான் முகத்துயர்ந்தமலைமகளபாகன்மகிழ்வொடும்விரைவினில்வர ந்க, டான்மிகுதகருளுக்தலமிலையென்றுத்தன்னகத்தோர்ந்தவணை டைந்தான்.

(இ-பு) பிரமன்புதல்வராகிய நாரதமுனிவர் முறகாலத்தில் நிலவுல கத்துள் உயர்ந்த சிவதலங்களில் வண்டுகள்தேனைக்குடித்துக் கீதம்பாடும் செழிப்புள்ள மலர்ச்சோலைகள் சிறப்பமைந்த சுருதிபுரியைப்போல ஆகா யத்தையளாவி ஓங்கிய இமயவரையரையன்மகளாகிய இளமுலைநாயகியா ரைப்பாகத்திலுடைய வேதபுரீசர் திருவுளமகிழ்ச்சியுடன் அதிசீக்கிரத் தில் அவரவர்களுக்குவேண்டிய வரங்களைத் தாராளமாகக்கொடுக்குந்தலம் வேறில்லையென்று தன்மனதின்கணுணர்ந்து அத்தலத்தையடைந்தார். எ-று. (௧௯)

ருப்பலமழிதருப்புண்ணியமுதவுமுருகணைத்தினின்மூழ்கி
யொப்பரும்பஞ்சாக்கரத்தையுச்சரித்தேயுமபருக்கோதுவித்தருளு
மப்பனைப்பரவியாசலயபுரியாவன்பொடும்பலபலபழிச்சி
யிப்பெருந்தலத்திற்சிவலிங்கபூசையியற்றுவமெனத்துணிந்தெய்தி

(இ-பு.) சஞ்சிதம் ஆகாமியம் பிராரத்தம் என்னும்மூன்றுவிதவினை ப்பகுதியையும் ஒழித்துப் புண்ணியத்தைக்கொடுக்கும குகாதியில் நீராடி ஒப்புகூறுதற்கரிய திருவைந்தெழுத்தையும் தியானித்துத் தேவர்களுக்கு வேதமோதுவித்தருளிய எமதுதந்தையாராகிய வேதபுரீசரைவணங்கியருச் சித்து மெய்யன்போடு பலபலவாகத்துதித்து இந்தப்பெருமைபெற்ற சிவத லத்திற் சிவலிங்கபூசைசெய்வோமென்றுகருதி யடைந்து. எ-று. (௨௦)

துந்துமிசாபந்தொடைத்திடுமரற்குச் சொலனுமுக்கடிகையாந் தூர,மிந்திரதிசையிலெயதியோரிலிங்கமியல்புறவமைத்தவற்பழிச் சித், தந்திரியின்வீணைநாதமுமிசைப்பத்தனிமுதற்குளமருள்கனிந் தே, யெந்தவானவருமேத்தவுமெவர்க்குமினியனுமாய் வரமளித் தான்.

(இ-பு) துந்துமிசாபத்தைப்போக்கிய சிவலிங்கப்பெருமானுக்கு மூ ன்றுநாழிகைவழிதூரத்து இந்திரதிக்கிற்சென்று அவ்விடத்து ஓர் சிவலிங் கத்தை இலக்கணம் அமையும்படி பிரதிட்டைசெய்து அச்சிவலிங்கப்பெ ருமானைப்பூசித்துத் தந்திகளாலாகிய வீணையின்நாதத்தையும் இசையுடன் கூட்டிப்பாட ஒப்பற்ற முதல்வராகிய சிவபிரானுக்கு திருவுள்ளமும்திருவரு ளும் இரங்கி எப்படிப்பட்டதேவர்களும் வணங்கவும்யாவர்க்கும் இனிமை

புள்ளவனுமாயிருக்கத்தக்க வரங்கொடுத்தருளினுர், எ-று. இவ்விரண்டு ங்குளகம். (உக)

வேதநாரதன்செய்வீணை நாதத்தின் மேலுளம்விரும்பியேயருள்செய்
நாதனை நாகேசுரனெனவேவருநவிலுவர்நவிலுமவ்வரனைக்
காதலொடேய்ந்தித்தொழுதவரிநதக்காதைகேட்டவர்படித்தோர்க
ளோதியகானவித்தைதவல்லவராயுயர்வரென்றினனமுமுனைபரன்.

(இ-ள்) வேதத்தை ஓதியுணர்ந்த நாரதமுனிவரால் வாசிக்கப்பட்ட வீணையினது நாதத்திலுல் திருவுளம்விருப்பங்கொண்டு கிருபைபுரிந்த அச்சிவலிங்கப்பெருமானை நாகேசுரரென்று யாவருங்கூறுவார்கள் அவ்வாறு திருநாமங்கொண்ட அச்சிவலிங்கப்பெருமானைப்போற்றி அவ்விடத்தடைந்து வணங்கினவர்களும் இச்சரிதையைக்கேட்டவர்களும்வாசித்தவர்களும் மேற்கூறிய வீணைகானவித்தையிற் பண்டிதர்களாய் மேன்மையடைவார்களென்றுகூறி இன்னமும் சூதபுராணிகர் கூறுகின்றுர் எ-று.

வேறு.

தண்டேசனென்றுபெயரேதரித்தவன்வேதமோதுமறைனைக்
கண்டேதுதித்துநாகேசருக்கொருகூருங்குரோசமதனில்
வண்டோதுசோலைவடகீழ்விசும்பினிலனுற்றிருந்துமகிழ்வாற்
றிண்டேயுவிற்றசுடரன்னவங்குசிவலிங்கமொன்றுநிறுவி.

(இ-ள்) தண்டேசனென்னும்பெயருடையவொருதபோதனன் வேதபுரீசரைக்கண்டுதுதித்து முன்கூறியுள்ள அந்நாகேசருக்கு ஒருகுரோசதூரத்தில் வடகீழ்த்திசையில் வண்டுகள்பண்பாடும் சோலையிலிருந்து ஆகாயத்திற்கும் பூமிக்குமாக மகிழ்ச்சியுடன்சஞ்சரித்துக் கொண்டிருந்துவன்மையுள்ள அக்கினியும் தோல்வியடையத்தக்க பிரகாசத்தோடும் விளங்கும் ஒருசிவலிங்கப்பெருமானைப் பிரதிட்டைசெய்து எ-று. (உக)

புலனைந்தும்வேறுபொருண்மேலுறாதுபுரிகின்றபூசைவினையிற்
சலமின்றியையசலமன்றன்மாலைதளிரபோதிஞெடுகொடுமே
னிலவம்பயந்தமலரிற்சிறந்தவிருநாள்வழுத்தியெழுது [வான்.
கிலவொன்று செய்சடையண்ணலன்புரிஞ்றைகின்ற நெஞ்சனருள்

(இ-ள்) ஐம்புலன்களும் வேறுபொருளிடத்துச்செல்லாது அடக்கிச் செய்கின்றவழிபாடாகிய திருத்தொண்டில் வழுவாமல் அழகிய திருமஞ்

னம் வாசனைகமழும் திருப்பள்ளித்தாமம் இளந்தளிர்கள் மலர்களுடன் இ
வைதளெல்லாவற்றையுங்கொண்டு மிருதுவாகிய இலவமரத்திற்பூத்தமலரி
னும் மெலலிய இரண்டு திருவடிகளையும்வணங்கி எழுந்தவுடன் இளம்பி
றைசூடிய சிவந்தசடையையுடையசிவபிரான் உள்ளன்பானது நிறைந்த
திருவுள்ளமுடையவராய்த் திருவாய்மலாந்தருளுகின்றார். எ-று.

அன்னபாலியற்றுமுன்பூசனைக்குயார்செய்வரொப்பவுலகி
லுன்பாலுசநதமினியுன்கருத்திலுறுகின்றயாவுமுறைதி
யின்பாயெனநதண்மதிகங்கைசூடியிமவானளித்தவுமையா
டன்பாதியோடுவிடைமீதிலவநதுதனிநாதனீதுநவிலா.

(இ-பு) மெய்யன்பினாற்செய்யும உனதுபூசைக்குச்சமானமாக இந்நி
லவுலகத்தினிடத்துயாரசெய்வாாகள் ஆகையால் உன்னிடத்துத் திருவுள
மகிழ்ந்தோம் இனிமேல் உன்மனதில் நினைத்தவைகளையெல்லாம் இன்பு
றககூறுவாயென்ற குளிர்ந்தசந்திரனையும் கங்கையுஞ்சூடிககொண்டு இமய
வரையரையன்பெற்ற உமாதேவியை ஒாபாகமாககொண்டு இடபாரூட
ராய் எழுந்தருளி ஒபபற்றசிவபிரான் இவ்வாறு திருவாய்மலாந்தருளி.

இறைமற்றுரைப்பமறையோதுதண்டியிருதாள்வணங்கிவிமல
வுறைபொற்கழற்கணிறையனபெனக்கிதருளவாயெனத்தவெனுங்
கறைதுற்றகண்டனவைதநதமென்றுகனிவான்மறைநதனிது
நிறையுற்றசிநதைமுனிவீர்களெனறுநிகழ்சூதனோதினனரோ.

(இ-பு) சிவபிரான்இவவாறு திருவாய்மலாந்தருளலும் தண்டேசன்
அவரது இரண்டுதிருவடிகளையும்தொழுது மலரகிதரே எனதுதந்தையே
சத்திக்கும் பொன்னுலாகிய வீரகண்டையணிந்த உமதுதிருவடிகளில் இ
டையறாத மெய்யன்பாகிய இதுதான் எனக்குவேண்டியது இதனை அருள்
புரியவேண்டுமென்று குறையிரக்கவும் விடந்தங்கிய கண்டத்தையுடைய
சிவபிரான் அவ்வரத்தைககொடுத்தோம் என்று திருவாய்மலர்ந்தருளிக்
கனிவுடன் அச்சிவலிங்கததிற்கரநதருளினர் எக்காலமும்மெய்யன்புநிறை
ந்திருக்கும் நைமிசாரணியமுனிவாகளோ என்றுசூதபுராணிகா கூறியருளி
னர். எ-று. அரோ-அசை. (உசு)

கந்துருவன்சபாநதீாந்த சருக்கம் முற்றிற்று,

ஆ திருவிருத்தம் ... எகசு,

---



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பற்குனன்பூசைசெய்த சருக்கம்.

சுருதிப்பதியானபெருஞ்சாழல்சொலவேனினையகேண்மினெனக்
கருதிப்புகல்வனசூதமுனிகடல்சூழ்வையமுழுதளிகருங்
குருதிப்புலவுகமழயிலவேற்கொற்றத்தருமன்றனக்கநுசன்
றிருகிபபொருதுமவிலவிசயன்சிந்தைதனிலோர்துயருற்றான்.

(இ-ள்.) வேதபுரீசரது அளவில்லாத திருவிளையாடலை இன்னுஞ்
சொல்லுகின்றனன்கேளுங்களென்றுநினைத்துச்சூதமுனிவர்கூறுகின்றனர்
கடலாற்சூழப்பட்ட இந்நிலவுலகமுற்றுங்காக்குமசத்துருக்களைவென்றுஇரத்
தநாற்றமவீசும்கூர்மையுள்ளவேலேந்தியவெற்றியுடைய தருமநந்தனருக்கு
ச்சகோதரனாகியபகைவரது சிரங்களைத்திருகியமாமோதும் கணைபூட்டியவி
ல்லையுடைய பற்குனன்தனது மனதினில் ஒருதுயரங்கொண்டனன். எ-று.

மலர்மாமகளைக்கலைமகளைவானோர்க்கரசன்மகிழ்மனையைச்
சிலைவேட்கினியசெழுங்குயிலைச்சிறந்தவெழிலாலவென்றிடுமென்
கலைபோனோக்கிசுபத்திரையைக்கடிமாமணஞ்செய்திடவென்று
புலன்மாமனதத்தேமயறாண்டப்புழுங்கியுள்ளந்தளர்வுற்றான்.

(இ-ள்.) தாமரைமலரில்வசிக்கும இலக்குமியையும் சரச்சுவதியை
யும் தேவேந்திரன் பத்தினியாகிய இந்திராணியையும் கரும்புவில்லை யு
டைய மன்மதனுக்கு இன்பமாகிய செழிப்புள்ள கோகிலம்போலும் சொல்
லையுடைய இரதியையும் மேலான அழகினால் சயித்திடும் மான்போன்ற
கண்ணாளாகிய சுபத்திரையைக்களிப்பானமணம்புரியவேண்டுமென்று அறி
வானது மனதினிடமாகக்கொண்டெழுப்புங்காமக்கனலால் உள்ளத்தின்க
ண்தளர்ச்சியையடைந்தான் அருச்சுனன். எ-று. (உ)

கண்டேமாயனிவன்காதல்கருத்துட்டேர்ந்துகடலால
முண்டோன்கருணையின்றியிவனுள்ளமுடிப்பதரிதென்னத்
தண்டேனுறையும்பசுந்துளபத்தணிமாநெஞ்சந்தனின்மதித்து
வண்டேபுலம்புநறுந்தாமமகவான்மகனுக்கிவையுரைப்பான்.

(இ-ள்.) இவ்வாறு அருச்சுனன்தளர்வதைப்பார்த்துக்கிருட்டிணமூர்
த்தி இவனது ஆசையை உள்ளத்திற்றெளிந்து கடலிலுதித்த விடத்தை

யுண்ட் சிவபிரான் அருளில்லாது இவனுடைய எண்ணத்தை நிறைவேற்று வது அருமையென்று குளிர்ந்ததேன்தங்கிய பசியதுளசிமாலையுள்ள அக்கிரு ட்டிணமூர்த்தி மனத்தின்மதித்துக்கொண்டு வண்டுகள் சத்திக்கும் வாசனை யுடையகற்பகப்பூமாலையணியும் இந்திரன் புத்திரனாகிய அருச்சுனனுக்கு இவைசொல்லுவார். எ-று. (௩)

என்றன்றங்கைசுபத்திரையாமேலக்குழலிமணமுடித்த
லுன்றற்கரிதேயின்றாருமுடன்வந்தவருஞ்சம்மதியார்
மன்றறன்னிராக்கதமாமணஞ்செய்வாயேல்வலியுனக்குந்
துன்றிவருமிவ்விடத்திலையதற்கோர்கருமஞ்சொலக்கேண்மோ.

(இ-பு.) என்னுடையதங்கையாகிய ஏலத்தயிலமணிந்த கூந்தலுடை யபெண்மணியை மணநிறைவேற்ற உனக்கு அருமையேயாகும் பெற் றோரும் கூடப்பிறந்தவரும் மணஞ்சம்மதிக்கமாட்டார்விவாகவிதியிற்கூறி யுள்ள அஷ்ட மணங்களுள் இராட்சதமணஞ்செய்வாயானால்முடியும் அ தற்கும் சத்துருக்கள் நெருங்கி வரும் இந்த இடத்தில் உனக்குவலியில்லை அதற்கு ஒருகாரியஞ்சொல்லுகிறேன் கேட்கக்கடவாய். எ-று. அஷ்ட விவாகம்-பிரமம்-பிரசாபத்தியம்- அரிடம்-தெய்வம்-காந்தருவம-ஆசுரம்-இ ராக்கதம்-பைசாசம்-இதில் இராக்கதமணம் பெணணும பெண்ணினத்தாரு ம் உடன்படாமல் வலிதிற்கொள்வது. (௪)

வெள்ளைப்பொருப்பிலிறைவிரைவில்வேண்டும்வரந்தந்தினித
மருமள்ளற்பழனஞ்சூழுமெழின்மறைசைப் பெருமானாலயத்தி
லெள்ளிற்பொழுதிலவணிசென்றிமையோர்க்கோதுமருளாளை,யுள்
ளத்தூன்றிப்பூசனைசெய்துன்றன்கருத்துமுடியென்றான்.

(இ-பு.) வெள்ளியகயிலையங்கிரியில் வீற்றிருக்கின்ற சிவபிரான் சிக் கிரத்தில் இச்சித்த வரங்களை அளித்து இனிதுடன்தங்கும்படியான நீர்வ ளப்பத்தினால் சேறுலராத வயல்கள்புடைசூழும் அழகிய சுருதிபுரியிலெழு ந்தருளியிருக்கும்வேதபுரீசருடைய திருக்கோயிலின்கண்எள்ளளவுபோது அவ்விடத்திற்போய் தேவர்களுக்கு வேதமோதுவித்த கருணைமூர்த்தியை மனத்தில் நிறுத்திப்பூசைசெய்து உன்னுடைய எண்ணத்தை முடிக்கக் கடவாய் என்றுகூறினார். எ-று. (௫)

பசுந்தார்த்துளபத்திருமாலிப்பரிசுபகரப்பற்குனனும் [த்
விசும்பார்மணிப்பொன்மதிள்புடைசூழ்வேதபுரத்தில்விரைவெய்தி
தசும்பார்சுவணத்திருக்கோயிறன்னிற்புகுந்துதவத்துற்ற
விசும்பாரேத்தும்வேதாந்தவேதபுரிநாதனைத்தொழுதான்.

(இ-பு.) பசியமாலையாக அணிந்ததுளசியையுடைய கிருட்டிணமூர் த்தி இத்தன்மைகூற அருச்சுனனும் விண்ணளாவிய அழகிய பொன்

னுலாகிய மதில்புடைசூழ்ந்த சுருதிபுரத்திற்கு அதிசீக்கிரமாய்ப்போய்த் தங்கக்கலசங்கள் ஆர்ந்த தூபிகளையுடைய திருக்கோயிலினுட்புகுந்துதவத்திலிருக்கும் விண்ணவர்கள் துதிக்கும் வேதாந்தப்பொருளாகிய வேதபுரீசரை வணங்கினான், எ-று. (சு)

வணங்கிப்பலகாற்பூசித்துமகிழ்ந்துதுதித்துவாழ்த்திடலு
மணங்குக்கொருபாதியையளித்தவாகத்தையனருள்பெருகி
மணங்கொடாரான்முகநோக்கிவானோர்வேந்தன்மதலாய்நீ [ல்.
குணங்கொண்மாதுசுபத்திரையைக்கூடும்வரமியான்கொடுத்தேனு

(இ-பு.) பணிந்து பலமுறைபூசித்துகளித்துத் தோத்திரித்து வாயால் வாழ்த்துதல்செய்திடலும் உமாதேவியாருக்கு ஒருபங்கைக்கொடுத்த திருமேனியையுடைய சிவபிரான்கருணைபெருகி வாசனையுள்ள வெற்றிமாலையணிந்த அருச்சுனனுடைய முகத்தைப்பார்த்து தேவர்க்கரசனாகிய இந்திரனுடையமகனே நீ நற்குணங்கொண்டபெண்ணான சுபத்திரையினது தோளைச்சேரும்வண்ணம்வரம் யாம்அளித்தோம். எ-று. (எ)

இந்தத்தலத்திலொருலிங்கமியற்றிப்பூசைநீபுரிந்து
பந்துக்கிசைந்தமுலையாளைப்பரிந்துமன்றன்முடியென்றே
யந்திக்கிசைந்தபதிருடையையனுரைப்பவருச்சுனனுஞ்
சிந்தைக்கிசைந்தவிடந்துருவிசசென்றான்வடக்குத்திசைநோக்கி.

(இ-பு.) இந்தத்தலத்தினில் ஒருசிவலிங்கப்பிரதிட்டை செய்து நீ அருச்சனைபுரிந்து பிறகு புஷ்பப்பந்துக்கு ஒத்ததனங்களையுடைய சுபத்திரையை அன்புடன் மணமுடிக்கக்கடவாயென்று மாலைக்காலத்துதிதநற்குரிய பிள்ளைப்பிறைசூடும்சிவபிரான்கூற அருச்சுனனும் தன்மனத்துக்குஇசைந்த தானத்தைத்தேடி உத்தரதிசையை நோக்கிப் போநதனன், எ-று. (அ)

செந்தாமரைக்கண்ணவன்பூசைசெய்யுமிறைக்குக்குணதிசையில்
வந்தானெறியோரகடிகைபெனமகிழ்ந்தவ்விடத்தில்மாவிலிங்கந
தந்தான்பூசைமிகப்புரிந்துதடக்கைகூப்பிபலதுதித்துச்
சிந்தாகுலந்தீர்ந்தனனாறுஞ்சென்றேமணந்துவாழ்கின்றான்.

(இ-பு.) இவ்வாறுசென்று கமலக்கண்ணனாகியதிருமால் அருச்சனைபுரிந்த சிவபிரானுக்குக்கீழ்த்திசையில் ஒருகடிகைதூரம்வந்துமகிழ்ந்து அவ்விடத்தினில் மகத்தாகிய ஒரு சிவலிங்கம் தாபித்து மிக்க அன்புடன் பூசித்து விசாலமான கரமிரண்டும்கூப்பி பலவிதமாகத்துதிசெய்து மனத்திலுண்டாகிய ஆகுலந்தவிர்ந்து துவாரகாபுரிக்குச்சென்று சுபத்திரையை வலுவினிற்கொண்டு மணம் புணர்ந்து வாழ்கின்றனன் அருச்சுனன் எ-று

ஆலயிடற்றானருள்பெற்றவடலார்விசயன்மகிழ்ந்தேகி
ஞாலமதிப்பச்சுபத்திரையையலைஞ்சேர்வதனைபுரிந்தனனாற்

காலன்விழக்கால்கொண்டுதைத்தகண்ணுர் நுதலெம்பெருமானை
வேலைவளைந்தபுவியனைத்துமவிசயலிங்கமெனப்புகலும்.

(இ-பு) நீலகண்டத்தையுடைய சிவபிரானதுகருணையடைந்த வன்மைபொருந்திய அருச்சுனன் களித்துச்சென்று இந்நிலவுலகமதிக்கும்படி சுபத்திரையை நன்மைசேர்ந்த விவாகம்செய்ததினால் அவ்வமையம விசயனுக்கு அருள்செய்த இயமன் வீழும்படி திருவடிகொண்டு வீசிய நெற்றிக்கண்ணையுடைய எமதுசிவலிங்கப்பெருமானைக்கடல்சூழ்ந்த இந்நிலவுலகமுழுதும் விசயலிங்கமென்று கொண்டாடுவர், எ-று. (௪௦)

அந்தவரனை மணமுடித்தற்கரிதாயிருபபோராரேனுஞ்
சிந்தைமகிழ்ந்தர்ச்சனை புரியிற்சிறநதமன்றமுன முடிந்தே
யிந்தவுலகினரசாகியினிதுவாழ்வாரிடர்தீரநது
கந்தமலரார்வனமுனிவீரென்றுசூதனகூறினனால்.

(இ-பு.) அந்தவிசயலிங்கச் சிவபிரானைத் தங்களுக்கு மணம்நடப்பதற்குக்கஷ்டமாயிருப்போர்கள் யாவராயினும் மனமகிழ்ந்து பூஜைபுரியின் மேன்மையுள்ள அந்தமணம் உடனேநிறைவேறி இந்தநிலவுலகுக்கு இராசாவாகி இடர்நீங்கி இனிதுடன்வாழ்வாாகள் வாசனையுள்ள மலாமிகக நைமிசாரணியமுனிவர்களே என்று சூதபுராணிகா கூறினா எ-று, (௪௧)

பற்குனன்பூசைசெய்த சருக்கம முற்றிற்று,
ஆ திருவிருததம் ... ௭௭௭,



உ

சிவமயம.

திருச்சிற்றம்பலம்.

பிறர்க்கடமகாமுனிமுத்திபெற்ற சருக்கம்.



அறத்தினுக்கோர்துறையானசூதமுனிதனைப்பரவி யையாவின்னங்
கறுத்தமிடற்றான்பெருமைகழறுகெனவிருடியர்கள் கனிந்துகேட்
ப, செறித்தசடைமுனியுரைப்பானீணிலத்தின்மாதுங்க னெடிதுகா
லம், பிறர்க்கடனென்றொருதவத்தோன்பெருந்தவங்கள்செய்துமு
த்திபெற்றானில்லை.

(இ-பு-) அறநெறிக்கோர்வழிகாட்டும் சூதமுனிவரை நைமிசாரணியமுனிவர்கள் வணங்கி ஐயனே நீலகண்டராகிய சிவபிரான்பெருமை

யை இன்னங்கூறவேண்டுமென்று மனக்கனிவுடன் கேட்கச் சிவந்தநிற த்தையுடைய சடையுள்ள அச்சூதபுராணிகர் கூறுகின்றார் இந்நிலவுலகின் கண் மகாபரிசுத்தராகிய பிறாக்கடரென்னும்பெயருடைய ஒருதவசிநெடு ங்காலம் பெரியதவங்களைச்செய்தும் முத்தியடையவில்லை. எ-று. (௯)

பாரினுள்ளதலங்களெல்லாம்பயின்றுதவம்புரிந்துமுத்திப்பலனி லாமல், வாரியுள்ளங்கையினுறவாங்கியுண்டமுனிவனடிவழுத்தவ ன்றோ, னீரினுள்ளசீதளம்போலுலகெங்குநிறையோதநூர் நிமல னன்பா, யூரினுள்ளகதிரவன்போலொதநூனுள்ளான்முத்தியுதவு மென்றான்.

(இ-பு-) இந்நிலவுலகின்கணுள்ள சிவதலங்களிலெல்லாம் வசித்து த்தவஞ்செய்தும முத்திபபயனையடையாமல் கடலை யுள்ளங்கையிலெடு த்து ஆசமனமாகக்குடித்த அகத்தியமுனிவரது திருவடிகளில வணங்க அவ்வகத்தியமுனிவா நீரின்கண் சீதளம் எவ்வாறு நிறைந்திருக்கின்றதோ அதுபோலவும உலகெங்கும நிறைந்து சூரியன் எவ்வாறு பிரகாசிக்கின் றானோ அதுபோலவும் சர்வவியாபகமாயுள்ள வேதபுரீசரிருக்கின்றா அ வரே அன்புடன் முத்தியினபத்தைககொடுப்பாரென்று சொன்னா எ-று

கேட்டுதவத்தினன்மகிழ்ந்துகிளர்சுடாப்பொன்மணிமாடங்களை த்துவான, நாட்டினுறுந்திருமறைசைநகரணைந்துருகனளிததநதி யிற்றோய்ந்து, சூட்டுமதிச்சடையானைத்தொழுதுபுலமுறைதுதித த்துதநூயோனெய்திப், பூட்டுசிலைக்கைவிசயன்பூசித்தவரறகுவடபு றத்திறம்போந்து.

(இ-பு.) இவ்வாறு அகததியமுனிவர் கூறக்கேட்டு பிறர்க்கடமகா முனிவா மனமகிழ்ந்து பிரகாசிக்கும் கிரணங்களையுடைய அழகிய இரத் தினங்களழுத்திய மாடங்களோங்கித் தேவலோகமட்டும வளாந்திருக்கும் சுருதிபுரியிற் சோந்து சேயாற்றில் நீராடி சநதிரனையணிந்த சடையை யுடைய வேதபுரீசரைவணங்கிப்பலபலவிதமாகத்தோத்திரஞ்செய்து அம் புபூட்டியவில்லைக்கையிலேந்திய அருச்சுனன்பரிசுத்தனுயடைந்து பூசித்த சிவலிங்கப்பெருமானுக்கு வடக்குதிசையிற்போய் எ-று. (௩)

முக்கடிகைநெறிசென்றுமுனிவனுமன்பாலங்கோர்மூர்த்திவைத்து தக்கதிரவியம்பலவுநதான்கொண்டுபூசித்துத்தனிமமேவி மிக்கதவவினையடைந்தான்விண்ணவர்களதிசயிப்பவிளம்புமந்த நக்கனைத்தான்பிறர்க்கடநாயகனென்பாரவற்றொழுவோர் நாளும் வாழ்வார்.

(இ-பு.) மூன்றுநாழிகைவழிதூரம்போய்ப்பிறர்க்கடமகாமுனிவரும் மெய்யன்புடன் அவ்விடத்து ஒருசிவலிங்கப்பெருமானைப் பிரதிட்டைசெ

ய்து பூசனைக்குவேண்டிய பூசாதிரவியங்கள் பலவற்றையும் சேகரித்து வைத்துக்கொண்டு பூசித்துப்பிறகு தான்தனியாகஇருந்துதேவர்கள்வியக்கு ம்படி பெரியதவத்தின்பயனாகியமுத்திபடைந்தார்நாம்கூறிய அந்தச்சிவலி ங்கப்பெருமானைத்தான் பிறாக்கடேசரென்று கூறுவார்கள்அச்சிவலிங்கப் பெருமானைவணங்குவர்கள் எக்காலத்தும் யாதோர்குறையின்றி வாழ்வார் கள். எ-று. (ச)

வேறு,

அந்தவரற்குமேற்றிசையிலப் பின்னிசையோர்தூரத்தின்
முந்தப்பரசுராமனெனுமுனிக்கான்முளைகைவாளாலே
தந்தவனையைத்தந்தைசொலாற்றறித்தபாவந்தானகல
வந்துதொழுதேத்தக்கவ்விலிங்கமாபாதகங்கடிர்ந்திடுமால்.

(இ-பு.) அச்சிவலிங்கப்பெருமானுக்கு மேற்குப்பக்கத்தில் ஓரம்பு செல்லுந்தூரத்தில்முன்னாளில பரசுராமரென்னும உங்களைப்போன்ற இருடியின்பிள்ளை தனதுபிதாவின் கட்டளையினால தன்னைப் பெற்றதாயைக் கைவாளினால் வெட்டியபாவம் நீரும்படிவந்து பூசித்த ஒரு சிவலிங்கமூர்த் தம் உண்டு அதனைத்தொழுதவர்களுக்கு மகாபாதகங்களையெல்லாம் நீரத் துவிடும். எ-று. ஆல்-அசை. (ரு)

ஆயசிவனுக்கெழுநாவோனுசைதன்னிலோரிலிங்கங
காயமதனிற்பிணியுடையகழற்கந்தருவர்தனிலொருவன்
றீயவினையெவ்வகையானுந்தீராதுழன்றுசிந்தித்து
மாயமறுத்தாட்கொண்டருளுமறைசைத்தலத்தைவந்துற்றான்.

(இ-பு) அச்சிவலிங்கப்பெருமானுக்குச் சூரியதிசையில் ஓர்சிவலிங் கமூர்த்தம உண்டு அது வீரக்கழலையணிந்த கந்தருவர்களில் தேகத்தில் ரோயடைந்த ஒருவன் தனதுகொடியநோய் எவ்விதத்திலுமதீராமையால் மனம்வருந்தி யோசித்து மாயாமயக்கங்களைப்போக்கித் தன்னிடத்துவந்த வர்களை ஆட்கொள்ளத்தக்க வேதபுரீசர் வீற்றிருக்கும் சுருதிபுரிக்குவந்து சேர்ந்தான். எ-று. (சு)

வெள்ளமபெருகுங்குகாநதியைமேவித்தோய்ந்துவேதபுரி
வள்ளறனையுந்தொழுதேத்திவடபாற்சொன்னவிடமவந்து
தெள்ளித்தெளிந்தசிந்தையொடுஞ்சிவனைவழிபட்டேத்துதனு
மெள்ளிற்பொழுதிற்பிணியகன்றேயெழிலார்மேனியுடனின்றான்.

(இ-பு.) வெள்ளம்பிரவாகிக்கும் பாகுநதியில்சென்று நீராடி அவ் வேதபுரீசுரரையும் வணங்கித்துதித்து அதற்கு வடதிக்கில் யாம் மேற்கூ றிய விடத்தில்வந்து நன்றாய்த்தெளிவடைந்த மனதோடும் சிவபிரானைப் பூசித்துத்துதிசெய்தவுடன் எள்ளளவுபொழுதிற்குள் அவனது நோய்நீங்கி அழகமைந்த சரீரத்துடன் விளங்கினான், எ-று. (எ)

வேறு.

அம்பரனென்னவேயறையும்பேரினன்
வெம்பியசுரந்தனைவிட்டலாலந்த
நம்பரன்றன்னையேநாட்டுளோரெலா
மிம்பரிற்சுரமகற்றீசனென்பரால்.

(இ-பு.) அம்பரனென்னும் பெயருடைய கந்தருவனது வெப்பம் பொருந்திய சுரநோயைத்தணித்தமையால் அந்தசிவலிங்கப்பெருமானை உலகினா யாவரும் இவ்வுலகின்கண் சுரமகற்றீசரென்று சொல்வாாகள் எ-று ஆல்-அசை- (அ)

இயம்பியவீசனையேத்தினோர்களு
நயம்பெறபூசனைநடத்தினோர்களும்
பயம்பெறக்கொண்டநோய்பற்றறுந்தப்பின
வயமபெறவாழ்வாகளொனவுமுத்தினன்.

(இ-பு.) மேற்கூறிய அச்சிவலிங்கப்பெருமானைத் துதித்தவர்களும் அன்புண்டாகும்படி பூசித்தவாகளும் தாஙகள் பயப்படும்படி யாகத்தங்களுடம்பின்கண் அடைந்த வியாதிகளெல்லாம் பற்றறத்துப்பிறகு வன்மையுண்டாகும்படி என்றென்றும் வாழ்வாாகளென்று சூதபுராணிகா கூறினர். எ-று. (கூ)

பிறர்க்கடமகாமுனிமுத்திபெற்றசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ... எஅசு.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தாருகாவனச்சருக்கம்

---

பராசரகுமாரன்பகர்ந்ததிதுவென்ன
நிராசையுறுநெஞ்சினனிகழ்த்தலுமகிழ்ந்தே
தராசுநிறையானமுனர்தான்சவுனகத்தோ
ராரவணிபரன்சரிதையின்னமறைகென்றார்.

(இ-பு.) இவ்வாறு பராசரமுனிவர் புத்திரராகியவேதவியாசர்கூறியதென்று கிருபையுள்ள மனமுடைய சூதபுராணிகர்கூறக்கேட்டு மனமகிழ்ந்து நாராசுவிறைபோன்று ஒருகாலத்திலும் மாறுதமனமுடையராகிய சவுனகாதிமுனிவர்கள் சாப்பாபரணராகிய சிவபிரான்சரிதை இன்னமுங்கூறவேண்டுமென்று குறையிரந்தார்கள், எ-று. (க)

அப்பொழுதுசூதனறைகின்றனன்முனாளி
லொப்பரியதாருகவனத்துறுதவத்தோ
ரெப்பொருளுமெவ்வுயிருமெப்படியுதிப்ப
தப்படியேயின்பிலயமாதலதுவல்லால்.

(இ-பு) அப்பொழுது சூதபுராணிகர் சொல்லுகின்றார் முன்னாளில ஒப்புக்கூறுதற்கரிய தாருகவனத்திலவசிக்கும் தபோதனர்கள எந்தப்பொருளும் எந்த உயிர்களும்எவ்வாறுற்பத்தியாகின்றதோ அதுபோலவே பிறகு அழிகின்றது அதுவல்லாமல் எ-று. (உ)

ஆக்குதலழிப்பதுவரன்செயலிதென்னும்
வாக்கியமும்பொய்யவணுங்குசிவனாலே
காக்குதலென்னவவர்காரியமேகாப்பென்
றேக்கமிலராய்மமதையெய்தினர்தவத்தால்.

(இ-பு.) ஆக்குதல் அழித்தல் என்னும் இவை சிவன்செயலென்று கூறும்வாக்கியம் பொய்யாகும் அப்படிக்கூறப்பட்ட அந்தச்சிவனாலேகாக்குதலாவது என்ன அவரவர்கள்செய்யும் வினையே அவரவர்களைக்காக்கின்றது என்று யாதோர சந்தேகமில்லாமல் தங்கள்தவவன்மையினாலே கருவமடைந்திருந்தார்கள், எ-று. (௩)

மிக்கவர்களாய்மனம்விரும்பியதுதுய்த்தே
மைக்கணினைமாலைமதியாதுறுமநாளிற
றொக்கவிமையோர்களெழிலசூழ்கயிலையிறபோய்
நக்கனடிமீமிசைபணிந்திதுநவின்றார்.

(இ-பு.) இவ்வாறு கருவத்தில்மிகுந்தவராய்த் தங்கள்மனோபீஷ்டப்படி விரும்பியதைப்புசித்துச் சிவபிரானையும் திருமாலையும் மதிக்காதிருக்கும் அந்நாளையில் தொகுதியாகிய தேவர்களெல்லாம் அழகமைந்துள்ள திருககயிலைக்குச்சென்று சிவபிரான்திருவடிகளின்மீது வணங்கி இவ்வாறு கூறினர்- எ-று. (௪)

தவத்தினின்மிகுத்தவொருதாருகவனத்தோர்
விவத்தைகளினைத்தையும்விளம்பலுமெயன்பர்
பவத்தினையொழித்தருள்புரிந்துதவுமெங்கோன்
சிவத்தவிழிமாலினொடுசிந்தனையுசாவி,

(இ-பு.) தவத்தினில் பெருமைபெற்றுள்ள ஒப்பற்ற தாருகவனத்திருடிகளது மமதையால்நேர்ந்த கெடுதிகளெல்லாவற்றையுங் கூறினவு

டன் மெய்யன்பாகளது பவவினையை ஒழித்துப்பரிவுடன்திருவருளபுரியும் நமதிறைவராகிய சிவபிரானை செந்தாமரைக் கண்ணனாகிய திருமாலுட னேஆலோசனைசெய்து. எ-று. (௫)

வேறு.

மன்னுதாருகவனத்தவர்மகிமையுந்தவமு
முன்னுசிந்தையின்மடந்தையுமொழிப்பமென்றுரைத்துப்
பன்னுமாயிரமதனெழிலொருங்குருப்படைத்தவ்
வென்னையாண்டவன்சங்கமவடிவமொன்றெடுத்தான்

(இ-பு.) நிலைபெற்ற அந்தாருகவனத்திருடிகளது மகிமையையும் தவத்தையும் அவர்கள்மனதில் நிலைத்துக்கொண்டிருக்கும் கருவமாகிய எண்ணத்தையும் ஒழிப்போமென்றுசொல்லி என்னையாட்கொண்டருளிய அச்சிவபிரானையாவராலும் புகழப்படும் ஆயிரம்மன்மதர்களது அழகெல்லாமொன்றாகூடிவந்ததுபோன்ற அழகையடைந்து ஒரு சங்கமவடிவெடுத்தார். எ-று. (௬)

தாங்கும்வேடத்துக்கிசைந்தபொற்பணியெலாந்தரித்தே
யோங்குந்தாருகவனத்தவர்பொற்கொடிமகளிர்
நீங்கில்பொன்மனைநெருங்கியவீதியினாங்கே
யாங்கணுற்றுப்பலிகொள்வான்போன்மொழிபகர்ந்தான்.

(இ-பு.) தாம் எடுத்துக்கொண்ட அச்சங்கமவடிவத்துக்கேற்றதாகிய அழகிய ஆபரணங்களையெல்லாம் தரித்துக்கொண்டு தவத்தாலோங்கிய அத்தாருகவனத்திருடிகளது வல்லிசாதக்கொடிபோன்ற இடையையுடைய பத்தினிகள் நீக்கமில்லாமலிருக்கும் இலக்குமிவிலாசம்பொருந்திய வீடுகள் நெருங்கியுள்ள வீதியையடைந்து அங்குள்ளவீடுகள்தோறும் சிவபிரான் பிட்சைகேட்பவர்போன்று வார்த்தைகள்கூறினர். எ-று. (௭)

இந்தவோசைகேட்டிளங்கொடியனையவரின்ப
நிரம்புநெஞ்சினராய்மலர்ச்செருறுவளைபொற
கரங்களிற்பருக்கையேந்தினர்வந்துகண்டு
வரம்பின்மையனுய்மலங்கியசிந்தையரானார்.

(இ-பு) இவ்வாறுசிவபிரான் யாசித்த ஓசையைக்கேட்டு இளங்கொடிபோன்ற அவ்விருடிபத்தினிகள் சந்தோடம்நிறைந்த மனமுடையவராய் தாமரைமலர்போன்று வளையலணிந்த அழகிய தங்கள்கைகளில் இதற்குரிய பிட்சையை ஏந்தினவர்களாய் வந்து இவரதுபேரழகைக்கண்டு அளவு கடந்த காமநோய்கொண்ட மனமுடையவர்களானார்கள். எ-று. (௮)

கலையிழந்தனர்கைவளையிழந்தனர்கருத்தி
னிலையிழந்தனர்நிகழ்வினையிழந்தனர்நிகரின்

முலையுமுன்றபொன்முத்தணியிழந்தனர்மொழியின்
றலையிழந்தனர்சதியராந்தகைமையுமிழந்தார்.

(இ-பு) அவ்வாறுகாமநோய்கொண்டவுடனே தாங்கள் உடுத்திருந்த ஆடைகளையிழந்தார்கள் கைகளில் அணிந்திருந்தவளையல்களையும் இழந்தார்கள் தங்கள்மனதில்எண்ணியிருந்த எண்ணத்தையிழந்தார்கள் தாங்கள்செய்யவேண்டியகாரியமின்னதென்று தெரியாமல அறிவிழந்தார்கள் ஒப்பற்ற தமது தனங்களின்மீது அணிந்திருந்த பொன்னோடுகூடிய முத்துமாலையும் இழந்தார்கள் வார்த்தைஎன்னும் தலைமையையும் இழந்தார்கள் கற்புடையவர்கள் என்கின்ற பெருமிதத்தையும இழந்தார்கள். எ-று. (௯)

ஆசைமீக்கொளக்காவலோர்நான்கையுமழித்தே
பேசிதென்னவுநினைகிலரின்புறத்தழுவ
நேசமவைத்தனரமலனையிரந்தனர்நின்றார்
மாசிலகற்பெனுமகிமையைப்போக்கினர்மாதோ.

(இ-பு.) தங்கள்மனதில்காதல்அதிகப்பட்டதனால்நாண்-மடம்-அச்சம் பயிர்ப்பு என்னும நான்கு காவல்களையும அழித்து இதுபழிப்பென்றும் நினையாதவராய் களிப்புண்டாகும்படித் தம்மைத்தழுவிக்கொள்ளுமாறுவிரும்பிச்சிவபிரானிடத்துக் குறையிரந்தவர்களாய் நின்றார்கள் குற்றமற்றகற்பென்றுகூறும மகிமையைப்போக்கிக்கொண்டார்கள். எ-று. (௧0)
மாது-ஓ-அசை.

அத்தனார்செயலீதுமாலரிவையரெல்லா
நத்துஞ்சித்திரப்பெண்ணுருவாகினனன்கா
ருத்தமத்தவத்தாருகர்தவஞ்செயலோர்ந்து
நித்திலத்திளமுறுவலோடெய்தினனின்றான்.

(இ-பு.) சிவபிரான்செயலிதுவாகும் திருமாலானவர் பெண்களெல்லாம்விரும்பப்பட்ட சித்திரம்போன்ற பெண்ணுருவாகிநன்மையைத்தரத்தக்க உத்தமமாகியதவத்தைபுரிந்த தாருகாவனதவமுனிவர்கள் தவஞ்செய்து கொண்டிருப்பதையுணர்ந்து முத்தைப்போன்ற இளமையான புன்சிரிப்போடுசென்று அவரெதிரில்நின்றார். எ-று. (௧௧)

வந்தமாதினைநோக்கினர்தாருகாவனத்தோர்
சிந்தையின்மயலெய்தினர்செய்தவமறந்தார்
பந்தைநேர்முலைப்போகமுற்றிடிற்றவப்பலனென்
றுந்துநெஞ்சினராய்மனநிலைதளர்வுற்றார்.

(இ-பு.) அவ்வாறுவந்த மோகனியென்னும்பெண்ணைத் தாருகாவனத்திருடிகள் பார்த்தார்கள் மனதிற்காமநோய்கொண்டனர் அதனால் தாங்கள்செய்யும் தவத்தை மறந்தார்கள் பந்துபோன்ற அப்பெண்ணினது தன

ங்களில் புணர்தல் கிட்டினால் அதுவே தாமசெய்த தவத்தின் பயனென்று நினைக்கும் மனமுடையவராய்த்தமக்கு முன்னிருந்த மனோதிடத்தில்தளாவடைந்தார்கள். (௪உ)

தங்கண்மெய்த்தவமழிந்ததுந்தையலார்கற்பு
பங்கமுற்றதும்பாரத்துத்தாருகவனபபனைவ
ரிங்கிதுற்றதுமீசனென மனதரோர்ந்து
செங்கனம்பெருமவேள்விபொன்றியற்றினர்சினந்து.

(இ-பு.) இப்படிமனமாறுபட்டமுனிவர்கள் தங்களுடைய உண்மையான தவங்களழிந்ததும் தங்கள் பதிவிரதமாதருகற்புநிலைதவறினமையுங் கண்டு அத்தாருகவனத்திருடிகள் இவ்வாறாகியது சிவபிரானாலென்று தங்கள்மனதில் நன்றாயுணர்ந்து கோபங்கொண்டு செந்நிறமுள்ள அக்கினியாகிய யாகமொன்றுசெய்தார்கள், (௪௩)

வேறு.

செய்யும்வேள்வித்தணலினிடைசெனித்தசிதகுரங்கடமைக்
கையின்முகத்துக்கடகளிற்றைக்கலையையரவைக்கணிச்சியையு
மையன்மிசைவெவ்வேறேவவடர்த்துவரும்போதெம்பெருமான்
வெய்யவனலைதட்பதனைவிரைவிற்றம்பமெனச்செய்தான்.

(இ-பு.) அவ்வாறுசெய்யப்பட்ட யாகாக்கினியினிடத்துத் தோன்றியகுளிர்ச்சியையும் வெம்மையையும் தும்பிக்கையோடுகூடிய முகத்தையுடைய மதமபொழியும் யானையையும் மானையும் சர்ப்பத்தையும் மழுவையும் எமதுபரமபிதாவாகிய சிவபிரான்மீது வெவ்வேறாகத்தனித்தனியேவவுதலும் அவைகள் எதிர்த்துவருகையில் முதலில்வந்தகொடியவெப்பத்தையும் குளிர்ச்சியையும் அதிகவிரைவில எமதிறைவராகிய சிவபிரான்தம்பமாகும்படிசெய்தார். எ-று. (௪௪)

அடுத்தகரியைபுரிந்துவெவ்வாயரவைபருமத்திடையணிந்தே
யெடுத்துமழுமான்றனைக்கரத்திலேந்திநிற்பவிருடியருங்
கடுத்துச்செயுமிட்டியின்வெய்யகனலையிறைத்தார்கண்ணுதன்மேன்
மடுத்தணலுஞ்சடைமுடிமேல்வளைந்துபிரவையெனவமைந்த

(இ-பு.) பிறகு இரண்டாவதுவந்த யானையையுரித்துப்போர்த்துக்கொண்டும்மூன்றாவதுவந்தகொடிய வாயையுடையசர்ப்பத்தைத்திருமார்பினிடத்து மாலையாகததரித்துககொண்டும நான்காவதாகவநத மழுவையும் ஐந்தாவதாகவந்த மானையும் வலததிருக்கரத்தும் இடத்திருக்கரத்தும் தரித்துக்கொண்டும் அத்தாருகவனத்திருடியர்கட்கெதிரில்நிற்க அவ்விருடியரும் கோபித்துத் தாங்களியற்றும்யாகததிலிருந்த வெப்பமுள்ள அக்கினியைச் சிவபிரான்மீது இறைத்தார்கள் அக்கினிகளாகிய அவையெல்லாம் ஒருங்குசேர்ந்து அச்சிவபிரானது சடாமுடியின்மீது ஓ'பிரபைவளையப்போல்வளைந்திருந்தன. எ-று. (௪௫)

(இ-பு.) இதனை நைமிசாரணியமுனிவர்கள்கேட்டு அச்சுருதிபுரியில் வீற்றிருந்தருளும் வேதபுரீசராகாட்டியமகிமைகளை இன்னம் இன்னம் சொல்லுவீரென்று அன்புடன்கேட்க நீட்டித்தபோதனராகிய சூதபுராணிகர் மனமுவந்து உள்ளன்பு அதிகரித்து நிலையானமெய்ஞ்ஞானமுடைய அம்முனிவர்களுக்கு இவ்வண்ணம் கூறுகின்றார். எ-று. (௪)

வானவாவியக்குநல்லவளநகர்வாழும்வேதன்
ஞானசாத்திரபுராணமுழுதுணர்நாவினன்சொல்
லானவாதியருக்கஞ்சாவரியருணிறைந்தநெஞ்சன்
மானவானரனுக்கன்பனவல்லவனெனனும்பேரான்.

(இ-பு) தேவர்களும்வியக்கத்தக்க உயர்ந்தவளப்பமுள்ள ஒருநகரத்தில்வாழ்கின்ற மறையவனும் மெய்ஞ்ஞானத்தையுணர்த்தும் சாத்திரபுராணங்கள்முழுமையும் உணர்ந்தநாவினையுடையவனும் சொல்லாலாகிய வாதஞ்செய்பவர்களுக்குத் தோல்வியடையாத சிங்கமபோன்றவனும் கருணைநிரம்பியமனமுடையவனும் அதிக மானமுள்ளவனும் சிவபிரானுக்கன்பனுமாகிய வல்லபனென்னும் பெயருடையவனொருவனிருந்தனன். எ-று

அன்னவன்சொன்மறுதவருந்ததியனையகற்பாள் [ள்
பொன்னினுமெழிலாள்சொற்றபொறுமையிற்பூமியொப்பா
மன்னியகுணத்திரேகாவதியெனும்பெயராளன்னோன்
பன்னியாளின்பத்துய்த்துப்பாரிடைவாழுநாளில்.

(இ-பு) அவ்வல்லபனென்பவனது சொல்லைத்தட்டாத அருந்ததியைப்போன்ற கற்புடையவள் இலக்குமியினும்மிக்குயர்ந்த அழகுவாய்ந்தவள் யாவரும் கூறியுள்ளபொறுமையிற் பூதேவியைப்போன்றவள் நிலைபெற்ற சற்குணங்களையுடைய இரேகாவதிஎன்னும்பெயருடையவள் அவனதுபத்தினி அவளது காமஇன்பத்தைநுகர்ந்து இந்நிலவுலகத்தில் வாழ்ந்திருக்கும் நாளில், எ-று. (௫)

நன்னெறிகாட்டமைந்தனிலையெனநைந்துதுன்பந்
துன்னியவுளத்தராகித்தொலைவிலசெல்வங்கடானென்
பொன்னணியில்லந்தானென்பொருள்களேனென்னநெஞ்சின்
மன்னியவெறுப்பராகிமறைசைமாநகரின்வந்தார்.

(இ-பு.) நமக்குமுத்திவழியைக்காட்டுதற்குப் புத்திரனில்லையே என்று வருந்தித்துயரடைந்த மனமுடையவர்களாய் அளவற்ற திரவியங்கள் தானென்னத்திற்கு பொன்னாலாகிய ஆபரணங்கள் தானென்னத்திற்கு மற்றப்பொருள்தான் என்னத்திற்குஎன்று தமதுள்ளத்தில்நிலைபெறு மவெறுப்புடையவர்களாகி மறைசைமாநகரத்திற்குவந்தார்கள் எ-று

ஆங்குவந்தடைந்துதங்கட்கருங்குருவானஞான
மோங்குநெஞ்சகத்தான்கும்பமுனிதவமுஞற்றுகின்ற
பாங்குவந்தூற்றுச்செய்யபங்கயத்திருந்தாள்போற்றி
யேங்கியவுளத்தர்கூப்புமிருகைமரிதனைச்சொன்னார்

(இ-பு.) அவ்விடத்துவந்துசேர்ந்து தங்கள் குலத்துக்கு அருமையான குருவாகிய மெய்ஞ்ஞானம் வளர்ந்தோங்கிய மனமுடையவராயுள்ள அகத்தியமுனிவர் தவஞ்செய்கின்ற விடத்துக்குப்பக்கத்தில வந்து சிவந்த தாமரைமலர்போலும் சிறப்பமைந்த அவரதுதிருவடியைவணங்கி ஏக்கங் கொண்டமனமுடையவர்களாகிய வல்லபனும் ரேகாவதியுமதமது இருக ரங்களையுஞ்சிரமேற்கூப்பி இவ்வாறுவிண்ணப்பஞ்செய்தார்கள் எ-று (கு)

ஐயநின்னடியனேனுக்கரியதொன்றிலையிப்பூமேற்
செய்யவளருளும்பெற்றேன்செகத்தில்வல்லபனுமானேன்
றுய்யநல்லடமீனென்னத்தோகையைத்தாரம்பெற்றேன் [ல்
ஸவ்யகததெனக்கொப்பிலலையெனினுமோர்மறுக்கமுண்டா

(இ-பு) ஐயனே உன்னுடைய அடியவனுகிய எனக்கு இந்த நிலவுலகத்தில் அருமையானது ஒன்றுமில்லை இலக்குமியின் கிருபாகடாட்சமும் பெற்றிருக்கின்றேன் அதுவன்றியில இவ்வுலகத்தில் மகா வல்லமையுடையவனுயிருப்பதால் அதுகாரணம்பற்றியே வல்லபனென்னும் காரணபெயருமுடையவனுனேன் தூய்மையமைந்தமேலான அருந்ததியைப் போன்ற ஓர் பெண்ணை மனைவியாகப்பெற்றிருக்கின்றேன். இக்காரணங்களினுல் இந்நிலவுலகத்தில் என்னைப்போன்றவர்களிலலை ஆயினும் எனக் கோர் துயரமிருக்கின்றது எ-று ஆல்-அசை. (௬)

இகபரமிரண்டுக்கேற்றவிருநிதியனையநல்ல
மகவிலையென்னுமுள்ளமறுக்கமேமறுக்கமான
நிகரில்வாரிதியைக்கையினிறைத்துண்டநிமலாவென்று
னகமுறுந்துயரைமாற்றியருளெனத்தொழுதுசொன்னுன்.

(இ பு) இகம் பரம் ஆகிய இரண்டுக்கும்தக்கபெரிய ஓர்நிதிபோன்ற நல்லபுத்திரனில்லை என்கின்ற மனத்துயரமேதுயரமாயிருக்கின்றது ஒப்பற்றகடலைக்கையினிறையச்செய்து புசித்த நின்மலசொரூபரேமேற்கூறிய எனது மனத்துயரத்தை நீக்கியருளவேண்டுமென்று வணங்கிவிண்ணப்பஞ்செய்தான். எ-று. (எ)

அந்தணனுரைத்தவாய்மைபாழியுண்டவனுங்கேட்டே
யிந்தவாறிசைப்பன்மெய்மையிருபிறப்பாளகேண்மோ
மைந்தருமுண்டுநல்லவாழ்வுமேன்மேலுமுண்டு
சிந்தையின்மகிழ்வுமுண்டுதீவினைதீர்தலுண்டு.

(இ-பு) நளன் முதலாக இந்நிலவுலகத்துள்ள அனேக அரசர்கள் வளப்பம்பொருந்த அவ்வேதபுரீசரைப் பூசித்துப் பிள்ளைகளையும் செல்வத்தையும் பெற்று அளவிறந்த வல்லமையுற்று இந்நிலவுலகம் முழுவதும் அரசாண்டு யாதோர் மனக்குறைவுமில்லாதவராய் இனிமையுடன் திருக்கயிலையை அடைந்தார்கள் எ-று. (௪௨)

ஆதலால்யான்சொல்வண்ணமாகநீரன்பாவிந்த
வேதநாயகனைப்பூசைவிருப்பொடுஞ்செய்வீர்நல்ல
காதலாமகவைப்பெற்றுக்கைப்பொருள்பெற்றுவாழ்ந்து[ன்
பூதநாயகனவாழ்வெள்ளிப்பொருப்பையும்பெறுவீரென்று

(இ-பு) ஆகையினால் நான்சொல்லுகின்றபடியே நீமெய்யன்போடு இந்தவேதபுரீசரைவிருப்பிப் பூசித்தால் நல்ல விருப்பமிக்க பிள்ளையையும்பெற்றுக்கைப்பொருளையும்பெற்றுவாழ்வடைந்து பூதநாயகராகியசிவபிரான்வீற்றிருக்கருளும் திருக்கயிலையையும் அடைவீர்களென்றுகூறினர் எ-று. (௪௩)

வேறு.

இப்பரிசகத்தியனியம்பியபோதந்த
வொப்பரியவேதியனுளமகளிசிறந்தே
யப்பரிசியற்றமனதானதொருமித்தே
செப்பரியதேளில்வெயில்சோதினமுணர்ந்தே.

(இ-பு) இவ்வாறு அகத்தியமுனிவர் கூறியபோது வல்லபனென்னும் பெயருள்ள ஒப்பற்றமறையவன் மனக்களிப்படைந்து அவ்வாறே செய்யமனமொருமித்து சொல்லரிய விருச்சிகராசியில் சூரியன்வரும் நாளாகிய கார்த்திகைமாதத்தை எதிர்பார்த்துக்கொண்டு. எ-று. (௪௪)

இருந்தனனடுத்தமுனியம்பியவமாதம்
வருந்தினமுதற்புனிதவாவிதனிலாடிப்
பொருந்தினமதிக்கினியநாள்பொதியவெற்பி
னருந்தவனுரைத்தவழியத்தனைவழுத்தி.

(இ-பு) இருந்தான் முன்கூறிய அந்தமாதம்வந்தது அந்தமாதத்தில் வருகின்ற முதல்நாள்தொடங்கி, மேற்கூறிய தூய்மையமைந்த தல்லியமானகல்யாணகோடி தீர்த்தத்தில் நீராடி பொருத்தமாகியசந்திரனுக்கினிமையாயுள்ள சோமவாரத்தில்பொதியமலையில்வசிக்கும் அரியதபோதனராகிய அகத்தியமுனிவர் கூறிய விதிப்படி அவ்வேதபுரீசரைப்பூசித்து எ-று.

இன்னவகைபூசைசிலநாளவனியற்றப்
பன்னுமறைசைப்பதிபரன்கருணையாகி

மின்னிடையோர்பாதியுருவாகிவிடைமீதின்
மன்னிமறையோன்மகிழவநதெதிரினின்றுன்.

(இ-பு) இவ்வண்ணம் சிலநாள் அவ்விடத்துப் பூசித்துக்கொண்டு வருகையில் யாவருங்கூறும் மறைசைமாநகரத்தில் வீற்றிருந்தருளும் அவ்வேதபுரீசர் திருவருள்சுரந்து மின்போன்ற இடையையுடைய உமாதேவியார் ஓர்பாகமாக இடபவாகனத்தின்மீதிலெழுந்தருளி அவ்வல்லபனென்னும் மறையவன் மனமகிழ்ச்சிகவர்ந்து காட்சிகொடுத்தருளினார். எ-று.

கண்டுமறையோன்மகவுகையினிலெடுத்துக்
கொண்டுகுழைவோரினமகிழ்ந்துகொண்டுதுதிசெய்தே
புண்டரிகமொத்திலகுபொன்னடிபணிந்தா
னண்டர்பெருமானுமிவையன்புடனுரைத்தான்.

(இ-பு) விடைமீதெழுந்தருளிவந்த வேதபுரீசரை அவ்வல்லபன் கண்டு பிள்ளையைக்கையிலெடுத்துக்கொண்டு கொஞ்சுவாரைபபோல மகிழ்ச்சியடைந்து துதித்துத் தாமரைமலர்போன்றுவிளங்கும் அழகிய அவரது திருவடிகளில் வணங்கினன் தேவாபிரானுகிய அவவேதபுரீசர இவவாறன்புடன் திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (௧௭)

வேதியநீசெய்தவுயர்பூசனைவியந்தோ
மேதுமனதேதத்தருள்வோமெனவிசைபபக்
காதலாகண்மீதுமிகுகாதலதனுலே
யாதிமுதலேயுனையருச்சனைபுரிந்தேன்.

(இ-பு) ஓ மறையவனே நீஇயற்றிய மேலானவழிபாட்டிற்கு வியப்படைந்தோம இனி உன்மனதிறகிருந்தியது எதுவோ அதனைச்சொல் அவ்வாறே அருள்புரிவோமென்று திருவாய்மலாந்தருளலும் பிள்ளையைப்பெற வேண்டுமென்னும் ஆசையினுலே ஆதியாகிய சிவபிரானே தேவரீரைப் பூசித்தனன் எ-று (௧௮)

நலலநெறிபாணசிறுபாலகனைநல்கி
யல்லலையறுததெனையளித்திடுவையென்ன
வல்லவுமைபாகனுமகிழ்நதருளினுலே
சொலலினனிதைசசுருதிதொல்குலமுனிக்கே.

(இ-பு.) நன்மார்க்கத்தில் ஒழுகத்தக்க சிறியகுழந்தைகளைப்பெற அனுக்கிரகம்புரிந்து எனது வருத்தத்தைநீக்கி ஆண்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய வல்லமையுள்ள உமாதேவிபாகராகிய அவ்வேதபுரீசரும் திருவுளமகிழ்கூர்ந்து திருவருளினுல் இவ்வாறு பழமையாகிய மறையவர்குலத்துதித்த அவ்வல்லபனுக்குத் திருவாய்மலாந்தருளினர். எ-று.

திடமபெறவுனக்கினியசெல்வரையளித்தோ
முடமபொடுயிரபோறபிரிவுறுதுமகிழ்ந்தோங்கி

நெடும்புகழொடும்பயிறிநீயெனவுரைத்தா
னிடங்கர்கொடுபோனமகவீந்ததனிமூர்த்தி.

(இ-பு) திடத்துடன் உனக்கினிமையான புதல்வர்களைப்பெறும் வரங்கொடுத்தோம் உடலும உயிரும்போறபிரியாது மகிழ்ச்சியதிகரித்து மிக்கபுகழொடும் நீவிளங்கக்கடவாயென்று முதலைவிழுங்கிய வேதியப்பிள்ளையைப்பன்னிரண்டுவருடங்கழித்து ஆளுடைய நம்பிகள் திருவாக்குக்கு வந்து வரவழைத்துக்கொடுத்தருளிய சிவபிரான் திருவாய்மலர்ந்தருளினார்.

கடந்தபெரியோர்முதலகடப்பரியகாத
லடர்ந்தசிறுமைந்தர்பெறுதற்கருள்வரந்தான்
மடந்தையொருபாகனும்வழங்கவுமகிழ்ந்தே
தொடர்ந்தமறையோன்மறையினாற்றுதித்தான்.

(இ-பு) சகலஆசைகளையும்விட்ட ஞானிகள்முதலாகயாவராலும கடக்கக்கூடாத ஆசையையுடைய சிறுபிள்ளைகளைப்பெறுதற்குரிய திருவருள்வரத்தை உமாதேவிபாகராகிய அவ்வேதபுரீசர் கொடுக்கக்களித்து மெய்யன்பின்வழிதொடர்ந்தனற அவ்வல்லபனென்னும்வேதியன் வேதங்களினாலே மிகவுந்துதித்தான், எ-று, (௨௧)

நல்லவரமிவ்வகைநான்மறையுணர்ந்த
வல்லவமுனிக்கொடுநல்வாழ்மறைசைமேற்பான்
மெல்லவொரம்பின்விசைதூரமதுபேவி
யல்லலறவேணதியின்றென்கரையினன்பால்.

(இ-பு) இவ்வாறுசிறந்தவரத்தை நான்குவேதங்களை ஓதியுணர்ந்த வல்லபனென்னும் மறையவன்பெற்றுக்கொண்டு நல்லவாழ்வுகொடுக்கும் அச்சுருதிபுரிக்குமேற்றிசையில் ஓரம்புவிசையோடுசெல்லும் அவ்வளவுதூரத்தில் மெதுவாகப்போய் தனதுதுயரமெல்லாம் தீரும்படி குசநதியினது தென்கரையில் அன்புடன் எ-று. (௨௨)

பொன்னுலவுகின்றசிவலிங்கமவண்பொற்பா
ரநிலையமைத்துவிதியாகமநூல்வண்மை
பன்னுமறையோனும்வழிபட்டினிதுபோற்ற
மன்னுமகிழ்வாயரன்வரந்தரமகிழ்ந்தான்.

(இ-பு) பொன்போலும் பிரகாசிக்கும் ஓர்சிவலிங்கப்பெருமானை அவ்விடத்தில் அழகாயிருக்கும் வண்ணம்பிரதிட்டைசெய்து சிவாகமங்களிற் கூறியுள்ள முறைப்படி மேற்கூறிய அவ்வல்லபனென்னும் வேதியனும் பூசித்து இனிமையுடன் துதிக்கச்சிவபிரான் திருவுள்ளக்களிப்புடன்நிலைபேறாயவரத்தைக்கொடுக்க மனமகிழ்ந்தான் எ-று, (௨௩)

கற்புடையதன்மனைவியொடுகலைவல்லான்
பொற்புறுதன்மாநகர்புகுந்துமகவினோடு
கற்பகநிழற்கணுறுகாவலனையொப்பப்
பற்பலசுகங்கொடுபெரித்தினிதுவாழ்ந்தான்.

(இ-ள்) கற்புடைய தனது மனைவியுடன் வேதங்களையோதியுணர்ந்த அவ்வல்லபன் அழகமைந்த தனதூருக்குச்சென்று பிள்ளைகளைப் பெற்றுக் கற்பகவிருக்ஷத்தின் நீழலில்வீற்றிருந் தரசுசெலுத்தும் இந்திரனைப்போலப் பலசுகங்களையெல்லாம் அனுபவித்து இனிமையுடன் வாழ்ந்திருந்தனன் எ-று. (௨௪)

சாற்றுமறையோன்றொழுந்தற்பரனையாரு
மேற்றவல்லபேசனென்றேபுகலுகின்றார்
போற்றியவனைத்தொழுதுபூசனைசெய்கின்றோர்
மாற்றரியசெல்வமுநன்மைந்தருமுண்டாவார்.

(இ-ள்) இப்போதுகூறும் அவ்வல்லபன் பூசித்த சிவலிங்கப்பெருமானை யாவரும் உயர்வமைந்த வல்லபேசரென்றே கூறுகின்றார்கள் அச்சிவலிங்கப்பெருமானைத்துதித்துப் பூசிக்கின்றவர்கள் எக்காலத்திலும் மாறுதலில்லாத செல்வமும் நல்லபுத்திரப்பேறுமுடையவர்களாவார்கள். (௨௫)

வேறு.

தெரிந்தவன்மீளவுஞ்செப்புவா
னருந்தவத்திர்முன்னையாரணம்
புரிந்தமுதற்றனைப்புகழினைத்
தெரிந்தவர்யாருளர்செப்புங்கால்

(இ-ள்) மூன்றுகாலமுந்தெரிந்த சூதபுராணிகர் திரும்பவுங்கூறுகின்றார் அரியதவத்தையுடைய நைமிசாரணியமுனிவர்களே யோசிக்குமிடத்து முன்னே வேதங்களைத் தேவர்களுக்கோதுவித்தருளிய வேதபுரீசருடைய புகழையெல்லாம் நன்றாக உணர்ந்தவர்கள் யாரிருக்கின்றார்கள்.

என்னினும்யானறிகின்றதைப்
பன்னுவன்கேண்மின்பனிவரைக்
கன்னிதன்கேள்வன்கமலத்தாண்
மன்னியசிந்தைமகத்துவன்.

(இ-ள்) ஆயினும் நான் அறிந்துள்ளதை பகர்கின்றேன்கேளுங்கள் இமயவரையரையன்புத்திரியாராகிய உமாதேவிமணாளராயுள்ளசிவபிரான் தாமரைமலர்போன்ற திருவடிகளைச்சதா இதயநிலைக்கப்பெற்ற மகத்துவமுள்ளவன் எ-று. (௨௭)

செம்புகனென்றொருசித்தன்மு
னின்புறுபுத்திரனின்றியே
யம்புவியிறலமாய்ந்துவே
தம்புகலீசனைச்சார்நதனன்.

(இ-பு) செம்புகனென்னும் ஒரு சித்தன் முற்காலத்தில் இன்பத்தைத் தரும புத்திரப்பேறில்லாமல்இந்நிலவுலகத்தில் புத்திரப்பேறுதரவல்லதலம் எந்தத்தலம் என்று ஆராய்ந்து பிறகுசுருதிபுரியே அத்தகையவரத்தைவிரைவிற்றரத்தக்கதென்றுணர்ந்து அவ்வேதபுரீசரையடைந்தனன் எ-று. (உ௯)

வல்லவனமுனசெய்தவாறுபோ
னல்லதோர்பூசைநடத்தியே
தொல்லையரனசெய்தொழிலெலாஞ
சொல்லிமிகத்துதித்தானரோ.

(இ-பு) வல்லபன் முனபுசெய்ததுபோலவே நன்மையடைந்த ஒப்பற்ற வழிபாடுசெய்து முன்னாளிலசிவபிரான் அடியார்களுக்குச்செய்த அனுக்கிரகங்களையெல்லாம சொல்லி மிகவும்தோத்திரஞ்செய்தனன்- எ-று அரோ-அசை. (உ௯)

இன்னணமேத்தவிமயவான்
கன்னிபோர்பாகன்கருணையாற
பன்னியவன்னம்பரிவினறு
முன்னினன்மேற்றிசைதூயவன்.

(இ-பு) இவ்வாறு வழிபாடுசெய்தலும் இமயவரையரையன் மகளாகிய இளமுலைநாயகியாரை ஓர்பாகத்திலுடைய வேதபுரீசர் திருவருளால் திருவாய்மலர்ந்தருளியபடி அச்செம்புகன என்பவன் மேற்றிசையாகச்சென்றான். எ-று. (௩௦)

மூப்புரம்வெவமுனிந்திடு
மெய்ப்பரனுக்குநசெனமேற்கிலே
பொப்பிலிலிங்கமுனொற்றியே
செப்பரும்பூசனைசெய்தனன்.

(இ-பு) திரிபுரம் வேகும்படி நகையினாற் கோபித்தசிவலிங்கமூர்த்தத்துக்குத் தென்மேற்குப்பக்கமாய் ஒப்பற்ற ஓர்சிவலிங்கமூர்த்தம் பிரதிட்டைசெய்து செப்புதற்கரிதாகிய வழிபாடியற்றினன். எ-று. (௩௧)

ஆங்கவனிவ்வகையர்ச்சனை
பாங்கொடுசெய்யப்பரமனு
மோங்கியவன்புடனேவிடை
தாங்கிடவேமுனஞ்சார்ந்தனன்

(இ-பு) அவ்விடத்து அச்செம்புகன் இவ்வாறு வழிபாடு இலக்கணத்தோடு செய்யச் சிவபிரானும் திருவுள்ளத்துதித்தோங்கிய அன்புடன் இடபாரூடராய் அவனுக்குக் காட்சி கொடுத்தருளினர் எ-று. (௩௨)

வந்தரன் செம்புக வாவெனச்
சிந்தையன் பாலழைந் தேசிறு
மைந்தனைத் தந்தனன் வாழ்தியென்
றந்தலிங் கத்தினுள் ளாயினான்.

(இ-பு) அவ்வாறெழுந்தருளிவந்த சிவபிரான் அச்செம்புகனை நோக்கிச் செம்புகா வாவென்று தமது திருவுள்ளத்துதித்த அன்புடன் கூவி சிறுபிள்ளைகளைப் பெறும் வரத்தைக் கொடுத்து நீ வாழக்கடவாயென்று திருவாய்மலர்ந்தருளி மீண்டும் அச்சிவலிங்கத்திற் கரந்தருளினார் எ-று. (௩௩)

பிள்ளைக் கறிக்குள மேபெணிய
வள்ளற் றனையன் வழங்கலு
முள்ளகக் களிப்புமே லோங்கியே
தெள்ளத் தனாநகர் சேர்ந்தனன்.

(இ-பு) சிறுத்தொண்ட நாயனாருடைய பிள்ளைக்கறிக்கு திருவுளத்தில் இச்சைகூர்ந்த வள்ளலாராகிய சிவபிரான் பிள்ளைபேறு தரவும் மனக்களிப்பு மேலும் மேலும் அதிகரித்துத் தெளிவடைந்து தனதூர்க்குச் சென்றான் எ-று. (௩௪)

கல்வியின் மிக்கக் களித்திடுஞ்
செல்வனைப் பெற்றந்தச் செம்புக
னல்விளக் கெனவவ் வொளியி
னில்விளக் கேற்றியிருந் தனன்.

(இ-பு) கல்வியில் அதிகமாகக் களிகூர்ந்திடும் புத்திரனைப் பெற்று அந்தச்செம்புகன் பூவுலகின்கண் இருளையோட்டுந் தீபத்தைப்போன்று இல்லறத்தருமத்தை நடத்திக்கொண்டிருந்தனன் எ-று. (௩௫)

செம்புகன் பூசனை செய்திடுஞ்
செம்புக வீசனைச் சேவித்தோ
ரம்புவி மீதர சாளுவா
ரின்பமக் களையீன் றென்றான்.

(இ-பு) செம்புகன் வழிபட்ட அந்தச்செம்புகேசுரனைத் தொழுதவர்கள் இந்நிலவுலகின்கண் இன்பத்தை விளக்கும் பிள்ளைப்பேறடைந்து அரசாட்சி புரிவார்கள் என்று சூதபுராணிகர் கூறினர் எ-று. (௩௬)

**வல்லவன் சந்தானம்பெற்ற சருக்கம் முற்றிற்று.**

**ஆ. திருவிருத்தம், ௮௫௨.**

சக்ராதிபதியாயிருந்த தொண்டைமானென்னும் பெயருடையவனாகிய பெரும்புகழுடையவன். எ-று. (உ)

வலியாலும்புகழாலும்வண்மையாலும்வழங்குமுயர்கொடையாலுமதியினாலுங், கலையாலுந்தெளிவாலுங்கருணையாலுங்கவினாலுமருதினியோங்கடலினாலு, நிலையாலுமொருவரையொப்புரைக்கவாற்றுநிருபனரன்றிருவடியேநெஞ்சுள்வைத்துப், பலகாலுந்துதிக்குமுயரன்பனாகிப் பாரமுழுதுஞ்செங்கோலாற்பரிக்குநாளில்.

(இ-ள்) வல்லமையினாலும் கீர்த்தியினாலும் வளப்பத்தினாலும் யாவருக்கும் உபகாரமாகிய வள்ளற்றன்மையினாலும் புத்திநுட்பத்தினாலும் சாத்திர உணர்ச்சியினாலும் அறிவு விளக்கத்தினாலும் ஜீவகாருண்ணியத்தினாலும் பேரழகினாலும் மேன்மேலும் விருத்தியாகுந்தன்மையுள்ள சைனியங்களின் பராக்கிரமத்தினாலும் மேருமுதலியவற்றின் நிலைமையினாலும் மற்றொருவரை உவமானமாகக்கூற முடியாத அவ்வரசன் சிவபிரானது திருவடித்தாமரைகளையே தனதிதயத்தில் சதாநிறுத்திப் பலகாலுந் தோத்திரம்புரியும் மேலான மெய்யன்புடையவனாய் இந்நிலவுலகமுழுவதும் தனது செங்கோலால் அரசாண்டுவருங்காலத்தில் எ-று. (௩)

அடலின்மிகும்புகழ்விசுவாவசுவென்றோதுமரசனுயர்சதுரங்கசேனைசூழக், கடலுடைந்துவருவதெனவடபானின்றுங்ககனவெளிபூழிமொய்ப்பக்கனன்றுவந்து, படருமெழிலுயர்தொண்டைமானோடாண்டுபலவாகவமர்புரிந்துபாரையெல்லாங், கெடவியற்றிப்பேவலியால்வென்றுஞாலக்கிழமைகொண்டான்புவிநடுங்கக்கேதத்தோனே.

(இ-ள்) பராக்கிரமத்தில்மிகுத்தபுகழையுடைய விசுவாவசுவென்னும் பெயரையுடைய ஓர் அரசனானவன் நால்வகைச்சேனையும் புடைசூழக் கடலேகரையை உடைத்துக்கொண்டு வருவதுபோன்று வடக்குத்திசையிலிருந்து ஆகாயவெளிமுழுவதும் தூளிபடலங்கள் மொய்த்துக்கொள்ளும்படி கோபித்துவந்து விளங்கிய அழகுயர்ந்த தொண்டைமான் சக்கிரவர்த்தியுடன்பலவருஷங்களாக யுத்தஞ்செய்து இந்நிலவுலகமுழுதுங் கெடும்படிப் பலவிதமாக அமர்புரிந்து தனது புஜபலபராக்கிரமத்தால்சயித்து உலக அரசாட்சியைக்கைக்கொண்டான் உலகத்துள்ளோரெல்லாம் நடுங்கும்படியான இந்தக்குற்றத்தையுடையவன் எ-று. (௪)

அந்தவிசுவாவசுமாநிலத்தைக்காக்கமன்னுரிமையிழந்துதொண்டைமான்வென்னிட்டுத், தந்திபரிதேராட்டண்டிகையும் விட்டுத்தனியாகிக்கடுங்கானகத்தினெய்திக், கந்தபலாதிகண்மூலமருந்திப்பன்னாட்கழித்துமருவிடொளிற் ககனமாருஞ், சுந்தரப்பொற்சிகரமணிக்கோயிற்றன்னிற்சுருதியமருக்குவரதச்சுடரைக்கண்டான்.

(இ-பு) அவ்வாறுபடையுடன் எதிர்த்துவந்த விசுவாவசுஎன்பவனிவ்வுலகத்தையாண்டுகொண்டிருக்கத்தொண்டைமான் சக்கரவர்த்தி முதுகுகாட்டி. அரசுரிமையைப்போககிக்கொண்டு யானை குதிரை தேர் சேனை பல்லக்கு இவைகளையெல்லா மவிட்டுவிட்டுத்தாம் ஒருவரேயாகிக்கொடிய காட்டிற்சென்றுகிழங்குகள் பழவர்க்கங்கள் வேர்கள் இவைகளைப்புசித்துப்பலதினங்கழித்துக்கொண்டு அங்குதானேவசித்திருக்கும்நாளையில் சுருதிபுரிக்குச்சென்று ஆகாயத்தை அளாவிய அழகமைந்தபொன்னுலாகிய சிகரங்களையுடைய இரத்தினங்களழுத்திய திருக்கோயிலில்வீற்றிருந்தருளும்தேவர்களுக்கு வேதமோதுவித்த வேதபுரீசரென்னும்பரஞ்சுடரைத்தரிசித்தனர்.

வேறு.

கண்டமானணிகைத்தலத்தெந்தையைத
தொண்டமான்றொழுதான்றுதித்தான்மலாச்
செண்டைமானுந்திரளிளமென்முலை
கொண்டமானையுங்கும்பிட்டிறைஞ்சினான்.

(இ-பு) அவ்வாறுதரிசித்த மானைத்தரித்ததிருக்கரத்தையுடைய எமதுதந்தையாராகிய வேதபுரீசரை அந்தத்தொண்டமான் சக்ரவர்த்தியானவர் வணங்கிததுதித்து பூச்செண்டையொத்துத்திரண்டிருக்கும் இளமைதங்கிய மிருதுவான தனங்களைப்படைத்த இளமுலைநாயகியாரையுங்கைகூப்பித்துதித்தனர். எ-று. (சு)

எண்ணினுனிந்தவீசனைப்பூசனை
பண்ணிநாளும்பயில்வதிவணென
நண்ணினனுகுகனூர்நதிதோய்ந்துமுக்
கண்ணினனஞ்செழுத்தைக்கருதினான்.

(இ-பு) அவ்வாறுதுதித்தபின் நாம் இங்குதானே இந்தவேதபுரீசரைப்பூசித்து எந்நாளும்வசிப்போம் என்று நினைத்துக குகநதியையடைந்து நீராடித்திரிநேத்திரதாரியாகிய சிவபிரானது திருவைந்தெழுத்தைத்தியானித்தார், எ-று. (எ)

மெய்யினிற்றிருவெண்ணீறணிந்தனன்
செய்யும்பூசைதந்திரவியங்கொண்டன
னையன்றாளினுமம்பிகைதாளினுந்
துய்யபூசனைசெய்துதுதித்தனன்,

(இ - பு.) தமது உடம்புமுழுதும் திருவெண்ணீறுதரித்துக்கொண்டு தாம் செய்யத்தொடங்கும் சிவபூசைக்குவேண்டியபூசாதிரவியங்களைச்சேகரித்துக்கொண்டு வேதபுரீசர்திருவடிகளினும் இளமுலைநாயகியார் திருவடிகளினும் தூய்மையாகிய வழிபாடுபுரிந்து துதித்தனர், எ-று. (அ)

வைகலுமிவ்வழியினிற்பூசனை
செய்யுநாள்பலசென்றபின்னெந்தையார்
கைகளிற்கலைமான்மழுகாட்டியே
மைவிழிப்பரைமாதொடுநேர்தோன்றினார்.

(இ-பு.) தினந்தோறும தவறாது இந்தப்படி வழிபாடுசெய்யும் நாள்கள்பலசென்றபின்பு எமதுதந்தையாராகிய அவ்வேதபுரீசர் தமதுதிருக்கரங்களில் மானமழுவிளங்கும்படி மைதோய்ந்த விழிகளையுடைய இளமுலைநாயகியாரோடுங் காட்சிதந்தருளினார், எ-று. (௯)

கண்டுநெஞ்சக்கவலைகணீங்கினான்
புண்டரீகப்பொலனசரண்போற்றினான்
பண்டுநீங்கியபாருரிமைகையிற
கொண்டபோலுமுளத்தினிற்கொண்டனன்.

(இ-பு.) அவ்வாறுதரிசனங்கொடுத்தருளப் பார்த்ததமதுமனதின்கணிருந்த துயரங்களெல்லாமநீங்கித தாமரைமலர்போன்ற அழகிய திருவடிகளைவந்தித்து முனபுநீங்கிப்போன உலக அரசாட்சி மீணடும் தங்கையிற் கிடைத்ததுபோலவும் மனதிற்கருதினர், எ-று. (௧௦)

ஏத்தினன்பலகாலிருங்கூவிளஞ்
சாத்தினன்மலர்த்தாளிறைமையனைக்
காத்தளிப்பையெனக்களித்தானந்தக்
கூத்தனாகியிதனைக்குறிக்கின்றான்.

(இ-பு.) பலதரமும் துதித்து உயர்ந்தவில்வங்களைத் தாமரைமலர் போன்ற வேதபுரீசர்திருவடிகளில் அருச்சித்து அடியேனைக்காத்தருள வேண்டுமென்று மனங்களித்து ஆனந்தக்கூத்துடையவராய் இவ்வாறு கூறுகின்றார் தொண்டைமானனவர் எ-று. (௧௧)

ஏழையோருக்கிரங்குங்கடவுணீ
சூழுந்துன்பந்தொலைக்கின்றதெய்வநீ
யாழுநெஞ்சினராகுங்கலியரை
வாழும்வண்ணம்வரந்தருநாதநீ.

(இ-பு.) ஏழைகளுக்குத திருவுள்ளமிரங்கிக் கருணைபுரியுங்கடவுள் நீரே உயிர்களுக்குநேர்ந்த துயரத்தைப்போக்குந் தெய்வமும்நீரே வறுமையினால் மனமயங்கும்வறியரை உயர்ந்தசெல்வத்தைப்பெற்று வாழும்படிக்கு வரங்கொடுத்தருளும் தலைவரும்நீரே. எ-று. (௧௨)

அடையலார்கையினாலடிபட்டுநா
னுடையநாடுமுரிமையுஞ்சேனையாங்
கடலுந்தோற்றுக்கலங்கியிக்கானிடைப்
படருமென்றன்பயந்தவிர்த்தாளுவாய்.

(இ-பு) பகைவர்கள் கையினால் யுத்தத்தில் அடிப்பட்டு நானுடைத்தாயிருந்த நாடும் அதனதுரிமையும சேனசமுத்திரமும் ஆகிய இவைகளைத்தோற்று அதனால் மனககலககமடைந்து இந்தககாட்டினிடத்து வசித்திருக்கும் என்னுடைய பயதறைநீககிப் பாதுகாத்தருள்வீர் எ-று. (கங)

என்றுதொண்டமானோதியவெல்லையி
லன்றுவேதமகிழ்ந்தின்றாடிய
துன்றுவாரசடையானருடேணடிட
மன்றன்மாலைமனுக்குவழங்குவான்.

(இ-பு) என்று தொணடமான்சக்ரவாத்திகூறிய தருணத்தில்அக்காலத்து வேதங்களகணடு மகிழுமபடி அவைகளுககெதிரில் வீரதாணடவம் புரிநத நெருக்கமாய் நீண்டிருககும சடையையுடைய அவ்வேதபுரீசருக்குக் கிருபைசுரநது வாசனைகமழும் மலாமாலையையுடைய தொணடமான் சக்ரவாத்திககு இவ்வாறு திருவாய்மலாந்தருளுகின்றார எ-று. (கச)

வேறு.

வேநதநீபுரிநதபூசைவியநதனம்போருக்கேற்ற
வூர்நதிடுமிரதஙகைமமாவொனபரிபதாதிகோடி
சேர்நதிடததருவன்கொணடுசென்றமாசெய்துவென்று
பாநதண்மேற்கிடநதஞாலமுழுவதும்பரிப்பையென்றான்.

(இ-பு) ஓ அரசனே நீ செய்த வழிபாட்டிற்கு வியப்படைந்தோம் இனியுத்தஞ்செய்யத்தக்கதாய் ஏறிச்செல்லும் இரதமும் யானையும் ஒள்ளிய குதிரையும் அனேகஞ்சேனைகளையும் சேர்த்துத்தருகின்றோம் அதுகளைப்பெற்றுககொண்டுபோய் அவவரசனுடன் போாபுரிந்து வெற்றியடைந்து ஆதிசேடன் சிரசிலிருக்கும் இந்த நிலவுலகமுழுவதையும் நீரே அரசாட்சி புரிவாயென்று திருவாய்மலாந்தருளலும் எ-று. (கரு)

உமைக்கொருநாதனிவ்வாறுரைத்தலுமுவந்தேயுள்ளச்
சமைக்கொருவடிவாய்நின்றதராபதியிதனைச்சொன்
னிமைக்கொருகோடிகோடியேவிளைவிடுதெஞ்கங் [ண்
குமைக்குமேயவன்பால்வெம்போர்கூடுமோசெய்யவென்று

(இ-பு.) உமாபதியாகிய அவ்வேதபுரீசர் இவ்வாறுதிருவாய்மலர்ந்தருளலும் மகிழ்ந்து மீண்டும் மனதின்கணுள்ள பொறுமையையே ஒருவடிவமாகப்பெற்றுநின்ற அத்தொண்டமான் சக்ரவர்த்தியானவர் இவ்வாறுகூறினர் இமைநேரத்திற்குள் கோடிகோடியாக அமபுகளைவிட்டு எனது சரீரத்தைவாட்டுவானே அவனுடன் கொடியயுத்தம்புரியஎன்னால்முடியுமோ என்றார். எ-று. (கசு)

வெருவியிவ்வாறுவேந்தன்விளம்பலுங்கருணைபூத்தே
யரிவையோர்பாகமபெற்றவாதியெம்பெருமானேது
மிருவரையனையதோளாயென்னருள்பெற்றவுன்னை
யொருவரால்வெல்லலாமோவுயாந்ததுவலியுன்பாலே.

(இ - பு.) பயங்கொண்டு இவ்விதமாக அரசன்கூறக்கருணைகூர்ந்து உமாதேவியை ஓர்பாகத்துடைய அவ்வேதபுரீசராகிய எமதிறைவர் திருவாய்மலர்ந்தருளுகின்றா இரண்டுமலைகள்போலும் புயங்களையுடையவனே எமது திருவருள்பெற்ற வுன்னை யாவராலுமவெல்லக்கூடுமோகூடாது அது வன்றி உன்னிடத்தமுன்னிலும் இப்போதுவன்மை அதிகரித்தது .எ-று

ஆயினுமுள்ளத்துற்றதச்சமாதலினற்போாக்குக்
காயிருங்கதிர்கள்வீசுங்கனகநல்வலயக்கோட்டு
மாயிருநந்திதானும்வருவனீசேனையோடும்
போயருமபோாசெய்தந்தப்பொருதலற்செகுத்தியென்றான்.

(இ-பு.) ஆனபோதிலும் உன்மனதில் அச்சமிருக்கின்றதாதலினற் சமருக்கு பிரகாசிக்கும்பெரிய கிரணங்களை வீசிக்கொண்டிருக்கும் பொன்னாலாகிய சிறந்தவளையங்களணிந்துள்ள கொம்புகளையுடையமிகமகத்தவம் பொருந்திய நந்திதேவர்படைத்துணைவருவார் அதற்குமுன்பாக நீயாம்கொடுத்த சதுரங்கசேனைகளோடும் சென்று அரியயுத்தம் புரிந்துபகைவனைக் கொன்றுவிடு என்று திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (கஅ)

மீட்டுமீதுரைத்தானெஞ்சில்மேவியவையமுண்டேற்
காட்டுவன்கரிநீசென்றுகாணுதிநந்திதானுங
கிட்டிசைநோக்கிநிற்றலென்னலுங்கிளரொளிபபூண்
வாட்டிறல்வேந்தன்றானுமனத்துறுமச்சந்தீர்ந்தான்.

(இ-பு ) மீளவும் இவ்வாறு திருவாய்மலாந்தருளுகின்றா யாம்கூறிய தில் உன்மனதிற்சந்தேகமிருக்குமாயின் நாம்சாட்சி காட்டுகின்றோம் அந்தப்படி நீபோய்பாா அந்தநந்திதேவன் கீழ்த்திசைநோக்கியிருக்கின்றார் என்று திருவாய்மலர்ந்தருளியவுடன் மிக்க ஒளியையுடைய ஆபரணங்களையணிந்த வாள்வித்தையில் வன்மைபெற்ற அத்தொண்டமான்சக்ரவர்த்தி அப்படியேபோய்மேற்குமுகமாயிருந்த நந்திதேவர்கீழ்த்திசைக்காய்த்திரும்பியிருப்பதைக்கண்டுதம்மனதின்கணுண்டாயிருந்தபயம்நீங்கினர். எ-று.

ஆங்கதற்கிசைந்துதொண்டமானரனடியிற்றாழத்
தீங்கறுநந்திதன்னைச்சேனைநாயகனாய்ச்செய்து
பாங்குறுங்கணங்களெல்லாம்பரிகரிதேராளாக்கி
வீங்கியதிரடோள்வேந்தைவினைசமர்க்கேகவேன்றான்.

(இ-பு) அவ்வாறு சிவபிரான் திருவாய்மலர்ந்த தனுக்கு மனமிசைந்த அத்தொண்டமான்சக்ரவர்த்தியானவர் அச்சிவபிரானது திருவடிகளின்

வணங்கக்குற்றமற்றநந்திதேவரைச் சேனாபதியாகச்செய்து பண்பமைந்த மற்றைச்சிவகணங்களையெல்லாம் குதிரைகளாகவும் யானைகளாகவும் தேர்களாகவும்சேனைகளாகவும் செய்து கொடுத்து விம்மிதங்கொண்டிருக்கும் திரண்ட புயங்களையுடைய அத்தொண்டமான்சக்ரவர்த்தியை விளையப்போகும்யுத்தததிற்குச்செல் என்று திருவாய்மலர்ந்தருளினார் சிவபிரான்.

கந்தமென்மலராலீசன்கழலிணைப்பூசைசெய்து
நந்திகீழ்த்திசையைநோக்கிநன்குறவிருப்பக்கண்டு
புந்தியுண்மகிழ்ந்துவெள்ளைப்புரவிமேலேறிச்சேனை
யெந்திரங்கரிமாசசூழவிறைவனுமெய்தினானே.

(இ-பு) வாசனைகமழும் மெல்லியமலர்களால் சிவபிரான் திருவடிகளைப்பூசித்து நந்திதேவர்கிழக்குத்திக்குநோக்கி நன்மையுடன் வீற்றிருப்பதைப்பார்த்துத் தன்புத்தியில் மிகக்களித்து வெள்ளைக்குதிரைமீதேறிக்கொண்டு சேனைகளும் தேர்களும் யானைகளும் குதிரைகளும் தம்மைச்சூழ்ந்துவரும்படி அத்தொண்டமான்சக்ரவர்த்தியானவர் சென்றார் எ-று, ஏ-அசை. (௨௧)

போர்ப்பறைமுழக்குமவீரர்பொற்புயங்கொட்டுமார்ப்பும்
பார்ப்பொறைசகட்டிற்றோன்றுமபருமிதத்தொலியுநால்வா
யாாப்புறுமோதைதானுமண்டகோளதலைத்தாக்கக்
காற்பலகொடிகளெல்லாங்கருமுகின்மீதுமோத.

(இ-பு.) யுத்தப்பறையின் முழக்கமும் சேனாவீரர்கள்தங்கள் அழகிய புயங்களைக்கொட்டும் ஓசையும் பூமிக்குப்பெருத்த பாரமாகவரும் இரதங்களிலுண்டாகும் விசேஷகோஷமும் யானைகள் ஆரவாரிக்கும ஒலியும் ஆகிய இவைகள் அண்டகோளத்தைமுட்டவும் கால்களையுடைய பலவிதக கொடிகளெல்லாம் மேகமண்டலததளவும் ஓங்கி அம்மேகங்களின்மீது மோதவும். எ-று. (௨௨)

பாரெழுந்தூசுவானப்பரப்பெலாம்போர்ப்பப்பாய்மாத்
தேரெலாஞ்சிகரக்கோடிச்செழுங்கதிர்க்கிரணம்வீசக்
காரெழுந்துலவல்போன்றகரிமதச்சேறுபாயத்
தாரெழும்புயததுவீரர்தடக்கைவாளவிதிர்ப்பச்சென்ற.

(இ-பு.) பூமியிலிருந்துண்டாகும் தூளிகள் ஆகாயப்பரப்பெங்குமூடவும் பாய்ந்துசெல்லும் வேகத்தையுடைய குதிரைகள்பூட்டிய இரதங்களின் அளவிறந்தசிகரங்களெல்லாம் செழுமையாகிய சூரியனதுகிரணங்கள்வீசவும் மேகங்களே உருவெடுத்துவந்து உலாவுதல்போன்ற யானைகள் மதச்சலத்தால் பூமியெங்குஞ்சேறாகவும் செல்லவும் மலர்மாலையணிந்த புயங்களையுடைய சேனாவீரர்கள் தங்களது விசாலமான கைகளில் வாளாயுதங்களை வீசிச்செல்லவும் சேனாசமுத்திரம் சென்றது. எ-று, (௨௩)

வேறு.

இப்பரிசுசென்றுவிசுவாவசுவிருக்கு
மொப்பரியமாநகரினெல்லையினிலுற்று
னப்பொழுதுமற்றவனறிந்துசினமாகி
மெய்ப்பெரியசேனையொடுமேவிநதமர்விளைத்தான்.

(இ-பு) இவ்வண்ணம்போய் விசுவாவசு என்பவன் வசித்திருக்கும் ஒப்புரைத்தற்கரிதான பெரியநகரத்தின் எல்லையைஅடைந்தான் அக்காலையில் அவ்விசுவாவசு என்பவன் இதனையுணர்ந்துதனது பெரியசேனையோடும்வந்து யுத்தஞ்செய்தனன். எ-று. (உ௪)

தேரினர்களோடுவருதேரினர்களேறுற்
காரினிகர்யானையொடுகைபலையெதிர்த்த
வார்பரியரோடுபரிமன்னவரெதிர்த்தார்
வீரரொடுவீரர்களுமேவியமர்செய்தார்

(இ-பு) தேர்க்காரரோடு எதிரில்வருகின்ற தேர்க்காரர்களெதிர்த்தார்கள் மேகங்களைப்போன்ற யானைச் சேனைகளோடு யானைச் சேனைகளெதிர்த்தன நீண்ட குதிரைவீரர்களோடு குதிரையையுடைய அரசர்களெதிர்த்தார்கள் சேனாவீரர்களோடு சேனாவீரர்கள்கலந்து யுத்தம் புரிந்தனர்கள். எ-று. (உ௫)

தேர்கள்பலகோடியழிகின்றதுசிதைந்தே
கார்கள்பலவீழ்ந்ததெனவேகரிகள்வீழ்ந்த
தார்களபயிரோளவயவர்தங்களுடலிறசெந
நீர்கள்விழவேபுவியில்வீழ்ந்துடனெறிப்பார்.

(இ-பு) தேர்கள்அனேகங்கோடியுடைப்பட்டழிகின்றன பலமேகங்கள் விழுந்துகிடப்பதைப்போன்று யானைகள் வீழ்ந்திறந்தன மாலைகளணிந்த தோள்களையுடைய சேனாவீரர்களது சரீரத்தில் உதிரங்களெல்லாம ஒழுகிவிட்டதால் பொத்தென்று நிலத்தில் வீழ்ந்து உடம்பைநெறித்துக் கொள்ளுவார்கள். எ-று. (உ௬)

கரங்களறுகின்றபலகால்களறுகின்ற
சிரங்களறுகின்றபலசெம்புனல்சொரிந்தே
வுரங்களறுகின்றபலவோடியுயிர்கொண்டு
புரங்களுறுகின்றபலபோரினிலெதிர்ந்தே.

(இ பு.) கைகளறுந்துபோயினபலர்க்கு கால்கள்துணிந்துபோயினபலர்க்கு தலைகள்தெறித்துப்போயினபலர்க்கு உதிரம் ஒழிகிகொண்டிருக்க மார்புடைந்துபோயினபலர்க்கு யுத்தத்தில் எதிர்த்துநிற்கமாட்டாமல் உயிர்தப்பித்துக்கொண்டுதங்களூர்போய்ச்சேர்ந்தவர்கள் பலர். எ-று.

வேறு.

தலைகளுமுடல்களுந் தழிந்தகுப்பையின்
மலையினமேனிணங்களை மாந்திப்பேய்க்கண
நிலவியபூதமுங்கூடிநீடுவ
பலபலகவந்தமும்பாரினுடின.

(இ-பு.) இவ்வாறு அறுபட்ட தலைகளும் உடல்களும் ஆகிய குப்பையினாலுயர்ந்த மலைகளின்மீதுள்ள நிணங்களைப்புசித்துப்போயக் கூட்டங்களும் அவ்விடத்துசஞ்சரிக்கும் பூதக்கூட்டங்களும் ஒன்றுகூடிக் கூத்தாடிக்கொண்டிருந்தன அநுவல்லாமல்பலபலவிதமான உடற்குறைகளும் நிலத்தின்மீதிருந்து கூத்தாடிக்கொண்டிருந்தன. எ-று. (உ௮)

உதிரநீர்வெள்ளமாங்கோடுமாற்றிடைக்
கதிர்மணித்தேர்களுங்கையிலானையுங்
குதிரையுங்காம்பறுகுடையுங்கொண்டுசென்
றதிர்கடற்புனலையுமருணமாக்கின.

(இ-பு) அங்கு ஓடிக்கொண்டிருக்கும் இரத்த நீர் வெள்ளமாகிய ஆறானது தன்னிடத்து ஒளிவீசும இரத்தினங்களழுத்திய தேர்களையும துதிக்கையறுபட்ட யானைகளையும் குதிரைகளையும காம்பறுந்த குடைகளையும் அடித்துக்கொண்டுபோய் அதிர்தலையுடைய சமுத்திர சலத்தையும் செந்நிறமாக்கின எ-று. (உ௯)

மறையுணர்ந்தேத்தநிடமன்றுளாடிய
விறையவனருளினுலியன்றபோரினி
னிறைமதித்தொண்டமானொனுசுகந்தனன்
குறைவிசுவாவசுவுளத்திறகொள்ளவே

(இ-பு) வேதங்கள்தம்முடைய தன்மையைத்தெளிந்துஎதிரினின்று துதிக்க அம்பலத்தில் வீரநடனம்செய்தருளிய வேதபுரீசரது திருவருளினுல் நடந்தயுத்தத்தில் பூரணஅறிவையுடைய தொண்டமானனவர் தம்மனதில் முன்னிருந்த குறைகளையெல்லாம் விசுவாவசு என்பவன் கைக்கொள்ள தாம் மனமகளிழ்த்தனர் எ-று. (௩0)

தன்படையழிந்ததுநோக்கித்தாழ்கிலா
வின்படையாவிசுவாவசென்பவன்
வன்படைகொண்டுபோர்மன்னினுனர
னன்படையாதவர்க்கடலுண்டாகுமோ.

(இ-பு) தன்னுடைய படைகளெல்லாம் அழிந்துபோனதைப்பார்த்து மனந்தளராது சந்துஷ்டியடையாத அவ்விசுவாவசு என்பவன்பின்னும்

வலிய ஆயுதங்களைக்கொண்டு யுத்தம்புரிந்தான் சிவபிரானிடத்து அன்பி
ல்லாதவர்க்கு எவ்வித ஆயுதமிருக்கினும் வண்மையுண்டாகுமோ எ-று.

கண்டனன்றொண்டமான்கையில்வாட்படை
கொண்டனன்விதிர்த்தனன்கொற்றமோங்கியே
துண்டமுள்ளத்திடைத்தோன்றியேயமர்
மண்டினவமரருமறுக்கங்கொள்ளவே.

(இ-ள்) அவ்வாறு விசுவாவசு என்பவன் தன்கையில் வாயுததனை
எடுத்துச்சுழற்றத் தொண்டமான்சக்ரவாத்திகண்டு தன்மனதில் துணிவுண்
டாகித்தேவர்களும் அச்சங்கொள்ளும்படி யுத்தம்புரிந்தனர் எ-று. (௬௨)

வேறு.

கள்ளூறுபொழ்கடுக்கையணிகடவுண்மலரடியிணையை
யுள்ளூறவைத்தினிதேத்தியுயர்தொண்டமான்கரதத்தின்
வள்ளூறுவாளால்விசுவாவசுவின்மணிமுடித்தலையைத
துள்ளூறவீழ்த்தினரமரர்சொரிந்தனர்பொற்பூமாரி.

(இ-ள்) தேன்பொருந்திய அழகிய கொன்றைமாலையை அணிந்த சிவ
பிரான் தாமரைமலரபோன்ற இரண்டு திருவடிகளை மனதின் கண்தரித்து
இனிமையுடன் துதித்து உயர்ந்த தொண்டமானவர் தமது கரத்தில்
தாங்கிய கூர்மையுள்ளவாளாயுதத்தால் விசுவாவசு என்பவனது இரத்தின
கிரீடம் அணிந்த சிரசைத்தள்ளும்படி வெட்டிவிழுத்தினர் உடனே தே
வாகள் பொன்னாலாகிய மலர்களை மாரிபோலச்சொரிந்தார்கள் எ-று.

சென்னியறும்போதினொளிதிகழ்மேனிக்கந்தருவன்
பொன்னுருவமாய்விசும்பிற்பொலிந்திதனைப்புகல்கின்றா
னென்னுருவமெனக்களித்தேயிரும்புனிதமாக்கினைநின்
மன்னுரிமைகைக்கொண்டுவொழ்தியெனவுரைத்தனனால்.

(இ-ள்) இவ்வாறு விசுவாவசுவின் சிரம் அறும்பொழுது அவ்விசுவா
வசு உடலினின்றும் ஒளிவிளங்கியசரீரத்தையுடைய ஒருகந்தருவின் பொ
ன்மயமான சரீரத்தோடு ஆகாயத்தில் நின்று இவ்வாறு சொல்லுகின்றான்
என்னுடைய சுய உருவத்தை எனக்குக்கொடுத்து என்னைபரிசுத்தனாக்கினா
ய் ஆதலினால் இனிமேல் உனது அரசுரிமையை நீயேகைக்கொண்டு வாழ்
ந்திருக்கக்கடவாயென்று கூறினன் எ-று. (௬௪)

ஆங்கவனீதுரைப்பமன்னனதிசயித்தேயுறநோக்கி
யோங்குமெழிற்பொன்னுருவமுடையாய்நீயாரென்றான்
றேங்கமழுநறுந்தாமத்திறலோயான்கந்தருவ
னீங்கடைந்தசெயல்கேட்டியென்றவனுமிசைத்தனனால்.

(இ-பு) அவ்விசுவாவசு இவ்வாறு கூறக்கேட்டதொண்டமான்சக்கரவர்த்தி அதிசயித்து அவனைஉற்றுப்பார்த்து அழகுமிகுந்தபொன்போல உருவமுடையவனே நீயாரென்று கேட்டனர் வாசனைகமழும் நல்லமலாமாலையையுடைய அரசே நான்கந்தருவன் இங்குவந்தசெய்கையைக் கேளென்று அவன்சொல்லத்தொடங்கினான் எ-று. (௬௫)

வானவர்கோனிடத்தினில்யான்மருவுநரம்பிசைமிதுனை
கானவமுதினைப்பாடிப்பயிலவேனக்காலையினிற்
றேனலர்கற்பகநறுந்தாரத்தேவரிறையவனுங்க
ணீனமுறுமெல்லையிலெனக்கிச்சையொன்றங்கெய்தியதே,

(இ-பு) இந்திரனிடத்து யானிருந்து நரம்புகள்சேர்ந்த வீணையினிடத்துவிளையும் அமுதம்போன்ற இசையைப்பாடிக்கொண்டிருப்பேன் அந்தநாளில தேன்றுளிக்கும் கற்பகமலாமாலையணிந்த வானவர்க்கிறைவனாகிய அவ்விந்திரன அவ்விடத்திலில்லாதகாலத்து எனக்கு ஓர் இச்சை விளைந்தது, எ-று (௬௬)

உம்பர்தொழுதேந்தவனுறையும்பொன்னாதனத்தி
லின்பமுறயானிருந்தேயிறையுரைக்குப்படிவாளா
வம்புபலவுரைத்தனனவ்வாய்ப்புருகூதனுமடைந்து
தம்பெருமையிகழ்ந்துபலசாற்றியதுங்கேட்டனனால்,

(இ-பு,) தேவர்களவணங்கித்துதிக்க அவ்விந்திரன் வீற்றிருக்கும் பொன்னாலாகிய சிங்காசனத்தில் இன்பத்துடன் நானேறி உட்கார்ந்து அவ்விந்திரன்சொல்வதுபோலவீணேவம்புவார்த்தைகள் பலபலபேசினேன் அத்தருணத்துஇந்திரனும்வந்து தனதுபெருமையையிகழ்ந்து பலவாறு யான்கூறியதைக்கேட்டனன். எ-று (௬௭)

கண்டுளந்திறசினங்கூர்ந்துககனவேந்தென்னையழைத்தே
யண்டருலகாண்டதுநீயமையுமினிப்புவிசார்ந்து
வண்டறைபூம்பலரலங்கன்மன்னனாகிநிலக்கிழமை [ல்.
கொண்டிடுகென்றெனதுவினைக்கொடுமையினாற்சபித்தனனா

(இ-பு) இவ்வாறுயானிருந்ததைப்பார்த்து அவ்விந்திரன்தன்மனதில் கோபங்கொண்டு என்னை அருகில் அழைத்து நீவிண்ணுலகாண்டதுபோதும் இனிமேலமண்ணுலகையடைந்து வண்டுகள்வசிக்கும் மலாமாலையையுடைய அரசனாகிப் பூவுரிமையைக்கொண்டிடக் கடவாயென்று எனது தீவினைப்பகுதியின் கொடுமையினாற்சபித்தனன் எ-று. ஆல்-அசை, (௬௮)

ஆயவைகேட்டுளநொந்தேயன்னவனபொற்பதம்பணிந்து
தீயவிவைதீர்ந்திடுநாள்செப்புதியென்றிரந்திடலுந்
தூயமறைப்புரந்தரனைத்தொழுதவனுக்காட்பட்டு
நேயமுடையவன்மகயானிங்குமெனவுரைத்தனனால்.

(இ - பு.) அவ்வாறுசபித்ததுகேட்டு மனம்வருந்தி அவ்விந்திரனது அழகியபாதங்களில்வணங்கி கொடிய தாகியஇச்சாபம் நிவாரணமாகும நா ளைச்சொல்லவேண்டுமென்று குறையிரக்கவும் தூய்மையான வேதபுரீஸவ ரரைவணங்கி அவருக்கடியவராகி மெய்யன்புள்ள ஒருவரதுகையினுல் இச சாபமநிவாரணமாகுமென்று கூறினன். எ-று. (௩௯)

அப்பரிசேயான் புவியிலரசாகித்திசை முழுது
மெப்பகையுநதொலைக்கிநதவிருநிலத்தையினிதாண்டே
னெப்பரியசிவன்கருணையுடையவனிபதனுலுன
கைப்படையெனமெயப்படலுமகடுஞ்சாபந்தொலைந்ததுவே.

(இ - பு.) அவ்வண்ணமேநான் இந்நிலவுலகத்தில அரசனுகித்திசுகுக ளெல்லாவற்றிலும் எவவிதப்பகையையும ஒழித்து இநதபெரியவுலகத தை இனிதாக ஆண்டிருநதேன் நீ ஒப்பறற அசசிவபிரான்திருவருளைப் பெறறவராகையால் உமதுகையிலுள்ளபடையானதுஎனதுசரீரததிறபடட மாததிரத்தில் கடியதாகிய அந்தச்சாபந் தொலைநதுவிட்டது. எ-று. (௪0)

வேறு.

என்றுகநதருவனசொல்லியிமையவருலகஞ்சாாந்தா
னன்றுநானமறைகளோதுநாயகனமகிமையென்று
வென்றிகொளவேநதனுள்ளம்வியந்துதன்னகரின்மேவிப்
பொன்றிகழ்மகுடஞ்சூடிப்புவனியைபபுரநதான்மாதோ.

(இ-பு.) இவவாறு எனது பூாவசரித்திரமென்று கந்தருவன்கூறித தேவலோகஞ்சோாந்தனன் நான்குவேதங்களைத் தேவாகளுககோதுவித்தரு ளிய வேதபுரீசாமகிமை நல்லதென்றுவெற்றியடைந்த அத்தொணடமான் சக்ரவர்த்தி மனமகளிகூாந்து தமதூருக்குச்சென்றுபொன்னுல்விளங்குங் கிரீடந்தரித்துககொண்டு இந்நிலவுலகததை அரசாணடுவந்தாா, எ-று. மாது, ஓ-அசை- (௪௧)

அமைச்சரை நகரில்வைததவ்வாரணபுரத்தைச்சார்நதே
யிமைக்குமின்மணிகளாலுமிருங்குலிசத்தினுலுஞ்
சமைத்தனன்சிகரகோடிதடமதிலமணடபங்க
ளமைததனன்வாகனுதியணிமணிநகரமவீதி.

(இ-பு) தமதுநகரத்தில் மந்திரிகளைவைத்துத்தாம் அச்சருதிபுரிககு வந்து பிரகாசிக்கும் ஒளியையுடைய இரத்தினங்களினுலும் பெரிய வயிர ங்களினுலும் அனேகசிகரங்களையுடையவிசாலமாகிய மதில்களும் மணடப ங்களுங கட்டினா வாகனங்கள் முதலியவும் அழகிய இரததினமயமான நகரஙகளையும் வீதிகளையும அமைததாா எ-று. (௪௨)

வருமயனங்களாதிமாதங்கடிருவிழாவு
மிருமதிதோறும்பஞ்சபருவத்துக்கெழுஞ்சிறப்புந்
தருந்தினமாறுகாலபூசையுந்தாழ்வுறுமன்
மருவுறுமாலைவேந்தனடத்தியேவாழ்ந்தான்மாதோ.

(இ-ள்) வருடந்தோறும வருகின்ற அயனங்களிலும் மாதங்கள்தோறும் திருவிழாவும அம்மாதங்கள்தோறும பஞ்சபருவகாலங்களுக்குரிய சிறப்புகளும் நாள்தோறும ஆறுகாலபூசையும்இவைகளுக்கெல்லாம்ஓர்தாழ்வு வராமல் வாசனைகமழும் மலர்மாலையையுடைய அத்தொண்டமான்சக்ரவர்த்திநடத்திக்கொண்டு வாழ்ந்திருந்தனர் எ-று. மாது-ஓ-அசை. (௪௩)

நந்தனவனங்களசெய்துநறுமலர்த்தொடையல்பண்ணி
யிந்துசூடியவெம்மண்ணறகிறையுறப்புனைந்துபோற்றக்
கந்தரங்கறுத்தமுக்கட்கடவுண்மனனவன்முன்பெய்தி
மைந்தநின்மனத்திலுற்றவண்மையைக்கேட்டியென்றான்.

(இ-ள்) நந்தவனங்கள் ஏற்படுத்தி அதிற் புட்பிக்கும் நல்ல மலர்களால் மாலைகள் கோத்து சந்திரசடாதரராகிய எமதிறைவரான வேதபுரீசாக்கியைய அணிந்து வணங்கிவரக் கண்டங்கறுத்த திரிநேத்திரதாரியாகிய அவ்வேதபுரீசர் அத்தொண்டமான்சக்ரவர்த்திகெதிரிற் காட்சியளித்து மைந்தனே உன்மனதில நினைத்தவரத்தைகேளென்று திருவாய்மலர்ந்தருளினர் எ-று. (௪௪)

கேட்டலுமுவந்துமன்னன்கிளியெனமிழற்றுமின்சொல்
வாட்டடங்கண்ணிபங்கமகரமாமதிமுன்பக்கத
நீட்டுபஞ்சமியைநதென்னவிசைத்திடுந்திருவிழாவாய்
நாட்டுவெள்விடையூர்ந்திந்நகர்வலம்வரனீவேண்டும்.

(இ-ள்) அவ்வாறுவேதபுரீசர் திருவாய்மலர்ந்தருளிக்கேட்க அத்தொண்டமான்சக்ரவர்த்தி கிளியைப்போன்று வசனிக்கும் இனியசொற்களையுடைய வாள்போன்று விசாலித்தகண்வாய்ந்த இளமுலைநாயகியாரபாகரே மகததாகிய தைமாதம்பூர்வபட்சம் பஞ்சமிதிதியின்னறைக்கு ஐந்தாந்திருவிழாவாகவும் அன்றையதினம நிலைபேறடைந்த வெண்ணிறமுள்ள இடபாரூடராய் இந்நகரைததேவரீர் வலமவரல்வேண்டும் எ-று, (௪௫)

அத்தினமென்னதாகவருளசெயவேண்டுமென்ன
முத்தனைவழுத்தவன்றனென்முகமலர்ந்தருள்வானென்று
முத்தராயனத்திலுற்றவுயர்மகரங்கடோறுஞ்
சுத்தபஞ்சமியேறார்ந்துதோன்றிநிற்கருள்வமென்றான்.

(இ-பு) அன்றையத்தினம் உற்சவம் என்னுடையதாகவும் இருக்கக் கருணை புரியவேண்டும் என்று அவ்வேதபுரீசரைத் துதிக்க அவ்வேதபுரீசர் முகத்திருமுகமலர்ச்சியுடன் திருவாய் மலர்ந்தருளுகின்றார் எந்நாளிலும் உத்தராயணகாலத்தில் வரும் உயர்வாகிய தைமாதங்கள்தோறும் பூர்வபட்ச பஞ்சமிதிதியில் இடபவாகனாரூடராய்க்காட்சிகொடுத்து உனக்குக்கிருபை புரிவோமென்றார் எ-று. (௪௬)

என்றிவைபுகன்றெம்மண்ணலிலிங்கத்தடக்கரப்பவேந்தன்
மன்றமாகமழ்லைவாழ்த்திவணங்கியானந்தவெள்ளந்
துன்றிடக்கண்களுள்ளத்துரிசகன்றுலகையாண்டே
பொன்றிகழ்சிவலோகத்திற்பொருந்தினீற்றிருந்தானமாதோ

(இ-பு.) என்று இவ்வாறு எமதிறைவராகிய வேதபுரீசர் திருவாய் மலர்ந்தருளி அச்சிவலிங்கத்திற் கரந்தருள அத்தொண்டைமான்சக்ரவர்த்தி வாசனைகமழும் அச்சிவபிரான் திருவடிகளைத் துதித்து வந்தித்துக்கண்களில் ஆனந்தவெள்ளநீர் பெருகத்தமதிதயத்திருந்த துயரங்கணீங்கப்பெற்று இந்நிலவுலகத்தை நெடுங்காலம் அரசாண்டிருந்து பிறகு அழகுவிளங்கும் சிவலோகத்தடைந்து அவ்விடத்து வீற்றிருந்தார். எ-று. (௪௭)

மணக்குமென்றுமத்தொண்டமான்மனத்தையந்தீரக்
கணக்கறுஞ்சேனையோடும்படைசெலுங்கரியீதென்று
குணக்கினைநோக்கிநின்றநந்திமுன்குறுகிச்சென்னி
வணக்கியபேர்க்குச்சென்னிவானவர்வணங்குவார்கள்.

(இ-பு.) வாசனைகமழும்மிருதுவாகிய மலர்மாலையணிந்த அத்தொண்டமான்சக்ரவர்த்திமனதில் உண்டாயிருந்த சந்தேகந்தீரும்படி அளவிறந்த சேனாசமுத்திரங்களோடு படையெடுத்துச் சென்றதற்குச்சாட்சி இதுவாகுமென்று கிழக்குத்திசையைநோக்கிநிற்கிறநந்திதேவருக்குமுன்பாக அடைந்து சிரசைத்தாழ்த்தி வணங்கினவர்கட்கு தேவர்களெல்லாம் தலைவணங்குவார்களென்று சூதபுராணிகர் நைமிசாரணியமுனிவர்களுக்குக்கூறினர். எ-று. (௪௮)

தொண்டமானுக்குப்படைத்துணைபோனசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ... ௮௬௦.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தாலமகிமைச் சருக்கம்.

அபபொழுதுநைமிசவனததினர்களியாரு
மெய்ப்பெரியசூதனைமிகததுதிவிளம்பி
யொபபரியசாருபமதுற்றபனையென்றீ
ரப்புதமையாமறியவனபெடறைகெனறார்.

(இ-பு.) அககாலத்து நைமிசாரணியமுனிவாகளெல்லாம் உணமை நிலைவாய்ந்த பெருந்தன்மையையுடைய சூதபுராணிகரை மிகவும தோத்திரஞ்செய்து ஓர்பனைமரம் ஒப்பற்ற சாருபமபெற்றது வென்று முன்னுரைத்துள்ளீா அவ்வற்புததததை யாங்களறிந்துகொள்ளுமபடி அன்போடுகூற வேண்டுமென்று கேட்டுக்கொண்டனா. எ-று. (க)

என்னமுனிவோர்வினவுமெலலையவனேது
முன்னமுயர்மாதவமுனிக்குழுமலேகி
மன்னுமொளிவெண்கயிலைமால்வரையடைந்தெ
னன்னையுமைகேளவனடியன்பொடுவணங்கி.

(இ-பு) என்று நைமிசாரணியமுனிவர்கள் கேட்கின்றதருணத்துச் சூதபுராணிகர் கூறுகின்றார் முன்னொருகாலததில் உயாந்தபெரியதவத்தைச்செய்யும் முனிவர்கூட்டஞ்சென்று நிலைபெற்ற ஒளியையுடைய வெண்ணிறமான திருக்கயிலை என்னும்பெரிய மலையையடைந்து எமதன்னையாராகிய உமாதேவியாாபாகரான சிவபிரான்திருவடியை அன்போடு தொழுது. எ-று. (உ)

அளப்பரியபல்லுயிர்களாகிபதிலாண்பெண்
வளப்பமுறநிற்குமதின்வண்மையையறிந்தோங்
கொளப்படுவிருக்கமுதருபரகுலத்திற்
களக்கமறவாண்பெணிவைகண்டுதெளிகில்லோம்.

(இ-பு.) அளத்தற்கரியபல உயிர்களாயுள்ள சங்கமங்களில் ஆணபெண் என்னும் வளப்பமமையவிருக்கும் அதினுடைய பாகுபாட்டை யுணர்ந்திருக்கின்றோம் தாபரங்களென்று கொள்ளப்படுகின்ற விருட்சமுதலா

குலத்தில் களங்கமில்லாமல் ஆண்பெண் இவைகள்உண்டென்று கண்டார்ந்திலோம். எ-று. (௩)

ஆயகதுவுமன்றியகிலத்தினினிறைந்தே
யோங்கியசராசரமிரண்டினுயிரெல்லா
நீங்கில்பதநான்கிலிவைநிறபதுளதோர்ந்தோம்,
வீங்குமசரங்கள்பதமேவுறெளிகில்லோம்.

(இ-பு) இப்போது கூறியதல்லாமலும் இவ்வுலகத்தில்நிறைந்து ஓங்கி நிற்கும் சரம் அசரம் ஆகிய இரண்டிலமுற்கூறிய சரங்களாகிய ஜீவாகளெல்லாம் நீக்கமற்ற சாலோகாதி நான்குபதவிகளிலிருப்பதை யறிந்திருக்கின்றோம் பிற்கூறிய பெருதிருக்கும் அசரங்களாகிய உயிரற்றவைகளெல்லாம் பதவியடைவது உணரவில்லை எ-று. (௪)

ஓதியவிரண்டுமெமதுட்டெருளும்வண்ண
நாதவருளென்றிடலுநக்கனுநகைததே
கோதிலருண்மாதவருழுக்கடமைநோக்கித்
தாதவிழ்கடுக்கையணிதற்பரனுரைததான்.

(இ-பு) மேற்கூறிய அவ்விரண்டு சங்கைகளும் எமது மனந்தெளிவடையும்படி சிவபிரானே கருணைசெய்யவேண்டு மென்றுகேட்க மகரந்தஞ்சொரியும் கொன்றைமாலையை யணிந்ததமக்குத்தாமேபரமாகிய சிவான் புன்முறுவல்பூதது குற்றமற்ற பெரியதவசிகள் கூட்டத்தைப்பார்த்து இவ்வாறு திருவாய்மலர்ந்தருளுகின்றார எ று. (௫)

வேறு.

இருளறுமுளத்தீரிந்தவிருவகையியல்புதோரா
மருளுறுசிநதையோராய்வந்துரைவழங்கினீரா
லருளுறுமசரந்தனனிலாண்பெண்ணவிரண்டுமுண்டு
தெருளுறநதெரியச்செயவோநதீவினைதீரக்காண்டிர்.

(இ பு) மயக்கமற்றமனமுடையவாகளே இவ்விருவகையான இயற்கையையுணராது மயங்குகின்ற சிந்தையுடையவாகளாய் வந்து இவ்வாறு கூறினீா நமதருளபெறறு விளஙகும அசரவுயிாகளிலும ஆணென்றும் பெண்ணென்றும் இரணடுபாகுபாடும உண்டு நீங்கள் தெளியுமபடிகாட்டுகின்றோம் உமது கொடியவினைகளகலுமபடி பாாப்பீாகளாக ஆல்-அசை.

ஆயவுள்ளத்தினையமங்கையினைநதுநெலலிக்
காயெனக்காண்கிலீரேழ்கருத்திடைத்தெருளுறாது
தூயமாதவத்தின்மிக்கீாதொகுத்தவைகாட்டுகிறபேந்
தோயவாரிதிசூழ்ஞாலத்தொல்லுலகதனிலென்றான்.

(இ-பு.) ஆகிய உங்கள்மனதினிகழ்ந்த சந்தேகத்தை உள்ளங்கையில் நெல்லிக்கனிபோலப் பாாக்காவிட்டால் உங்கள்மனந்தெளியாது பரி

சுத்தமாகிய பெரியநபோவல்லமையில்மிக்கவரே தொகுப்பாக அவைகளைக் காட்டுகின்றேம கீர்நிறைந்தகடலாற்சூழப்பட்ட ஞாலமென்னும் பெயர் வாய்ந்த இந்நிலவுலகத்தில் என்று திருவாய்மலாந்தருளினர் எ-று. (எ)

அன்னதெத்தலமென் றீசலரியநோர்மறைகளொன்கு
முன்னமியான்வானோர்தேறமொழிந்தக்கேத்திரமேயாகும்
பன்னுமாதவத்தீராங்குபடாந்கினிதிருப்பீராயின்
மனனுமோரபணியாறகவ்பிரானவரன்வகுத்தான்மன்னே

(இ-பு) அவ்வாறுகாணத்தக்கது எந்தத்தலமென்று கேட்பீர்களாகில் அருமையாகிய நான்குவேதங்களையும் முற்காலத்துத்தேவர்கள்தெளியும்படியாம ஓதுவித்த திருவோத்தூர் என்னுந்தலமாகும் யாவராலும்புகழப்படும்மகத்தாகியதவத்தையுடையவர்களே நீங்கள் அவ்விடத்துச்சென்று இனிமையுடன் வசித்திருப்பீர்களாகில் அவ்விடத்து நிலைபெறவடைந்து ஓர் பனைமரத்தினால் காணுவீர்களென்று சிவபிரான் திருவாய்மலாந்தருளினர். எ-று. மன் - ஓ - அசை (அ)

ஈசனீதுரைப்பருமவிருடியரினிதினமீண்டு
காசியின்றலத்துமவெளளிக்கயிலைவெறப நற்சுத்தூய்மை
பேசுநற்சுருதியோதும்பெரெழிற்பதியின்வைகி
யாசறுதவத்தினுற்றாரான்மொழியுளத்திலவைத்தார்.

(இ-பு) சிவபிரான் இவ்வாறுதிருவாய்மலாந்தருளக்கேட்ட மெய்ஞ்ஞானமுள்ள இருடியர்கள்யாவரும் இனிமையுடன் விடைபெற்றுத்திரும்பி காசிக்ஷேத்திரத்தினும் வெள்ளியமான திருக்கயிலைமலையினும் பரிசுத்தமானதென்று யாவரும்புகழ்ந்து கூறும் சிவபிரான் வேதங்களைத்தேவர்களுக்கோதுவித்தருளியமிக்க அழகுவாய்ந்த சுருதிபுரியில்வசித்துக்குற்றமில்லாத தவஞ்செய்துகொண்டு அச்சிவபிரான் திருவாக்கையும் மனதில் எண்ணிக்கொண்டிருந்தார்கள். எ-று. (கூ)

வேறு.

ஆயவராங்கிருந்துதவம்புரிகின்றாராறுமுகத்தோன்
றாயகுணச்சமபந்தனெனத்தோன்றிச்சொற்பாவாற
காயொருபாற்பூவொருபாறகத்தபனையினிற்காட்டி
மாயவினைசசமணழிக்குமதுநோக்கிமனந்தெளிந்தார்.

(இ-பு) அவ்வாறாக அவ்விருடியர்கள் அத்தலத்திலிருந்து தவஞ்செய்து கொண்டிருக்கும்போது அறுமுகக்கடவுள் தூய்மையான சத்துவகுணம்வாய்ந்ததிருஞானசம்பந்தமூர்த்திகளாகஅவதரித்துத்தேவாரத்திருப்பதிகத்தினால் ஓர்பனைமரத்தில் ஒருபக்கம் காயும் ஒருபக்கம் பூவுமாக இருக்கும்படி மாயையாலாகிய தீவினைக்கோர் கொள்கலமாகியசமணமதத்தை

ழிப்பதைக்கண்டு தங்கள் மனதின் கணிகழ்ந்த சந்தேகந்தீர்ந்து தெளி தார்கள் எ-று. (கo)

ருந்தபனையாணென் றுமிடையிலகருங்காய்குலைகள்
பாருந்தினதாற்பெண்மையென்றும்புந்தியினிறதெளிருனராய்
ிரிந்தபலதாவரத்துமவிளங்கியபெண்ணுணென்றுந
தரிந்தனமென்றேபின்னுஞ்சிந்தையினிற்றேறுவரால.

(இ-பு) திருஞானசம்பந்தமூர்த்திகள் தேவாரத்திருப்பதிகம ஓதுவத நுமுன் அவ்விடத்திருந்தபனை ஆண்பனையென்றும் மததியில்அததேவார தால கருநிறங்கொண்ட காய்களடங்கிய குலைகள் பொருந்தினமையால பனைபனையாய்விட்டதென்றும் தெளிந்தவாகளாய் மறறுள்ள விரிவான லவிததாவரங்களிலும் இவ்வாறே பெண ஆண் உண்டென்றும் தெளிந்து காணடோமெனறு மீணடும் மனதில நினைககினறாகள் எ-று. ஆல் - சை- (கக)

வேறு.

விரிந்தவிலைச்சடையுமுளைததிலங்குமபாளைவெண்பதியும்பூவரவு மவிற்போர்த்த, தெரிந்தமடற்கரிததோலுமுறுநீரகுஞ்செழுரு தககங்கையுமேசிறந்துகாடடப்பொருந்துகனிமுலைகாய்த்தபெண் மையாயபுனிதவுமைபாதியுமாமபொறபான்முனசெய், யருந்தவத் ாற்பனையரனசாரூபமபெற்றதறிந்துமுனிவாருள்ளத்தையந் தீாந ர்.

(இ-ப) விரிந்தவோலைகளே சடையாகவும் அதிலதோன்றி விளங்கு பாளைகளேவெணமையான சந்திரனுகவும் பூத்திருககுமபூசகளே சாபப ாகவும் மேலமுடிகொணடிருககும் யாவருககுநதெரிந்த மடல்களே யா த்தோலாகவும் அதனிடத்து ஊறியிருக்கும் நீரே செழுமையான குளிர் ிதங்கிய கங்கையாகவும் சிறப்புடன்விளங்க அதனிடத்துபொருந்திய னிகளே தங்களையுடைய பெண்ணுருவமைநத தூய்மையான உமாதேவி ார்பாகமாகவும் தோறறும் அழகினுல் முறகாலத்துபபுரிந்த அரியதபோபல தினுல் அப்பனைமரம் சிவசாரூபம பெற்றதைககணடு முனிவர்கள் தங ள்மனதில நிகழ்ந்த சந்தேகந்தீர்ந்தாாகள் எ-று. (கஉ)

மாலயன்முன்னுட்டுருவிக்காணுவெந்தைவடிவமைந்ததெய்வவி ்க்கநதுததனுய,காலவிருக்கததினைக்கண்டிறைஞ்சிச்சூழ்நதுவதைம கார்த்திகைமதியிற சசிவாரததிற், கோலமணிவிளககாவினிழுது பய்துகோதறுகனமாவினிட்டாறகுறைகடாந்தே,யாலமருந்தியவ ன்சாரூபம்பெற்றேயழியாமற்கயிலையில்வாழ்ந்தருள்வரென்றுன்,

(இ-பு) திருமாலும் பிரமனும்முற்காலத்துத்தேடிக்காணாத எமதுதந்தையாராகியசிவபிரானதுதிருவுருவமமைப்பபெற்ற தெய்வீகம் பொருந்திய விருக்ஷமாகிய தூயமையையுடைய அப்பனைமரத்தைத் தரிசித்துதொழுது வலம்வந்து தைமாசம கார்த்திகை மாசத்திற் சோமவாரத்தினன்று அழகுள்ளவிளகொன்று ஆவினெயவிட்டுக குற்றமற்றமாவினாலேற்றின் அவர்களுடைய மனக்குறைகளெல்லாநீர்ந்துஆலகாலத்தை அமுதுசெய்த சிவபிரான்சாருபத்தைப்பெற்றுஅழிவடையாமற் றிருக்கயிலையில் ஏககாலமும் வாழ்ந்திருப்பாரென்று சூதபுராணிகா நைமிசாரணியமுனிவர்களுக்குக்கூறினா. எ-று. (௧௫)

நாலமகிமைச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ... ௧௦௩



௨

சிவமயம.

திருச்சிற்றம்பலம்·

# சமணர்கழுவேறிய சருக்கம்·

ஐயநீசொன்மொழியமுதமாநதியெம்
பொயவினைபபவமெலாமபுறத்திற்போக்கின
மெய்வினைப்பத்தியாமவீடுபெற்றனந
துய்யவொன்றின்னமுஞ்சொல்லவேண்டுமால்.

(இ-பு) இவ்வாறு கூறிய சூதபுராணிகரை நைமிசாரணியவாசிகள் நோக்கி ஐயனேநீர் சொல்லியவார்த்தைகளாகிய அமுதமுண்டு எமது மாயவினைச்சம்பந்தமான பாவங்களையெல்லாம் அப்புறத்தில்தள்ளிவிட்டோம் உண்மைத்தொழிலான பத்தியென்னும் மோட்சத்தையடைந்தோம் ஆயினும் தூய்மையுள்ளசூதமுனிவரே இன்னுமொன்று எங்களுக்குச்சொல்ல எ-று- ஆல்-அசை. (௧)

சொல்லுமுக்காலமுந்தூயவொண்மையி
னெலவியங்கனியெனநெஞ்சுட்காணுநின்

னல்லருளெம்மிசைநாட்டியெமமுளப்
புல்லிருணீங்கிடப்புகலவேண்டுமால்.

(இ-பு.) யாவராலும்சொல்லப்படும் திரிகாலவர்த்தமானங்களையும் உள்ளங்கையில் நெல்லிக்கனியைப்போல மனதிற்கொண்டிருக்கும் உம்முடையநல்லகருணையை எங்கள்மீதிருத்தி எமதுள்ளத்திலிருக்கும் அற்பமாகியமயக்கம்நீங்கும்படி சொல்லவேண்டும். எ-று. ஆல்-அசை. (உ)

சூராதங்குலமெலாந்தொலைத்தவேற்கர
வீரனந்தணர்குலவிடலையாகியிப்
பாரினிலமணர்பாழ்படவோராண்பனை
வேரியங்காய்தரவிளம்புப்பாவென.

(இ-பு) அசுரர்களவமமிசமுழுதும் அழித்தவேலாயுதத்தைத்திருக்கரத்திலேந்திய முருகக்கடவுள் கவுணியகுலமதலையாகி இந்நிலவுலகத்தின்கணுள்ள சமணர்களெல்லாம பாழ்பட்டுப்போக ஓர் ஆண்பனையானதுவாசனைகமழும் அழகிய காய்காய்க்கும்படி தேவாரம் பாடினுரென்று. எ-று.

ஓதியவியப்பெமதுளத்ததுட்டோர்தர
வாதியோடந்தமாயறைதிநீயெனத்
தீதறுமாதவர்செப்பவன்பொடுஞ்
சூதமாமுனிவனுஞ்சொலத்தொடங்கினன்.

(இ-பு.) முன்னம் நீகூறிய அதிசயத்தை எமதுள்ளத்தில் தெளிந்துணருமபடி ஆதியோடந்தமாக நீர்சொல்லியருளலவேண்டுமென்று குற்றமற்ற நைமிசாரணியவாசிகள்கூற அன்பொடு சூதமகாமுனிவரும் சொல்லத்தொடங்கினுர். எ-று. இவ்விரண்டுங்குளகம், (௩)

வேறு.

விளவுமபூதிசாதனங்கள்வீறுதாகிப்புவனியெலா
நினைவுமவினையுமபொய்நிரம்புநிறையிலமணர்குலம்விறி
மனரும்பிறமாந்தருமந்தமதசாத்திரத்துக்குளராகிக்
கனவினிடத்துஞ்சைவநெறிகாணுராகிமறந்தவராய்;

(இ-பு.) யாவராலும் அதிகவிருப்புடன் கேட்டற்குரிய திருவெண்ணீற்றின் சாதனங்கள்விருத்தியடையாது இந்நிலவுலகமுழுதும் நினைவினிடத்தும் தொழில்களிடத்தும் பொய்மையேநிறைந்துள்ளதாகிய நடுவுநிலையில்லாத சமணர்களது குலம் விருத்தியடைந்து மன்னவர்களுமகுடிகளாகிய மற்றசனங்கள்முழுமையும்அச்சமணமத சாத்திரக்கொள்கையுடையவர்களாகிக்கனவிலும் சைவமார்க்கம் என்பதைக்காணுமையால் மறந்தவர் (ரு)

இகத்துக்கினியபொருள்பலவுமிணையிலபரத்துக்குயர்வீடு
மகத்துக்கினியமகிழ்வுமகிழ்ந்தளிக்குங்கடவுளணியுடைக்குஞ்
சிகைக்குமுள்ளத்திலவிருப்பமிலாததேவனொருவனெனச்சிகரிக்
குகைக்குட்டவஞ்செய்பவர்முதலாயெவருமுளத்திற்கொண்டன
ரால்.

(இ-பு.) இகத்துக்குரியபொருள்கள் பலவற்றையும்ஒப்பற்ற பரத்துக்குரிய உயர்வாகிய முத்தியையும் மனத்துக்கிசைந்த மகிழ்ச்சியையும் களிகூர்ந்தருளும கடவுளானவர் அழகிய ஆடைக்கும் குடுமிக்கும் தமமுள்ளத்தில் விருப்புமில்லாத அருககடவுள் ஒருவரே என்று மலைகளிலுள்ளகுகைகளில் தவம்புரியும தவசிகளமுதலாக யாவரும் மனதில உறுதிகொண்டார்கள். எ-று. ஆல்-அசை. இவ்விரண்டுங்குளகம். (சு)

அந்நாளமரர்சிறைமீட்டவடலார்செவ்வேள்புலியுயர்த்தோ
னன்னாட்டினிற்சீகாழியெனுநகரின்மறையோர்குலத்துதித்து
மின்னுமணிப்பூணுமைமுலைப்பால்விரும்பியருந்திதெளிவுற்றுப்
பொன்னார்மதில்சூழ்கூடனகர்புகுந்தாரைந்துபிராயத்தில்,

(இ-பு.) அந்நாளில் தேவர்கள்சிறையைவிடுவித்தருளியவன்மைமிக்க முருககடவுள புலிக்கொடியையுடைய சோழனாலாளப்பட்ட சோழநாட்டிலே சீகாழி என்னும்நகரத்தில் கவுணியர்குலத்தில் அவதரித்து ஒளிவிளங்கும் இரத்தினங்களழுத்திய ஆபரணங்களைத்தரித்தருளும் உமாதேவியாரதுதனஅமுதத்தை விருப்பத்துடன்புசித்துத் தெளிவடைந்து பொன்மயமான மதில்கள்சூழ்ந்த மதுரைமாநகரத்தை ஐந்துவயதில் அடைந்தார்.

ஆங்குற்றிறைவன்றிருக்கோயிலடைத்துத்தமதுபுகழ்புவிமே
லோங்கவிருக்குஞ்சமணெண்ணாயிரவரொருங்கேயுயிர்போக
நீங்கற்கரியகழுக்கண்மேலேற்றிச்சைவநிலைப்பெருக்கிப் [ந்தார்.
பூங்கொத்தசைக்குமெழிற்புறவம்புடைசூழ்மறைசைப்புறத்தடை

(இ-பு.) அம்மதுரைமாநகரத்தையடைந்து அவ்விடத்துச் சுந்தரேசர் திருக்கோயிற் கதவடைத்துத் தமதுகீர்த்தியே பூலோகமெங்கும்விளங்க இருக்கின்ற சமணர்கள எண்ணாயிரவரும் ஒரேகாலத்தில் உயிரிழக்கும்படி நீங்குதற்கரிய கழுவின்வரிசையின்மீதேற்றிச் சைவசமயத்தின்நிலைமையை விருத்திசெய்து பூங்கொத்துகள் எங்கும் அசைந்துகொண்டிருக்கும் அழகமைந்த முல்லைநிலஞ்சூழ்ந்த திருவோத்தூரின்பக்கத்தில் எழுந்தருளினார். எ-று. (எ)

வேறு.

திருவறத்துறைத்தேவனருண்மணிச்சிவிகைமீதிளஞ்செங்கதிர்
போலவே, குருமணிக்கொடைவெண்கதிர்வீசவேகோலவெண்க

வரிப்பணிமாறவே, பரமதத்தரிவந்தன ரென்னவெண்பணிலநித்
திலச்சின்னம்பகரவே, தருநகர்ப்புலவோர்மலர் தூவவேசாறும்
வேதத்தமிழ்முழங்கவே.

(இ-பு) திருவறத்துறையென்னுந்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவ
பிரான் அருளிய முத்தப்பல்லக்கின்மீது இளஞ்சூரியனைப்போன்ற முத்
துக்குடை வெள்ளியகிரணங்களைவீசவும் அழகிய வெண்சாமரைகள் அடி-
யார்வீசிவரவும்பரசமயகோளரி எழுந்தருளினாரென்றவெள்ளியசங்குகளா
லின்ற முத்துச்சின்னங்களூதவும் கற்பகநாட்டுத்தேவர்களாமலாமழைபொ
ழியவும் யாவராலும் துதிக்கத்தக்க தமிழ்வேதங்களை ஓதவும். எ-று, (௯)

ஆழிபோலுயர்சைவக்குழாங்கள்சூழ் ஹரஹரவெனுமின்மொழி
யார்ப்பவே, யூழிநாயகன்பாதமறாதவருள்ளத்துணைமகிழ்வோங்கி
ப்பொலியவே, பாழிலுள்ளபடுத்தசமணர்கள்பார்த்துநெஞ்சம்ப
தைபதைத்தேங்கவே, காழிவந்தகவுணியதீபருங்கந்தனூற்றிக்கரை
க்கண்வந்தாரரோ.

(இ-பு) கடல்போறபெருகிய உயர்வானசைவர்களது திருக்கூட்
டங்கள் நாற்புறமுஞ்சூழ்ந்து அரஹரா என்றுகூறம் இனிமையான திரு
வார்த்தையால் ஆரவாரிக்கவும் ஊழிகாலத்தும் அழியாததலைவராகிய சிவ
பிரான் திருவடித்தியானத்தை மறவாதிருக்கும் அந்தரவாசிகள் தங்கள்
மனதின்கண்மகிழ்ச்சி மேன்மேலும் அதிகரித்துப் பொலிவையடையவும்
பாழ்மதத்தில் தங்கள்மனதைவிழுத்திய சமணர்களெல்லாம்கண்டு தங்கள்
மனம்பதைத்து ஏக்கங்கொள்ளவும் சீகாழியில் அவதரித்த கவுணியகுலதீப
ராகிய திருஞானசம்பந்தசுவாமிகள்பாகுநதிக்கரையினிடத்து எழுந்தருளி
னார். எ-று. அரோ-அசை. (௧௦)

வேறு

சிகரகோபுரமுஞ்செய்யவான்மதிலுஞ்செழுமணிவிமானமுநோக்
கிப், புகாறுதோணிபுரத்தவாமேனிபுளகமுறறகங்கனிந்துருகிப்
பகருநற்றுதிகள்பாடியானந்தபரவசநிருத்தனம்புரிந்து
நிகராறுகோயிலைநோக்கியகண்கணீக்கிலானந்தநீர்பெருக.

(இ-பு.) சிகரங்களையுடைய கோபுரத்தையும் செப்பமாக உயர்ந்த
மதிலையும் செழுமையான இரத்தின விமானத்தையுங்கண்டு களங்கமற்ற
திருவுள்ளமுள்ள சீகாழிவள்ளலாகிய திருஞானசம்பந்தசுவாமிகள் திருமே
னிபுளகம் போர்ப்ப மனங்கனிந்துருகி யாவருமதுதிக்கும் நல்லதேவாரத்
திருப்பதிகம்பாடி ஆனந்தபரவசமாகத் திருக்கூத்தாடி ஒப்பற்றஅத்திருக்
கோயிலைப்பார்த்தகண்களில் ஓயாமல் ஆனந்தபாஷ்பம் பொழியும்படி

ஊட்டிளங்கன் றுய்காண்கிலா துள்ளமுழன்றுபின்கண்டதுபோலக், கூட்டுமன்புளத்திற்குறைவறநிறைந்தகோதிலான்பலமுறை தொழுது, பாட்டளிமுரலுஞ்சோலைசூழ்மறைசைப்பதியினின்மல மவிடிவிரயந, காட்டுமென்றுள்ளக் கருத்தினைத்தென்கரையு றுமடத்தினிலிருந்தார்.

(இ-பு-) ஊட்டிக்கொண்டிருக்குந்தனது இளங்கன்றைக்காணாத தாய்ப்பசுவானதுமனம்வருந்திப்பின்புகண்டதுபோலத்திருவருளாற் கூட்டப்பட்டபேரன்பானது திருவுள்ளத்திற்குறைபாடின்றி நிறைந்திருக்கும் குற்றமற்ற திருஞானசம்பந்தசுவாமிகள் பலதரம்வணங்கிகீதம்பாடும் வண்டுகள்சத்திக்கும் மலர்ச்சோலைகள்சூழ்ந்த திருவோத்தூரிலமலசலாதிகள்விசர்ச்சனஞ்செய்யில் நரகானுபவம் சித்திக்குமென்றெண்ணியகருத்தினால்மேற்கூறியபாகுநதிக்குத தென்கரையோரத்திலிருந்த மடத்திலெழுந்தருளியிருந்தார். எ-று. (கஉ)

ஆங்கிருந்திரவியத்தவெற்புறக்கண்டநதியின்கடன் முறையாற்றிக் கோங்கரும்பனைய விளமுலைப்பாகன்கோயிலுக் கெய்துறுமெல்லை தேங்கமழ்பொழில்சூழ்மறைசையந்தணாகடிகப்பணிபொற்குட மேந்தி, யோங்குமைங்கருவிவாத்தியத்துடன சென்றுளங்கனிந் தெதிர்ந்துபசரிப்ப.

(இ பு) அம்மடத்தில்வசித்திருந்து சூரியன் அஸ்தகிரியையடையும் மாலையில்செய்யும் அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு கோங்கமலரின் அரும்புபோன்ற இளமுலையையுடைய உமாதேவியார்பாகராகிய சிவபிரான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்குச் செல்லுந்தருணத்துவாசனைகமழும் சோலைகள்சூழ்ந்த அத்திருவோத்தூர்மறையவர்கள விளக்கமான இரத்தினங்களழுத்திய பொன்னாலாகியபூரணகும்பங்கள் தமதுகரத்திற்றாங்கிக்கொண்டு மிககொலிக்கும தோற்கருவிதுளைககருவி கஞ்சக்கருவி நரம்புக்கருவி மிடற்றுக்கருவி என்னும் ஐந்துகருவிகளாலாகியவாத்தியங்களோடுசென்று தமதுமனங்களிந்து எதிரிற்போய் உபசாரஞ்செய்ய. எ-று. (கங)

சண்பைநாயகனுந்திருநகரடைந்துதனிமுதலாலயஞ்சூழ்ந்து செம்பொனார்சிகரக்கோயிலுட்புகுந்துதேவருக்காரணமுரைத்த வும்பர்நாதனைக்கண்டுளங்கனிந்துருகியுவகைநீர்விழியினிறைபெருக நம்பனார்செய்யநவையில்பொற்சரணநறுமலாதொழுதுபாவிசைக் கும்.

(இ-பு.) சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தசுவாமிகளும் திருவோத்தூரையடைந்து வேதபுரீசர் திருக்கோயிலை வலம்வந்து சிவந்தபொன்னாலாகிய சிகரங்களையுடைய திருக்கோயிலுட்பிரவேசித்துவிண்ணவர்களுக்குவேதமோதுவித்தருளிய வேதபுரீசரைத்தரிசித்து மனங்கனிந்து

ருகி ஆனந்தநீர்கண்ணினிடத்துப் பெருகும்படி அவ்வேதபுரீசரது குற்ற மற்ற சிவந்த அழகிய திருவடிகளாகிய வாசனையுள்ள தாமரைமலர்களைவ ணங்கித் தேவாரம் திருவாய்மலர்ந்தருளுவார் - எ-று. (கச)

வேறு.

பூத்தேரிடையீருள்வேர்போவெனு முப்பனுவல்புகன்றுதொழு
தேத்தாநிற்கும்புகலியர்கோனெழின் மாமணிமெலவிளமுலையென்
றுத்தாடனையும்பணிந்துருகியன்பாற்றுதிதேயருளபடிந்து
கூத்தாடியதாளுளத்திருத்திமீண்டாாசைவக்குழாஞ்சூழ.

(இ-பு-) (பூத்தேர்) (இடையீர்) (உள்வேர்போ) என்னும் முதற்குறிப் புடைய மூன்று திருப்பாடல்களைப்பாடி வணங்கித்துதித்துநிற்கும் திருஞா னசம்பந்தசுவாமிகள் அழகியமகத்தான மணிமாலைகளணிந்த மிருதுவாயு ள்ள இளமுலையையுடைய எனதுதாயாரையும்வணங்கி மனமுருகிப்பேர ன்பாற்றுதிசெய்து திருவருளடைந்து ஆனந்தநிருத்தம்புரியும் சிவபிரான் திருவடிகளை இதயத்திருத்திச்சைவர்களாகிய அடியார்கூட்டம்புடைசூழத் திரும்பினார். எ-று. (சரு)

மீண்டுமடத்தினினிதிருக்கும்வேலைந்தலத்தோர் மிகக்குழுமி
யீண்டிக்காழிப்பெருமானையிறைஞ்சியெங்களிடர்தீர்க்க
வேண்டுஞ்சமணாதீமையினுன் மெலிநந்தோமறைசைவிமலனருள்
பூண்டஞானமணிவிளக்கேயென்றுபின்னும்புகலுவரால.

(இ - பு.) அவ்வாறு திரும்பித்தமது திருமடத்தில் இனிமையுடன் எழுந்தருளியிருக்குந்தருணத்து அத்தலத்தவர்களெல்லாம் ஒருங்குசேர்ந்து சென்று திருஞானசம்பந்தசுவாமிகளைவணங்கி எங்கள்துயரத்தைத் தீர்த் தருளவேண்டும் சமணர்கள்செய்யும் கொடுமையினால்வருந்தினோம் திரு வோத்தூரில் வீற்றிருந்தருளும் வேதபுரீசரது திருவருளபெற்றுள்ளஞா னம்விளங்கும இரத்தினதீபமே என்று பின்னுங்கூறுகின்றார்கள்.

இறையுஞ்சமணர்சார்பாகியெவருமவராயிருக்கிலரு
ணிறையுஞ்சைவமெவ்வண்ணநிலைகொண்டிருக்குநீணிலத்தே [த்
கறைகொண்டொளிருமணிமிடற்றான்கருணையுடையாய்கழறுமநத
துறைகொண்டவருமிந்நதித்தென்றுறைகொண்டவரேயாயினரே.

(இ-பு.) அரசனும்சமணர்க்குச்சார்பாகி யாவரும் அச்சமணர்களாக வேயிருந்தால் கருணைநிறைந்த சைவசமயம் எவ்வாறுநிலவுலகத்து நிலைத்தி ருக்கும் விடமணிந்து விளங்கும் நீலகண்டராகிய சிவபிரானது திருவருள் பெற்றுள்ளவரே நாங்கள்சொல்லும் அச்சமணர்களும் இந்தப்பாகுநதியின் தென்கரையோரத்தில்நகரம் மடமுதலியகொண்டு குடியாயிருக்கின்றார் கள். எ-று. ஏ-இரண்டும்-அசை. (சஎ)

எண்ணாயிரவர் சமணரெல்லாமிறைஞ்சுங்குருவாயிருக்கின்றார், கண்
ணாற்சைவாதமைநோக்காராகாண்கிறபவஞ்சூழ்ந்திடுமென்பார், பண்
ணார்மொழிகேட்டிடிறபாவம்படருமெனச்சொன்மொழிகேளார்
விண்ணார்மணிப்பொன்னாலயமுமவிளைநதேயிருக்கின்றன ரிவனே

(இ - பு.) சமணர்களெல்லாம்வணங்கும் குருவாயிருக்கின்றவர்கள் எண்ணாயிரம்பேர் அவர்கள் சைவர்களை தங்கள்கண்களாற்பார்க்கமாட்டார்கள் பார்த்தாற்பாவமவரும என்றுசொல்லுவார்கள் இசையமைந்த அச்சைவர்கள் வார்த்தையைக்கேட்டாலும் பாவமவரும் என்று அவர்கள் வார்த்தையையும் கேட்கமாட்டார்கள் ஆகாயத்தையளாவும் இரத்தினங்களழுத்திப் பொன்னாலாகிய கோயிலும் இவ்விடத்துக் கட்டியிருக்கின்றார்கள். எ-று. (கக)

வேறு.

என்றவர்கடமைபலவாயதுமிசைப்பப்
பொன்றிகழெயிற்சிரபுரத்தவருணர்ந்தே
நன்றுமறைபோதியநாதனருளாலே
யின்றுமுதலன்னவரிடர்ப்படுவரென்றார்.

(இ-பு) இவ்வாறு அச்சமணர்களது கொடுமைகள்பலவற்றையுங்கூறப்பொன்போற்பிரகாசிக்கும்மதில்களையுடையசீகாழிவள்ளலாகிய திருஞானசம்பந்தசுவாமிகள் தெரிந்துகொண்டு நல்லது வேதமோதுவித்தாமது சிவபிரான் திருவருளினாலேஇன்றுமுதலாக அச்சமணர்கள் துன்பமடைவார்கள் என்று திருவாய்மலர்ந்தருளினார் எ-று (கக)

சொன்னவுடனெஞ்சினுறுதுன்பமதகன்றோ
மென்னவவரெய்தவிடையின்புடனளித்தே
மின்னுமெயிலவேணுபுரவித்தகனுமாங்கு
பொன்னணையின்விழிமென்மலர்பொருநதினரிருந்தார்.

(இ-பு) தேவரீர்திருவாய்மலர்ந்தவுடன்எங்கள்மனதின்கணிருந்த துன்பம்நீங்கப்பெற்றோமென்று அந்நகரவாசிகள் கூறக்கேட்டு அவர்களுக்கு நகரஞ்சேருமபடி விடைகொடுத்தனுப்பிப்பிரகாசிக்கும் மதில்களையுடைய சீகாழிவள்ளலாகிய திருஞானசம்பந்தசுவாமிகள் அத்திருமடத்தில்அழகிய ஒரு அணையின்மீது நித்திரைகொண்டிருந்தனர் எ-று (உ0)

வேறு

அன்னவர்செயலிவையறைந்தனம்மினிய
பன்னுறும்புனதகைப்பதியின்வைகிய
மன்னுதிச்சமணர்செய்மாயவஞ்சனை
யின்னதென்றேயெடுத்தியம்புவாமரோ.

(இ-பு) அந்ததிருஞானசம்பந்தசுவாமிகள்செய்கையைக்கூறினோம் இனியாவருமகூறுமபடியானபுனதகை என்னும்மீனில்வசிக்குமநிலைபெற்ற கொடியாகளாகிய சமணர்கள்செய்யும் மாயமாகிய வஞ்சனைகளையின்ன தென்று எடுத்துக்கூறுவோம். எ-று. அரோ-அசை. (உக)

வருதிடுங்கவுணியர்வண்மைநோக்கினார்
தந்தமிலுளதநிடைததளர்வுதாங்கினார்
நொந்தெனயாவருங்குலைந்துகூடியே
சிந்தையினமேற்செயுஞ்செய்கையுன்னினார்.

(இ-பு) அங்கு எழுந்தருளிய திருஞானசம்பந்தசுவாமிகளது வளப் பத்தைகக்ணடுதஙகளதஙகள் இதயததில்தளாவு கொணடுநொந்ததுபோல எலலாரும் ஈட்சேகுலைநது ஒன்றாககூடி இனிமேலசெய்யவேண்டியகாரி யஙகளைமனதிலநினைததாாகள. எ-று. (உஉ)

ஆலவாய்தனனிலெண்ணாயிரத்தவர்
மூலமோடழிதரமுடித்திட்டான்றனைப்
பாலனென்றவனையாம்பாாக்கினைங்குல
காலனையாகுவானிவனுங்காண்மினே.

(இ-பு) திருவாலவாயினில் எண்ணாயிரம்பேரையும வேருடன்அழி யும்படி கொன்றவனைச் சிறுபிள்ளையென்றுபார்ப்போமாகில் இவ்விடத்தும் நமதுகுலத்துக்கு இயமனாவான் காணுங்கள். எ-று. ஏ-இரணடும்-அசை

ஆதலான்முன்னிவனுயிபோக்கிடிற
றீதிலைநமக்கெனச்சிந்திததேயவண்
போதனரியாருமோர்புறத்தினவைகியே
யேதமார்வேளவியொன்றியற்றினாரரோ.

(இ - பு) ஆகையால்முன்பாக இவனது உயிரைப்போக்கிவிட்டால் நமக்கொருதீங்கும் இல்லை என்றுநினைத்து அவ்விடத்தில் எல்லாரும் ஓரிட மடைகசசோர்நதுவசிதது குற்றம்பொருந்திய ஓர் யாகம் செய்தாாகள். எ-று அரோ-அசை. (உச)

வளர்தநியகனலிடைமண்ணைத்தாங்கிய
துளைப்பயிலெயிற்றரவினிலுந்தூலமா
யளப்பருநீளமாயாருமஞ்சுறக்
கிளைபபலமுடியொடுகேதமீக்கொள.

(இ-பு) அவ்வாறு அவர்கள்செய்த அந்தயாகாக்கினியினிடத்து இந் நிலவுலகைத்தாங்கியிருக்கும் துளைகளையுடையபற்களமைந்தஆதிசேடனைப் பார்க்கிலும பருமனுள்ளதாய் அளவிடற்கரியநீளத்துடன் கண்டவர்கள்யா வரும்அஞ்சும்படி கிளைத்தெழுந்த பலதலைகளோடும் கோபம் அதிகரிக்க

விண்ணவரியாவருமவெருக்கொண்டோடிடக
கண்ணினுமுயிர்படினுங்களலுகுத்திட
வெண்ணினுமுளங்கெய்தவெய்துமான்
மண்ணொடுவானமுமவளாக்தவெம்பணி.

(இ-பு) தேவாகளெலலாம்பயமடைநது ஓடவும் கணகளினும் மூச்சினும் நெருப்புப்பொறிசிந்தவும் நினைக்கினும் மனம்நடுங்குமபடி பூமிதொட்டு ஆகாயமளவும வளர்ந்திருக்கும அக்கொடியசாப்பம்வந்தது. எ-று. ஆல்-அசை. (உக)

விரைவினிற்றோன்றியவெய்யவாய்விடத்
தரவினையுமையமுதருந்துமைந்தன்மேல்
வரவிடுத்திடுதலுமவயிரநெஞ்சொடு
மிரவினிற்பாதியாமெல்லையெய்துமால்.

(இ-பு) அதிசீக்கிரத்தில் உற்பவித்த அந்தக்கொடிய வாயையுடைய விடந்தங்கிய சர்ப்பத்தை உமாதேவியார் திருமுலைப்பாலுண்டருளிய திருஞானசம்பந்தசுவாமிகள்மீது எதிர்த்துச்செல்லும்படிவிட்டவுடன் அச்சர்ப்பமானது கடினமானமனதுடன் பாதிராத்திரியில் வந்தது. எ-று. ஆல்-அசை. (உஎ)

எதிருறுசராசரமெரிந்துதீய்ந்திட
வதிருறச்சீறியேயமணவேவலான
மதியுறுபுனிதனவாழ்மடத்தைச்சார்ந்தது
கதிருறுமணிமுடிக்கனறகட்பாந்தளே.

(இ-பு) தனக்கு எதிர்ப்பட்ட சராசரங்களெல்லாம் அக்கினிச்சுவாலையால் எரிந்துதீயந்துபோகவும் பூமியதிரும்படிசீறிக்கொண்டு சமணர்கள் கட்டளையினால் மெய்யறிவுடைய திருஞானசம்பந்தசுவாமிகள் எழுந்தருளியிருக்கும் திருமடத்தில்வந்தது ஒளிபொருந்திய இரத்தினமமைந்த சிரசுள்ள நெருப்புககணணையுடைய அந்தசாப்பம் எ-று. ஏ-அசை. (உஅ)

வருமபணிவேகமும்வழங்குந்தீமையும்
பெருமபகையுறவரும்பெட்புநோக்கியே
யருமபுறுகொன்றையானடியரிற்சிலா
பெரும்புகழ்க்கவுணியாக்குணரப்பேசினர்.

(இ-பு) அவ்வாறவருகின்ற சர்ப்பத்தின் வேகத்தையும் அதுசெய்யுங்கொடுமையையும பெரியபகையுடன்வருகின்ற நோக்கத்தையுங்கண்டு முகைகளுள்ள கொன்றைமலர்மாலையையணிந்த சிவபிரான் திருவடியாாகளிற்சிலர் அதிகீர்த்தியையுடைய திருஞானசம்பந்தசுவாமிகள் தெரிந்துகொள்ளும்படி கூறினர்கள் எ-று. (உகூ)

சொன்னவர்நடுக்கமுந்தோன்றுநதீவிழிப்
பன்னகத்தீமையும்பகையில்சாக்கிய
ருன்னியசூட்சியுமுள்ளந்துளளினன்
கன்னியோரபாசனைக்கருத்துளெண்ணினன்.

(இ-பு) அவ்வாறுகூறியவர்களது மனநடுக்கத்தையும் வருகின்ற நெருப்புககண்ணையுடைய சர்ப்பத்தின்கொடுமையையும பகையினல்சமணர்கள் நினைத்த தந்திரத்தையும் திருஞானசம்பந்த சுவாமிகள் தமதுதிருவுள்ளத்தில் ஆலோசித்து உமாதேவியை ஓர்பாகத்தில் உடைய சிவபிரானைமனதில் நினைத்தார. எ-று. (ஙo)

நெஞ்சினுளீசனைநினைநதுவந்தவாக்
கஞ்சறநதேவருமரவைவேநதனவா
யிஞ்சிசூழ்திருமனைக்கேகென்றேதலு
நஞ்சுமிழ்பாநதளுநடநததவ்வுழி.

(இ-பு·) இவ்வாறு சிவபிரானை மனதிற்றியானித்து அச்சங்கொண்டதிருவடியார்கட்கெல்லாம பயப்படாதாகவென்று திருவாய்மலாந்தருளி எதிரில்வருகின்ற சாப்பத்தை அரசன்வாழும மதில்சூழ்ந்த அரண்மனைக்குச்செல்லென்று கட்டளையிட்டவுடன் விடதனைதககககும் சர்ப்பம அவ்வாறேசென்று. எ-று. (ஙக)

வேறு.

வேந்தனாதிருக்கோயிலுளெய்தியவிடவாய்ப்
பாநதளயகுறும்பரியினைப்பதாதியைவிழுஙகிக்
காந்துகண்ணெடுமேகுழிக்கண்டவரோடிச்
சோந்துமன்னனேடரவுறுஞ்செயலினைச்செப்ப.

(இ-பு) அரசனதுஅரண்மனைக்குட்சென்றவிடந்தங்கிய வாயையுடைய அச்சர்ப்பம் அங்கிருந்த குதிரைகளையும் சேனைகளையும் விழுங்கிச்சிவந்த கண்ணுடன்செல்லும்போது கணடவர்கள் ஓடிப்பொய் ஒன்றுகச்சோந்து அவ்வரசனுடன் சர்ப்பம்வந்து செய்யும்செய்கையைச்சொலல. (ஙஉ)

கேட்டுமன்னவனுளததிடைவிம்மிதங்கிடைப்ப
நீட்டுகைப்படைவீரரைக்கூவியேநீர்போ
யோட்டுமெப்புறததரவினையென்னவொலலையிற்பல்
கூட்டமெய்தடற்கொடும்படைக்கலமபலவெறிந்தார்.

(இ-பு.) இவ்வாறுகூறக்கேட்டு அவ்வரசன் தன்மனதில் அதிசயம் விளையநீண்ட ஆயுதங்களைக்கையிலுடைய வீரர்களைக்கூப்பிட்டு நீங்கள்சென்று அச்சர்ப்பத்தை அப்புறத்தே ஓட்டிவிடுங்களென்று உததரவுசெய்ய

அவர்கள் அதிசீக்கிரத்தில் பலகூட்டங்களாகநெருங்கி வன்மையுள்ளகொடிய ஆயுதங்களையெல்லாம வீசினார்கள். எ-று. இவ்விரண்டுங்குளகம்.

எறிபடைக்கலமுழுவதுமிறுவதேயன்றிப்
பொறியகிக்கொருதீங்குமேபொருந்தியதில்லை
கறுவியுறறவர்தங்களிறசிலர்களைக்கவ்வ
முறியலுற்றவரோடியேவேந்தற்குமொழிந்தார்.

(இ-பு) அவ்வாறு வீசப்பட்ட ஆயுதவகைகளெல்லாம் ஒடிந்துபோயதேயல்லாமல் படப்பொறிகளையுடைய அச்சாப்பத்துக்கு யாதொருகெடுதியும் நேரிடவில்லை மேலும் அச்சர்ப்பம் கோபித்தெழுந்து அவ்வீரர்களிற்சிலரைக்கடிக்க அதுகண்டு பிரிந்து மற்றவாகள் ஓடிப்போய் அரசனுக்குச்சொன்னார்கள் எ-று (௧௪)

படையழிந்ததுபணியழிந்திலதெனப்பகர
வடனமிகுந்திடுமரசனுமவலநெஞ்சினனாய்
விடமுமிழ்ந்திடுமரவினைவிலக்குதற்கிசைந்த
வுடையமந்திரமேதெனவுளத்தினிலோர்ந்து

(இ-பு) இவ்வாறு ஆயுதங்களெல்லாம் அழிந்துவிட்டன சர்ப்பம் சாகவில்லை என்று சொல்லக்கேட்ட வன்மைமிகுந்தஅவ்வரசனும் வியாகூலமனமுடையவனாய் விடத்தைக்கக்கும் சாப்பத்தை விலக்குவதற்குப் பொருத்தமாய் நமது மதத்தில் உள்ள மந்திரம் என்னவென்று தனிதயத்தில் ஆராய்ந்து எ-று, (௧௫)

விஞ்சையிற்பெருஞ்சமணரைவிரைவினிலழைத்தா
னஞ்சினிற்பெருமபணியினைநலிபபரென்றுணர்ந்து
சஞ்சலத்தினைதவிர்த்திறைசாரணர்தமைக்கூய்
நெஞ்சினிற்கடுமவேகத்தினீர்நடந்தெய்தி.

(அ-பு) மந்திரஙகளில் பெருத்தசமணாகளை அதிசீக்கிரத்தில் வரவழைத்தால்விடத்தைமிகுதியாகவுடையஇச்சா பபத்தைக்கொல்லுவார்களென்றுதெளிந்துதன்மனதிலிருந்த துயரத்தைநீக்கிக்கொண்டுஅவ்வரசன் தூதுவர்களை அழைப்பித்து நீங்கள்மனதைப்பார்க்கிலும் அதிக வேகமாய் நடந்துபோய் எ-று. (௧௬)

மகிமையாலுயாசமணரையழைத்துநீர்வருகென்
றிகலினுலுயரிறைசொலத்தூதருமெய்தி
நிகரிலாவெழிறபுனதகைநெடுநகாமேவிப்
பகருமன்னவர்க்கோதினரவர்களுமபடர்ந்தார்.

(இ-பு) மகிமையால் உயர்வடைந்த சமணர்களை நீங்கள் அழைதது வாருங்களென்று வன்மையின் மிகுந்த அவ்வரசன் உத்தரவுசெய்ய அந்

தத்தூதுவர்களும் அவ்வாறே சென்று ஒப்பற்ற அழகுவாய்ந்த புனதகை என்னும் பெரிய நகரத்தையடைந்து மேற்கூறிய அச்சமணர்களுக்கு அர சன்கட்டளையைச்சொன்னார்கள் அவர்களும் உடனேவந்தார்கள் எ-று இம்மூன்றுங்குளகம். (௩எ)

கையிற்பீலியுங்கமண்டலந்தங்குமோர்கரமு
மெய்யினிற்கடுக்காயினீராடையுமவிளங்கப்
பொய்யினசாத்திரபுத்தகப்பொறைகளுமேந்தி
வெய்யபாம்பினைவிலக்குறவேந்தனமாடடைந்தார்.

(இ-பு-) ஒருகையிற் பீலியும ஒருகையிற்கமண்டலமுமாகத்தமது சரீரத்தில் கடுக்காய் ஊறவைத்த நீரிறமேற்றிய துவராடையும் விளங் கும்படி பொய்மையானசாத்திரங்களென்னும் புத்தகச் சுமைகளையும சுமந்துகொண்டு கொடிதாகிய அச்சாபத்தைவிலக்கிவிடும்படி அரசனிட த்துக்குவந்தார்கள. எ-று. (௩அ)

அன்னவெல்லையிலமணர்தமவிருசையுமழகார்
பொன்னிசூழ்வளப்புகலியாரமகிமையும்புகழார்
மன்னன்முனநெறிதருமதுவங்குநாங்காண்ப
மென்னவந்தவன்போறகதிர்கீழ்த்திசையெழுந்தான்.

(இ-பு) அத்தருணத்தில் சமணர்களுடைய மந்திரபலமும் அழகமை ந்த காவிரிசூழ்ந்த வளமைமிகுந்த சீகாழிவள்ளலாகிய திருஞானசம்பந்த சுவாமிகளது மகிமையும் கீர்த்திவாய்ந்த அரசனுக்கு முன்விளங்கப்போ கின்றது அதனைநாம் மனக்கிளர்ச்சியுடன் காணபோமென்று வந்தவனைப் போலச் சூரியன் கிழ்த்திசையில் உதயமாயினன். எ-று. (௩௯)

ஆயவெல்லையிலமணரையரசனுந்தொழுது
தாயுமெம்முன்னோர்தவங்களுநீவிரேதரணி
மேயகாவலுமுமமதேமிளிர்கடுப்பகுவாய்த்
தீயபாம்புசெய்தீவினைதீர்மினென்றிசைத்தான்.

(இ-பு) அவ்வாறானதருணத்தில் அச்சமணர்களை அரசனும்வணங்கி எனக்குத்தாயும் என்முன்னோர்செய்த தவங்களும் நீங்களே இந்த உலக அ ரசாட்சியும் உங்களுடையதே விளங்கும்விடத்தையுடைய பிளவுபட்டவா யோடுகூடிய கொடியசாப்பமசெய்கின்ற பொல்லாங்கைத்தீர்த்துவிடுங்க ளென்றுகூறினன். எ-று. (௪0)

வேறு.

வேந்தன்வணங்கியிவையுரைப்பவிரகாரமணர்மிகமகிழ்ந்து
பாந்தளழிந்ததினியுனதுபயந்தீரரசேயெனவுரைத்த

வேந்தனுடனேயரவின்முனமெய்தியிதுநாம்விடுத்ததெனத்
தேர்ந்துமயிற்பீலியிற்றோய்த்துத்தெறித்தாரகைக்குண்டிகைநீரை.

(இ-பு.) அரசன்வணங்கி இவ்வாறுகூற உபாயமுள்ள அச்சமணர்கள் மிகவும் மனமகிழ்ந்து சாப்பம இறந்தது இனி உனதுபயத்தை நீக்கிவிடுஅரசனே என்றுகூறி அந்தஅரசனுடன் சர்ப்பத்துக்குமுன்னேபோய் இதுநாமவிட்டதுதானென்று தெரிந்துகொண்டு மயிற்பீலிகுஞ்சத்தைத் தங்கள்கையில் ஏந்தியிருக்கும கமணடலநீரிறதோய்த்துத் தெளித்தார்கள் எ-று. (௬௧)

நீரையிறைப்பநெடும்பாந்தணெருங்கிநெருங்கிநேர்ந்தவரை
வாரிவிழுங்கக்குண்டிகைநீர்வறளசசமணர்மனமழிந்தா
ரூருமரவச்செயனோகியுள்ளமபயாந்தேயுயிர்காபபப்
பாரினரசனோடினன்முன்சமணக்குழுவுபயந்தோட.

(இ-பு) இவ்வாறு குண்டிகைநீர் இறைததவுடன் நீண்டபாம்பு நெருங்கி நெருங்கி அவரைககிட்டி வாரிவிழுஙகிவிடவும் கமணடலநீ வறண்டுபோகவும் அச்சமணாகளகண்டு மனமவருந்தினவர்களாய்த தங்கள் பிராணனைக்காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு முன்னே அசசமணக்கூட்டம் பயமடைந்தோட உலகத்தையாளும் அரசனும ஓடினன் எ-று, இவ்விரண்டுங் குளகம். (௬௨)

அரசன்றனதுதிருமனைவிட்டயலோர்மனையினிடையெய்தி
விரைசெய்குழலாருடனிருந்துவினைவேறிலனுயமனந்தளாந்தே
யுரைசெய்யமைச்சருடனிதனுக்குஞற்றுங்கருமமேதென்ன
நிரைசெய்யவரிலொருவனிதுநினைந்தேமேவந்துக்குரைததனனால்.

(இ-பு) அவ்வரசன் தனது அரணமனையைவிட்டு மற்றொரு வீட்டிற் சென்று வாசனைகமழும் கூந்தலையுடையமனைவியாகளுடனிருந்து வேறொருசெய்கையுமில்லாதவனாய் மனம வருந்தித்தந்திரததை யுரைக்கும் மந்திரிமாாகளுடன்இச்சரப்பம்ஒழியவேண்டியதற்குச்செய்யும்செயல் என்னவென்று கேட்கவரிசையாயுள்ள அவாகளில் ஒருவன்இவ்வாறு எண்ணி அவ்வரசனுக்குக்கூறினன் எ-று. ஏ-ஆல்-அசை. (௬௩)

நென்னற்பெரியோனொருபாலனிமலரடியார்பலர்சூழக்
கன்னற்சிலைவேளெனத்தரளக்கவிகைநீழற்சிவிகையின்மேற்
பன்னறகரியமகிமையொடும்பண்ணோரேத்தநண்ணினனன்
மன்னர்க்கரசேயவனுகின்மாற்றுமரவின்வலியென்றான்.

(இ-பு) நேற்றுமகாத்துமாவாகிய ஓர்சிறுவர் சிவபிரான்அடியார்கள் பலரும் புடைசூழும்படி கரும்புவில்லையுடைய மன்மதனைப்போல முத்துக்குடை நிழலோடுகூடிய முத்துப்பல்லககின்மீது சொல்லற்கரிய மகிமை

யுடன் தேவர்களெல்லாம் துதிக்கவந்தார் அரசர்க்கிறைவனே அவர்வேண் டுமானால் இந்தச்சர்ப்பத்தின் வலியை ஒடுக்கிவிடுவாரென்று கூறினன் ஆல்-அசை (சச)

அதுமந்திரத்தோனுரைத்திடலுமவ்வேலையிலததலத்தடியார்
கதுமென்றெழுந்தேயவர்தீப்பர்கடவுளருளாலெனவுரைப்ப
மதுவுண்டளிதெள்ளிசைபாடுமாலையரசனமுன்வழங்குஞ்
சதுரன்றனையேநோக்கிமுனஞ்சாற்றுமவரைத்தருதியென்றான்.

(இ-பு) அந்தவார்த்தையைஅவ்வமைச்சன்கூறஅத்தருணத்தில்அந்த லத்தில்வசிக்கும்அடியார்களாய்அரசனிடத்துஉத்தியோகஞ்செய்யும் மற்ற வர்களெல்லாம் சரேலென்றெழுந்து ஆம் ஆம அவாசிவபிரான் திருவருளி னால்தீர்ப்பாரென்றுகூறத் தேனையுணடு தெளிவாகிய கீதங்களைப்பாடும் மல ாமாலையை யணிநத அவ்வரசன் முதலிற்கூறிய அமைச்சனைப் பார்தது நீமுன்சொன்ன அவரைவரவழைப்பாய் என்று உத்தரவுசெய்தான் எ-று

வேநதன்பணிகொண்டவனெய்திவேணுபுரத்தாரடிபணிநதே
யேந்தலுமதுதாடொழுதம்கெண்ணியெனைநும்பால்விடுத்தான்
சாந்தகுணநீரெழுந்தருளவேண்டுமென்னச்சாற்றிடலுங்
காந்துமணிப்பொற்சிவிகையின்மேலெழுநதேசென்றான் கவுணியர் கோன்.

(இ-பு) அரசன் கட்டளையைச்சிரமேற்கொண்ட அவ்வமைச்சன் சென்று திருஞானசம்பந்தசுவாமிகள் திருவடிகளில் வணங்கி எமது அர சன் தேவரீரை வணங்க நினைதது அடியேனை உம்மிடத்து அனுப்பினார் சத்துவகுணததையுடையவரே தேவரீர எழுந்தருளவேண்டுமென்று விண் ணப்பஞ்செய்துகொணடவுடன்பிரகாசிக்கும்முததுககளாலாகிய அழகிய த ணடிகையின்மீது எழுந்தருளினார் கவுணியகுலதீபராகிய திருஞானசம்பந் தசுவாமிகள். எ று. (சரு)

தண்ணார்தரளக்கவிகைநிழறழைப்பச்சவரமருங்கிசைப்ப
வெண்ணாயிரத்தினிரட்டியர்களீசனடியார்புடைசூழப்
பண்ணார்திருத்தேவாரங்களபாடிப்பலர்கணடிததுவர
விண்ணோர்புகழப்புகலியர்கோன்வேநதனிடததேவநதுற்றார்.

(இ-பு.) குளிர்ச்சிபொருந்திய முத்துக்குடை நிழல்செய்யவும் வெண் சாய்மரங்கள் இருபக்கத்திலும் வீசிவரவும பதினாறாயிரம் சிவனடியார்கள் புடைசூழ்ந்துவரவும் பண்களமைந்த தேவாரத்திருப்பதிகங்களைப் பாடிக் கொண்டு பலபேர்ஆனந்தநிருத்தம்புரிந்துவரவும் தேவர்கள்துதிககவும் திரு ஞானசம்பந்தசுவாமிகள் அவ்வரசனிடத்தில்வந்து சேர்ந்தார். எ-று.

புகழார்வேந்தனெதிரெய்திப்புகலிக்கிறைவர்தாள்வணங்கி [ப்
பிகலாமனையிற்கொண்டேன்வந்தெழின்மாமணியாதனத்திருத்தி
பகையாரெரிகண்ணரவின்வினைபலவுமுரைப்பப்பகையாரூர் [ல்.
நகையாலெரித்தோனன்பனும்புன்னகைசெய்திதனைநவின்றனனா

(இ-ள்) சீர்த்திவாய்ந்த அவ்வரசனெதிர்கொண்டுசென்று திருஞானசம்பந்தசுவாமிகள்திருவடிகளில்வணங்கிவலியகட்டடமமைந்த தனதுவீட்டிற்குஅழைத்துக்கொண்டுவந்து அழகியபெரிய இரத்தினங்களழுத்தியுள்ள ஓராதனத்தில் எழுந்தருளச்செய்து பகையாக இருக்கும் நெருப்புக்கண்ணையுடைய சர்ப்பத்தின்செய்கைகள் பலவற்றையுங்கூறப்பகைவர்களாகிய அசுரர்களது முப்புரங்களையும் சிரிப்பினால் எரித்தருளிய சிவபிரான் அன்பராகிய திருஞானசம்பந்தசுவாமிகள் புன்முறுவல்பூத்து இவ்வாறு திருவாய்மலர்ந்தருளினார் எ-று. ஆல்-அசை. (௪௮)

பொறியாரரவப்பணிபூண்டபுனிதன்றிருவெண்ணீறணியிற்
செறியாநின்றதீயவெல்லாந்தீருமென்றுதிருநீற்றை
மறியார்கரத்தோன்றனைநினைந்துமன்னன்றனக்குவழங்கியுநன்
னெறியார்தமக்குந்தரவவருநேயமுடன்கொண்டணிந்தனரால்.

(இ-ள்.) படப்பொறிகளையுடைய சர்ப்பத்தை ஆபரணமாகவணிந்த சிவபிரான் திருவெண்ணீறு தரித்துக்கொண்டால் நெருங்கிவருந்தீமைகளெல்லாம் நீங்கிவிடும் என்று திருவெண்ணீற்றைமானேந்திய திருக்கரத்தையுடைய அச்சிவபிரானைத்தியானித்து அரசனுக்குங்கொடுத்து மற்றுள்ள சிவனடியார்களுக்குங்கொடுக்க அவர்கள்யாவரும் பேரன்புடன்பெற்று அணிந்துகொண்டார்கள். எ-று (௪௯)

மீட்டும்புகலிநகராளிவேந்தற்குரைக்குஞ்செவ்வரவங்
காட்டுந்தீமையதைப்பூணுங்கடவுளர்க்குமல்லாது
கூட்டும்பொய்யாயமைந்ததெய்வக்குழாங்கடீர்க்கவறியாது
பூட்டுஞ்சிலையாயமணரிதுபோக்குவாரேற்புரிகென்றான்.

(இ-ள்) மீண்டும் திருஞானசம்பந்தசுவாமிகள் அவ்வரசனுக்குத் திருவாய்மலர்ந்தருளுகின்றார்கொடியசர்ப்பஞ்செய்யும் தீமைகளை அச்சர்ப்பாபரணராகியசிவபிரான் தீர்ப்பாரேயல்லாமல்பொய்யாகக்கற்பித்துக்கூறுந்தெய்வக்கூட்டங்களெல்லாம் தீர்க்கமாட்டாது அம்புபூட்டியவில்லையுடைய ஓ அரசனே சமணர்கள் இதனை ஒழிப்பார்களோ அப்படி ஒழிப்பதானாற் செய்யச்சொல் என்று திருவாய்மலர்ந்தருளினார் எ-று (௫0)

அவ்வாறரசனமணரைநீரரவையழித்தீராமாகி
லெவ்வாறுங்கள்கடவுடனக்குலகிற்றெய்வமுளதெல்லாம் [ன
வெவ்வாய்ப்பணிபோக்குதற்கும்பால்விரகொன்றிலையேல்வீணென
வவ்வாய்மொழிகேட்டொல்லையெழுந்தடர்ந்தார்நாகமழிப்பதற்கே

(இ-பு) அவ்வாறே அவ்வரசன் சமணர்களைநோக்கி நீங்கள்சர்ப்பத்தை அழித்துவிட்டீர்களானால் உலகிலுள்ள தெய்வங்களெல்லாம் உங்கள் கடவுளுக்கு நிகராகாது கொடியவாயையுடைய அச்சர்ப்பத்தைவிலக்குதற்கு உமக்கிடத்து உபாயமில்லாவிட்டால உமதுடையகடவுளை நம்புதல்வீணென்றுகூற அந்தப்படிகூறிய அவ்வரசன்வார்த்தையைக்கேட்டு அதிக விரைவில் புறப்பட்டு ஒருங்குசேர்ந்தார்கள் அந்தச்சாப்பத்தை அழிக்கும பொருட்டு எ-று. ஏ-அசை. (ருச)

எண்ணாயிரத்தோரொருங்கெய்தியேந்துங்கடத்துநீரையெல்
லாங்,கண்ணார்பீலிக்கறறையினிலிறைப்பவெழுந்துகனற்பொறிக்க
டிண்ணாரவமிகச்சீறச்சேர்ந்தசமணர்மனநடுங்கிப் [ட்
புண்ணாயினராயுயிர்தாங்கிப்போனாரோடிப்புறத்தம்மா.

(இ-பு) சமணாகள் எண்ணாயிரவரும் ஒருசேர அடைந்து தங்கள் கையில ஏந்தியிருக்கும் குண்டிகையிலுள்ள சலத்தை யெல்லாம் கணகளோடுகூடிய மயிற்பீலிகற்றையினால் இறைக்கவும் உக்கிரமாக எழும்பி நெருப்புப்பொறிகளைக்கக்கும கண்களையுடைய வனமையுள்ள அச்சாப்பம் மிகவும் சீற அதைக்கண்டு முன்பு ஒருங்கே சேர்ந்து வந்த சமணாகளெல்லாம் மனநடுக்கமுற்று வருந்தினராய்த்தங்கள் பிராணனைக்காப்பாற்றிககொணடு வெளியே ஓடிப்போனார்கள் எ-று அம்மா-வியப்புச்சொல்.

வெருவிச்சமணரிரியவுறவேந்தனரகவலிநோக்கித்
தருமப்புகலிக்கவுணியர்கோன்றாட்டாமரையிற்றாழ்ந்திறைஞ்சி
வருமிப்புயங்கத்தடனீக்கும்வலியுன்னருளாலாமென்று
னிருமைப்பொருளுநதருமெநதையிசைநதேகருணைபுரிகின்றார்.

(இ-பு) இவ்வாறு பயங்கொணடு சமணர்களெல்லாம் ஓடிவிட அவ்வரசன் சாப்பத்தின்கொடுமையைப்பார்த்து புண்ணியஸ்வரூபியாகியதிருஞானசம்பந்தசுவாமிகளது பாததாமரையில் தாழ்மையுடன் வணங்கி எதிர்த்துவருகின்ற இச்சாப்பத்தின் கொடுமையை நீக்கும்வல்லமை உமது திருவருளாலாகு மென்றான் இம்மைமறுமைப்பயன்களைத் தரவல்ல எமது தந்தையாராகிய திருஞானசமபந்தசுவாமிகள் திருவுள்ளமிசைந்து கிருபை புரிகின்றார் எ-று (ருரு)

முன்னங்கதிர்வேறனக்களித்தமுதலைத்தணிமாமறைகாணப்
பொன்னங்கமலத்தாளசேப்பபுவிமேனடனம்புரிந்தானை
மன்னும்புகழ்வானவர்க்கிருக்குவழங்கினானைமனத்திருத்திப்
பன்னுந்தோட்டீரேதுத்தியென்னுமொருநறபணுவலேயே.

(இ-பு) முற்காலத்துத்தமக்கு ஒளிபொருந்திய வேலாயுதந் தந்தருளிய முதல்வரும் ஒப்பற்ற வேதங்கள் காணும்படி பொன்போல் அழகிய

தாமரைப்பாதம் சிவக்கும்படி இந்நிலவுலகத்தில் வீரதாண்டவம் புரிந்தவரும் நிலைபெற்றகீர்த்தியையுடைய தேவர்களுக்கு வேதமோதுவித்தவருமாகிய வேதபுரீசரைத் தமதிதயத்திற்றியானித்து (தோட்டுடைசெவியன்) என்னும் முதலையுடைய ஒப்பற்றநல்லதேவாரம் பாடியருளினார் எ-று. ஏ-அசை. (௫௪)

காழிபெருமானிப்பரிசுகவியொன்றுரைப்பக்கருணைவளர்ந்
தாழிப்பெருமான்சித்தர்தமிலொருவனெனப்போன்றுருத்தாங்கி
யாழிப்பொருவுமுடிதழுசிவைந்துநிறமுமதினணிந்த
கோழிப்புறத்தினிறமும்வளர்குரண்டத்திறகுமெழில்குலவ.

(இ-பு) திருஞானசம்பந்தசுவாமிகள் இவ்வாறு தேவாரமொன்று அருளியவுடன் ஊழிகாலத்தும் அழியாத வேதபுரீசர் திருவருள்சுரந்துசித்தர்களிலொருவரைப்போல் அழகிய திருமேனியெடுத்துக்கொண்டு சக்கரத்தையொத்துத தாம்கட்டியிருக்கும் பாகையின்வஸ்திரத்தில் பஞ்சவர்ணமும் அப்பாகையிற்செருகியிருக்கும் கோழியின் பின்னிறமும் வளர்கின்ற கொக்கினிறமும் அழகுவிளங்க. எ-று (௫௫)

கரத்திற்கொடிவேராலமைத்தகடையவலயங்களுந்திகழ
நிரைத்தகழுத்திற்பலகரைப்பூணொருங்கியொளிரநெடுநாக
முரித்தவுரித்திண்மருங்கசைத்தேயொளிருங்கச்சின்சுருக்கசைய
பருத்தமகுடிகையிற்றாங்கிப்பணியாட்டுவன்போலவனுற்றான்.

(இ-பு) கைகளிற்கொடிகளாலும் வேராலும் செய்தகடகங்களும் வலயங்களும் விளங்கவும் கழுத்தினிடத்து வரிசையாய்க்கோத்தபலகரைகளாகிய மாலைகளும நெருங்கிப்பிரகாசிக்கவும நெடியசர்ப்பத்தையுரித்ததோலானது திண்ணிய இடையில்கட்டி அதன்மீது கச்சினுற்சுருக்கிட்டசைய பெருத்த பாம்புப்பொட்டியைகையிலெடுத்துக்கொண்டு பாம்பாட்டிப் போல அவ்விடத்துவந்தார. எ-று. இவ்விரண்டுங்குளகம். (௫௬)

வந்தகடவுட்டிருக்கோலமன்னன்முதலோருறநோக்கிச்
சிந்தைவியபபுற்றாரந்ததேவதேவன்செறியரவத்
தந்தமுறும்வாலினைப்பற்றியமரரேத்தவாட்டுவித்தே [ன்,
யுந்துமரவந்தனைக்கொண்டவ்வொளிரபொற்கோயிலுட்புகுந்தா

(இ-பு) இவ்வாறு எழுந்தருளிவந்த சிவபிரான்திருக்கோலத்தை அரசன்முதலியயாவரும்பார்த்து மனமகிழ்ந்தார்கள்அச்சிவபிரான் அங்குள்ள அச்சர்ப்பத்தினது அழகமைந்த வாலைப்பிடித்து தேவர்களெல்லாம் துதிக்கும்படி ஆட்டுவித்து மேற்சொன்ன அச்சர்ப்பத்தைக்கையிற் பிடித்துக்கொண்டு அத்திருவோத்தூரிலுள்ள விளக்கமமைந்தபொன்மயமான திருக்கோயிலுட்சென்றார. எ-று. (௫௭)

சுடராய்வாளமுறநின்றுதுதிக்குங்குகனுக்கெதிரிலிங்க
வடிவாய்நின்றதனிமூர்த்திமருங்கின் வடபால்வாளரவங்
குடையாய்க்கவிப்பவிருந்திடுமெங்கோனை நாகேசுரனென்பார
படியாரவனைத்தொழுகின்றோர்பலவிஞ்சையில்வல்லவராவார்.

(இ-பு,) முன்பு முருககடவுள் தரிசிக்கும்படி சோதிசொரூபமாய் நிற்கையில் ஒருருவமாய் நிற்கவேண்டுமென்று அம்முருககடவுள்வேண்ட அவர்க்கெதிரில் இலிங்கவடிவமாய்நின்ற ஒப்பற்ற வேதபுரீசருக்குப்பககத்தில் வடக்குத்திசையில் ஒளிவீசுஞ்சர்ப்பமகுடையாய்க் கவிந்திருக்க எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப்பெருமானை நாகேசுரர் என்று சொல்வாகள் அச்சிவலிங்கப்பெருமானைத் தொழுகின்ற இந்நிலவுலகத்தோாயாவரும் பல விதமந்திரங்களிலும் வல்லவராவாாகள், எ-று. (ருஅ)

வேறு.

வெயபணிபழிதலுமவேந்தனுதியா
யயபதியாரெலாமசசுந்தீர்ந்தன
ரெம்பிரான்றிருவிளையாட்டையேநினை
நுமபருமதியிதவைபூத்தனர்

(இ-பு) அசசர்ப்பம் இவ்வாறழியக்கண்டு அரசன்முதலாக அழகிய திருவோத்தூரிலுள்ளவர்களெல்லாம் பயமொழிந்தார்கள் எமதிறைவராகிய சிவபிரான் திருவிளையாடலையே நினைந்து தேவாகளும் அதிசயிதுமனமகிழ்ந்தாாகள். எ-று (ருகூ)

தாரணிநாயகன்சண்பைநாயக
ரேரணிதாண்மலரேததியோதுவான
காரணமுதறபொருட்கருணைநும்வயின்
பூரணமாகியபுணர்ப்புநோக்கினேன்.

(இ-பு) உலகத்தை ஆளுந்தலைவனுகிய அரசன் திருஞானசம்பந்தசுவாமிகளது அழகமைந்த பாததாமரையைத்துதித்துக்கூறுகின்றுன்சகல காரணத்திற்கும் முதற்பொருளாயுள்ள சிவபிரான் திருவருள்உமதிடத்திற்பரிபூரணமாய்ப் பொருந்தியிருக்கும் சம்பந்தத்தைக்கண்டேன். எ-று.

என்னிருங்கிளைஞருமியானுநுமமலர்ப
பொன்னடிக்கடிமையாய்ப்பொருநதிநின்றனந்
துன்னிடுங்கீர்த்தியுந்தொலைவில்செல்வமு
மன்னெடுவாழ்க்கையுமற்றுமும்மதே.

(இ-பு) எனது பெருஞ்சுற்றத்தாருடன் யானும் உமது தாமரைமலர்போன்ற அழகிய திருவடிகளுக்கு அடிமையாக மனமிசைந்திருக்கின்ற

னம் என்னிடத்துச்சேர்ந்திருக்கும் புகழும அழியாத செல்வமும் நிலைபெ ற்ற பெரியவாழ்வும் மற்றுள்ளனயாவையும் உம்முடையதே எ-று. (கக)

என்னவேந்திஃதுரைத்தலுமென்னையாளுடையோன்
பொன்னின்றண்மலர்பொருந்தியவுளத்தினன்புகலு
மன்னநீயுமிம்மாநிலத்தவர்களுமியானும
முன்னமாரணமொழிந்தவற்கடிமையாமுற்றும்.

(இ-ட) என்று அரசன் இவ்வாறுகூற என்னை ஆளாகஉடைய சிவ பிரானது பொன்போன்ற திருவடித்தாமரைகளைப்பதித்த திருவுள்ளத்தின ராகியதிருஞானசம்பந்தசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளுகின்றார் அரசனே நீயும் இந்நிலவுலகத்துள்ள மற்றவர்களும் யானும் ஆகயாவரும முன்பு வேதத்தைத் தேவர்களுக்கோதுவித்தருளிய வேதபுரீசருக்கு அடிமையா கும் எ-று. (கஉ)

ஆதிநாயகற்கடிமையாமாகியுமறிவி
லேதமாகியசமணர்களிறைவனைறதிருவெண்
பூதிசாதனியபுனிதரையிகழ்ந்துரைபுகலக்
காதினாலுறக்கேட்டிருந்தின்றதுங்கடனே.

(இ-ட) ஆதிகாரணராகிய சிவபிரானுக்கு நாமெல்லாம் அடிமையா யிருந்தும அறிவினிடத்து விளக்கமில்லாத சமணர்கள் அச்சிவபிரானது நன்மையைத்தரும் திருவெண்ணீறு உருத்திராக்கம முதலிய சிவசின்ன ங்களைத் தரித்திருக்கும் பரிசுத்தவான்களை இழிவாகப்பலவாறு கூற நாம் நமது காதுகளினால் அவைகளைக்கேட்டுக் கொண்டிருப்பதும் கடமையா குமா எ-று. (கந)

வழுதிநாட்டுறையமணரைவைகையம்புனலி
லெழுதுசீட்டுவிட்டேற்றியுமெரியிலிட்டேடு
பழுதிலாப்பசும்பண்பொடுவாங்கியுமபதகர்
கழுவுறக்கழுவேறறியேகலித்தனம்வேந்தே

(இ-ட) அரசனே பாண்டிநாட்டில் மதுராபுரியில்வசித்திருந்த சம ணர்களையெல்லாம்வைகையாற்றுநீரில் திருமுகப்பாசுரம் எழுதிய ஏடுவிட்டு எதிரேறச்செய்தும்பிறகு அவ்வேட்டையேஅக்கினியில்விட்டும்பழுதற்றபசு மைநிறத்தோடு எடுத்தும் அச்சமணர்கள் உயிர்விடும்படி கழுவேற்றியழித் தனம் எ-று. இவ்வைந்துங்குளகம். (கச)

துட்டரைக்கையாற்றொலைப்பதுந்தூயரானவரை
நட்டமின்றியேகாப்பதுமானிலம்புரக்கும
பட்டவர்த்தனர்க்கியல்பெனப்பகாமனுநூலை
விட்டிருக்கலேவிளைந்திடும்பவங்கள்வேந்தருக்கே

ரங்களினாலேயே விளக்கம் அடைந்திருக்கும் சமணர்களும் தங்களுடைய புனதகை என்னும் ஊரையடைந்தார்கள் நான்குவேதங்களையும் தேவர் களுக்கோதுவித்தருளிய வேதபுரீசரது திருக்கோயிலில் திருஞானசமபந் தசுவாமிகள் சென்று அவ்வேதபுரீசரை வணங்கி மனமுருகிப்பல தோத் திரங்களைத் திருவாய்மலர்ந்தருளி எ-று. (எஉ)

குழையார்மிக்கார்தாதார்கொன்றையென்றுனிம்மலைபிக்கூறுநா ன்கு, விழைவாருந்தமிழ்ப்பனுவல்விளமபியரனருளபூண்டுவிளங் கும்பைம்பொன், னுழையாருமிளமூலையையிறைஞ்சியவடிருக்கரு ணையினிமைபெற்று, மழையாருமணிமதில்சூழாலயமீண்டவாவதி யுமடத்தைச்சார்ந்தார்,

(இ-ள்) (குழையார்)மிக்கார் (தாதார்கொன்றை) (என்றுனிம்மலை) என்னும் முதலையுடைய இந்நான்கு மெய்யன்புநிறைந்த தமிழாலாகிய தேவாரங்களைத் திருவாய்மலர்ந்தருளிச் சிவபிரான் திருவருளபெற்று விள க்கமமைந்த பசியபொன்னாலாகிய ஆபரணங்களையணிந்த இளமுலைநாயகி யாரையும் தொழுது அவரது திருவருளையும் இனிமையுடன் பெறறுககொ ண்டு மேகங்கள் தவழும அழகியமதில் சூழ்ந்ததிருக்கோயிலினின்றும் திரும்பி தாம்வசிக்கும் திருமடததையடைநதார எ-று. இவ்விரண்டுங் குளகம்- (எ௩)

இரவுவிடிந்திடுமளவுமெண்டொகையாயிரச்சமணரெவருங்கூடி யரவுதமக்குறும்பகையேயாகியதுபுகன்றுமுலகாளுந்திண்டோட் புரவலன்பாலுறுதிமொழி புகன்றதுமாங்கதற்கிசைந்தபுணர்ப்பு ம்பேசி, விரைவுறுநெஞ்சொடுமிருநதார வேணுபுரதநவர்சிவ னை வேண்டியுற்றார்.

(இ-ள்) இராத்திரி விடியும்வரையில் எண்ணாயிரஞ் சமணாகளும் ஒ ருங்குசேர்ந்து நாம் யாகத்தில் உண்டாக்கியசர்ப்பம் நமககேபகையாகிய து என்றும் சொல்லி உலகததையாளும் வலியபுயங்களையுடைய அரசனி டத்துத் தாம்கூறிவந்த உறுதிமொழியையும நினைத்துககொண்டு இதர்குத் தகக ஏற்பாடுகளை பேசிககொண்டும ஆலோசிக்கும் மனதையுடையவர் களாயிருந்தார்கள் திருஞானசம்பந்தசுவாமிகளும் சீகாழியில் எழுந்தருளி யிருக்கும் தோணியப்பரைத்தியானித்துக்கொண்டிருந்தார் எ-று. (எ௪)

இன்னபரிசிவரிருக்குமெல்லையிற்றன் சேத்திரப்பேரிறநதிடாமன் மன்னுசமணர்க்குடனேவாதுபுரிந்தனர்புகலிமன்னர்காடி யன்னவருக்குறுதுணையாயடுத்தமணர்குலமுழுதுமழிப்பநெஞ்சி லுன்னிவருகின்றவன்போலொளிகதிரோன்வந்துதித்தானுதயவெ ற்பில்,

(இ-பு) இவ்வாறு இவ்விருதிறத்தாரும் யோசித்துக்கொண்டிருக்குந் தருணத்தில் பாஸ்கரக்ஷேத்திரம் என்னும் நாமதுபெயர்வாய்ந்த அவ்வேதபுரியில் அப்பெயர்மாறுபடாதிருக்கும்படி முன்புசமணர்களுடன்வாது செய்துவென்ற திருஞானசம்பந்தசுவாமிகளுக்கு உற்றதுணையாயிருந்து இங்குள்ள சமணர்கள்குலமுழுவதையும் அழிக்கவேண்டுமென்று தன்மனதிலெண்ணி வருபவன்போலச்சூரியன் உதயகிரியில் உதயமானான். எ-று (எரு)

வெய்யவன்கீழ்த்திசையெழுமுனா வேந்தனெழுந்து காலைவிதிகளாற்றிச், செய்யபசும்பொன்னவையிற் சேர்ந்தனன்காவிரிசூழ்ந்து சிறந்தகாழி, மையறுங்காலையிலாற்றுங்கடன்முற்றி மன்னவனவைபேரவையில்வந்தார், பைபடைச்சமணரெண்ணாயிரத்தோருமொருங்குவந்துபட்டார்பனமே.

(இ-பு-) சூரியன்கிழக்குத்திசையில் உதயமாவதற்குமுன்னமே அரசன் நித்திரைவிட்டு எழுந்து காலைக்கடன்களைமுடித்துக்கொண்டு செம்பொன்மயமாயவிளங்கும் தனது அரசசபையில் வந்திருந்தான் காவிரியாற்றால் சூழப்பெற்றுச்சிறப்பமைந்துள்ள சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தசுவாமிகளும் காலையிலசெய்யவேண்டிய அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அவ்வரசனதுபெரியசபைக்கு எழுந்தருளினார் மெதுவாக நடக்கும் சமணர்கள் எண்ணாயிரம்பேரும் ஒருசேரக்கூடிவந்து சேர்ந்தார்கள் எ-று

வேறு.

மந்திரத்தலைவருமறைவலாளருந
தந்திரச்சேனையுந்தளத்துநாதரும
வந்தவரவரவர்வரம்பின்வைகுற
விந்திரன்போலிறையிருந்தவெல்லையில்,

(இ-பு) மந்திரிமார்களும் வேதியர்களும் படைகளாகியசேனைகளும் சேனாபதிகளும் ஆக வந்தவர்களனைவரும் தத்தமக்குரியதகுதிக்கேற்பவீற்றிருக்க இந்திரனைப்போல அரசன் இருக்குங்காலத்து எ-று, (எள)

எழுந்தனனமணரிலேமுறமூழ்றவ
னழுந்துறவெழுதுமோரளவினேட்டினைச்
செழுந்தொடைவேந்தன்முன்செறித்துச்செப்பினான்
கொழுந்துறுகனலிடைக்கொளுத்தவென்னவே.

(இ-பு.) இவ்வாறிருக்குந்தருணத்துச் சமணர்களில மகிமையுள்ளவனொருவன்எழுந்து தங்கள்மந்திரத்தைஅழுத்தமாக எழுதியிருக்கும் ஒருநீண்ட ஓலையைச்செழுமையானமாலையணிந்த அவ்வரசன்முன்வைத்து இவ்வோலையைக்கொழுந்துவிட்டெரியும் அக்கினியிற்கொளுத்தி வேகும்படிக்குச்செய்யச்சொல்லும் என்றுகூறினான், எ-று, இவ்விரண்டுங்குளகம், (எஅ)

வேறு.

அப்பொழுதேயுமையாண் முலையுண்ட
மெய்ப்பெரியோர் மறைவிண்ணவருக்குச்
செப்பியநாதனைச்சிந்தையுணன்னி
யொப்பரும்வெண்பனையோலைவகிர்ந்தே.

(இ-பு) அப்போது உமாதேவியார் திருமுலைப்பாலுண்டருளியவுண்மையையுணர்ந்த பெரியோராகிய திருஞானசம்பந்த சுவாமிகள் வேதங்களைத்தேவர்களுக்கோதுவித்தருளிய வேதபுரீசரைத் தமது திருவுளத்தில் தியானித்துக்கொண்டு ஒப்புரைத்தற்கருமையாகிய அந்த வெள்ளைப்பனையோலையைவாரித்தறித்து எ-று ஏ-அசை. (எ-கூ)

மன்றுடன்னுறன்மாட்சிவரைந்தார்
நன்றுநான்மறையானெடுமொழு
மென்றேயோாகவியேந்தன் முன்வைத்தார்
நினைறேரியாவருநெஞ்சுள்வியந்தார.

(இ-பு) பொன்னம்பலத்தில் ஆனந்தத்திருத்தம்புரியும் சிவபிரான்புகழ்ச்சியை (நன்று நான் மறையானெடுமொழும்) என்று ஒருதிருப்பாசுரம் எழுதி அரசன்முன்வைத்தருளினர் அதுகண்டு அங்கிருந்தவர்களெல்லாம் தத்தம் மனதின்கண் அதிசயமுறறார்கள் எ-று. இவ்விரண்டுங்குளகம்

கலையின்மிக்கவர்வைத்தகலையினை
மலையையொத்தமணிப்புயத்தண்ணலு
மலகிலொற்றைச்சுருள்செய்தனலுறு
முலையில்வைத்துத்துருத்திகொண்டூதினன்.

(இ-பு) சாத்திரவுணர்ச்சியிற் சிறந்ததிருஞானசம்பந்த சுவாமிகள் அரசனுக்கெதிரில்வைத்ததேவாரமெழுதியஅவ்வோலையைமலையைப்போன்ற அழகிய புயங்களையுடைய அரசனும் எடுத்து அளவிடக்கூடாத பெருமையுடன் ஒற்றைச்சுருளாகச் சுருட்டி அக்கினிபொருந்திய உலைகளத்தில்வைத்துத்துருத்தியினல் ஊதினன் எ-று. (அ-௬)

பொன்னுருக்கும்பொழுதுபுழுக்கினர்
பின்னிருக்குந்தணலைப்பிரித்தனா
மன்னிருக்குமுன்னுளதின்மீண்டது
முன்னிருக்குமொழித்தவனோலையே.

(இ-பு) பொன்னையுருக்கும் காலஅளவுவரையில் எரித்தார்கள் பிறகு அதிலிருந்தநெருப்பைப்பிரித்தார்கள் பின்பு வேதங்தேவர்களுக் கோதுவித்தருளிய வேதபுரீசரது ஓலையாகிய நிலைபெற்ற தமிழ்வேதம் எழுதியிருந்த அது முன்வைத்தபடியே யிருந்தது எ-று. (அஉ)

கண்டுவேந்தன்கருத்துள்வியந்தனன்
றொண்டர்நோக்கித்தொழுதுதுதித்தனர்
மண்டிநின்றவரியாருமகிழ்ந்தனர்
விண்டசாக்கியர்நெஞ்சமவெதுமபினா.

(இ-பு.) இவ்வாறிருக்கக்கண்டு அரசன் தன்கருத்தில் அதிசயித்தான் சிவனடியார்கள் பார்த்து வணங்கித்துதித்தார்கள்நெருங்கியிருந்த மற்றவர்களெல்லாம மகிழ்ச்சியடைந்தார்கள் சபதங்கூறிய சமணர்கள் தமது மனம்வருந்தினார்கள் எ-று. (ஆகூ)

புகலிவேந்தனபொறித்ததமிழினை
யகல்விசும்பினமரருமேத்தினர்
சகமிசைத்தணருக்கியவெம்மையு
நிகரிலிக்கவிசொற்றிடநீங்குமே.

(இ-பு.) திருஞானசம்பந்தசுவாமிகள் எழுதியருளியஅத்தேவாரத்திருப்பாசுரத்தை விசாலமாய்ப் பரம்பியுள்ள ஆகாயத்தின்கணிருந்து தேவர்களும்துதித்தார்கள் இப்போதும் இந்நிலவுலகின்கண் யாருக்காகிலும நெருப்புப்பட்டு அதனாலுண்டாகிய வெப்பமும் ஒப்பற்ற இத்திருப்பாசுரத்தினால் நீங்கிவிடும் என்று நைமிசாரணியமுனிவர்களுக்குச் சூதபுராணிகர்கூறினா. எ-று. ஏ-அசை, (அச)

குண்டரிட்டமுடங்கல்குலவெரி
மண்டலத்தின்முதலறமாய்ந்தது
தொண்டர்மேற்பழிகூறுந்துரிசன
ருண்டுவக்குமுன்வாழ்வுலைந்தோய்வபோல்,

(இ-பு) சமணர்கள் எழுதிநெருப்பிலிட்ட ஓலையை அடியார்கள்மீது பழிகூறுந்துட்டர்கள் அவர்அனுபவித்துக்களிக்கு முன்னமே அழிந்துகெடுவதுபோல் கூட்டமாகிய அவ்வக்கினி இந்நிலவுலகத்தின்கண் முதலில்லாமற் சாம்பராககிவிட்டது. எ-று. (அரு)

அந்தவெல்லையமணருமவெம்பியே
வந்துமன்னனைமுனின்றுவழுத்தினர்
முந்தவோதுமுறைப்படிநீரினமே
லுந்தவேடும்விடுகெனவுரைத்தனர்.

(இ-பு) அத்தருணத்தில் சமணர்களும் மனம்வருந்திவந்து அரசன் முன்னின்று தோத்திரஞ்செய்து முன்புகூறியகிரமப்படி நீரின்மேல்எதிர் செல்லும்படி ஏடுவிடுவீரென்றுகூறினர். எ-று. (அகூ)

வேறு.

ஆங்கதுகேட்டரசனெழுந்தமைச்சரோடு மரனடியார்குழுமலொடுமமணரோடு நீத்தங்கமழ்பூம்பொழிற்றுறையார்வையின் மே

வித்திகழ்மணிப்பொற்குடை நீழன்மெய்செறிப்பப், பாங்குறும் பொய்ச்சமணரொருவிஞ்சைதீட்டும் பத்திரத்தைக்கைக்கொடுத்தார்பாரின்வேந்தன்,வாங்கியருகிருக்கின்றசண்பைநாதர்மலர்முகநோக்கினன்முறுவன்மலர்ந்துமன்றே.

(இ-பு) அவ்விடத்து அவ்வார்த்தையைக்கேட்டு அரசனெழுந்துமந்திரிகளோடும் திருஞானசம்பந்தசுவாமிகள்அடியார்கூட்டங்களோடும் சமணர்களோடும் வாசனைகமழும் மலர்ச்சோலைகளமைந்த துறைகளையுடைய பாருநதின்கண்அடைந்து விளக்கமான இரத்தினங்களழுத்திய சந்திரவட்டத்தின்குடையின்நிழல் தனதுசரீரத்தில்தாக்கவும் தனதுபக்கத்தில்வந்திருக்கும் பொய்யராகியசமணர்கள்ஒருவித்மந்திரத்தைஎழுதியுள்ள ஓலையைக்கையிற்கொடுத்தார்கள் அதை உலகத்தையாளும அவ்வரசன்வாங்கித்தன்னருகில் எழுந்தருளியிருக்கும் திருஞானசம்பந்தசுவாமிகளது தாமரைமலர்போலும திருமுகத்தை உடனே புன்னகைகொண்டு பார்த்தனர். எ-று. மன்-ஓ-அசை. (௮௭)

வாட்டிறன்மன்னவன்றிரும்பிநோக்குமுன்னம்வளர்மறையோர்குலதிலகர்வகிர்ந்ததால. வேட்டிளிறகாரமண்கலிங்க வென்னுஞ்செய்யுளெழுதியளித்தனரதுவுமிறைவன்கைக்கொண், டோட்டமுறுநீரின்முனமமணர்தந்தவோலைநனைவிடுத்திடலு முலகோர்காணச், சீட்டையுங்கொண்டேவேகமிகவேகீழ்பாறசென்றபின்னர்சமணர்மனந்திகைப்பமன்றே.

(இ-பு) வாளாயுதத்தை யேந்திய வன்மைவாய்ந்த அவ்வரசன் திரும்பிப்பார்ப்பதற்குமுன்னமே புகழ்வளருமவேதியர்குலதிலகராகிய திருஞானசம்பந்தசுவாமிகள் வரித்தறித்த பனையோலையில (காரணகலிங்க) என்னும் முதலையுடைய தேவாரதிருப்பாசுரத்தை வரைந்துத்தந்தருளினர் அதையும் அவ்வரசனே தனதுகையிலேந்திக்கொண்டு ஓடுகின்ற அப்பாருநதிநீரில் முன்பாகச்சமணர்கள் கொடுத்த ஓலையைவிடவும் இந்நிலவுலகத்தோர்காணும்படியாக அவ்வோலையையும் அடித்துக்கொண்டு அதிக வேகமாயக்கீழ்த்திசையாகச்சென்றபின்பு சமணர்களெல்லாம்மனந்திகைத்துக்கொண்டிருக்க. எ-று. மன்-ஓ-அசை. (௮௮)

பொய்ச்சமணரோலையைத்தண்புனல்கொண்டோடப்புரவலன்கண்டிகழ்ந்துபின்புபுகலிவேந்தர், வைசசதமிழேட்டினையுநீரிவிட்டான்வரும்புதுநீர்கண்டெதிருமகரம்போல, வசசமறமேமறதிசையிற்சென்றமுன்னமாழியுண்டமுனிவணங்குமரன்பாற்சென்ற, விச்சகத்திலப் பதியையநாடொட்டே யியமபுவர்செய்யாற்றை வெனுறுனென்னும்பேரே.

(இ-ள்) பொய்யராகிய சமணர்கள்கொடுத்த ஓலையைக்குளிர்ந்தஅப்
பாகுநதிநீர் அடித்துக்கொண்டோட அதை அரசன்கண்டு அச்சமணர்களை
இகழ்ந்து பின்பு திருஞானசம்பந்தசுவாமிகள் வரைந்துகொடுத்தருளியி
ருக்கும் ஏட்டையும் அப்பாகுநதிநீரில்விட்டான் உடனே வருகின்றபுது நீ
ரைக்கண்டுவிரும்பி எதிரில்வருமமைச்சத்தைப்போல பயமில்லாமல் மேற்கு
த்திசையாகப்போய முன்புகடனீரையெல்லாம ஆசமனமாகக்குடித்த அ
கத்தியமுனிவர் பூசித்த சிவலிங்கப்பெருமானிடத்துச்சென்றது இதிலவுல
கத்தில அன்றுமுதல அந்நகரத்திற்குச் சேயாறறையென்றுன் என்னும
பெயர் கூறுவார்கள். எ-று. (௮௯)

ஓதுகின்றசபதமெலாமழியக்கண்டேயுள்ளமுலர்ந்தமணர்குழா
மொடுங்கிநின்று, கோதறுமன்னவற்குறைப்பார்கற்றவிஞ்சைக்
குணத்தாலிப்பரிசுமுன் கூடலிலுமவென்று, ஆதலினாலிவன்கோ
யின்மாட்டுமெங்களாலயத்துமாண்பனையுண்டதனினுன்முன், றீந்
துநறுங்கனியொருபாற்றந்தார்போற்றுந்தெய்வமேபெரிதென்றுசெப்
பினாரால்.

(இ-ள்) இவ்வாறுதாங்கள் கூறுகின்ற சபதங்களெல்லாம் அழிந்து
போகக்கண்டுமனம்வருந்தி அச்சமணர்கூட்டங்கள்கருவம்ஒடுங்கிநின்றுகுற்
றமற்ற அவ்வரசனுக்குக்கூறுகின்றார் தானகற்றிருக்கும்மந்திரங்களின் வல்
லமையினால இவ்வாறே முன்புமதுரையிலும் எம்மைவாதில்வென்றான் ஆ
கையால் இத்திருஞானசம்பந்த சுவாமியின் கோயிற்கருகிலும் எங்கள்கோ
யினிலும் ஆண்பனைமரம இருக்கின்றது அப்பனைமரத்தில் உனக்குமுன்
பாகப்பழுத்தற நல்லகாயானது ஒருபக்கத்திலகாய்க்கும்படி செய்தவர்கள்
வணங்கும்தெய்வமே பெரிதென்று சொன்னார்கள். எ-று (௯0)

அன்னவராங்கதுவுரைப்பக்கேட்டுவேந்தனந்தணர்தம்பெருமா
னைநோக்கவனே, றினையவனகபுரிதுமிதற்குடைந்தோமென்னி
லேற்றுவதுங்கழுவிலெங்கடிறத்தையென்று, மன்னுமொருபத்
திரத்திலெழுதித்தந்தாமற்றவருமவ்வண்ணம வரைந்துவைத்தா
மின்னுமணிமுடியரசனோக்கியந்தவியப்பனையுங்காண்குதுநாளைமே
வுமென்றான்,

(இ-ள்) அச்சமணர்கள் அவ்வாறுசொல்லக்கேட்டு அரசன்வேதியர்
தலைவராகிய திருஞானசம்பந்தசுவாமிகளைப்பார்க்க அவர் அவ்வாறேசெய்
கின்றோம் இதிற்றோல்வியடைந்தால் கழுவேற்றிவிடு எங்களுடைய வல்ல
மையுள்ள அரசனே என்றுநிலைபெற்ற ஒருவோலையில் எழுதிக்கொடுத்த
ருளினார் அச்சமணர்களும்அவ்வாறே எழுதிக்கொடுத்தார்கள் பிரகாசிக்கும்
இரத்தினங்களழுத்திய கிரீடத்தையுடைய அவ்வரசன் இவ்விரண்டையும்

பார்த்து அந்த அதிசயத்தையும் பார்ப்போம் நாளைக்கு வாருங்களென்று கூறினான். எ-று. (௬௧)

அப்பரிசே செய்குவமென்றமணர் சென்றாரந்தணர்கோன்பால்
விடைகொண்டரசன் சார்ந்தார், ஒப்பிலகழுமலத்தெந்தைமடத்
திலெய்தியும்பருக்கோதியமுதலையுளத்தில்வைத்தே, மெய்ப்பெரு
மாண்பனைகாய்க்கவேண்டுமெனவே வேண்டியிருந்தனராந்தவே
லைவெய்யோன், றப்புறுமெய்யொடுகுடபாற்கடலிற்றோய்ந்தா
ன்சூழ்ந்ததிருளமணர்கடஞ்சூழலபோன்றே.

(இ-பு) அப்படியே செய்வோமென்று சமணர்கள் போய்விட்டார்கள் திருஞானசம்பந்தசுவாமிகளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அரசன் அரண்மனைக்குத்திரும்பினான் ஒப்பற்ற சீகாழியில் அவதரித்த எமது தந்தையாராகிய அத்திருஞானசம்பந்தசுவாமிகள் தமது திருமடத்தடைந்து தேவர்களுக்குவேதமோதுவித்தருளிய வேதபுரீசரைத்திருவுளத் திற்றியானித்து உண்மையாய் அந்தப்பெரிய ஆண்பனைகாய்க்கவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டிருந்தனர் அந்தசமயத்திற்சூரியன் சிவந்தசரீரத்துடன் மேற்குச்சமுத்திரத்தில் மூழ்கினான் அந்தச்சமணர்களது கருத்தைப்போல உலகெங்கும் இருள்சூழ்ந்துகொண்டது. எ-று. ஏ-அசை. (௬௨)

வேறு.

சென்றகதிரோனமணரின்னுஞ்செறியுமிடங்களாராய்ந்து
நன்றிலவரைக்கொடுவருவானாடினவன்போலநெடும்பொற்
குன்றமதனைவலமாகக்கொடித்தேர்கடவிக்குணதிசையிற்
றுன்றுமுதயப்பொருப்பின்மிசைதோன்றாநின்றானிருசுள்வற்றி.

(இ-பு) அவ்வாறுமேற்குச்சமுத்திரத்திலமுழுகிய சூரியன் சமணர்கள் இன்னும் இருக்கின்ற இடங்களையெல்லாம் ஆராய்ந்து நன்றியற்றவர்களாகிய அவர்களைக்கொண்டுவரும்படி எண்ணங்கொண்டவன்போல நன்மையினையும் மகாமேருகிரியை வலமாகக்கொடி கட்டியிருக்கும் தனது தேரைநடாத்திக்கொண்டு இருளை எல்லாம்போக்கிக் கிழக்குத்திக்கிலிருக்கின்ற உதயபர்வதத்தின்மீது உதயமானான். எ-று. (௬௩)

இரவங்ககலவேந்தனெழுந்தியற்றுங்காலைக்கடன்கழித்து
வருமந்திரிகடமைநோக்கிவரம்பில்கழுநாட்டிடவுரைத்தே
யரவின்கொடுந்தீவினைதவிர்த்தவத்தன்கோயிலருகணைந்தான்
பரமன்மகிமைநோக்கவரும் பதியின்மாந்தர்புடைசூழ.

(இ-பு) இரவுவிடிந்தவுடன் அரசன் எழுந்திருந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு சபைக்குவந்த மந்திரிகளைப்பார்த்து எண்ணிறந்த கழு

மரங்களை நாட்டும்படி கட்டளையிட்டுச் சிவபிரான்மகிமையைப்பார்க்கும்படி வருகின்ற அந்நகரவாசிகள் யாவரும் தன்னைப்புடைசூழும்படி முன்சரப் பத்தினது கொடியதீச்செயல்களை நீக்கியருளிய வேதபுரீசர்திருக்கோயிலுக்குச் சமீபத்தில்வந்தான். எ-று. (௬௪)

சாழிநகரசர்வருநகாலைக்கடன்களாற்றிக்காவலன்பா
லாழிக்கடல்போற்சிவனடியாரருகிற்சூழவங்கணடைந்
தாழிப்பொருளைவேதபுரத்தொருநாயகனைத்தொழுதேத்திப்
பாழிப்புயநதுவேந்துடன்பகருமபனைமாடணுகினரால்.

(இ-பு) திருஞானசம்பந்தசுவாமிகள் வழக்கப்படி காலைக்கடன்களை முடித்துக்கொண்டு கடல்போலப்பரந்த சிவனடியார்களெல்லாம் தமதருகிற் சூழ்ந்துவரும்படி அவ்வரசனிடத்தடைந்து ஊழிக்காலத்தும அழியாத பரம்பொருளாயிருக்கும் வேதபுரீஸ்வரரை வணங்கித்துதித்துப் பணைத்தபுயங்களையுடைய அவ்வரசனுடன் முற்கூறிய பனைமரததருகில் சேர்ந்தார் எ-று. ஆல்-அசை. (௬௫)

அரனைத்தொழுதுகுரும்பையாண்பனையென்றொருபாவறைந்திடலும், மரனிற்கருங்காயக்குலைசாய்ப்பவானோர்தருடாமலாசொரிந்தார், வரனிற்பெரியமன்முதலாமாந்தர்மனத்துளவியப்பெய்தி, சிரசிற்பொருந்துநகரததினராய்த்தெய்வமுளதுசெகததென்றார்.

(இ-பு) இவவாறுவந்துவேதபுரீசரைத்தொழுது(குருமபையாண்பனை) என்னும் முதலையுடைய ஓர்தேவாரத்திருப்பாசுரம திருஞானசம்பந்த சுவாமிகள் கட்டளையிட்டவுடன் அபபனைமரத்திற்கரிய நிறங்கொண்டகாய்களடங்கிய குலைசாய்ந்திருக்கத் தேவர்கள் கற்பகமலர்களைச்சொரிந்தார்கள் வரத்தில் மிகுத்த அவ்வரசன்முதலிய மனிதர்கள்யாவரும தங்கள் தங்கள் மனதில் அதியசப்பட்டு சிரமேற்கூப்பியகை யுடையவர்களாய் இந்நிலவுலகத்தின்கண் தெய்வச்செயல் உண்டென்று கூறினார்கள்.

செய்யுநதவத்தோரருமறையோர்செழுந்தாரரசன்முதற்புவியோ
ரையர் கமலததாளபணிநதேயரனேயிவரென்றகங்கொண்டார்
துய்யமகத்திற்பராசரன்முன்சொற்றசாபந்தொலைத்தரக்கர்
வெய்யபனைவேலுருநீங்கிவிண்ணோர்வேந்தன்பாலடைந்தார்.

(இ-பு) தவசிகள் வேதியர்கள் செழுமையான மாலையணிந்த அரசன்முதலிய உலகத்துள்ளயாவரும எமதிறைவராகிய திருஞானசம்பந்த சுவாமிகளது தாமரைப்பாதங்களில் வணங்கிச்சிவபிரானே இவரென்று மனத்தில் இடங்கொண்டார்கள் அத்தருணத்தில் தூய்மையாகிய யாகத்தில் பராசரமுனிவரால் முன்புகூறிய சாபத்தை அவ்வரக்கர்கள் தொலைத்துக்கொண்டு கொடிதாகிய பனைமரம்வேலமரம் ஆகிய உருவங்களை நீக்கினவர்களாய் இந்திரனிடத்திற் சேர்ந்தார்கள் எ-று. (௬௭)

மன்னன்பிரமபுரத்தெந்தைமகிமைநோக்கிமனமகிழ்ந்து
பன்னும்படிவந்திலர்சமணரென்னசசீறிப்படர்களுக்குட்
டுன்னும்வலியார்தமையழைத்துத் தொகுபபோடவரைக்கொணவ
ர்மினென, வன்னவருமோடினாகளினியமணர்செய்கையறைநதி
டுவாம்.

(இ-பு.) அரசன் திருஞானசம்பந்த சுவாமிகள மகிமையைககண்டு மனங்களித்து முன்சொன்னபடிவந்திருககவிலலையென்று அச்சமணாகளை மீது சீற்றங்கொண்டு தூதுவர்களுககுள்ளே மிககவல்லமையுடையவாக ளை வரவழைத்து நீஙகள்போய் அச்சமணாகளைககூட்டததுடன் கொணடு வாருங்கள் என்று கட்டளையிட அப்படியே அவாகளுமபோனாகள இனி மேல் அச்சமணாகளது செய்கையைச் சொலலுவோம் எ-று. (௬௮)

வேறு, அண்ணல்பாலென்னப்பீட்டொனறளித்தகரத்தினையேவி
நண்ணியபபத்தராகிநவையுறவ்வமணரெல்லாந
திண்ணியபுருடதாலநீஙகனிதருகவெனறே
யெணணியவண்ணமெலலாமியறறிமநதிரிநதாரமாதோ.

(இ-பு) அரசனிடத்து சேறறு தஙகள கோயிலில் உள்ள ஆண்பனைகாய்க்கச் செய்வோமென்று சீட்டெழுதிக் கொடுத்து தங்களிருப்பிடத்தையடைந்து பயமடைந்தவாகளாய்க் குற்றம்பொருந்திய அச்சமணாகளெல்லாம் வன்மையுள்ள அவவாண்பனை மதுரமுள்ள கனிகளைத்தரக்கடவதென்று தாங்கள்நினைத்தபடி யெல்லாஞ்செயது மந்திரித்தாாகள். எ-று. மாதவ-அசை- (௬௯)

விடிந்திடுமளவுமிநதவிதமபலபலவுஞ்செய்து
நெடும்பனையிடநதுத்தீஙகாய்நேருறுதுணர்நது வேந்தன்
கடிந்திடுஞ்செயல்வேறொன்றுங்கண்டிலமுழுதுமின்றே
முடிந்திடுங்காலமெனறுமுன்னியேகுழுமினாரா.

(இ-பு-) பொழுதுவிடியுமவரையில் இவ்வாறு பலபலவிதங்கள்செய்தும் நீணட அவ்வாணடனையினிடத்து மதுரமாகியகாய் காய்க்காததுதெரிந்துகொணடு இனி அரசன்தணடிபபான் தப்பிதலுககொள்ள வேறொரு வழியுங்காணகிலோம நம்முடைய கூட்டமுழுமையும் முடிவுபெறுஙகாலம் இன்றுதான் என்று நினைத்துககொணடு கூட்டமாய்க்கூடியிருந்தார்கள்.

அப்பொழுதுதரசனேவுமடனமிகுவீரரெய்தி
யெப்பனைகாய்ததஙகளீறிவியருளாலெனனச்
செப்புறுமொழியொன்றினறிததிகைததனராகிநிறப
குப்பலோடவரைக்கொண்டுகொறறவனமுன்னிற்றந்தார்.

(இ-பு) அத்தருணத்தில் அரசனால் ஏவப்பட்ட வீரர்கள்சென்றுஉங்கள் கடவுள் திருவருளால் எந்தப்பனைமரம் காய்த்ததுஎன்று கேட்க அ

தற்கு மறுமொழியொன்றும் சொல்லவகையில்லாமல் பயங்கினவர்களா யிருப்பதைக்கண்டு அவ்வீரர்கள் அச்சமணர்களைக் கூட்டத்துடன் அழைத்துக்கொண்டு வந்து அரசன்முன் விட்டனர் எ-று. (௧௦௧)

வந்திடுமமணரெல்லாமவணர்ந்தவான்பயினைகருங்காய்
தந்தநன்மகிமைதன்னைத்தங்கட்கண்ணாற்கண்டார்
சிந்தையுள்வியந்தார்நெஞ்சந்திடுக்கிட்டார்திகைத்தாரியால்
வெந்திடுங்கமலம்போலவிளங்கினமுகங்களன்றே.

(இ-பு) அவ்வாறுவந்த சமணர்களெல்லாம் வேதபுரீசர்கோயிலருகில வளர்ந்திருக்கும் அவ்வான்பயினை கருநிறங்கொண்ட காய்களைக்காய்த்திருக்கின்ற மிகமகிமையைத்தமதுவிசாலித்தகண்களாலேபார்த்தார்கள்மனதின் கண்அதிசயித்தார்கள பிறகு மனந்திடுக்கிட்டார்கள் மயங்கினார்கள்மேலும அவர்கள் முகங்களெல்லாம நெருப்பினாலவெந்ததாமரைமலர் போலாயின எ-று. மாது-ஓ-அசை (௧௦௨)

அமணர்தநிலைமைநோக்கித்தேயண்ணல்வான்முகத்தைநோக்கி
விமலனுக்கன்பரானவித்தகருரைப்பார்வேந்தே
சமையுறுமனத்தராகிசசமணரிற்பூதிசாத்தி
யுமைபதிக்கடிமையானோர்க்குயிர்தரவேண்டுமென்றார்.

(இ-பு) அச்சமணர்களது தன்மையைக் கருத்திலுணர்ந்து அரசனது ஒளிமிக்க முகத்தைப்பார்த்து சிவபிரானுக்கன்பரான திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளுகின்றார் அரசனே பொறுமையுள்ள மனமுடையவராய இச்சமணர்களில விபூதியணிந்து உமாபதியாகிய எமதுசிவ பிரானுக்கு அடிமைபூண்டவர்களுடைய பிராணனைக் காப்பாற்றவேண்டு மென்றார் எ-று. (௧௦௩)

ஆங்கதற்கிசைந்துவேந்தனுமெனவுரைக்கக்கேட்டே
யோங்கியமனத்துண்மானமுற்றவர்சிலர்களோடிப்
பாங்குறுகழுவிற்றாமேயேறியுயிர்படுத்தாரருசித்
தாங்கியசிலர்கண்மன்னன்றண்டத்தாலேறுகின்றார்.

(இ-பு) அவ்வாறுசெய்வதற்கு இசைந்து அவ்வரசன் அப்படியேஆ கட்டும் என்றுகூறக்கேட்டு மனதின்கண்மிகுந்த மானமுள்ளவர்கள் சிலர் கள்ஓடிப்பக்கத்தில்நாட்டிருந்த கழுமரங்களில் தாமேஏறி உயிர்போக்கிக் கொண்டார்கள் அப்படிக்கில்லாமல் அதற்குப்பின்தாங்கிய சிலர்கள் அவ் வரசன்தண்டனையால் அக்கழுமரத்தில் ஏறுகின்றார்கள் எ-று. (௧௦௪)

[illegible]ண்டுசெய்தவத்நால்வேதம்பகர்ந்தவாக்கடிமையென்று
வெண்டிருநீறுபூசிவிளங்கினார்சிலர்கள்வேந்தன்

கண்டிலமென்னப்பையகரந்தயல்சிலர்கள்போனார்
தொண்டுபட்டிருந்தோரெல்லாநதுலங்கினர்பூதிசாத்தி.

(இ-பு) பூர்வசன்மத்திற்செய்த தவத்தினால் வேதபுரீசர்க்கடிமையா யினோம் என்று திருவெண்ணீறுதரித்துக்கொண்டு விளங்கினார்கள்சிலர் அ ரசன்நம்மைப்பார்க்கவில்லையென்று மெதுவாகப்பக்கத்தில் ஒளித்தோடிப் போனார்கள்சிலர் முன்புசொன்னபடி அடிமையானவர்களெல்லாம் திரு வெண்ணீறுதரித்து விளங்கினார்கள். எ-று. (௪௰௫)

வேறு.

இன்னவகையேசமணரியாவருமிறப்ப
வன்னவர்கடெய்வமுறுமாலயமழித்தே
துன்னுமவர்தங்கண்மடமூரதுகள்படுத்தி
மன்னுமவருறைபுமடுத்தனாநிலத்தே.

(இ - பு) இந்நிலவுலகின்கண் இவ்விதமாக அச்சமணர்கள்யாவரும் இறந்துவிட்டவுடன் அவர்கள்தெய்வம் வைத்திருந்த ஆலயத்தையும் அழித் து நெருங்கிய அவர்களதுமடங்களையும் இடித்து நிலைபெற்ற அவர்களது நகரத்தையும் பாழாக்கினார்கள். எ-று. ஏ-இரண்டும்-அசை. (௪௰௬)

மூலமறவேசமணர்முற்றுமழிவுறவு
ஞாலமுறுமாக்கள்பலரும்மறைநவின்ற
வாலமுறுகண்டனருளாலினிதுவாழ்ந்த
வேலையுலகெங்கணுமிவிளங்கியதுசைவம்.

(இ-பு) சமணர் வேரோடுமுழுமையும் அழிந்து இந்நில வுலகத்துள் ள மாந்தர்கள்யாவரும் தேவர்களுக்கு வேதமோதுவித்தருளிய நீலகண்ட ராகிய வேதபுரீசர் திருவருளால் இனிமையுடன் வாழ்ந்திருந்த காலத்தில் இந்நிலவுலகமுழுமையும் சைவசமயம்விளங்கியிருந்தது எ-று (௪௰௭)

வேறு.

இப்பரிசுவேதபுரத்தெல்லைமகிமையைப்புகலவெண்ணிலகோடி
கற்பமிருந்துரைத்தாலுங்கடைகாண்பதரிதிந்தக்கருணைமூர்த்தி
மெய்ப்புகழிப்புராணத்தைவிளம்பினர்கேட்டவர்சித்திமேவிவாழ்
வாரப்பதிநீரெய்தியரற்றொழுதுசிவபதந்தன்னையடைதிரென்றான்.

(இ-பு) இவ்வண்ணமாக வேதபுரியென்னுந்தலத்தின் மகிமையைக் கூறவேண்டுமென்று அளவிறந்தகோடி கற்பங்களிருந்து சொன்னாலும்மு டிவாகுவதருமையாகும் இந்தவேதபுரீசரது உண்மைப்புகழாகிய இந்த பு ராணத்தைசொன்னவர்களும் கேட்டவர்களும் தங்கள் தங்கள் இஷ்டசி

த்தியடைந்து வாழ்வார்கள். ஆதலினால் அந்தத்தலத்தில் நீங்கள் சென்று அவ்வேதபுரீசரை வணங்கி மேலாகிய சிவபதத்தை யடையக்கடவீர் என்று சூதபுராணிகர் நைமிசாரணிய முனிவர்களுக்குக்கூறினர் எ-று.

அருணிறைந்தசூதமுனியறைந்திடலுநைமிசாரணியத்துள்ளா
ரிருணிறைந்தவெமமுளத்திலிச்சரிதையெனும் விளக்கொன்றேற்
றிவைத்தீர், பொருணிறைந்தெம்மகத்தேபுண்ணியமேயெனவு
றுதிபுகன்றுபோற்றத், தெருணிறைந்தசிந்தையனுஞ்சென்றுத
னிருக்கையினிற்சேர்ந்தான்மன்னோ.

(இ-ள்) கிருபைமிகுந்த சூதபுராணிகர் இவ்வாறுகூறவும்நைமிசாரணிய முனிவர்கள் அஞ்ஞானம்நிறைந்த எங்களமனத்தின்கண் இச்சரித்திரமாகிய ஞானவிளக்கொன்றை யேற்றிவைத்தீர் அதனால்மெய்ப்பொருள் எமதிதயத்தில நிறைந்திருக்கின்றது புண்ணியவானே என உண்மைவசனங்கூறித்துதிக்கத் தெளிவடைந்த திருவுள்ளத்தையுடைய சூதபுராணிகர் சென்று தமதிருப்பிடத்திற்சேர்ந்தார்- எ-று மன்-ஓ-அசை  (௪௦௬)

சூதமுனியகன்றதற்பின்றுலங்கியநைமிசவனத்துத்தூயோரியா
ருமவேதபுரத்தினிலடைந்து வேணுநீர்க் குடைந்தவிளா
ங்குஞான, நாதனைவானவர்கருமறைநவின்ற பராபரப்பொருளை
ந
ளினப்போதுப், மீதவன்மாலறியாதவித்தகனைப்பணிந்துமுத்திமே
வினரால்.

(இ-ள்) சூதபுராணிகர்சென்றபின்பு விளக்கமுற்ற நைமிசாரணியமுனிவர்களெல்லாம திருவோத்தூரையடைந்து பாலுநதியிலுள்ள நல்லதீர்த்தத்தில்நீராடி கீர்த்தியோங்கிய ஞானநாதரும தேவர்களுக்குவேதமோதுவித்தருளிய பராபரப்பொருளும் தாமரைமலர்மீது வீற்றிருக்குமபிரமனுமதிருமாலுமம அறியாதஞான சொரூபமாகியவேதபுரீசரைவணங்கினார்கள் எ-று, ஆல்-அசை.  (௪௦௮)

வாழி.

வேறு.

சுருதிநூற்றுறைகள்வாழிதுலங்குநற்றவங்கள்வாழி
கருதுமாகமங்கள்வாழிகலைவலோரினிதுவாழி
தருவியனுலகுவாழிசலதிசூழ்புடவிபொங்கும
பெருமதிதொறுமும்மாரிபெய்துமேனமேலும்வாழி.

(இ-பு.) வேதங்களிற்கூறியுள்ளமார்க்கங்கள்வாழ்கவிளக்கமடைந்த உயர்ந்த தவங்கள்வாழ்க யாவராலும் நினைத்தற்குரிய சிவாகமங்கள்வாழ்க வுத்தியாபண்டிதர்களவாழ்க கற்பகதருவையுடைய தேவலோகம்வாழ்க கடலாற்சூழப்பட்ட நிலவுலகமெங்கணும் மாதந்தோறும் மூன்றுபெரியம ழைகள்பெய்து மேன்மேலும அபிவிருத்தியடைந்துவாழ்க. எ-று (௧௧௧)

மநுநெறிவேந்தர்வாழி மறைசைமாநகரம்வாழி
நனிசிவசமயம்வாழிநன்குறுமடியார்வாழி
புனிதமாரெழில்சேர்வேதபுரிபுராணத்தின்செய்யு
ளினியவாயிரத்தின்மேலீரெட்டுமென்றென்றும்வாழி.

(இ-பு) மநுமுறைதவறாத அரசர்கள் வாழ்கதிருவோத்தூர் வாழ்க சைவசமயம் மிகவும் வாழ்க நன்மையமைந்த சிவனடியார்கள்வாழ்க பரி சுத்தமான அழகுவாய்ந்த திருவோத்தூர்ப் புராணத்தின் கணுள்ள இனி மையான ஆயிரத்துப்பதினாறுசெய்யுட்கள் எந்நாளும கீர்த்தியுடன்வாழ்க எ-று. (௧௧௨)

இருங்கலிவருடநாலாயிரத்தொன்பானூற்றுநாலி
னருஞ்சகாத்தத்தினுள்ளேட்டாயிரத்தெழுநூறறையைந்
தொருவருபோய்மீதிறந்தருந்திரோறகாரித்தையி
லரங்கினிலேற்றிவைத்தானருள்கருணாகரனே.

(இ-பு.) பெருமையமைந்த கலியுகாப்தவருஷம்நாலாயிரத்துத் தொ ளாயிரத்துநாலும் அருமையான சாலிவாகன சகாப்தவருஷம் ஆயிரத்து எழுநூற்றிருபத்தஞ்சுமசென்று அதன்மேற்பிறந்த உருத்திரோற்காரிவரு ஷம் தைமாசத்தில் இப்புராணத்தைப் பாடிய கருணாகரக்கவிராயர் இதை அரங்கேற்றினார். எ-று. ஏ-அசை. (௧௧௩)

சமணர்கழுவேறியசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ... ௧0௧௬

திருவோத்தூர்ப்புராணம் முற்றிற்று.

